சரசுவதி மகால் வெளியீட்டு எண். 398

# சூடாமணி நிகண்டு




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

சரசுவதி மகால் நூலகம்

தஞ்சாவூர்.

1999] [விலை : ரூ 160-00

சரசுவதி மகால் வெளியீட்டு எண். 398

# சூடாமணி நிகண்டு

சிறப்புக் கேண்மைப் பதிப்பாசிரியர்:
கவிஞர்கோ கோவை. இளஞ்சேரனார்
(முன்னைத் துணை இயக்குநர். பதிப்புத்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்)



தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
சரசுவதி மகால் நூலகம்
தஞ்சாவூர்.

1999] [விலை: ரூ. 160-00

## நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு

| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | சூடாமணி நிகண்டு |
| பதிப்பாசிரியர் | : | கோவை. இளஞ்சேரனார் |
| வெளியிடுபவர் | : | இயக்குநர், சரசுவதி மகால் நூலகம். |
| வெளியீட்டு எண் | : | 398 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதல் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | சனவரி, 1999 |
| தாள் | : | 10. 9 கி. கி. சேஷசாயி |
| நூல் அளவு | : | 25 × 19 செ. மீ. |
| பக்கங்கள் | : | 706 |
| படிகள் | : | 500 |
| எழுத்து | : | 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : | சரசுவதி மகால் அச்சகம் |
| புத்தகக்கட்டு | : | ஆப் காலிகோ பைண்டிங் |
| பொருள் | : | நிகண்டு |
| விலை | : | ரூ. 160—00 |

# வெளியீட்டாளர் முகவுரை

பைந்தமிழ்ச் சுவடிகள் உள்ளிட்ட பன்மொழிச் சுவடிகளின் கருவூலமாகச் சரசுவதி மகால் நூலகம் திகழ்கின்றது. இந்நூலகத்தை அணிசெய்யும் சுவடிகளை அடிப்படையாகக்கொண்டு இலக்கணம், இலக்கியம், சமயம் மருத்துவம், சோதிடம் முதலிய பொருண்மைகளில் அரிய நூல்களைப் பதிப்பித்து வெளியிடும் அரும்பணி இந்நூலகத்தால் தொடர்ந்து ஆற்றப் பெற்று வருகின்றது.

இவ்வரும்பணியின் வரிசையில் தமிழ் நிகண்டு நூல்களுள் ஒன்றான 'சூடாமணி நிகண்டு' (முதன் மடலம்) தற்பொழுது பதிப்பித்து வெளியிடப் பெறுகின்றது.

தமிழில் திவாகர நிகண்டு, பிங்கல நிகண்டு, சூடாமணி நிகண்டு, கயாதர நிகண்டு, நாமதீப நிகண்டு முதலிய பல நிகண்டு நூல்கள் தோன்றியுள்ளன. இவற்றுள் ஒன்றான 'சூடாமணி நிகண்டு' மண்டல புருடர் எனும் புலவர் பெருமகனாரால் இயற்றப்பெற்றதாகும்.

இன்றைய அகராதிகளுக்கு முன்னோடியாக அமைந்த நூல்வகை நிகண்டுகளாகும். சொற்களஞ்சியங்களாகவும் சொற்பொருட்களஞ்சியங் களாகவும் துலங்கும் இந்நூல்கள் மொழிவளத்திற்கும் மொழிவளர்ச்சிக்கும் பெரும்பங்காற்றுகின்றன.

இங்குப் பதிப்பித்து வெளியிடப்பெறுகின்ற 'சூடாமணி நிகண்டு—முதன் மடலம்', சூடாமணி நிகண்டின் பன்னிரு தொகுதிகளில் முதல் இரு தொகுதிகளை மட்டுமே கொண்டுள்ளது. இப்பதிப்பு, சூடாமணி நிகண்டின் தேவப்பெயர்த் தொகுதியையும், மக்கட்பெயர்த் தொகுதியையும் ஆய்வுப் பதிப்பாக வழங்குகின்றது.

இந்நூலினை ஆராய்வுரை, பெயர்ப்பொருள் விளக்கம், பிற நிகண்டுகளோடு ஒப்பிட்டுக்காட்டும் பகுதிகள், சொற்பாகுபாடு, அகரநிரல்கள் முதலிய

அமைய ஆய்வுப்பதிப்பாக அரிதின்முயன்று பதிப்பித்துள்ள அறிஞர் பெருந்தகை திருமிகு கோவை இளஞ்சேரனார் அவர்களுக்கு என் பாராட்டுக்களை உரித்தாக்கி மகிழ்கின்றேன். அவர் சார்பாக இந்நூலின் மெய்ப்புக்களைத் திருத்தம் செய்தளித்த திரு கோ. நாகேந்திரன் அவர்களுக்கும் என் பாராட்டுக்கள்.

இந்நூலின் வெளியீட்டுக்கு நிதியுதவி நல்கியுள்ள மத்திய அரசின் பண்பாட்டுத் துறைக்கும், அத்துறையின் செயலாளர் உயர்திரு டாக்டர் ஆர். வி. வைத்தியநாத அய்யர், இ. ஆ. ப., அவர்களுக்கும், இந்நூலகத்தைச் செவ்வனே பராமரித்துவரும் மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களுக்கும், மாண்புமிகு கல்வியமைச்சர் அவர்களுக்கும், பள்ளிக்கல்வித் துறையின் செயலாளர் உயர்திரு எம். ஏ. கௌரிசங்கர், இ. ஆ. ப., அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இந்நூல் நன்முறையில் வெளிவரத் தூண்டி ஆவன செய்துள்ள நூலக நிருவாக அலுவலர் திரு நா. தியாகராஜன், எம். ஏ., பி. எல்., அவர்களுக்கும், வெளியீட்டு மேலாளர் திரு அ. பஞ்சநாதன், எம். ஏ., எம். எல். ஐ. எஸ்., அவர்களுக்கும், இந்நூலை நன்முறையில் அச்சிட்டளித்த சரசுவதி மகால் நூலக அச்சகத்தாருக்கும் என்னுடைய பாராட்டுக்கள்.

ஆய்வுக் கண்ணோட்டத்தோடும், பதிப்புப் பாங்கோடும் வெளிவரும் சூடாமணி நிகண்டின் முதல் மடலத்தைத் தமிழ்கூறு நல்லுலகம் மிகுந்த ஆர்வத்துடன் வரவேற்கும் என நம்புகின்றேன்.

**து. நா. இராமநாதன்**, இ. ஆ. ப.,
மாவட்ட ஆட்சித் தலைவர் மற்றும் இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்,

தஞ்சாவூர்,

30—1—1999.



# பதிப்பாசிரியர் உரை

" பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல ... ... ... "

பழமை கழிந்து புதுமை புகுவது இயற்கை. அவ்வியற்கை இதன் உட்கருத்தாக உள்ளது. ஆனால் நூற்பா முடியவில்லை. புள்ளி வைக்கப்பட்ட இடத்தில் கால வகையினானே என்பது உரியதாகும். இத்தொடரில் மற்றொரு ஆழமானக் கருத்தும் உள்ளது பழமை கழிந்து புதுமை புகுவது காலத்துக்குக் காலம் மாறுபடும்; வேறுபடும். இயல்பாக இருத்தலும் உண்டு.

தமிழில் புதிய கருத்துகளை அவ்வக்காலத்துப் புலவர்கள் அவ்வக்காலச் சூழலுக்கேற்பவும் அவ்வக்கால மொழிநிலைக்கேற்பவும் புதியன கூறுவர். இத்தகைய கூற்றுகளால் புதுவகையான நூல்களே தோன்றுவதுண்டு. அதற்கு இக்கால அறிவியல் நூல்களைக் கூறலாம். பழையனவற்றுள் எல்லாம் கழிந்துவிடக் கூடாது. சிறந்தவை நிலைக்க வேண்டும், தொடர வேண்டும். அவ்வாறு நிலைத்தவற்றையும் புகுந்தவற்றையும் மேலும் நிலைக்க அவற்றைப் பதிவாக்க வேண்டும். அப்பதிவுதான் நூற்பதிப்பு எனப்படுகின்றது.

இச் சூடாமணிப் பதிப்பும் பழையன கழியாமல் புதியன விளக்க உரைகளாகச் சேர்ந்து அமைந்ததாகும்.

ஆராய்வுரையில் கூறப்பட்டிருப்பது போல இச் சூடாமணிப் பதிப்பு பத்துவகை விளக்கங்களைக் கொண்டு உள்ளது. இப்பதிப்புக்கு முயன்று செய்ததால் ஏற்பட்ட உவப்பைவிட விளக்கவுரைகள் எழுதியதால் ஏற்பட்ட மகிழ்ச்சி நிறைவானது; சிறந்தது ஆகும்.

ஒரு பதிப்பாசிரியர் என்னென்ன செய்யவேண்டும் என்று இலக்கணம் ஏதுமில்லை. வேண்டுமானால் மிகுபுலமைதிரு உ. வே. சா. அவர்கள் கையாண்டுள்ளமை பதிப்பு இலக்கணம் என்று கொள்ளலாம். யான் அவ்விலக்கணத்தை மேற்கொண்டும் மேலும் சில புதுமுறைகளைப் படைத்தும் இப்பதிப்பை உருவாக்கியுள்ளேன். இவ்வுருவாக்கம் வழக்கற்று நிற்கும் சூடாமணியை நூற்பயிற்சியில் ஆர்வம் உடையோரின் நினைவில் நிறுத்தும்.

இப்பதிப்பிற்குரிய விளக்கவுரைகளுக்கு மேல் பதிப்பாசிரியர் உரையில் ஒன்றைக் குறிக்கவேண்டும். அஃதாவது ஒரு சிறந்த சொற்களஞ்சிய நூல், கழிந்து போகாமல் புதியன புகுவதோடு மறைய இருந்த ஒருநூல் படிப்பார்வலர்களிடையே வழக்கிற்கு வந்துள்ளது. சூடாமணி ஒரு சொற்களஞ்சிய நூல். உரிச்சொற் பனுவல் என்றாலும் இதன்கண் உள்ள உரிச்சொற்கள் பெயர் உரியாகவும் வினை உரியாகவும், இடை உரியாகவும் அமைந்து நான்கு வகைச் சொற்களின் சொற்களஞ்சியமாக அமைந்ததாகும்.

மிகு உழைப்பில் இப்பதிப்பு உருவாகியதாயினும் இதனால் ஏற்படும் பயன் மிகு உழைப்பையும் சிறப்பிப்பதாகும். பதிப்பாசிரியராகிய என் கருத்துக்கள் ஆராய்வுரையிலும் ஆங்காங்கே இடம் பெற்றுள்ளன. அவற்றைப் படிக்கும்போது பதிப்பாசிரியர் உரையாகவும் கொள்ளலாம்.

எனவே பதிப்பாசிரியர் உரை இதனோடு முடியாது ஆராய்வுரையிலும் தொடர்கிறது.

கலைக்குடில்,
58, எழில்நகர், தஞ்சை 7

அன்பன்,
**கோவை. இளஞ்சேரனார்**

# பதிப்பு வரலாறு

"சோழநாடு சோறுடைத்து" என்பது பலரும் அறிந்த தொடர் — உண்மை பொதிந்த தொடர். சோற்றுக்கு மூலமாகிய நெல், பயிரிடச்செய்யப்படும் இடம் வயல் என்று அறிவோம். 'செய்யப்படுவது' என்னும் சொல்லிலுள்ள 'செய்' என்னும் ஏவல் வினையே பெயராகி நின்று 'செய்' என்று வயலையும் குறிக்கும். நெல் விளையும் செய் நன்செய்; மற்றவை புன்செய்.

சோழ நாட்டின் தலைநகராக உறையூர் இருந்தது. அது "ஊரெனப்படுவது உறையூர்" என்று பெயர் பெற்றது, துறைமுகமாகிய பூம்புகார் பின்னர் துறை நகரமுமாயிற்று. பிற்காலச் சோழர் காலத்தில் தஞ்சாவூர் தலைநகரமாயிற்று. சோழன் இராசராசப் பெருமன்னன் காலத்தில் தஞ்சாவூர் சிறப்புப்பெற்றது. அவன் பெருவுடையார் கோவில் என்னும் கலைக்கோவிலைக் கண்டவன். இக்கோயிலில் ஓவியம், சிற்பம், கட்டடக்கலை சிறந்தோங்குகின்றது. இக்கோயில் கோட்டையைச் சூழப் பெற்றிருப்பது ஒரு சிறப்பிற்கு உரியது.

தமிழ் மண்ணின் மைந்தர் உழவுத்தொழிலை மரபுத் தொழிலாகக் கொண்டவர். அதனால் தத்தமக்கென வயல்களை–செய்களைப் பெற்றிருந்தனர். வாழ்ந்தோரெல்லாம் தம் செய்களை உடைமைகளாக உடையவர். தம் செய்யை உடையவர் வாழ்ந்த ஊர் தம் செய் ஊர் 'தஞ்சையூர்' என்று ஆயிற்று. அஃதே தஞ்சாவூராயிற்று.

பிற்காலச் சோழருக்குப் பின்னர் மராத்தியர் ஆட்சியைக் கைப்பற்றினர். மராத்திய மன்னருள் இரண்டாம் சரபோசி மன்னன் புகழ் பெற்றவன். அவன் பல பணிகளைச் செய்தான். அவற்றுள் வடமொழி அடுத்த நிலையில் மராத்தி, பின்னர் பிற மொழிகள் இடம் பெற்றன. நூல்களும் சுவடிகளும் தொகுக்கப்பட்டுள்ளன. பழந் தமிழ் நூல்களும் சுவடிகளும் நுண்ணோவியங்களும் தமிழ்மொழியில் அமைந்தன. அவன் இவற்றையெல்லாம் தொகுத்து சரசுவதி மகால் என்னும் கலைக்கூடத்தை நிறுவினான். அஃது இன்றும் நின்று நிலவுகிறது.

முனைவர் சண்முகம் அவர்கள், நான் ஒரு சுவடியையோ நூலையோ தேர்ந்து பல தொகுதிகள் வருமாறு விரிவுரை எழுதி பதிப்பிக்கவேண்டும் என்று விரும்பினார்.

நான் பல நூல்களையும் சுவடிகளையும் பார்த்து சூடாமணியைத் தேர்ந்தெடுத்தேன். சில சுவடிகள் இருந்தன. அவற்றுள் நிறைவானதும் சீரானதுமாகிய சுவடியையும் ஒரு நூலையும் ஒப்பிட்டு மூலமாகக் கொண்டேன். கல்கத்தா சுவடிப்புலத்திலிருந்து சில குறிப்புகளைப் பெற்றேன். சென்னை அரசு நூலகச்சுவடி, செட்டிநாட்டு திரு முத்தையா அவர்கள் நூலகச் சுவடி, மயிலம் சைவத் திருமடத்துச் சுவடி, கோவை—திருப்பேரூர் சாந்தலிங்க அடிகளார் சைவத் திருமடத்துச் சுவடி ஆகியவற்றையும் பார்த்து திருந்திய மூலத்தைக் கொண்டேன். விரிவுரையை அகலவுரையாக முன் கண்டவாறு எழுதினேன்.

தமிழ்மொழிச் சிறப்பும் சொற்சிறப்பும் வெளிப்படுமாறு ஒரு விரிவான ஆராய்வுரை வேண்டுமென்று இபக்குநர் குறித்ததால் அவ்வாறே ஆராய்வுரை எழுதப்பட்டது.

இவ்வாறு இந்நூல் விரிந்த ஆராய்வுரை, அகல விரிவுரை என அமைகின்றது. இந்நூலில் முதல் இரண்டு தொகுதிகளே உள்ளன. எஞ்சிய பத்துத் தொகுதிகளும் அகல விரிவுரையுடன் வருமானால் மேலும் நான்கு மடலங்கள் வரும். ஆக ஐந்து மடலங்களில் ஏறத்தாழ 2,500 பக்கங்களில் இது முடியும். நிறைவுறும் இந்நூல் தமிழுக்கு ஒரு சொற்களஞ்சியமாக அமையும்.



# ஆராய்வுரை

## பொருளடக்கம்

### கருத்து நிரல்:

### ஆராய்வின் தோரணவாயில்





# சூடாமணி நிகண்டு

## பொருளடக்கம்

## ஒப்பீட்டு உரிச்சொற் பனுவல்கள்

1. சூடாமணி
2. பிங்கலம்
3. கயாதரம்
4. நாமதீபம்

## பார்வைச் சுவடிகள்

1. சரசுவதி மகால் சுவடி
2. கல்கத்தா சுவடிப் புலச் சுவடி (குறிப்புகள் பெறப்பட்டன)
3. மயிலம் சைவத் திருமடத்துச் சுவடி
4. கோவை—திருப்பேரூர் சைவத் திருமடத்துச் சுவடி
5. செட்டிநாட்டுத் திரு முத்தையா அவர்கள் நூற்சுவடி

# எமது வெளியீடுகள்



| | | |
|---|---|---|
| 1 | கணக்கதிகாரம் | 150—00 |
| 2 | ராமநாடக கீர்த்தனைகள் | 150—00 |
| 3 | அரிச்சந்திரன் அம்மானை | 75—00 |
| 4 | சுந்தரி அம்மானை | 12—00 |
| 5 | ஆசிரிய நிகண்டு | 110—00 |
| 6 | கொடுந்தமிழ் | 35—00 |
| 7 | செந்தமிழ் | 40—00 |
| 8 | இலக்கண விளக்கம் (பொருள்) அகத்திணையியல் முற்பகுதி | 67—00 |
| 9 | ,, ,, ,, பிற்பகுதி | 68—00 |
| 10 | ,, ,, அணியியல் | 83—00 |
| 11 | ,, ,, செய்யுளியல் | 58—00 |
| 12 | ,, ,, பாட்டியல் | 65—00 |
| 13 | ,, ,, இலக்கணக் கொத்து | 65—00 |
| 14 | பிரயோக விவேகம் | 80—00 |
| 15 | தொல்காப்பியம் எழுத்ததிகாரம் | 55—00 |
| 16 | நாலடியார் உரைவளம் பாகம் I | 90—00 |
| 17 | ,, பாகம் II | 75—00 |
| 18 | தனிப்பாடல் திரட்டு பாகம் I | 30—00 |
| 19 | ,, ,, பாகம் II | 40—00 |
| 20 | இராசகோபால மாலை | 18—00 |

# சூடாமணி ஆராய்வுரை

## ஆராய்வின் தோரண வாயில்

" எழுத்தின் திறனறிந்தோ, இன்சொற் பொருளின்
அழுத்தந் தனிலொன் றறிந்தோ "[1] — இவ்வரிகள்

மொழியியலுக்கு முத்திரை வடிப்புகள். எழுத்து — சொல் — பொருள் என்னும் வழித் தொடர்பைப் பதியவைக்கும் முத்திரையா? அன்று. இவ்வரிச்சஅமைப்பு முறை அறிவிப்பு ஆகலாம். ஆனால் இது வெளிப்படுத்தும் கருத்து ஆழமானது.

எழுத்து திறனுள்ளது; திறனற்றது வெறும் நத்தை உழுத கோடு. ஒரு புள்ளி வந்து அமர்ந்து எமபெருமானை எம்பெருமான் ஆக்கிவிடும். ஒரு புள்ளி ஓடிப்போனால் கல்வி, கலவி ஆகிவிடும்.

'ஆய்' என்றால் அன்னை. யகர மெய்யாகிய ஓர் எழுத்து முன்னே ஒன்றி 'யாய்' ஆனால் என் தாய் ஆகும். ஞகர மெய் ஒன்றினால் 'ஞாய்' ஆகி உன் தாய் என்று பொருள் தரும்.[2] தகர மெய் ஒன்றினால் 'தாய்' ஆகி, பொதுவில் அன்னையைக் குறிக்கும். இது எழுத்துத் திறன்.

'போ' என்று வாயைப் பிளந்து வல்லோசையை வெளியே தள்ளினால் அது வெறுப்பு ஒலி—கடுமைச்சொல். 'வா' என்று உதடும் இதழும் கூட்டி நல்லொலியை உள்ளிழுத்தால் அது வரவேற்பு ஒலி — இனிமைச்சொல். பாரதிக்குப் பட்ட உணர்வு,

'தமிழ்மொழிபோல் இனிதாவது எங்கும் காணோம்''[3] — என்று வெளி வந்தது.

---

1 ... ... ... ... அடியார்க்கு நல்லார் உரைப் பாயிர மேற்கோள் வெண்பா அடி 1, 2

2 செம்புலப் பெயனீரார்: குறுந். 40—1

3 சுப்பிரமணிய பாரதியார்: பாரதியார் கவிதைகள், ஆய்வுப் பதிப்பு தமிழ்ப் பல்கலைக்கழகம், பாடல் 1785.

" கனியிடை ஏறிய சுவையும் — முற்றல்
கழையிடை ஏறிய சாறும்
பனிமலர் ஏறிய தேனும் — காய்ச்சும்
பாகிடை ஏறிய சுவையும் "[4] — என்று தமிழ்ச்

சொல்லின் சுவை இனிமையை இசைக்கிறது பாவேந்தரின் இன்சுவைக் கவிதை.

கழாரம்பர் என்னும் பழம்புலவர்,

" தமிழ்சிவம் இனிமை என்னும் தனிப்பொருளதாம் "[5]

என்று கண்டு நூற்பாபடைத்தார். எனவே பண்பட்ட மொழியின் சொல்லில் இனிமை இழையோட்டமாகும்.

" பொருளின் அழுத்தம் " — என்னும் தொடர் அடியார்க்கு நல்லாரின் அரும்படைப்பு; கருத்தை முழங்கும் தொடர்.

பொருளின் அழுத்தமா? அது என்ன அழுத்தம் என்று வினவத் தோன்றுகின்றது.

'அவன் செய்தான்' என்பதை 'அவனே செய்தான்' என்றால் 'செய்தவன் அவனன்றி வேறு ஒருவன் அல்லன்' என்று 'அவன்' அழுத்தம் பெறுகிறான். தேற்றேகாரப்பொருள் இவ்வாறு அழுத்தம் தரும். 'நிறைவாகக் கூறினான்' என்பதை 'முடிவாகக் கூறினான்' என்றால் கூறியதில் ஓர் உறுதி ஒலிக்கிறது. அதையே 'அறுதியாகக் கூறினான்' என்றால் கூறியதில் ஓர் அழுத்தம் பிறக்கிறது.

" நிலத்தினும் பெரிது "[6] என்னும்போது அவன் நட்பு, நில அளவை ஓர் எல்லையாகக் காட்டுகிறது. " மண் தேய்த்த புகழினான்"[7] என்னும்போது அவன் புகழ் மிகப் பெரிய ஒன்றையும் தேய்த்துச் சிறிதாக்கிப் புகழ் உயர்வு பெற்று, பொருள் அழுத்தம் பெறுகிறது.

---

4 **பாரதிதாசன்:** பாரதிதாசன் கவிதைகள் 1 பக்கம் 87

5 **கழாரம்பர்:** 'பேரிசை' நூற்பா (பழம்பாடல்)

6 **தேவகுலத்தார்:** குறுந். 3—1

7 **இளங்கோவடிகள்:** சிலம்பு. 1—36

ஒரு சொல்லுக்கு ஒரு பொருளில் இவ்வாறு அழுத்தம் பிறக்கும். ஒரு சொல்லுக்குப் பல பொருள் கிடைக்கும்போது, பொருள் ஏற ஏற அழுத்தம் புதுப்பிக்கப்பெறும், ஒரு பொருளுக்குப் பல சொல் அமையும்போது சொல் வளர வளரப் பொருளின் அழுத்தம் வைரமாகும். இவ்வாறமையும் ஒருசொல் பல பொருள், ஒரு பொருள், பல சொல்லுக்குப் பொருள் அழுத்தம் உரிமை கொள்கிறது. இவ்வகை அழுத்தம் கொள்ளும் உரிமையை அகலமாகவும், சற்று ஆழமாகவும் பெற்ற உரிச்சொல் பண்பட்ட மொழிகளுக்கு உரியது. எனினும் பைந்தமிழுக்கு ஈடுபாடான உரிமை கொண்டது.

இவ்வாறு உரிச்சொல், பொருட்கு உரிமை கொள்வதைச் சொல்லிலக்கணத் தந்தை தொல்காப்பியர்,

> " ஒரு சொல் பல் பொருட்கு உரிமை தோன்றினும்
> பல சொல் ஒரு பொருட்கு உரிமை தோன்றினும் "[8] — என

உரிமைப்படுத்திப் பேசியிருப்பது சான்றை ஒலிக்கிறது.

தமிழில் உரிமை தோன்றிப் பல்கும் உரிச்சொல் பெருகியது; விரிவடைந்தது. இவற்றின் தொகைநூல் 'உரிச்சொற் பனுவல்'[9] என உருவெடுத்தது. இவ்வுருவின் ஒளி உருவாக, மணியொளியாக மிளிரும் நூல் 'சூடாமணி' என வழங்கப்பெறும் நூல்.

இந்நூல் இங்கு ஆழ்ந்து ஆயப்பெறுகின்றது. பூங்கொடியில் பூத்த மலர்களை ஆய்வது போலன்றி ஓர்ந்தும், தேர்ந்தும் ஆர்ந்தும் ஆயப் பெறுகின்றது. ஆர்ந்து — ஆம் நிறைவாக — ஆர ஆயப்பெறுவதால் இது ஆராய்வு.

ஆர ஆய்வு என்பதால் அடித்தளம் இறுக்கமாக, மேல்வரும் முடிவுகளுக்கு ஈடுகொடுக்கும் உறுதித்தனமாக உரிய சான்றுகளைக் கொள்ள வேண்டியுள்ளது. எனவே படிப்படியாக, சரட்டுத் தொடர்பாக இவ்வாராய்வு விரிவாகின்றது. விவரம், விளக்கம், விரிவு என்று வளரும்போது சில மிகையாகப் படினும் பின் வேண்டிய தெளிவைக் காணுதற்கு இவை இன்றியமையாதனவாகும். முதல் நோக்கில் தொடர்பற்றவை போன்று சில படினும் இறுதி

8. தொல்காப்பியர்: தொல்—சொல்—உரி. 1—45

9 மயிலைநாதர்: நன்னூல் 460உரை

முடிவுகளுக்கு அவை ஊன்றுகருத்துகளாகும். கூறியது கூறுவதாக அமையி னும் எடுத்துப் பொருத்தும் இடத்தேவையில் இவை குறையாகா. சிறு சிறு கருத்தும் தொடர்பு கருதியும், துணைமை கருதியும் இன்றியமையாதனவாகும்.

எனவே, ஒன்றையொன்று தொட்டுத் தொடரும் நோக்கில் ஆராய்வுப் பகுதிகள் பின்வரும் தலைப்புகளில் தொடர்கின்றன.

1. ஒளியில் ஒலி
2. ஒலியில் மொழி
3. மொழியில் தமிழ்
4. தமிழில் எழுத்து
5. எழுத்தில் சொல்
6. சொல்லில் பெயர்
7. பெயரில் உரி
8. உரியில் பனுவல்
9. பனுவலில் மணி: சூளாமணியா? சூடாமணியா?
10. மணியின் மண்டலவர்
11. சமயத் தாக்கம்
12. சமயத்தொடு வடமொழித்தாக்கம்
13. பொலிக தமிழ்ச் சொல்!

இப்பதின்மூன்று பொருள்களில் ஆராய்வு செல்லும்.

தமிழ் ஒரு சொற்களஞ்சிய மொழி. தமிழ்ச் சொற்களஞ்சியத்தின் ஒரு பகுதி உரிச்சொல்லின் தொகுதிகள். இத்தொகுதியாக உருவாகிய நூல் 'உரிச்சொற் பனுவல்' எனப்பெயர் பெற்றது. 'ஒன்றைப் புகுத்தி உரியதை மறைப்பது' எனனும் மொழிப் படையெடுப்பின் வஞ்ச நடைமுறைப்படி 'நிகண்டு' என்னும் வடசொல் புகுத்தப்பெற்று 'உரிச்சொற் பனுவல்' என்னும் உரிய பெயர் மறைக்கப்பட்டது. படையெடுப்பு போட்ட இரும்புத்திரை இங்கு நீக்கப்பெற்று 'உரிச்சொற் பனுவல்' என்னும் உரிய பெயரே கொள்ளப் பெறுகின்றது. 'உரிச்சொற் பனுவல்' என்னும் தொடரின் நீட்சியைக் கருதி அதனைச் சுருக்கித் தொகுத்து, எழுத்தோட்டத்திற்கு எளிமை கொள்ளப்

படுகின்றது. 'உரி' என்பதே உரிச்சொல்லைக் குறிக்கப் போதுமானது. எனவே 'உரிப்பனுவல்' என்று இங்கு ஆளப்பெறும்.

இந்நூலின் பெயர் ஆராய்விற்கு உரியதாகியுள்ளது. இவ்வாராய்வில் இந்நூற்பெயர் முடிவு கொள்ளப்பெறும்வரை 'இந்நூல்' என்று இங்கு கையாளப் பெறும்.

'இந்நூல்' ஆசிரியர் 'மண்டல புருடர்'[10] எனப்பெற்றார். பெயர்பற்றிய சிற்றாய்வும் உண்டு. எனவே 'மண்டலவர்' என்னும் பெயர் குறிக்கப்பெறும்.

சிதறல்களை ஓரிடத்தில் சேர்த்துத் தொகுப்பது 'தொகுதி'. பொதுவில் தொகுதி என்னும் சொல் எப்பொருளின் தொகுப்பையும் குறிக்குமாயினும் இங்கு இந்நூல் பகுக்கப்பெற்றுள்ள பிரிவுகள் 'தொகுதி'[11] என்று பெயர் கொடுக்கப்பெற்றுள்ளமையால் இங்கு 'தொகுதி' என்பது இந்நூலின் பகுதியைக் குறிப்பதாகும்.

எடுத்துக்காட்டாகக் குறிக்கப்பெறும் செய்யுளும் எண்ணும் இந்நூல் விருத்தத்தையும் விருத்தங்களின் தொடர் எண்களையும் குறிக்கும்.

செய்யுளின் ஆசிரியரால் எழுதப்பெற்ற சொல்லும் தொடரும் செய்யுளும் 'மூல பாடம்' எனப்பெறும். இங்கு 'பாடம்' என்னும் ஆட்சியே அதனைக் குறிப்பதாகும்.

இச்சொல்லாட்சிகளில் மனம் பற்ற அன்பர்களை வேண்டி ஆராய்வு பிறக்கிறது.

---

*10 ஆறுமுக நாவலர்—சூடாமணிப் பதிப்பு முகப்பு—ஆசிரியர் பெயர்*

*11 மண்டலவர்—சூடா—102—4*

# ஆராய்வுரை

## 1. ஒளியில் ஒலி

"ஒலிஎன்ப தெல்லாம் செந்தமிழ் முழக்கம்
ஒளிஎன்ப தெல்லாம் தமிழ்க் கலைகளாம்"[12]

ஒலியையும், ஒளியையும் தமிழ்ப்பார்வையில் இவ்வாறு வைத்தார் பாவேந்தர் பாரதிதாசனார்.

ஒளி கண்ணைத் திறந்தது;
ஒலி காதைத் திறந்தது;

இத்திறப்பு விழாக்களை இவை இரண்டும், தாம் பிறந்தவுடன் செய்யவில்லை. ஏனெனில் அப்போது கண்ணும் இல்லை; காதும் இல்லை. ஒளி, ஒலி எனும் இரண்டும் தோன்றிய எத்துணையோ கோடிக்கணக்கான ஆண்டுகளுக்குப் பின்னர்தான் கண்ணும் காதும் தோன்றின. ஒளியும் ஒலியும் பிற எந்த ஒன்றும் தோன்றாத காலத்திலிருந்தே பிறந்த இன்றியமையாத இயற்கைப் பிறவிகள். இன்றும், என்றும் — இவையிரண்டும் பிறவற்றையெல்லாம் அழிக்கும்வரை இவைதாம் உலகத்தின் உயிரோட்டங்கள்.

ஒளியும் ஒலியும் உடன்பிறப்புகள்.

வானவெளியில் ஒளிப்பிழம்புகள் தோன்றின. அவை உடுக்கள், விண் மீன்கள் எனப்பெறும் கோடிக்கணக்கானவை. அவற்றுள் ஓர் ஒளிப்பிழம்பு ஞாயிறு என்றும், கதிரவன் என்றும் நம்மால் அழைக்கப்பெற்றது. இது கெட்டிப் பொருளும் அன்று; நீர்மப் பொருளும் அன்று. உருகிய ஆவிக் கோளம்.

பொன்னை உருக்குகிறோம். ஓரளவு இளகி நீர்மமாக உருகுகிறது. மேலும் உருக்குகிறோம். மேலும் மேலும் வெப்பமூட்டுகிறோம்; மேலும் மேலும் மேலும் வெப்பம் ஏற்றுகிறோம். என்ன ஆகும்? உருகி உருகி

---

12 பாரதிதாசன்—இசையமுது—1

உருகி ஆவி நிலையைப்பெறும். ஆஃா! தகதகத்துஒளிக்கதிரை வீசும். இது போன்று உருகிய ஆவிதான்—ஆவிக்கோளந்தான் கதிர்களை வீசி நாம் கண்ணால் நேர்பார்வையில் காண முடியாதபடி தகதகக்கிறது; ஒளியை வழங்குகிறது.

இந்த ஆவிக்கோளத்தின் துகள்களால் வெப்ப அலைகள் நேர்கின்றன; இதற்குள்ளேயே நேர்கின்றன. அந்த வெப்ப அலைவுப் பகுதியை வெப்ப ஆவி இயக்குகிறது. இந்த இயக்கத்தால் ஒலி அலை உண்டாகிறது. ஒளிக்கோளத்தில் ஒலியும் இசைக்கிறது.

இவ்வகையில் கருதினால் ஒளி, ஒலி இரண்டும் ஒத்துத் தோன்றுவதை மேலோட்டமாக வைத்து நோக்கினால் இவை இரண்டும் உடன்பிறப்புகள் எனலாம்.

இந்தக் கதிரவனாம் ஒளிப்பிழம்பிலிருந்து நிலவுலகம், நிலவு, செவ்வாய் வெள்ளி, சனி முதலிய கோள்கள் தோன்றின. இக்கோள்களின் தோற்றத்திற்கு இரண்டு கொள்கைகள் காணப்பெற்றன.

ஒன்று:

ஆவிக்கோலமாகவும், துகள்களாகவும் இருந்த ஞாயிற்றின் அண்டையில் மற்றொரு பெரிய உடு நெருங்கியது. தன் ஈர்ப்பு ஆற்றலால் ஞாயிற்றின் ஒரு பகுதியை ஈர்த்தது. ஈர்ப்புக்கு வயப்பட்ட ஞாயிற்றின் பகுதியில் மாதுளம் பழத்தின் முட்டுபோல் ஒரு முட்டு உப்பித் துருத்தியது. துருத்திய முட்டு ஞாயிற்றிலிருந்து பிய்ந்து பலவாகச் சிதறிப் பூமியாக, செவ்வாயாக, நிலவாக என எட்டு கோள்களாக இன்றும் ஞாயிற்றையே சுற்றிக்கொண்டுள்ளன. பேராசிரியர் சேம்பர்லின் என்பாரும், பேராசிரியர் மோல்டன் என்பாரும் வானத்தை ஆய்ந்து இதனை வெளியிட்டனர். இக்கொள்கையின்படி முட்டு பிய்ந்து சிதறியபோது ஒலி உண்டாயிற்று.

மற்றொரு கொள்கை:

ஞாயிற்றுடன் மற்றொரு உடு மோதி இடித்ததால் ஞாயிற்றிலிருந்து சிதறிய துகள்கள் கோள்கள் ஆயின. இக்கொள்கைப்படி மோதி இடித்தபோது ஒலி உண்டாயிற்று. இடித்ததால் தோன்றிய ஒலியை 'இடியொலி' என்னலாம்.

பின்னர் — பல்லாயிரம் ஆண்டுகளுக்குப் பின்னர் முகில்கள் தோன்றி அம்முகில்களின் இடையில் நேர்ந்த மின்னல் ஓட்டத்தால் எழுந்த மிகு

வெப்பம் அங்குள்ள காற்றை அதிரவைத்தது. இந்த அதிர்ச்சியால் இடியொலி அலைகள் உண்டாயின.

இவ்வாறு ஒலியலைகள் ஒளியால் பிறக்கின்றன. இப்பிறப்பால் ஒலியைப் பிறப்பித்தது ஒளி என்றாகும். மேலோட்டமாக ஒளியையும் ஒலியையும் உடன்பிறப்புக்கள் என்றோம். ஆழ்ந்து நோக்கினால் ஒளி ஒலிக்குத் தாய் ஆகும்.

தோன்றிய இடியொலி அலைகள் தம் வீச்சில் தேய்ந்து தேய்ந்து ஓய்ந்தன. இதுபோன்று ஒளியும் தேய்கிறது என்பர். ஆனால் அது ஓய இன்னும் எத்துணையோ கோடிக்கணக்கான ஆண்டுகள் பிடிக்கும். அதனையும் அறிய முயல்கின்றனர்.

அதுவரை கதிரவன் மற்றைக் கோள்களுக்கெல்லாம் ஒளி விளக்கு; உயிர் விளக்கு; தாய்விளக்கு. இவ்விளக்குதான் அண்டத்தில் கோள்களை ஈன்றது. அதனால் இதனை அண்ட யோனி என்றனர்.

இந்தத் தாய் ஒளிதான் அதனால் தோன்றி இயங்கும் உயிரினங்கள் இயங்கா உயிரினங்கள் ஆகியவற்றின் உடலையும், உயிரையும் வாழவைத்து வருகிறது. இத்துடன் ஒளிதான் (உயிர், உயிரற்ற) அப்பொருள்களை உருவப் பொருள்களாகக் காட்டுகிறது. காணும் கண்ணும் ஒளியாலேயே காண்கிறது. ஒளி இன்றேல் பொருளின் இயக்கமும் இல்லை; காட்சிப்பாடும் இல்லை. புல். பூண்டு, செடி, கொடி, மரம், புழு, பூச்சி, பறவை. விலங்கு, மாந்தர் என்னும் ஒவ்வொரு தனித்தனி உயிரின் வாழ்விற்கும் ஒளி உதவுகின்றது. அவற்றின் உணர்ச்சி வெளிப்பாட்டிற்கு ஒலி உதவுகின்றது. இவை இரண்டுமே உயிர்களின் இயல்பு, வலிமை, வளர்ச்சி, செயற்பாடு முதலியவற்றைத் தருகின்றன.

இவற்றால் இயங்கும் மாந்தனோ தன் அறிவின் அழுத்தத்தாலும் நுணுக்கத்தாலும் இவை இரண்டின் இயல்புகள், வலிமைகள், மாற்றங்கள் செயற்பாடுகள் முதலியவற்றைக் கண்டறிகின்றான்; கணிக்கின்றான். இவ்வகையில் மாந்தன் ஒளி, ஒலி இரண்டையும் தன் அறிவகப்படுத்தி மேம்பட்டு வருகின்றான்.

ஒளியலை, ஒலியலைகளின் இயல்பை ஐசக் நியூட்டன் (Isaak Newton) ஆய்ந்து கண்டார்.[13]

---

13 தி. பி. நலநீதகிருட்டிணன்: கலைக்களஞ்சியம்—2 பக்—698

ஒளி அலை ஒலி அலைக்கில்லாத மின்கவர்ச்சி உடையது என்று 1860 இல் சேம்சு கிளார்க்கு மாக்சுவெல் (James Clerk Maxwel) கண்டறிந்தார்.[14]

ஒளிவீச்சின் விரைவு (ஒளிவேகம்) ஒரு நொடிக்கு 1,86,284 மைல்கள் என்று ஆல்பர்ட் ஏ மைக்கல்சன் (Albert A Michalson) கணித்தார்.[15] இந்த ஆய்வின் வளர்ச்சியில் 'ஒளி ஆண்டு' கணிக்கப்பெற்றுள்ளது. ஓர் 'ஒளி ஆண்டு' (Light year) என்பது, அவ்வொளிசெல்லும் தொலைவைக் குறிக்கும். ஆறு இலட்சம் கோடி (6,00,000,00,00,000) மைல்கள் ஓர் ஒளி ஆண்டு என்னும் கொள்கை கடைபிடிக்கப்பெறுகிறது.

ஒலியலையில் விரைவு (ஒலி வேகம்) ஒரு நொடிக்கு 330,354 என்று கண்டறிந்தவர் சராடெர் வாண்டெர் கோக் (Schroder Vander Kolk என்பார்.[16]

ஞாயிற்றில் கரும்புள்ளிகள் உள்ளன. அவை 'ஞாயிற்றுக் களங்கங்கள்'[17] எனப்படுகின்றன. தொலைநோக்காடிவழி அவற்றைக் காணலாம். பெயர் 'கரும்புள்ளி' எனப்படினும் அவை கரியவை அல்லவாம். ஞாயிற்றின் வெப்பச் சூழல் அவ்வாறு தோன்றினும் அவையும் ஒளி உடையனவே என்கின்றனர். ஞாயிற்றின் அளவற்ற ஒளிப்பிழம்பில் இவ்வொளி (கரும்புள்ளி ஒளி) கருமையாகத் தோற்றமளிக்கின்றது என்கின்றனர்.

இக் கரும்புள்ளிகள் பெரிய அளவிலும் தோன்றுவதுண்டு. அக்காலங்களில் அவற்றின் தாக்கத்தால் பூமியில் கவர்ச்சிப்புயல் உண்டாகும். இதனை ஆராய்ந்தோர் இக்கரும்புள்ளிகளுக்கும் நம் நிலத்தில் வாழும் உயிர்களுக்கும் தொடர்பு இருப்பதாகக் கருதுகின்றனர்.

இதுதான்—ஞாயிற்றின் இவ்வொளிதான்—கரும்புள்ளி ஒளிதான் நாம் இங்கு நினைவிற்கொள்ள வேண்டியதாகும். இதனைக் காட்டவே ஒளி, ஒலி பற்றிய இவ்விளக்கம் இங்கு இடம் பெற்றது.

---

14 தி. பி. நவநீதகிருட்டிணன்: கலைக்களஞ்சியம்—2 பக். 698

15 ,, ,, ,, 699

16 த முருகையன் ,, ,, 682

17 எம். வெங்கடராமன் ,: 5 ,, 134

அண்மைக் காலத்தில் இக்கரும்புள்ளிகளின் தாக்கத்தால் நிலவுலகில் போர்கள் நிகழ்கின்றன என்றும், மாந்தனின் உணர்விலும் மாற்றங்கள் நேர்கின்றன என்றும் கண்டுள்ளனர்.[18] இக்கருத்துக்களும் நினைவிற்கொள்ள வேண்டியனவாகும்.

இதுவரை கண்டவற்றிலிருந்து நினைவில் இருத்த வேண்டியவை மூன்று, ஒவ்வொன்றும் ஒவ்வொரு முத்திரைப்பதிவு.

முதல் முத்திரை:

ஞாயிற்றின் ஒளி, ஒலி அலைகளின் விரைவு;

இரண்டாவது முத்திரை:

ஞாயிற்றின் கரும்புள்ளித் தோற்றத்திற்கும், நம் நில உலகத்து உயிர்களுக்கும் தொடர்பு உண்டு;

மூன்றாவது முத்திரை:

ஞாயிற்றின் கரும்புள்ளிகளால் உலக மாந்தனின் உணர்வுகள் மாற்றம் அடைகின்றன. இம்முத்திரைப் பதிவுகள் உரிய இடங்களில் முத்திரை 1, 2, 3 என்று பொருத்திக் காட்டப்பெறும். ஞாயிற்றைப் பற்றிய கண்டுபிடிப்புகளையும், கணிப்புகளையும் ஆழ்ந்து நினைந்தால் மாந்தனின் அறிவாற்றல் புலப்படும். அந்த அறிவாற்றல், ஒளியாற்றலையும், ஒலியாற்றலையும் தட்டிக் கொட்டிப் பார்த்துள்ளது என்பதை உணரலாம்,

இதனினும் மேலாக ஒளியைப்பற்றி, ஒலியைப்பற்றி மாந்தன் அவற்றின் அடிப்படைத் தொடர்பிலிருந்து ஒரு மாற்றம் செய்துள்ளமை நினைக்கத்தக்கது.

அஃது என்ன மாற்றம்?

## 2. ஒலியில் மொழி

ஆவிப் பிழம்பாகிய ஞாயிற்றிலிருந்து பிய்ந்து சிதறிய சிதறலில் ஒன்று தான் இப்பூவுலகம். இது இருநூறு கோடி ஆண்டுகளுக்குமுன் நேர்ந்தது என்பர். பிய்ந்தபோது இஃதும் ஆவிப்பிழம்பாக இருந்தது. தன்னைத்தானே சுற்றிக்கொள்ளும் ஈர்ப்பு, பிய்ந்து சிதறிய பூமிக்கும் இருந்தது. அஃதும் தன்னைத்தானே சுற்றிக்கொண்டது. அச்சுற்றலுடன் பல்லாண்டு —

---

18 எம். வெங்கடராமன்: கலைக்களஞ்சியம்—5 பக். 135

பல்லாயிரம் ஆண்டுக்காலமாகத் தான் சுருங்கிச் சுருங்கிக் குளிர்ந்தது. பிய்ந்தபோது ஓர் ஒழுங்கான உருவமில்லாதிருந்த பூமி. சுற்றின் ஈர்ப்பால் உருண்டை வடிவம் பெற்றது; உருண்டைக் கோளமாகியது. குளிர்ந்த இந்த உருண்டைக் கோளத்தின்மேல் நிலப்பகுதியில் உயிரினம் தோன்றியது.

ஒன்பது கோள்களில் உயிரினம் உள்ள கோளம் இப்பூவுலகம் என்பதைக் காண்கின்றோம். 'பிற கோள்களில் உயிரினம் இருக்குமா' என்ற ஆய்வு, 'செவ்வாய்க் கோளத்தில் இருக்கலாமோ' என்னும் ஐயத்தில்தான் நிற்கின்றது. இப்போது இந்த ஐயமும் வினாக்குறியாகித் தேய்ந்து வருகின்றது. 1991இன் இடையில் அமெரிக்க நாட்டு டெக்சாஸில் நடந்த ஆய்வின்படி கி. பி. 2019ஆம் ஆண்டில் செவ்வாய்க்கோளில் மாந்தரை இறக்கியாக வேண்டும் என்று குறி வைத்து, 1999ஆம் ஆண்டிறுதிக்குள் செவ்வாயில் எறும்புகளின், பாம்புகளின் முட்டைகளை வைக்கத் திட்டமிட்டுள்ளனர்.[19]

பிற கோள்களில் உயிரினத்தை வாழவைக்க முடியுமென்றும் ஆய்வு மேற்கொள்ளப்பெற்றது. சிக்காக்கோ நாட்டைச் சேர்ந்த பெண் அறிவியல் ஆய்வாளர் திருமதி ஓம்நெக் ஆனக் என்பவர் 'வீனசு' என்னும் வெள்ளிக் கோளில், நம் நிலப் பாலைவன அமைப்பு உள்ளது. இரண்டு இட வாழ்க்கைக்கும் வேறுபாடு இல்லை. என்றாலும் அங்கு வாழவைக்கலாமா என்பது வியப்பிற்குரிய ஒன்றே என்று கண்டுள்ளார்.[20]

இப்பூவுலக உயிரினத்தின் தோற்றம்பற்றி,

1 படைப்புக்கொள்கை (Creationism)

2 படிமுறைக்கொள்கை (பரிணாமம்—Evolutionism)

என இரு வேறுபட்ட கருத்துக்கள் உள்ளன. படிமுறைக் கொள்கையை நுணுகி ஆராய்ந்த டார்வின் (Darwin) 1990இல் ஓர் உண்மையைக் கண்டறிந்து இவ்வாறு கூறினார்:

> "தன் தோற்றம் தனி ஒரு வழி கொண்டது என்று மாந்தன் கருதிக்கொள்ள எவ்வகைச் சான்றும் இல்லை. வளர்ந்த வழியில் ஒரு பிரிவுக் குடும்பத்தைச் சார்ந்தவன் என்று கூறிக்கொள்ள வேண்டியவனே "[21]

---

19 ... ... ... தினகரன் (நாளிதழ்) 13—6—1991 பக். 3 செய்தித் துளிகள்

20 ... ... ... ,, 23—5—1991 பக். 3 ,,

21 தார்வின் (மாந்தன் தோற்றம்) Dexent of Man

அதாவது, 'மாந்தன் திடீரெனக் கடவுளாலோ, இயற்கையாலோ படைக்கப்பட்டு உருவானவன் அல்லன்'; இப்போது காணப்படும் முழு மாந்தனின் உறுப்புகளின் அமைப்பு வடிவத்துடனும் தோன்றியவன் அல்லன்: படிமுறை வளர்ச்சிப் படிகளில் உறுப்புக்கள் கிளைத்து வளர்ந்து உருப்பெற்றவன்' என்பதே.

அஃது எவ்வாறு?

இயற்கைப் பொருளிலிருந்து உயிரினத்திற்கு மூலமான ஒரு 'கூழ்' அமைந்தது. அந்தக் கூழ்தான் உயிரினத்தின் மூலம் என்பர். அந்தக் கூழை 'ஊன்மம்' — ஆங்கிலத்தில் புரோட்டோப்பிளாசம் (Protoplasm) என்பர். இவ்வாறு 1846இல் கண்டறிந்து 'புரோட்டோப்பிளாசம்' என்னும் பெயரைக் கொடுத்தவர் வான் மோல் (Von Mohl) என்னும் உயிரியல் அறிஞர் ஆவர். இதனை 'முதல் உடல்' என்பார் நம் உயிரியல் பேராசிரியர் முனைவர் எம். கே. சுப்பிரமணியம். நாம் இதனை 'ஊன்மம்' என்று குறிக்கலாம். இந்த ஊன்மத்திலிருந்து முதல் உயிரினம் தோன்றி, வளர்ந்து வளர்ந்து படிப்படியாக மாறி மாறி ஆறறிவுடைய உயிரான மாந்தன் என்று ஆனான் என்று கணித்துள்ளனர்.

இந்த 'ஊன்மம்' முதன்முதலில் இந்தப் பூவுலகில் எந்தப் பகுதியில் தோன்றியது என்று திட்டமாகக் கூறவில்லை. ஓரிடத்திலோ, பரவலாகவோ ஆங்காங்கோ அவ்வப்போது நேர்ந்த சூழலுக்கேற்பவோ தோன்றியிருக்க வேண்டும். இந்தப் படிமுறை வளர்ச்சியில் நிறைவு பெற்றது மாந்தர் உடலுயிர். இது தோன்றிய காலத்தை வரையறுக்க முடியவில்லை. ஆயினும் அண்மையில் டைனோசர் என்னும் பெரிய விலங்கினம் 200 மில்லியன் (ஒரு மில்லியன் — பத்து இலட்சம்) அதாவது 20 கோடி ஆண்டுகளுக்கு முன் தோன்றியது என்று அறிஞர் ஆரிமில்லர் (Hory Miller) என்பார் ஆய்ந்தறிந்து வெளியிட்டுள்ளார்.[22அ] எனவே இங்கு எத்துணையோ பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் முதல் மாந்த இனம் தோன்றியிருக்க வேண்டும்.

இந்த மாந்த உடலுயிர் இந்தப் பூவுலகின் எப்பகுதியில் முதன்முதலில் உருப்பெற்றது என்பதில் கருத்து வேறுபாடுகளே உள்ளன. கிடைத்துள்ள பழைய மண்டை ஓடுகளை ஆராய்ந்தோர் சாவா, சீனா, உலகின் தென்பகுதி

---

22. எம். கே. சுப்பிரமணியம்: கலைக்களஞ்சியம் 6 பக். 672

22 அ ... ... ... தினமணிச்சுடர் — சிறப்பிதழ் 8—1—1991

அதிலும் குறிப்பாக தென்கடலுள் மூழ்கிய 'இலெமூரியா' நிலப்பகுதியாக் இருக்கலாம் என்கின்றனர்.

மாந்தன் ஒரே ஒரு மூல இடத்தில் தோன்றி உலகின் பிற இடங்களுக்குப் பரவினான் என்பது ஒரு கருத்து. ஆங்காங்கு அவ்வப்போது சூழலுக்கு ஏற்பத் தோற்றம் பெற்றான் என்பது மறு கருத்து.

ஆன்மிகத்தவர்,

கடவுள் முதன்முதலில் ஓரிடத்தில் படைத்தார்; பின் பரவச் செய்தார் என்பர். இவ்வாறு உலகில் உள்ள சமயத்தார் பலரும் தத்தம் குறிக்கோள்களுக்கு ஏற்பத் தத்தம் கடவுளர் படைத்தனர் என்பர். இவையெல்லாம் படைப்புக் கொள்கையின் விரிவாக்கங்கள் எனலாம்.

முழு வளர்ச்சியுற்று வாழும் இன்றைய மாந்தன் இந்த உலகெங்கும் காண்கின்றோம். உடலைப் பொருத்த அளவில் வெப்ப தட்பம், மண்வாகு வழி வழி மரபு என்னும் காரணியங்களால் மாந்தன் உடலின் உயரம், நிறம் பருமன், முட்டு, சப்பை, கண் நிறம், மயிர் நிறம் முதலியவை வேறுபட்டுக் காணப்படுகிறான்.

ஆனால், இப்பெரும் வேற்றுமைகளின் ஊடே ஓர் ஒற்றுமை இழை யோட்டமாக உள்ளது. அது மாந்தனின் உடல் உறுப்புக்களின் வடிவமைப்பும் எண்ணிக்கையும் ஆகும். தலை, கண், காது, மூக்கு, வாய், பல், நாக்கு உடல், கை, கால், ஆண், பெண் குறிகள், பருவ மாற்றங்கள் எங்கு வாழ்வோர்க்கும் ஒத்த அமைப்பே; எண்ணிக்கையிலும் வேறுபாடில்லை. எவ்வினத்தார்க்கும் தலை ஒவ்வொன்றுதான்; மூக்கு, வாய், நாக்கு, உடல், பால் குறி ஒவ்வொன்றுதான். கண், காது, கை, கால் இரண்டிரண்டுதாம். பல் எண்ணிக்கையில் சற்று வேறுபாடு இருக்கலாம்.

புற உறுப்புகளன்றி அக உறுப்புகளாகிய தொண்டைக்குழாய், ஈரல் நெஞ்சாங்குலை, இரைப்பை, குடல் இவ்வாறு அனைத்தும் மாந்தரினத்தில் ஒத்தவையே.

இவ்வேற்றுமைகள் ஓர் உண்மையை உள்ளடக்கியது.

அந்த உள்ளடக்கமான உண்மை என்ன?

பூவுலகம் என்னும் இக்கோளம் பல்வகை, வேறுபட்ட மாறுபட்ட முரண்பட்ட சூழ்நிலைகளைக் கொண்டது. இப்பல்வகைச் சூழ்நிலைகளில் ஆங்

காங்கோ, தனித்தனியாகப் பல இடங்களிலோ படிமுறை வளர்ச்சிப்படி மாந்தர் இனம் தோன்றியிருக்குமானால் மேலே கண்ட அக, புற உறுப்புக்களில் இத்துணை ஒற்றுமை அமையாது. சிறிதளவேனும் வேறுபட்ட அமைப்பு நேர்ந்திருக்கவேண்டும். அவ்வாறன்றி ஒரே நிலையான—ஒத்த அமைப்பான உடல், உறுப்பு வடிவமைப்புகளே உள்ளமையால், மாந்த உயிரினம் ஒரே இடத்தில் முதன்முதலில் தோன்றியிருக்க வேண்டும். பின்னர் சூழப் பரவி யிருக்க வேண்டும். இதுதான் அந்த உள்ளடக்கமான உண்மை.

இந்தப் பரவலான வாழ்வில் ஆங்காங்கே வெப்ப, தட்ப, மண் வாகு களுக்கு ஏற்ப அளவு, நிறம் முதலிய மாற்றங்கள் பெற்றிருக்கவேண்டும். இவ்வாறுதான் நேர்ந்திருக்கவேண்டும் என்று முடிவு கொள்வதில் நம்பிக்கை கொள்ளலாம்.

அவ்வாறு நேர்ந்த முதல் தோற்ற இடம்—முதல் மாந்த உயிரினம் தோன்றிய இடம்—முதல் தாய் நிலம் எது? முன்னர் காணப்பெற்ற மண்டை யோட்டு ஆய்வின்படி பெரும்பகுதி உலகின் தெற்கு நிலப்பகுதி உரிய தாகின்றது.

நில ஆய்வும், உயிர்த்தோற்ற ஆய்வும் உலகின் தெற்குப் பகுதியை அடையாளங் காட்டுகின்றன. கிறித்துவ சமயக் கோட்பாடு முதல் மாந்தராகிய ஆதம்—ஏவாள் என்பது. இச்சமயக் கருத்தையும் வரலாற்றுக் கருத்தாகக் கொண்டு ஒரு பெரும் ஆய்வு கலிபோர்னியா பல்கலைக்கழக அறிவியல் வல்லு நர்களால் தொடங்கப்பெற்றது. நிகழும் ஆண்டில் (1991) அவர்கள் கண்ட முடிவு "இரண்டு இலக்கம் ஆண்டுகளுக்கு முன்னர் மாந்தர்'—என்ற ஆய்வில் ஆதம்—ஏவாள் உலகின் தெற்கு நிலப்பகுதியான ஆப்பிரிக்க நாட்டில் தோன்றினர்" என்பதாகும்.[23] இக்கருத்தும் மாந்தன் தோற்றம் தெற்கு நிலப் பகுதி என்பதற்கு ஒருசார்பான சான்று எனலாம்.

அத்தெற்கு நிலப்பகுதியிலும் மலைநிலப் பகுதியே மாந்தரினத் தோற் றத்தின் முதல் நிலம் என்பதற்கும் கருத்துக்கள் ஒத்து வருகின்றன.

சமயக் கருத்துக்களின்படியும் நோக்கினால் நீரில்தான் முதல் உயிர்த் தோற்றம் நேர்ந்தது என அறிகின்றோம். மீன், ஆமை, பன்றி முதலிய தோற்றரவுகள், ஆதாம் ஏவாள் முதலிய விவிலியக் கருத்துக்களும் சார்பா கின்றன. அந்நீர், கடல்நீர் என்றுதான் கொள்ளவேண்டும் என்பது அன்று.

---

23 ... ... ... தினகரன் (நாளிதழ்) 11—6—1991 பக் 3 செய்தித்துளிகள்

நீரில் மூழ்கியிருந்த மலைப்பகுதி மெல்ல மெல்ல உயர்ந்து வெளித் தோன்றியது. இக்காலத்தும் மலைகள் பையப் பைய வளர்ந்து வரும் செய்திகளை அறிகின்றோம். இவ்வாறு தோன்றிய மலைப்பகுதியிலிருந்து நீர் வடிந்த நிலையில் அதில் தங்கிய நீர்மக் குழைவு, நீர்மச் செறிவுகள் முதலிய குறிக்க இயலாதவற்றிலிருந்து தோன்றிய 'ஊன்மம்' என்னும் கூழிலிருந்து முதல் உடற்கூறு உருவாயிற்று என்று கொள்வதில் தவறும் இல்லை; பொருந்தாமையும் இல்லை. எவ்வகையில் நோக்கினாலும் மலையுச்சியே உயிரினத்தில் முதல் தோற்ற இடம் எனக் கணிக்கலாம்.

ஒளி, ஒலி பற்றிய நுண்மைகள், உலகத் தோற்றம் என்னும் பலதுறை பற்றித் தெளிவு கொள்வதற்கு வழி வகுத்துள்ளவை அறிவியல் கணிப்புகளே. இக்கணிப்புகளைக் கண்டு வழங்கியதில் உலக அறிவியல் வல்லுநர்கள் வள்ளல்களாக விளங்குகின்றனர். அவருள்ளும் மேலைநாட்டுப் பெருமக்களே மிகையானோர். நம் நாட்டவருக்குச் சிற்றளவு பங்கே உண்டு.

இவ்வகையில் ஒன்றைக் கணக்கில் எடுத்துக்கொள்ளத் தவறுகிறோம். அது நம் மண் கண்டிருக்கின்ற—கண்டு பதிந்திருக்கின்ற—பதிந்து நம் அறிவிற்கு அறிமுகப்படுத்தியிருக்கின்ற ஒன்று. ஆனால், நாம் நினைவிற் கொண்டு பொருத்திக்காணத் தவறியதுமாகும்.

அது எது?

தொன்மையில் முந்தைய தமிழ்ப் பேரறிஞர்கள் வகுத்து வைத்துள்ள நூற்கருத்துக்கள். அவற்றை இலக்கிய, இலக்கணம் என்னும் அளவில்தான் எடுத்துக்கொள்கின்றோம். நிலவியல், அறிவியல் தொடர்பில் கணக்கில் கொள்வதில்லை.

இப்பூவுலகம், தமிழ் முறையில் "நானிலம்"[24] எனப்படுவது. அதாவது நான்கு வகை நிலம். அந்நான்கும் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் எனப் பெற்றவை. (குறிஞ்சியும், முல்லையும் திரிந்த நிலத்தைப் பின்னர் பாலை நிலம் என்றனர்.) மலையும் மலை சார்ந்ததுமான குறிஞ்சி நிலம்; இது வன்னிலம். காடும், காடு சார்ந்ததுமான முல்லை நிலம்; இது இடைநிலம். வயலும் வயல் சார்ந்ததுமான மருத நிலம்; இது மென்னிலம். நான்காவது கடலும் கடல் சார்ந்ததுமான நெய்தல் நிலம்; இது மணல் நிலம். இவ்வாறு அமைத்த வகைப்பாடு தமிழ்ப் படைப்பு. இந்நான்கின் முறை வரிசை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்பதே. இம்முறைவைப்பு இயற்கை

---

24 நல்லை முளியார்: பரி. 13—29

நிலவியல் கருத்தில் அமைந்தது. நிலப்பாகுபாடு செய்த முதன்மைத் தமிழ்ச் சான்றோர் இம்முறை வைப்பே வைத்தனர். இஃது இயற்கை நிலவியல் மட்டு மன்று; இயற்கை வாழ்வியல் நோக்கும் கொண்டது. (முறையே மாந்தன் வாழ்வியலில் புணர்ச்சி, இருத்தல், ஊடல், இரங்கல் என அடுத்தடுத்து இயல்பாக அமையும் உணர்ச்சி நிகழ்வு கொண்டது. இவ்வுணர்ச்சி நிகழ்வு உரிப் பொருள்—வாழ்க்கைக்கு உரிய பொருள்—எனப்பெற்றது.)

இலக்கிய, இலக்கணப் படைப்பு கருதிய தொல்காப்பியர் இம்முறையில் ஒரு மாற்றம்செய்து முல்லையை முதலில் வைத்து,

"முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்
சொல்லிய முறையால் சொல்லவும் படுமே"[25]

என்றார். இதன் கருத்தை இவ்வாறு கொள்ளவேண்டும். "சொல்லிய முறை" என்பது முன்னர் உள்ள முறை உண்டு; அது குறிஞ்சியை முன்மையாகக் கொண்டது. இங்கே இலக்கிய, இலக்கணம் கருதிச் சொல்லிய முறை; இவ்வாறு இலக்கிய, இலக்கணம் கருதிச் "சொல்லவும் படும்" என்று உம்மையால் அழுத்தம் கொடுக்கப்பெற்றது. வாழ்வியல் அகப்பொருள் கூறும் நம்பியகப்பொருள் என்னும் நூல்

"குறிஞ்சி பாலை முல்லை மருதம்
நெய்தல் ஐந்திணைக்கெய்திய பெயரே"

என்று முறையாகக் கூறிக்காட்டுகிறது [ந. அ 6] எனவே, குறிஞ்சியை முன்மையாகக் கொள்ளுவதே இயல்பு முறை ஆகும். இதுதான் நிலவியல் அடித்தள முறை; நெறிமுறையுங்கூட.

எவ்வாறு?

இயற்கைக் குமுறலால் கடலிலிருந்து தோன்றிய முதல் நிலம் மலை தான். அங்கு முளைவிட்ட ஊன்மந்தான் முதலில் தோன்றியது உயிரியல் கூறு. அதிலிருந்து படிமுறைப்படி தோன்றி வளர்ந்த மாந்தனும் இம்மலையின் கற்பிளவுகளிலும், குகைகளிலும் தங்கினான்; இவற்றின் சுற்றுச் சூழலில் உலவினான். ஆண்—பெண் உணர்வின் புணர்ச்சி வாழ்வு மலர்ந்தது. இதனைப் பின்னர் குறிஞ்சியின் புணர்ச்சி வாழ்வாகிய உரிப்பொருள் என்றனர்.

இம்மலைப்பகுதியில் இயற்கையாக ஊறிக் கசிந்த நீர்த்துளிகள் இணைந்து 'சிலு சிலு' அசைவு கொண்டது; தொடர்ந்து 'சலசல' ஓட்டமா

---

25 தொல்காப்பியர்: தொல்—பொருள் 5—5, 6

கியது; 'சடசட' அருவியாக விழுந்தது. இவ்வோட்டத்தைக் கூர்ந்து கண்ட மலை மாந்தன் இந்நீரோட்டப் போக்கோடு அது எங்கு போகிறது எனக்காண அவ்வழியே வழியாய் நடந்தான்; இறங்கினான். மலையடிவாரத்தை அடைந்தான். கற்பாறைகள் குறைந்து, தான் தரித்து நிற்கும் தரைமட்டம் கண்டான். செடி, கொடி, மரம் கண்டான். முரண்படாத விலங்குகளை இணைத்துக்கொண்டு முதல் நிலை அமைப்பான வாழ்வைத் துவங்கினான். இந்நிலம் வலிய மலை நிலத்திற்கும் மெலிய வயல் நிலத்திற்கும் இடையில் அமைந்ததால் இடைநிலம் எனப்பெற்றது. இவ்விடை நில வாழ்வில்தான் தமிழ் மாந்த வாழ்வியலின் தோற்றுவாய் அமைந்தது எனலாம்.

இவ்விடை நிலத்திலிருந்து பள்ளம் கண்டு ஓடிய நீரோட்டமே வழியாக —ஆறாக (ஆறு—வழி) மென்னிலமான வளங்கொண்ட நிலம் அடைந்து கழனி பெருக்கி நாகரிக வாழ்வைத் தொடங்கினான். 'ஆற்றங்கரை நாகரிகம்' முளைத்தது. நாகரிகத்தின் நாடி இங்குதான் துடிப்பு கொண்டது.

தொடர்ந்து ஆற்றின் வழியே கொண்டு கழிமுகப்பகுதி கண்டு, பெரும் நீர்ப்பரப்பாம் கடலைக் கண்டான். மணல்வெளியில் குடியிருப்புகள் படைத்துக்கொண்டு நெய்தல் வாழ்வு கண்டான். உப்பு கண்டு சுவை படைத்தான். கடற்பொருள்களை ஈட்டினான். மிதப்பு முதல் கலம் வரை கண்டு கடல் ஓடினான். கடல் கடந்து பல்பொருள் ஈட்டினான்.

இவற்றையெல்லாம் பொதிந்துள்ளவை தமிழ் இலக்கிய இலக்கண நூல்களே. இவை இலக்கிய, இலக்கண நெறிகள் மட்டுமோ? நிலவியல் நுணுக்கம் இல்லையோ? உடலியல், உணர்வியல், உயிரோட்டம் ஊரவில்லையோ? வாழ்வியல் வரலாறு கிளைத்து நாகரிக நாடி பேசவில்லையோ?

உலகில் புதுமை அறிவியல் தோன்றிய தொடக்க காலத்திற்குப் பற்பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே தமிழ்ச் சான்றோரால் வடிக்கப்பெற்றது இந்நிலப் பாகுபாடு. இதன்படியும் இப்பூவுலக உயிரின் முதல் தோற்றம் மலைதான்.

இவ்வாறு தோற்றுவாய் செய்த முதல் தாய் மலை எது?

உலகின் தென்பகுதியில் இன்றைய இந்துமாகடலில் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் ஒரு நெடும் நிலப்பரப்பு இருந்தது. இது கிழக்கே இன்றைய ஆசுதிரேலியா முதல் மேற்கே ஆப்பிரிக்கா முடிய நீளப் பரந்து கிடந்தது. இப்பெரும் நிலப்பரப்பை ஆய்ந்த மேலை அறிஞர் எக்கெலும்

(Hegel) காட் எலியட்டும் (Scott Eliet) இப்பகுதிக்கு இலெமூரியா (Lemuria) என்றும், காண்டுவானா (Gondwana) என்று பெயரிட்டனர். இலெமூர் (Lemur) என்றொரு குரங்கினம். இவ்வினம் மாந்தரினத்திற்கு அணுக்கமான தோற்றம் கொண்டது. இப்பகுதியில் இவ்வினம் வாழ்ந்ததை ஆய்வால் கண்டறிந்து 'இலெமூரியா' என்று பெயரிட்டனர். தற்போதும் 'மூழ்கிய இலெமூரியா' என்கின்றோம்.

இப்பெரும் பகுதியில், இன்றைய நம் தமிழ்நாட்டினை ஒட்டித் தெற்கில் குமரி என்றொரு ஆறு ஓடியது. அதற்கு நெடுந்தெற்கில் பஃறுளியாறு என்றொரு ஆறு ஓடியது. இவற்றிடையே குமரி மலை என்றொரு மலையும் இருந்தது. இவற்றை நம் இலக்கியங்கள் குறிக்கின்றன. (இப் பெயர்கள் தமிழ்ப் பெயர்கள் என்பதை நினைவிற்கொள்ள வேண்டும்.) இவ் விரண்டு ஆறுகளின் இடைப்பட்ட பெருநிலப்பகுதியே குறிக்கத்தக்க மிகத் தொன்மை நிலம். இந்நிலம் வெறும் நிலம் என்று மட்டும் அன்றி வரை யறுக்கப்பெற்ற ஒரு பெரும்—மிகப் பெரும் தேயம். இதில் 7 பெரும் நாடுகள் இருந்தன. ஒவ்வொன்றும் ஏழு ஏழு நாடுகளைக் கொண்டதாக 49 நாடுகள் அமைந்திருந்தன. அவை, ஏழ் தெங்க நாடு, ஏழ் மருத நாடு, ஏழ் முன்பாலை நாடு, ஏழ் பின்பாலை நாடு, ஏழ் குன்ற நாடு, ஏழ் குணகாரை நாடு, ஏழ் குறும்பனை நாடு எனச் சிலப்பதிகார உரை விளக்கம் அறிவிக்கின் றது. முன்னிருந்த இவ்வரலாற்றைக் கண்டறிந்து எடுத்து மொழிந்த அடியார்க்குநல்லார் என்னும் உரையாசிரியர் நன்றிக்கு உரியவர். இவற் றுடன் குமரி, கொல்லம் முதலிய பல மலைகளைக்கொண்ட நாடுகளும், காடு களும், பல ஆறுகளும் இருந்தனவாக அவரே எடுத்து மொழிந்துள்ளார்.

இப்பெயர்களை நோக்கினால் குன்றம் (குறிஞ்சி), பல காடுகள் (முல்லை), மருதநாடு (மருதம்) இரு பாலை எனத் தமிழ்நிலப் பாகுபாட்டுப் பெயர்கள் பேசுகின்றன.

இந்நிலத்தின் நீட்சி எழுநூற்றுக் காவதம் (காவதம்—பத்து கல்) அஃதாவது ஏறத்தாழ 11,265 கிலோ மீட்டர் ஆகும். நாடு நாடாக 49 நாடுக ளைக் கொண்ட பெருநிலமாகையால் ஒரு கண்டம் என்று கொள்ளத்தக்க பரப்பாகும். எனவே இதனைக் குமரி ஆறு, குமரி மலை இவற்றின் குறிக்கத் தக்க அமைப்பு கொண்டு 'குமரிக் கண்டம்' என்கின்றோம். 'கண்டம்' என்பது புது வழக்காயினும் 'குமரி நாடு' என்பது காலங்காண முடியாத தொன்மையது.

இவ்வரலாற்றுப் பெயரை அறிந்த மேலை ஆராய்வாளர் பலர் தம் பெரு நூல்களில் குறித்துக் காட்டினர்.

கி. பி. முதல் நூற்றாண்டளவில் வாழ்ந்த பிளினி (Pliny) இதனைக் "குமாரி" முனை (Kumari Promontory) என்று குறித்தார். அடுத்து கி. பி. முதல் நூற்றாண்டளவில் எழுந்த பெரிபுளூசு (Periplus) என்னும் நூலின் ஆசிரியர் (பெயர் அறியக்கூடவில்லை) "குமாரி" என்றார். கி. பி. இரண்டாம் நூற்றாண்டளவில் வாழ்ந்த தாலமி (Ptolomy) குமாரியம் என்றார். இவர் குறிப்பு மிகச்சிறப்பானது. ஏன் எனில் இவர் வரையறுக்கப்பெற்ற நிலவியல் (Geogaraphy) நூலைத்தந்தவர். கி. பி. 12ஆம் நூற்றாண்டளவில் வாழ்ந்த மார்க்கபோலோ (Marcopolo) குறிப்பிலும் "குமாரி" உள்ளது.[26] இவை கொண்டு காலங்காலமாய் இக்கருத்து ஆயப்பெற்று உண்மையை வைரமாக்கியுள்ளது.

இன்னோர் 'குமாரியம், குமாரி' என்றமை குமரி முனையைக் குறிக்கும். குமரி நகரையுங் குறிக்கும். இன்னோர் எவரும் தமிழ் இலக்கியங்களைக் காணாதோர். 'குமரி' என்னும் தமிழ்ச்சொல்லையே கையாண்டிருப்பது கொண்டு குமரிப்பகுதி உலகில் பரவலான அறிமுகங் கொண்டிருந்தமை புலனாகும்.

மேலை ஆய்வாளர் கருத்துக்கள் நம் இலக்கியக் கருத்துக்களுடன் இணைந்து, ஒத்து நிற்கின்றன. இவ்வாறு ஒருமுகமாகக் கொள்ளப்பெறும் குமரி மலை, குமரியாறு, பஃறுளியாறு என்னவாயின?

" பஃறுளி யாற்றுடன் பன்மலை அடுக்கத்துக்
குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள "[27]

என்னும் வரலாற்று வரிகளை இளங்கோவடிகளார் சிலப்பதிகாரத்தில் வழங்கியுள்ளார்.

' வளைந்த கடல் குமுறிப் பொங்கிய கொந்தளிப்பால்
இரண்டு ஆறுகளும், குமரி மலையும் மூழ்கின '

இக்கருத்துடன் இணையும் மேலை ஆய்வாளர் கருத்துக்கள் உண்மை நிகழ்ச்சியை உறுதிப்படுத்துகின்றன.

கி. பி. முதல் நூற்றாண்டளவில் வாழ்ந்த பிளினி இக்கடல்கோள் பற்றிக் குறித்து குமரிநாடு மட்டுமன்றி இக்கடல் கோளால் தமிழகத்து மேற்குக்

---

26 வி. எசு. வி. இராகவன்: தாலமி—பக். 63

27 இளங்கோவடிகள்: சிலம்பு—11 அடி 19, 20

கரையிலிருந்த முசிறியும், பாதலமும், கிழக்குக் கரையிலிருந்த பூம்புகாரும் மூழ்கின என்றும் குறித்துள்ளார்.[28]

இலெமூரியா எனப்பெயரிட்ட அறிஞர் எக்கெல்,

'பல நூறாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே பெருநிலப்பரப்பாக விளக்க முற்றிருந்தென்று, அது பல கடல் கோள்களால் மறைந்து' என்றவர்,

மேலும் தொடர்ந்து ஓர் ஆழ்ந்த உண்மையை எழுதினார்.

' இந்த இலெமூரியாவில்தான் முதல் மாந்தன் தோன்றினான்; ஊர்வன வாகிய உயிர்களும் இங்கேதான் தோன்றின ' —என்று பதிந்துள்ளார். இப் பதிவு உயிர்த் தோற்றத்தின் தாய் நிலம் எதுஎன்னும் பூட்டைத் திறக் கின்றது.

அறிஞர் எக்கெலின் இப்பதிவு எவ்வாறு பொருந்தும்?

எவ்வாறு நம் தமிழ்க் கருத்துடன் பொருந்தும்?

சிலம்பில் பதியப்பெற்ற இரண்டு வரிகள் அந்தப் பொருத்தம் பொதியப் பெற்றவை. இப்பொதிவின்படி,

குமரிமலை பெரும் (கோடு) முகட்டைக் கொண்டது.

குமரி என்னும் சொல்லின் மூலம் 'கும்' என்பதற்கு ஏற்ப 'கும்' என்று அடி பெருத்து இடை பருத்து மேல் முகடான வடிவமைப்புள்ளது;

கும்மாந்த தோற்றத்தால் 'குமரி'ப் பெயர் சூட்டப்பெற்றது.

"பன் மலை அடுக்கம்" என்றதால் இம்மலை நீண்டு தொடர்ந்து பல மலைகளைக் கொண்டது; அடுக்கடுக்காகப் பக்க மலைகளைக் கொண்டது.

'குமி' என்னும் பகுதியால் பல குமி—குனி—குமிந்த—குவிந்த அமைப் பைக் கொண்டது.

—என்றெல்லாம் குமரி மலை பற்றிய விவரம்கொள்ள முடிகின்றது. இவ்விவரங்கள் யாவும் இம்மலை மிகத் தொன்மையான மலை என்பதற்கு உறுதி வாய்ந்த சான்றுகள்.

---

28 எக்கெல்: மேற்கோள் நூல் திராவிடத்தாய்—பக். 6

இம்மலையிலிருந்து தலைக்கொண்ட ஆறு குமரியாறு
இம்மலைத்தொடரின் நீண்டு பெருகிக் கிடந்ததில்,

ஆங்காங்கு மேலிடங்களில் கசிந்து கசிந்து
சில துளிகளாக ஊறிய நீர்

பலதுளிகளாகப் பெருகி, பல் + துளி — பஃறுளி ஆறாகியதைப் "பஃறுளியாறு" என்னும் காரணியப் பெயர் அறிவிக்கின்றது.

இங்குக் குறிக்கப்பெற்ற கடல்கோள் நம் காலத்திற்கு முன் அண்மையாகவும், கடல் கோள்களுக்கு இறுதியாகவும் நேர்ந்தது. அதாவது இறுதிக் கடல்கோள், மூன்றாவது கடல் கோளில்தான் குமரிமலை, ஆறுகள், நாடுகள் மூழ்கின. [மேலும் பல கடல்கோள்கள் நேர்ந்தனவாக நிலநூல் அறிஞர் செட்டலியட்டு என்பார் குறித்துள்ளார்.]

இவ்விறுதிக் கடல்கோள் நேர்ந்தது எப்போது?

இக்காலத்தைத் தெளிவாக்கிக் கொள்ளத் தமிழ்ச் சான்றுகள் அணுக்கமாக இல்லை. ஆயினும் கி. மு. வில் சில ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் நேர்ந்திருக்கலாம் என்று கருதலாம்.

ஆனால், மேலைபறிஞர் பிளினி வரலாற்றில் இது நிகழ்ந்தது

கி. பி. 79 ஆகட்டு 23, 24ஆம் நாள்களில்

என்று துல்லியமாகக் குறிக்கப்பெற்றுள்ளது.[29] எந்த அளவில் இது பொருந்தும் எனும் ஐயத்திற்குப் பிளினியின் காலம் உறுதிவாய்ந்த ஐயத்தை எழுப்புகின்றது. பிளினி கி. பி 23இல் பிறந்து கி. பி. 79இல் புகழுடம்பு எய்தினார் என்பது வரலாறு. அவர் வாழ்வு 79இல் முடிகின்றது. முடிவுறும் ஆண்டாம் 79இலேயே இக்கடல்கோள் நேர்ந்ததாக எழுதப்பட்டிருப்பது நம்பிக்கையை நடுங்கவைக்கின்றது.

இக்கடல்கோளின் காலத்தை உறுதிசெய்ய வகையில்லையாயினும் இக்கடைக்கோள் குமரி மலையை மூழ்கடித்தது உண்மை. இதனை அறியும்போதே இதற்குமுன் நேர்ந்த இரண்டு கடல்கோள்களில் இம்மலை மூழ்காது நிலைத்திருந்தது என்பதையும் உணரலாம். அக்கடல் கோள்களில் இம்மலை தாக்கம் பெற்றதாகவோ மறைந்ததாகவோ எக்குறிப்பும் கொள்ளமுடியாது.

---

29 பிளினி பக். 49—மேற்கோள் நூல் தாலமி பக். 69

இரண்டில் பிழைத்துப் பல்லாயிரம் ஆண்டுகள் விளங்கியதால் இறுதிக் கடல் கோளுக்கு இரையாகியது என்று கொள்வதே இயல்பாகின்றது. இம்மலை தப்பும் அளவிற்கு அக்கடல் கோள்கள் இம்மலைக்கு மிகத்தெற்கே நேர்ந்திருக்க வேண்டும். அதனால் இது பிழைத்தது. இதன்படியும் இக்குமரிமலை தொன்மையின் தோற்றுவாய்மலை என்று உறுதிப்படுகின்றது. உலகத் தோற்ற கால மலைகளில் குமரி குறிப்பிடத்தக்கதாகின்றது.

உலகத்தில் உயரத்தில் முதன்மைபெற்ற மலை நம் வடபுலத்துப் பனி மலையாகிய (இமம்—பனி) இமமலை. இது உயரத்தில் முதன்மை கொண்ட தன்றித் தோன்றியதில் முதன்மை கொண்டதன்று. இஃதேபோன்று உலகில் குறிக்கத்தக்க மற்றொரு மலையாகிய ஆல்பசும் காட்சி எழிலில் முதன்மை கொண்டதன்றிப் பிறப்பில் முதன்மைகொண்டதன்று. (ஆல்பசு என்னும் நெல்டிக் சொல்லுக்கு வெள்ளை என்றுபொருள்—இது பனி வெள்ளை)

இவை இரண்டும் இடைக்காலத்தே தோன்றிய மலைகளே. (இடைக் காலம் என்பது காலவெள்ளத்தின் இடைப்பகுதி)

மலைகளின் தோற்றத்தை வைத்து இருவகைப்படுத்துவர்:

ஒன்று—ஆதி மலை (தொன்மையான முதல் மலைகள்) இவற்றை அமைந்த மலை என்பர்.

இரண்டு—பிற்பட்ட மலைகள்; இவற்றைத் தேய்வு மலை என்பர்.

இமமும் ஆல்பசும் இரண்டாம் வகையின. பிற்பட்டுத் தோன்றிய மலைகள்.

குமரி மலை மூழ்கிப்போனமையால் அதுபற்றிய ஆய்வு முழுமையாகச் செய்ய இயலாது போயினும் ஆழ்கடல் ஆய்வினர் இதனை ஆதி மலையில் அடக்குவர். விந்தியத்திற்குத் தெற்கில் உள்ளவை ஆதி மலைகள் என்னும் குறிப்பில் குமரி மலை ஆதி மலை.

ஒரு தொடர்பு கூறினால் குமரி மலை மூன்றாம் கடல்கோளில் மூழ்கிய அதே கடல் கொந்தளிப்பால்தான் இம மலை தோன்றியது. குமரி இறப்பும் இமம் பிறப்பும் ஒத்து நிகழ்ந்தவை.

பட்டினத்தடிகளார்,

"வடகோடு உயர்ந்தென்ன தென்கோடு தாழ்ந்தென்ன
வான்பிறைக்கே" என்று ஒரு வரி வழங்கியுள்ளார். இது வானத்துப் பிறை பற்றிப் பாடப்பெற்றதுதான்.

வானத்தில் தோன்றும் பிறைத்திங்கள் இருபக்கம் கூர்மையான முனையுடன் காட்சியளிக்கும். இரண்டில் வடபுற முனை (கோடு) கொம்பு போன்றது. தென்புற முனையும் கொம்பு போன்றது. வடபுறக் கோடு உயர்ந்தாலும் தென்புறக் கோடு தாழ்ந்தாலும் பிறைக்கு ஒன்றும் தாக்கம் இல்லை என்று பிறைக்குச் சிறப்பு சொல்லப்பட்டதுதான்.

ஆயினும், இவ்வரி ஒரு நினைவை அழைத்துவந்து நம்முன் நிறுத்துகின்றது.

நிற்கின்ற நினைவு என்ன?

சற்று ஆழமான நினைவு அது. அது நிலவியல் வரலாற்றுக் காலூன்றி வழக்காற்றுக் கைவீசி நிற்கும் நினைவு.

காலப்பாகுபாட்டில் நடு நிலக்கரிக்காலம் என்பது ஒன்று, கால வெள்ளத்தில் இது இடைநிலைக்காலம். இக்கால இறுதியில் ஆசியாவின் மையத்தில் ஒரு கடல் உண்டானது. மைய ஆசியாவில் அமைந்ததால் மைய நில—மத்தியதரைக்கடல் எனப்பெயர் பெற்றது. நிலவியலார் இதனை '(டெ)தெதிசு' (Tethys)[30] என்பர். இக்கடலின் மையத்தில் நேர்ந்த அரிப்பு அழுத்தம், ஆழ்செயல் ஆகியவற்றால் இமமலையும் ஆல்பசும் தோன்றின என்பர் நிலவியலார்.

இந்த நினைவு வரலாற்றுக்கால்.

பட்டினத்தார் பாடலுக்குள் இவ்வாறும் பொருள்கொள்ள இப்பகுதி நிலவியலில் நேர்ந்ததைக் குறிக்கும் வழக்காறு இடம் கிடக்கிறது.

அஃதாவது

வட கோடு (கோடு—மலை) என்னும் இமமலை உயர்ந்து எழுந்து தோன்ற

தென்கோடு என்னும் குமரி மலை தாழ்ந்து மூழ்கியது என்பதாகும்.

இது வழக்காற்றுக் கை வீச்சு.

இதன்படியும் குமரியின் முதன்மை புலனாகும்.

மற்றும்,

---

30 தி. என். முத்துசாமி: கலைக்களஞ்சியம்—8 பக். 182

முன்கண்ட '(டெ)தெதிசு' தோன்றிய காலத்தை உயிரியலார் இடை உயிரி (இடைப்பிராணி) உகம் என்று கணித்துள்ளனர். அஃதாவது உயிரின் படிமுறை வளர்ச்சியில் மத்தியதரைக்கடல் காலம் உயிரினத் தோற்றப்படியில் இடைக்காலம்.

இதுவரை கூறப்பெற்ற,

குமரிக் கண்டமாம் இலெமூரியா—(காண்டுவானா)

குமரியாறு, பஃறுளியாறு, குமரி மலை

கடல்கோள், குமரி மூழ்கியது, இமம் தோன்றியது—முதலியவற்றை

" குமரி அம் பெருந்துறை" (புறம். 67—6)

" தெனாஅது உருகெழு குமரி " (புறம். 6—2)

" முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி " (புறம். 9—10, 11)

" மலிதிரை ஊர்ந்து தன் மண்கடல் வௌவலின் "
(கலி. 104—1)

" பஃறுளி யாற்றுடன் பன்மலை அடுக்கத்துக்
குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள " (சிலம்பு. 11—20)

" தென்றிசைக் கண்ணதாகிய பஃறுளி யாற்றுடனே பலவாகிய பக்க மலைகளையுடைய குமரிக் கோட்டையும் (கடல்) கொண்டதனால் "
(சிலம்பு. 11—20 அடியார் உரை)

" தமிழாராய்ந்தது கடல் கொள்ளப்பட்ட மதுரை "
(இறை. கள. உரை)

என்றெல்லாம் தமிழ் நூல்கள் தருகின்றன. வடமொழி மறையில் அதர்வ வேதச் சதபாதப் பிரமாணத்திலும் புராணங்களில் மச்சபுராணத்திலும் கடல் கோள் பற்றிய குறிப்புகள் உள்ளன என்பர். இவற்றைச் சான்றுகளாகக் காட்டினால், 'இவையெல்லாம் இலக்கிய இலக்கணம்; அவற்றின் உரைகள் தாமே; ஆராய்ச்சி முடிவாகுமா' என்பார் உளர்.

அன்னார் கருதி,

மறுக்க இயலா ஆய்வு முடிவுகளில்—உலக அறிஞர்தம் ஆய்வு வெளிப்பாடுகளில்—சில* தர நேர்கின்றது.

---

* இவை பாவாணரின் 'ஒப்பியன் மொழி நூலில்' தொகுத்துக் காட்டப்பெற்றவை.

" கோடி ஆண்டுகளின் முன்—ஒரு வேளை அதற்கு மிக முந்தி ஒரு பெரிய கண்டம் ஆப்பிரிக்காவையும் இந்தியாவையும் இணைத்திருந்தது. மாந்தன் அப்போது ஞாலத்தில் தோன்றவில்லை. அக்கண்டத்தில் நச்சுயிரிகளும் யானையும் கூண்டமாவும் இலெமூர் என்னும் குரங்கினமும், பூத ஆமையும் குடியிருந்தன"

—இங்கிலாந்து அறிஞர் சான்

" காண்டுவானா நாடு (இலெமூரியா) நச்சுயிர்க் காலத்திற்குரிய தாயும் ஐயமற நச்சுயிர்ப் பூதங்களின் இருப்பிடமாயும் இருந்தது"

—எஃப். சி. பிரின்சு ஒயிற்று

காட் எலியட் வரைந்து வெளிப்படுத்திய முக்கிய இலெமூரியா நிலப்படம்

" மிகத் தொண்மையான மண்டையோடுகள் சில. அவற்றுள் சாவாவில்—சாவாத் தீவின் அருகிலுள்ள பிற தீவுகளுடன் ஒரு காலத்தில் ஆசிய நிலத்தோடு இணைக்கப்பட்டிருந்தது. அது ஹாங் உடான் என்னும் குரங்கு (இலெமூர் போன்றது) வாழும் இடங்களுக்கு அணித்தானது (இலெமூரியா) மாந்தனுக்கும் குரங்கிற்கும் இடைப்பட்ட ஓர் உயிரி (இலெமூர் ஆக இருக்கலாம்) வாழ்ந்த இடமாகத் தெரிதலால் அது மிகக் குறிப்பிடத்தக்கது"

—ஆல்பிரெம் கிரைட்

ஒரு குறிப்பிடத்தக்க சான்று:

சர் சான் மர்ரே என்பார் 'மாகடல் நூல்' (Oceanography) எனப் பெறும் கலை ஆய்விற்காக ஒரு பெரும் அறக்கட்டளை* நிறுவினார். இவ்வாய்வால்,

" மிகத் தொன்மைக் காலத்தில் தென் அமெரிக்கா, ஆப்பிரிக்கா தொடக்கமாக இந்தியாவை ஒட்டிய தென் கண்டம் வரை பெருநிலப்பரப்பு படர்ந்திருந்தது. இது காண்டுவாணாக் கண்டம் அல்லது காண்டுவானா நாடு (Gondwana) என்று அறியப்பட்டது. இது முழுகிப் போயிற்று. முழுகிப்போன இப்பெருநிலத்தைப்பற்றி வியக்கத்தக்க உண்மைகள் அண்மையில் காணப்பட்டிருக்கின்றன.

* இது 30 ஆயிரம் பவுன்களைக் கொண்டது.

இதன் சான்று: இமமலை, காக்கசசு, ஆல்பசு, பிரனீகம் என்னும் மலைகள் (மையநில) கடலுக்குள்ளிருந்த காலத்தில் நான்கு கண்டங்களும் ஒரே வகையான நில உயிர்களும், செடி கொடிகளும் பல் படிவத்தில் காணப்படுகின்றன என்னும் உண்மையைச் சார்ந்தனவாகும்"

பேராசிரியர் சே. ஃச்டான்லி கார்டினர் (Prof. J. Stanley Gardinar) இச்சான்றால் குமரிக்கோடு மூழ்கி இமமலை கடலுக்குள்ளிருந்து எழுந்ததன் நேர்ச்சியை உறுதிசெய்துகொள்ளலாம்.

மேலும், இச்சான்றால் மற்றொரு கருத்தும் வெளிப்படுகின்றது. கடல் கோள் அழித்துத் தீமை செய்யும் என்பது மட்டுமன்று, புதிய மலைகளை உயர்த்தி நன்மையும் செய்யும் என்பதும் வெளிப்படுகின்றது. மையநிலக் கடல் தந்த இமமலை இந்தியாவை உலகத்தில் உயர்த்தி இருக்கிறது. இந்தியாவின் எல்லைக் கோட்டையைத் தந்துள்ளது. கங்கையாற்றைத் தந்துள்ளது.

தமிழ் நூல்கள் அளவில் தென்கடலில் மூன்று கடல் கோள்களையே அறிகின்றோம். உலக நிலவியல் ஆய்வாளர்கள் ஐந்து பெரும் கடல் கோள்களை ஆய்வறிவால் அறிவித்துள்ளனர். ஓரளவான கால எல்லைகளையும் பின்வருமாறு அறிவித்துள்ளனர்.

நிலவியல் அறிஞர் கெட்டலியட்டு (Gettaliat) என்பார் இவ்வாறு கணித்துள்ளார்: ஆய்வு தரும் எல்லை அளவிற்கு மிகத் தொன்மையான கடல் கோள் பத்துநூறாயிரம் ஆண்டுகளுக்கு முன் நேர்ந்தது என்றும், அடுத்து அடுத்து எட்டுநூறாயிரம், இரண்டுநூறாயிரம், எண்பதினாயிரம், ஒன்பதினாயிரத்து ஐநூறு என நேர்ந்தன என்கிறார். இவையன்றி ஆங்காங்கு சிலவும் நேர்ந்ததுண்டு என்பதும் சிலர் கருத்து. மேலே கண்ட ஐந்து கடல்கோள்களில் நம் தென்மாகடலில் நேர்ந்த மூன்றும் அடங்கும்.

இதுகொண்டு நோக்கினாலும் இறுதிக் கடல்கோளில் மூழ்கிய குமரிமலை இதற்குமுன் பல கடல்கோள்களை மீறி நிலைத்துள்ளதை உணரலாம்.

எனவே, முதல் தோற்ற மலை குமரி மலை

அதில்தான் முதல் உயிரி முளைத்தது

அதன் படிமுறை வளர்ச்சியால் மாந்தன் தோன்றினான்

என முடிவுகொள்வதில் உறுதி பளிச்சிடுகின்றது.

இந்த உறுதிவாய்ந்த முடிவோடு,

படிமுறை வளர்ச்சிப்படி மாந்தன் உருவாகிப் பின்னர் உலகெங்கும் பரவியதால்தான் அவன் உறுப்புக்கள் அமைப்பாலும் எண்ணிக்கையாலும் ஒத்துள்ளன என்று முன்னர் நாம் கண்டு நிறுத்தியுள்ள கருத்திற்கு மீள்வோம்.

அமைப்பிலும் எண்ணிக்கையிலும் மட்டுமன்றி மாந்தனின் உறுப்புக்கள் இயக்கத்திலும் செயல்பாட்டிலும் பயன்பாட்டிலும் ஒருமுகங்கொண்டவை.

இந்நிலவுலகை ஐம்பெரும் பூதங்களின் திரட்சியாகக்கண்ட தமிழன் மாந்த உடலையும் அவ்வைம்பெரும் பூதங்களின் கட்டாகக் கண்டான். அவ்வைந்தின் எண்ணிக்கையில் உடல் உறுப்புக்களையும் ஐந்தாகவே, இயல்பு முறைப்படி பகுத்துக் கண்டான். ஐந்து எண் இவ்வாறு தொடர்வதில் ஓர் இயைபு உள்ளது. இங்கு மாந்த உறுப்புக்கள் மொழித் தொடர்புக்காக எடுத்துக்கொள்ளப்பெறுகின்றன மொழியியல்பை மெய்ப்பொருள் உணர்வுடன் ஆராய்ந்த கிரேக்க அறிஞர் எபிக்கூரசும் (Epicurus) அரிசுடோடிலும் (Aristotle)

" மொழி ஐம்பெரும் பூதம் போல இயற்கையானது "

என்ற உண்மையைக் கூறியுள்ளதை இங்கு பொருத்திப் பார்க்கலாம். இந்த ஐந்து பகுப்பு இயற்கை மட்டுமன்று; அறிவின் வகைப்பாடும் ஆகும்.

" மெய், வாய், கண், மூக்கு, செவி ஐம்பொறியே " என்பது திவாகர நூற்பா. பிற நூல்களும் இவ்வாறே,

" பொறி வாயில் ஐந்து " (திருக்குறள்—6)

*" பொறியின்மை யார்க்கும் பழி அன்று " (திருக்குறள்—618)

*" பொறியின் யாத்த புணர்ச்சி " (தொல். பொருள். 111)

என ஐந்தையும் பொறி என்றன. அசைவில், உந்தலில், துடிப்பில் இயங்கி செயற்பட்டு, பயன் விளைவிப்பது பொறி. மாந்த உறுப்புக்கள் ஐந்தும் இவ்வகையில் பொறிகள். ஒவ்வொரு பொறியும் தன்தன் இயக்கத்தில் ஒவ்வொரு அறிவைக் கொண்டது. அவ்வறிவு புலன் எனப்பெற்றது. ஐம்பொறி

* இங்கு 'பொறி' என்பதற்கு உரையாசிரியன்மார் தெய்வம், ஊழ் என்பொருள் கண்டமை பொருந்தாது. இயங்கும் உறுப்புகள் என்பதே பொருந்தும்.

கள் சொல்லப்பெறும் முறை வரிசை மேல் கண்டதுபோன்று மிகுதியாகவும் ஆங்காங்கு எடுத்துக்கொள்ளப்பெறும் கருத்திற்கும், ஆய்விற்கும் ஏற்ப மாற்றியும் கொள்ளப்பெறும். இங்கு எடுத்துக்கொண்ட மொழிப் பிறப்பிற்கு, 'மெய், வாய், மூக்கு, செவி, கண்' என்று முறைப்படுத்திக்கொள்ளலாம்.

மெய்யை உடல், உடம்பு, யாக்கை என்றெல்லாம் கூறுகின்றோம். இஃது ஒரு தனி உறுப்பன்று. உறுப்புக்களின் என்றும் பிரியாத முரண்படாத கூட்டணி. ஐந்து உறுப்பைத் தாண்டிய ஆறாவது அறிவிற்கும் தனி அணி. அதே நேரத்தில் உள்ளுறுப்புக்களின் பாதுகாப்புப் பெட்டகம். இப்பெட்டகம் மொழிக்கு மூலமான ஒலியை எழுப்புதற்கும், மொழித் தோற்றத்திற்கும் எவ்வாறு உதவுகின்றது என்பதைப் பின்னர் காண்போம்.

அடுத்த வாயின் மொழிப் பங்கு என்ன?

முதல் மாந்த இனம். தனக்குப் புறத்திலிருந்து நேர்ந்த தாக்கங்களால் உணர்ச்சி உந்தப்பெற்று அவ்வுணர்ச்சியை வாயால் ஒலியாக, தன்னை அறியாமல் வெளிப்படுத்தியது.

அச்ச உணர்வால் 'ஆ' என்றும்,

தாழ்வு உணர்வால் 'ஈ' என்றும்,

சுவை உணர்வால் 'ஊ' என்றும்

சின உணர்வால் 'ஏ' என்றும்,

அவல உணர்வால் 'ஓ' என்றும்

தன் தன்மை வளர்ச்சியால் நேர்ந்த வியப்பு உணர்வாலும், நுண்மை உணர்வாலும் 'அய்'—'ஐ' என்றும், வஞ்ச உணர்வால் 'அவ்'—'ஔ' என்றும்

ஒலிகள் உண்டாயின. இவை அனைத்தும் ஒலிகளே; மொழி அன்று. மொழி தன் உணர்வையோ கருத்தையோ மற்றவர்க்கு உணரவோ அறியவோ வைப்பது. மேற்கண்ட உணர்வு ஒலிகள் மாந்தனின் இயல்பு வெளிப்பாடுகள். அவனை அறியாமல் பிறந்தவை. மற்றவர்க்குத் தொடர்பு இல்லாதவை. எனவே மொழி ஆகாது. ஆனால் பின்னர் முளைத்த மொழிக்கு முளைகள். இவ்வொலிகளை எழுப்பியது வாய் என்னும் உறுப்பு அன்றோ. ஆயினும் இந்நிலையில் வாய் மொழியைத் தருவது ஆகாது. எதனால் எனின், மாந்தன் தன் உணர்வை, கருத்தை மற்றவருக்கு உணர்த்த, அறிவிக்க முதன்முதலில் கையையே பயன்படுத்தினான். கையின் இயக்கம் என்பது அசைவால் நேரும்

செயல். செயல் என்பது 'செய்' என்பதன் தொழிற்பாடு. 'செய்' என்பதுடன் 'கை' சேர்ந்து 'செய்கை' ஆகும்; 'செய்' என்பதற்குரியதால் கைக்கே 'செய்' என்னும் சொல் உண்டு. அந்ன் அடையாளத்தை இன்றும் தமிழின் வழி மொழியாகிய தெலுங்கில் காண்கிறோம். (தெலுங்கில் செய்—கை) கை செய்த பேச்சே முதல் மொழி. இது 'செய்கை மொழி—சைகை மொழி' (Gesture Language) எனப்பெற்றது. (சிவம் சைவம் ஆனது போன்றும் பித்தம் பைத்தியம் ஆனது போன்றும் செய்கை 'சைகை' ஆயிற்று)

" வையம் ஈன்ற தொன்மக்கள் உளத்தினை
கையினால் உரை காலம் "

என்று நம் காலத் தமிழ்ப் பேரறிஞர் தஞ்சாவூர் பள்ளியக்கரையகரம் திரு நீ. கந்தசாமி பிள்ளையவர்கள் 'கையினால் உரைக்கும் மொழி' என்று பாடினார் கள். இன்றைய நிலையிலும்—மொழி வளர்ச்சி அடைந்துள்ள இன்றைய நிலையிலும்—வாயால் பேசிக்கொண்டே கையால் குறிகள் காட்டுகின்றோம். 'வா' என்று வாயால் அழைக்கும்போது நம்மை அறியாமல், தேவையில்லாமல் உள்ளங்கையைக் குவித்துக் கவித்து, வளைத்து அசைத்துச் சைகையும் காட்டு கின்றோம். 'உண்டாயா' என்று வினவும்போது ஐந்து விரல்களின் முனைக ளைக் கூட்டி உதட்டில் வைத்துக் காட்டுகின்றோம். இவ்வாறு பலவற்றைச் செய்வதை அறிவோம் இவை இன்றைய மொழிக்கு மூல மொழி—முதன் மொழி—சைகை மொழி என்பதை அடையாளம் காட்டுவனவாகும்.

மற்றும், சைகைக் கொள்கை (Gesture Theory) "கையால் சைகை காட்டும்போது ஏற்படும் மன உந்துதலால் நாக்கு அதற்கேற்ப அசைந்து அசைந்து, பிறழ்ந்து ஒலிப்பதே மொழி" என்பதையும் இணைத்து நோக்கி னால் வாய் உண்டாக்கும் மொழிக்குச் சைகைமொழி தூண்டுகோலாகிறது.

மேலும் ஒன்றை இணைத்து நோக்கவேண்டும். மொழி வளர்ச்சி என்பது எழுதிக்காட்டும் வரிவடிவில்தான் நிறைவு பெறுகிறது. அவ்வரி வடிவத்தை வரைவது கை. எனவே, சைகை, தூண்டுதல், வரைதல், ஆகிய இயக்கங்களால் கைதான்—கையால் மெய்தான் மொழிக்கு முதல் உறுப்பு ஆகிறது. சைகை மொழிதான் முதன்மொழி.

இரண்டாவதாக வாய். இது முன்னர் விளக்கியமை போன்று உணர்ச்சி களின் வெளிப்பாடான ஒலிகளை எழுப்பியது. அவ்வொலிகளின் தொகுதியே மொழி. வெறும் ஒலித்தொகுதி மொழி ஆகாது. எழுந்துவரும் ஒலிக்கூற்றின் வன்மை, மென்மை, இடைமை ஒலியாகும்போது நிகழும் எடுத்தல், படுத்தல்,

நலிதல் இவற்றின் வகைப்பாட்டால் வரையறை கொண்டதே மொழி. தொண்டையிலிருந்து ஒலியை அதன் வன்மை, மென்மை, இடைமைக்கு ஏற்ப வாயில் உள்ள நாக்கு, உதடு, மேல்வாய், பல், மூக்கு ஆகியன தம் ஒத்துழைப்பால் எடுத்தும், படுத்தும், நலிந்தும் உண்டாக்குகின்ற சொல்லுருவில்தான் மொழி பிறக்கிறது. இவற்றால் வாய் மொழியின் தாய் ஆகிறது.

மூன்றாவதில் நிறுத்தப்பெற்றுள்ள மூக்கு மணத்தை முகர்வது. இஃதே இதன் புலன் அறிவு முகர்வாலேயே 'மூக்கு' என்னும் பெயர் பெற்றது. இப் புலன் அறிவுடன் மூச்சோட்டத்திற்கு மூக்கு முளைத்து முன்வந்துள்ளது. மூச்சுக்காற்றைக் கொள்ளவும் தள்ளவும் உள்ளுறுப்பாகிய நுரையீரல் பொறுப் பேற்றுள்ளது. இம்மூச்சுக்காற்று உள்ளே செல்லப் பாய்காலாகவும், வெளியே விட வடிகாலாகவும் இம்மூக்கு உள்ளது.

மொழிக்கும், அதன் ஒலிக்கும் மூலமாவது "உந்தி முதலா முந்து வளி"[31] யாம் காற்று. இக்காற்றை உள்ளே வாங்கித் தரும் பங்கு கொண்டதால் மூக்கு மொழிக்குரிய உறுப்புக்களில் ஒன்றாகியது.

அத்துடன், "மூக்கின் வளியிசை"[32] யால் மெல்லெழுத்து பிறக்கிறது. இதனால் மூக்கு மொழிப்பணியில் ஒரு கூறு கொண்ட உறுப்பாகியது.

நான்காவதான செவி ஓர் ஒலிவாங்கி. மொழியின் பயன் அதனை ஏற்போனால் உண்டாவது. ஏற்போனுக்கு உதவியாக இச்செவி ஒலிவாங்கும் பணியைச்செய்து மொழிக்கு உறுப்பாகியது.

ஐந்தாவதும் நிறைவானதுமாகக் கண் ஒளிர்கிறது. மொழிக் கூறில் கண் இருவகைப் பணி கொண்டது. ஒன்று, சைகை மொழியைப் புரிந்து கொள்ள, கண் தன் பார்வைப் பணியைச் செய்கிறது. இரண்டு, ஒலியாகப் பிறந்த எழுத்திற்கு அதன் தொடர்பில் எழுதப்பெறும் வரி வடிவத்தைத் தன் பார்வைப் பணியால் கண் வடிவை ஈர்த்துக்கொடுத்துப் பணி செய்கிறது.

" கண்ணிற் சிறந்த உறுப்பில்லை " என்று சிறப்பித்தமைக்கு ஏற்ப கண் மொழித்துறையிலும் மேலே கண்ட இரு பணிகளாலும் உயர்வு பெறுகிறது.

---

31. தொல்காப்பியர் : தொல். எழு. 83

32. ,, ,, 100

இவ்வாறு ஐந்து பொறிகளும் மொழிக்குரிய ஒலி—ஒலித்தொகுதி தோன்றுதற்கு இயல்பாக இயங்குகின்றன; செயற்படுகின்றன; பயன்படுகின்றன. இவ்வழியில் மொழியின் பிறப்பு வரலாற்றைப் படிமுறை வளர்ச்சிப் படி முறைப்படுத்தலாம்.

1 சைகைமொழி
2 உணர்ச்சி ஒலி
3 சுட்டொலி
4 போலி ஒலி
5 அசை மொழி
6 பலுக்கு மொழி

இம்முறைப் படிகளைப் பின்வருமாறு விரிவாக்கலாம்.

## 1. சைகை மொழி

மொழித் தொடர்பில் முதன்மை பெற்ற உறுப்பாம் மெய் அதாவது கை தந்தது சைகை மொழி. இஃது ஒலி அல்லாத (கைச் செய்கை) குறிப்பு மொழியாகும்.

சைகை மொழி என்பது மாந்தன் தன் கையால் கருத்தை அறிவிப்பது என்று கண்டோம். கையும் இதன் அசைவும் காட்சிப்படுவதை அறிவோன் கண்டு உணர்கிறான்.

காட்சிப்படுவது என்றால் என்ன?

ஒரு பொருளின் மீது ஒளி பாய்ந்து அதன் விளிம்புகளில் எதிரொளிப்பைத் தந்தும், பொருட்பரப்பின் மேடு பள்ளங்களை எதிரொளிப்பால் புலப்படுத்தியும் காண்போன் கண்ணால் காணுமாறு செய்கிறது. இதுதான் காட்சிப்படுதல். எனவே இக்காட்சிப்படுவதற்கு ஒளிதான் காரணியம்.

இங்கு நாம் முன்னே (பக்கம் 5) அடித்தளக் கருத்தாகக் கண்ட "ஒளிதான் உருப்பொருளாகக் காட்டுகிறது" என்பது பொருத்திக் காண வேண்டியது.

இத்தொடர்பில் கையையும் அதன் அசைவையும் கண் எவ்வாறு இடை நேரத்தை எண்ணிப்பார்க்கவும் இயலாதபடி உடனுக்குடன் காண முடிகின்றது? இங்கு முன்னர் (பக்கம் 7) பதிந்துள்ள முத்திரை 1—ஒளி விரைவுக் கருத்து—பொருத்திக்காண வேண்டியதாகின்றது. ஒரு நொடியில் ஏறத்தாழ இரண்டு இலக்கம் மைல்கள் ஒளி விரைவு என்றால் சில பல அடிகளே இடைவெளியில் இயங்க ஒரு நொடியில் எத்துணை அணுவளவு பங்கு ஆகும்? அந்த அளவில்

ஒளி விரைவு, காட்சிப்படுதற்குக் காரணியமாகிறது. எனவே, சைகை மொழியை ஒளிதான் புலப்படுத்துகிறது.

'எனவே சைகை மொழி பெரும்பகுதி ஒலி அல்லாத (கைச்செய்கை) ஒளியால் புலனாவதாகும். கையால் மட்டுமின்றி கண்ணசைவு, வாயசைவுச் செய்கைகளாலும் இச்சைகை மொழி உண்டாகியதை மொழியறிஞர் மாக்சுமுல்லர் (Max-Muller II Page 508) கூறியுள்ளார்.

## மொழிக்கு வித்து

**(ஒலியின் மூலமும் களமும்)**

ஒலிதான் மொழிக்குத் தோற்றுவாய். இவ்வொலியின் கரு காற்று என்னும் வளி. கருவாம் வளியின் அறை மெய்யின் உள்ளுறுப்பாகிய உந்தி. உந்திதான் ஒலியின் கருவறை. வளியை உந்தித்தள்ளுவதால் இவ்வுறுப்பு உந்தி (உந்து + இ — உந்துதலை உடையது) என்று பெயர் கொண்டது. உந்தப்படும் வளி "உந்து வளி" எனப்பெற்றது. இவ்வரலாற்றைத் தமிழ் வல்லுநர் தொல்காப்பியனார்,

"உந்தி முதலா உந்து வளி தோன்றி" என்று ஓர் அடியில் வழங்கியுள்ளார். இவ்வடியில் ஒவ்வொரு சொல்லும் மொழிக்கருவின் படிப்படியான வாயில் எனலாம்.

உந்தி: உந்தித் தள்ளுவது

முதலா: இதுதான் முதல் மூலக் கருவறை

உந்து: வினையாகும் மூல இயக்கம்

வலி: ஒலிக்கு வேண்டிய அளவு (வள் — இ) வளப்பம் கொண்டது.

இவ்வாறு விரித்துக் காணும்போது, மொழியின் மூலம் ஒலி, ஒலிக்கு மூலம் உந்தி என்பன புலனாகின்றன.

உந்தப்பட்ட வளி மூச்சுக்குழாய் வழியாகத் தொண்டைக்கு வருகின்றது. இங்குதான் ஒலி உருப்பெறுகின்றது. எனவே தொண்டைதான் ஒலியின் களம். ஒலியும் ஓர் உருவே. (இதன் விளக்கம் பின்னர் வரும்) எனவே மூலக் கருவறையாகிய உந்தியில் எழுந்து, களமாகிய தொண்டையில் பிறக்கும் ஒலிதான் மொழிக்கு வித்து.

## 2. உணர்ச்சி ஒலி (மொழியின் முளை)

இவ்வித்தாம் ஓசை அளவில் குரல் ஒலியாக எக்குறியும் இன்றித் தோன்றியது. இக்குறியற்ற ஒலியின் வளர்ச்சி மாந்தனுக்குப் புறத் தாக்கத்தால் ஒரு குறியாக முளைவிட்டது. இதனை முன்னர் (பக்கம் 3இல்) 'ஆ' 'ஈ' 'ஊ', 'ஏ', 'ஓ', 'ஐ', 'ஔ' எனக் கண்டோம். இவ்வொலிகள் மாந்தனின் உணர்ச்சி வெளிப்பாட்டின் முளைப்புகள். இவற்றை 'வியப்பொலி' எனக் கண்டவர் மொழிஞாயிறு பாவாணர். இவை வியப்பை மட்டுமன்றிச் சுவை, அவலம், ஐயம், அச்சம் முதலிய உணர்வுகளின் வெளிப்பாடாகையால் 'உணர்ச்சி ஒலி' எனலாம். இவ்வுணர்ச்சி ஒலியை மொழியின் முளை எனலாம்.

இம்முளையுடன் சேர்த்து எண்ணத்தக்கது மூக்கொலி. தொண்டைக் குழியில் முட்டி எழும் ஒலித்தாக்கம் வாய் திறக்கப்படாமல் மூக்கு வழியாக ஒலியாகி வரும். (உம் கொட்டல், முக்கல், கனைத்தல், முனகல் ஒலிகள்) இவ் வெளிப்பாடும் உணர்ச்சி வெளிப்பாடே.

இந்த உணர்ச்சி வெளிப்பாட்டில், உணர்ச்சி ஊற்று எவ்வாறு சுரக்கிறது? இவ்வுணர்ச்சி ஒலியை ஏற்போன் ஏற்றுப் பெறும் உணர்ச்சிக்கு மூலம் எது? எவ்வகை உணர்ச்சிக்கும் கதிரவன் ஒளிக்கும் தொடர்பு உண்டு. இங்கு முன்னே (பக்கம் 7இல்) கண்டு பதிந்துள்ள முத்திரை 2, 3 கரணியங்களாகும்.

"ஞாயிற்றின் கரும்புள்ளித் தோற்றத்திற்கும் நம் நில உலகத்து உயிர்களுக்கும் தொடர்பு உண்டு" என்ற அடித்தளக் கருத்து சொல்லும் தொடர்பின்படி மாந்த உணர்ச்சி சுரப்பதற்குக் கதிரவனின் கரும்புள்ளி கரணியமாகிறது, அல்லது உதவுகிறது எனலாம், ஒலி ஏற்பு உணர்வும் இக்கரணியத்தால் அல்லது உதவியால் ஊறுகிறது எனலாம்.

ஒலியைத் தருவோனுக்கும் அதனை ஏற்போனுக்கும் அவனவன் தன் உணர்ச்சியில் மாற்றம் உண்டு. அம்மாற்றம் முத்திரை 3இல் பதிந்துள்ள,

> " ஞாயிற்றின் கரும்புள்ளிகளால் உலக மாந்தனின் உணர்வுகள்
> மாற்றம் அடைகின்றன "

என்பதன்படி இருவர்க்கிடையே மாற்றம் நேர்கின்றது எனலாம்.

எவ்வகையில் நோக்கினாலும் உணர்ச்சியின் ஊற்றுக்காலுக்கும் மாற்றத்திற்கும் கரணியம் ஞாயிற்றின் ஒளியே ஆகும்.

## 3. சுட்டொலி (மொழியின் வேர்)

இம்முளையாம் உணர்ச்சி ஒலிகளே அடுத்த படிக்கு—இம்முளை வேர் விடுதற்கு—மூலமாயின. அச்சந்தரும் ஒன்றைப்பார்த்து 'ஆ' என்று உணர்வொலி எழுப்பிய மாந்தன் அச்சந்தந்த பொருளைக் கூர்ந்து கண்டு அச்சந் தந்தது 'அது' தான் என்னும் குறிப்பில் 'ஆ' என்றான். அச்சத்தால் தன்னை அறியாமல் 'ஆ' என்று எடுத்து ஒலித்தவன் அச்ச உணர்வை அடக்கிக் கொண்டு குறுக்கி ஒலித்து 'அ' என்றான். இதுபோன்றே தாழ்வு உணர்வு ஒலியாம் 'ஈ'யைக் குறுக்கிப் படுத்து ஒலித்து 'இ' என்றான். சுவை உணர்வு ஒலி 'ஊ'வைக் குறுக்கிப் படுத்து ஒலித்து 'உ' என்றான், இவைபோன்றே பிறவும் குறுக்கியும் படுத்தும் ஒலிக்கப்பட்டு 'எ', 'ஒ', '(ஐ) இ', '(ஔ) உ' ஆயின.

முதல் மாந்தனிடம் நெட்டெழுத்தொலிகளே முதலிற் பிறந்து அவையே அடுத்துக் குற்றெழுத்தொலிகளாயின என்று மொழிஞாயிறு பாவாணர் தந்துள்ள கருத்து[33] இங்கு சான்றாகக் கொள்ளத்தக்கது.

இவற்றுள் 'அ, இ, உ' என்னும் மூன்றும் மாந்தன் தனக்குத்தானே சுட்டிக்கொண்டு உணரப்பட்டதாலும், பின்னர் பிறர்க்குச் சுட்டிக்கூறி உணர்த்தப்பட்டதாலும் இவை சுட்டொலிகள் எனப்பட்டன. மொழிஞாயிறு பாவாணர்தாம் 'சுட்டொலிகள்' என்னும் பெயரீடு செய்தவர்.[34]

மொழிப்பேரறிஞர் யாழ்ப்பாணத்து நல்லூர் ஞானப்பிரகாசர் 'எகரமும் ஒரு சுட்டே'[35] என்றார். இஃது ஆய்தற்குரியது. ஆனால் வெறுப்பு உணர்வாலும், சின உணர்வாலும் 'ஏ' என்றவன் அவை தணிந்து அவ்வுணர்வைத் தந்ததன் காரணியத்தை அறிய 'எது'—'எவை' என்னும் வினா உணர்வைக் கொண்டான். இவ்வினா உணர்வுதான் அடிநிலை உணர்வில் இருந்த மாந்தனைப் பகுத்தறிவைத் தூண்டும் நிலைக்கு உயர்த்தியது. என்வே, சுட்டொலியின் தொடர்பில் எழுந்த 'எகரந்தான் பகுத்தறிவிற்குத் தூண்டுகோல்' என வேண்டும்.

அ, இ, உ, எ என்னும் சுட்டொலிகளே பின்னர் விரிந்த அசைகட்கும் சொற்கட்கும் அடித்தளமும் உயிர்த்தளமும் ஆயின. எனவே சுட்டொலி மொழியின் வேர் ஆகும்.

---

33 ஞா. தேவநேயப் பாவணர்: முதன்மொழி—பக், 19

34 „ : „ 17

35 நல்லூர் சுவாமி ஞானப்பிரகாசர்: தமிழ் அமைப்புற்ற வரலாறு—பக். 11

இச்சுட்டொலிகளில் உலக முதன்மையான 'அ' என்னும் ஒலி எவ்வாறு பிறந்தது" தொண்டையிலிருந்து பிறந்த குரல் ஒலி, இணைந்து மூடியிருந்த உதடும் இதழும் திறந்து பிளக்க, அங்காத்தலால் உண்டாயிற்று, இஃது இயல்பும் எளிமையும் கொண்ட முதல் ஒலி. 'இ' என்னும் ஒலி—குரலில் எழுந்த ஒலி, நாவின் நெகிழ்வால் உண்டாயிற்று. 'உ' என்னும் ஒலி தொண்டைக் குரல் ஒலி, உதடும் இதழும் குவிதலால் உண்டாயிற்று. இவ்வாறாக மூன்றையும் அடுத்தடுத்து ஒலித்து உணர்ந்தால் உணர்ச்சி ஒலிகளுக்கு அடுத்த நிலையில் இச்சுட்டொலிகளே இயல்பும் எளிமையும் கொண்டவை என உணரலாம். இத்துடன் உணர்ச்சியுடன் சற்று அறிவைத் தூண்டும் அல்லது அசைக்கும் நிலைக்கும் மாந்தனைத் திருப்புகின்றன என்பதையும் உணரலாம். இவற்றால் சுட்டொலிகள் மொழி முளைப்பின் வேர் ஆயின. மொழி ஞாயிறு பாவாணர் இதனைத் தெள்ளிதின் ஆய்ந்து,

"குறிப்பொலிகளுடன் சுட்டொலிகளையும் கையாண்டு, அவற்றினின்று பல்லாயிரக்கணக்கான சொற்களைத் திரித்துக்கொண்ட காலம் 'சுட்டொலிக் காலம்' ஆகும். 'சுட்டொலிகள்' தோன்றிய பின்னரே மொழி வளர்ச்சியடையத் தொடங்கிற்று. உண்மையில் சுட்டொலியடிச் சொற்றொகுதியே மொழி எனினும் இழுக்காகாது"[36] என்று பதிந்துள்ளார். மொழியின் படிமுறை வளர்ச்சியில் இக்காலத்திற்குச் 'சுட்டொலிக் காலம்' என்று பெயரீடு செய்த திறன் உண்மை பொதிந்ததாகும்.

எனவே மொழித்தோற்றத்திற்கு விட்ட வேர் இச்சுட்டொலியாம் வேரே.

## 4. போலி ஒலி (மொழியின் தண்டு)

மொழியின் படிமுறை வளர்ச்சியில் அடுத்த படி 'போலி ஒலி'. புறத்தே எழுந்த பிற உயிரினங்களின் குரல் ஒலிகளைக் கேட்ட மாந்தன் அவற்றைப் போன்று தானும் குரல் கொடுத்து ஒலித்துப் பார்த்தான்.

'கா' என்ற காக்கையின் குரல் ஒலியை,

'கூ' என்ற குயிலின் குரல் ஒலியை

'மா' என்ற மாட்டின் குரல் ஒலியை,

'மே' என்ற ஆட்டின் குரல் ஒலியைப்போன்று குரல் கொடுத்தான். (பின்னர் இவ்வொலிகளே இவ்வுயிரினங்களுக்குப் பெயராக்கப்பெற்றன.) இவை

---

36. ஞா. தேவநேயப்பாவாணர்: முதன்மொழி பக். 17

யெல்லாம் ஒரு குறிப்புப் பொருள் கொண்ட போலி ஒலிகள். இந்தப்படி நிலை மொழி முளைப்பில் தண்டு ஆகும்.

## 5. அசை மொழி

முளையும் வேரும் தண்டும் தளிரைத் தருமன்றோ? தந்தன. இது வரை பெரும்பகுதி தன்னை அறியாமலும், சிறிதளவு புறத்தே உள்ளவற்றை அறிந்தும் ஒலிகளை எழுப்பிய மாந்தன் அடுத்த படியாக, தன்னை உணர்ந்தவனாக வாயின் பிற உறுப்புக்களைச் செயற்படுத்தத் தொடங்கினான். இஃதும் இயல்பில் நிகழ்ந்த படிநிலையாகும்.

சுட்டொலியின் முன்னர் நெகிழ்ந்த நாக்கு அசைந்து ஒலிக்கு உதவிற்று. இந்த அசைவு மேல்வாயாம் அண்ணத்தையும், பல்லையும் பொருந்தவைத்து ஒலிக்கூட்டலுக்கு வித்திட்டது.

''பைய நாவை அசைத்த பழந்தமிழ்'' என்னும் பாடல் வரி எழக் காரணியமானது. நாவின் அசைவுதான் மொழியின் பகு உறுப்பாம் அசையைத் தோற்றுவித்தது. யாப்பிலக்கணத்தில் செய்யுளுறுப்பிற்குச் சொல்லப்பெற்ற,

'அசைத்து இசை கோடலின் அசையே'[37] என்னும் கருத்து இங்கு காணும் அசைக்கும் பொருந்தும். நாவையும், தாடையையும் அசைத்துச் சொல்லுக்கு இசைவாக அமைதலின் அசை எனப்பட்டது எனலாம்.

அசை என்பது பொருளற்ற எழுத்துக் கூட்டலுக்கும் குறிக்கப்பெற்றது பிற்காலத்தே. ஆனால், அசை என்பது தோற்றத்தில் பொருளுக்கு இயங்கிய இயக்கத்திற்குரியதே. மாடு அசை போடுகிறது என்கிறோம். அது என்ன செய்கிறது. மாடு தான் அரைகுறையாகத் தின்ற இரையை உரிய கூழ் ஆக்குவதற்கு வாய்த் தாடையை அசைத்து இயக்குகிறது. தின்ன தீனி பயன்படு பொருளாகிறது. இதுபோன்றே நாவின் அசைவால் தோன்றிய அசை, மொழி எனப் பயன்தரும் இயக்கத்தின் விளைவே. எனவே அசையே பொருட் பயனுக்கு ஆவதால் இஃது 'அசைமொழி'.

மொழிக்கு அசைவால் பிறந்த அசை எவ்வாறு இசைவாயிற்று?

---

37. ... ... ... ... மேற்கோள் நூல் யாப்பருங்கல விருத்தி எழுத்தோத்து 1—உரை—மேற்கோள்

உணர்வொலியாம் 'ஆ' சுட்டொலியாக 'அ' ஆகி,
தாடையின் அசைவால் 'அம்' என்னும் அசை ஆயிற்று.

மேலும் ஓர் 'அம்' என்னும் அசை கூடி,
அம்—அம்—அம்மம் (தாய்ப்பால்) ஆயிற்று.

அம்—ஐ—அம்மை; அம்—ஆ—அம்மா;

அன்—ஐ—அன்னை; அவ்—ஐ—அவ்வை;

அண்—அம்—அண்ணம்; அண்—அன்—அண்ணன்

இவ்வாறே பிறவும் அசைந்து மொழிக்கு இசைவாயின. அசைமொழிகள் பிறந்தன.

இந்த அசைமொழி, மொழி முளையின்—வேரின்—தளிர் விட்டதன் அறிகுறி. இவ்வாறு அறிகுறி தந்த உறுப்புக்களில் மிகுதியும் பங்கு பெறுவது 'நா' என்னும் உறுப்பே. ஆதலின் சொல்லும் மொழியும் நாவாகவே,

'நா நலம் என்னும் நலன் உடைமை' (திருக்குறள்: 641)

'யா காவாராயினும் நா காக்க' (திருக்குறள்: 129)

'நாவினாற் சுட்ட வடு' ,, 129)

'நா நவில் புலவர்' (புறம் 282: 18)

'நாத்திறம் (புறம் 346: 6)

என்றெல்லாம் பாடப்பட்டது. இந்த அசைமொழி மொழிக்கூறில் சம பங்கு கொண்டது. இச்சமபங்கில் ஒட்டுறவான பங்கு கொண்டதே அடுத்த படியாகிய 'பலுக்கு மொழி'.

## 6. பலுக்கு மொழி

சுட்டொலிக்கு நா நெகிழ்ந்தது; அசைமொழிக்கு நா அசைந்தது. அசைந்து அண்ணம், உதடுகளுடன் உதவியது. மொழிக்குரிய பிற உறுப்புகளில் 'பல்'மேல் கீழ்த்தாடைகளுடன் இயங்கி மொழிக்குத் துணை நிற்கின்றது. அசைமொழியுடன் ஒட்டுறவாக இப்பல்லின் செயற்பாடு 'பலுக்கல்' எனப்பட்டது. பல் என்னும் சொல்லை நோக்கினால் 'ப', 'ல்' என்னும் இரண்டு ஒலிகளை உணர்கிறோம். 'ப' உதடு, இதழ் இரண்டும் பொருந்த உண்டாவது. 'ல்' மேல், கீழ் முன் பற்களின் முனைகள் பொருந்துவதால் பிறப்பது. இதுதான்

பல்லின் முதல் மொழித்தொண்டு. இவ்வாறு இரண்டு (ப—ல்) ஒலிகளை எழுப்பிய ஒலிகளைக்கொண்டே இவ்வுறுப்பு 'பல்' எனப்பெயர் கொண்டது. இது பல் தன் செயலால் தான் பெற்ற பெயர். இவ்வாறு செயற்படும் பல்லின் ஒலிக்கூட்டும் செயல் பல்—பலு—பலுக்கு—பலுக்குதல் எனவாயிற்று. இதன் இயைபிலேயே மொழி உறுப்புக்களில் தனித்தனியாகவும் கூட்டாகவும் ஒலிக்கப்படுதல் பேச்சு, பலுக்கல் (உச்சரித்தல்) எனப்பட்டது. பலுக்குதல் என்பது பண்டைச்சொல் அன்று என்று கருதிவிட முடியாது. தொன்மையி லும் இருந்து நூல்களில் இடம் பெறாமல் போயிருக்கலாம். பிற்கால மதுரகவி 'என்னடி மெத்தப் பலுக்குகிறாய்' என்றார். திருஞானசம்பந்தர் 'கண் பேச' என்பதைக் 'கண் பலுக்க' என்று பாடினார்.

இவற்றையெல்லாம் ஓர்ந்து கண்ட மொழிஞாயிறு பாவாணர் உச்சரித்தல் என்று வழக்கிலிருந்ததை விடுத்துப் பலுக்குதல் என்று பேசி எழுதி 'பலுக்கு மொழி' என்னும் சொல்லாட்சியை வழங்கினார். பல்லடியாகப் பிறந்த இச்சொல் சொல்லுக்கே பல்லைக் குறியாக்கியது. 'பல் போனால் சொல் போச்சு' என்னும் வழக்கு இதனை வழிமொழிகின்றது. இவ்வாறு வளர்ந்த பலுக்கும் இடக்கு தான் பலுக்கு மொழியாயிற்று. மொழியை மலர வைத்தது இப்பலுக்கு மொழியே. எனவே, பலுக்கு மொழியை மொழியின் மலர் எனலாம்.

'சுட்டொலிகள் தோன்றிய பின் சொல் வளர்ச்சியடைந்த மொழியைப் பலுக்கு மொழி (Articulate Language) என்பர். இதுவே மொழி எனச் சிறப்பித்துச் சொல்லப்பெறுகிறது'[38] என்று மொழிஞாயிறு பாவாணர் எழுதி யுள்ளமை போன்று மொழி வரலாற்றில் பலுக்கு மொழிதான் மொழி—ஒலிக் கூட்டலின் உருவத்திற்கு முதற்பருவத்தை வழங்கியது.

இவ்வாறு சைகை மொழியாம் கைச் செய்கைக்குப்பின் எழுந்த ஒலி மொழியின் வரலாற்றைச் செடிமமாக* உருவகப்படுத்தலாம்.

மூலம்—உந்தி வளி

வித்து—குரல் ஒலி
முளை—உணர்ச்சி ஒலி
வேர்—சுட்டொலி

---

38. ஞா. தேவநேயப் பாவாணர்; முதன் மொழி பக். 17

* செடிமம்—தாவரம்

தண்டு—போலி ஒலி
தளிர்—அசைமொழி
மலர்—பலுக்கு மொழி

மேலே கண்ட மொழி வரலாற்றின் முதல் மூன்று படிகளும் மாந்தன் தந்த மொழிக்கூறுகளின் படைப்புகள். அடுத்த மூன்று படிகளும் அவனது உணர்ச்சி தழுவிய முயற்சியின் படைப்புகள். இவை கொண்டு மொழி மாந்த இயற்கையில் பிறந்தது; மாந்த முயற்சியில் வளர்ந்தது என்பதைத் தெளிவாக அறியலாம்.

எனவே, மொழி இயற்கைத் தோற்றம் என்று முடிவு கொள்வதுடன்,

'மொழி ஐம்பெரும் பூதம் போல் இயற்கையானது' என்னும் அறிஞர் எப்பிகூரசு (Epicurus) கருத்துரை மீண்டும் நினைவிற்கொள்ளத்தக்கதாகின்றது. கிரேக்க மெய்ப்பொருள் நூலறிஞர் அரிசுடாட்டிலும் (Aristotle) இக்கருத்தையே கொண்டவர் என்பதும் மேற்கருத்தை வலுப்படுத்துகிறது.

இதற்கு மாறாக, மொழி கடவுளால் படைக்கப்பட்டது என்னும் கருத்து உலகு எங்கும் உள்ள கடவுளியலாரால் எழுப்பப்பட்டது. இஃது அறிவை விலக்கிய நொய்ந்த கருத்து.

'ஈப்ரு மொழியைத்தான் கடவுள் முதலில் படைத்தார்'

'ஆதாமும் ஏவாளும் உரையாடுவதற்காகக் கடவுள் தந்த மொழி டச்சு எனப்படும்' எனவும்,

தொன்மை மொழியினரான கிரேக்கர், சீனர், எகிப்தியர், காண்டிநேவியர் முதலானோர் கொண்ட 'மொழி கடவுள் படைப்பே' என்பதும் உலகில் இன்றும் பேசப்படுவது வியப்புக்குரியதா; அறிவுத் தளர்ச்சியின் வெளிப்பாடா; காக்கை தன் குஞ்சைப் பொன் குஞ்சாக்கும் வாய் முயற்சியா என்றெல்லாம் கருத வேண்டியுள்ளது.

இந்திய அளவிலும்,

'சமஸ்கிருதம் தெய்வம் தந்ததால் தேவபாடை'

'புத்தர் வழங்கியது பாலி மொழி'

'சிவபெருமான் தன் தமருகத்தைத் தட்டியதில் ஒரு பக்கத்தினின்று வட மொழியும் மறு பக்கத்திலிருந்து தமிழும் தோன்றின' என்றனர்.

இரு மொழிக்கும் கண்ணுதலார் முதற்குரவர்' என்பது தொடக்கமாக 'சொல் இறையாக இருந்தது'. 'சொல்லே இறை' என்பன தொடராக 'ஆதி சிவன் பெற்றுவிட்டான்' என்பது இறுதியாக எழுந்தன எல்லாம் ஆய்வில் எடுத்துக்கொள்வதற்கும்—ஏன்-அறிவின் முனைப்பில் கொள்வதற்கும் பொருந்துவனவாயில்லை.

ஒன்று தன் மொழியை உயர்த்திக் காட்டல்,

இரண்டு தம் சமயக் கடவுளுக்குத் தனித்தன்மை ஏற்றல்,

பொதுவில் மொழிக்கு (வேண்டாத) பெருமை கூட்டல் எனத்தான் கொள்ளவேண்டியுள்ளது.

இவை யாவும் ஒட்டுமொத்த மொழி வரலாற்றின் பிறப்புபற்றிய கருத்து நோய் ஆகும்.

இவ்வாறு பல கருத்துக்களால் மொழிப் பிறப்பிற்கு எழும் முரண்பாடுகளே இக்கருத்து நோயைக் கலகலக்கச் செய்கிறது. மேலும் இக்கருத்து நோய்க்குத் தொடக்க மருந்தாக, கடவுளியர் கூற்றுக்களையே கொடுக்கலாம். கடவுளியரே,

'மாந்தனைக் கடவுள் படைத்தார்; மாந்தன் கடவுளுக்குப் பெயர் வைத்தான்' என்று பெயர் சூட்டும் மொழிப்படைப்பை மாந்தனுக்குத் தந்தனர்.

'கண்ணுதற் பெருங் கடவுளும் கழகமோடமர்ந்து

பண்ணுறத் தெரிந்தாய்ந்த இப்பசுந்தமிழ்'

என்று தாம் படைத்த தமிழைத் தாமே ஆய்ந்தார் என்று எல்லாம் வல்ல கடவுளையே மறு ஆய்வுக்காரராக ஆக்கினர். இவை போன்ற மிகப்பிறவற்றையும், கருத்து நோய்க்குத் தொடக்க மருந்தாகக் கொள்வதில் தவறில்லை.

தீர்வு மருந்தாக, தமிழறிஞர் திரு வையாபுரிப் பிள்ளையவர்கள் கருத்தைக் கொடுக்கலாம்.

"மொழிகள் கடவுளாலும் முனிவர்களாலும் படைக்கப்பட்டன என்று கருதுதல் நமது தெய்வ பக்தியைக் காட்டுமே தவிர உண்மையை உணர்த்துவதாகாது" என்றவர், இக்கருத்து எத்தகைய பயனுள்ளது என்பதையும்.

'இவை போன்ற கூற்றுக்களாலும் கொள்கைகளாலும் விளைந்துள்ள தீமைகள் மிகப் பல'[39] என்றும் பதிந்துள்ளார். இப்பதிவு கருத்துநோயைக் குணப்படுத்தும் நன் மருந்து.

முடிவாக இயற்கைத் தோற்றங் கொண்டதே மொழி என்று கொள்ள வேண்டும்.

முதல் மாந்தனின் தோற்றம் குமரிக்கோடு எனக் காணப்பட்டது. அவ் வினர் மலையிலிருந்து இறங்கிப் பரந்த வாழ்வைக் கண்டது. பரந்துகிடக்கும் நிலப்பகுதியைக் காணும் அவாவால் கிழக்கிலும் மேற்கிலும் முதலில் பரவத் தொடங்கிற்று.

உயிரியலின் தொடக்க ஆய்வாளர்கள், 'ஆதார மொழியைப் பேசிய மக்கள் இரண்டு பெரும் பகுதிகளாகப் பிரிந்து ஒரு பிரிவினர் கிழக்கேயும் மற்றொரு பிரிவினர் மேற்கேயும் பரவியிருக்கவேண்டும்'[40] என்று கண்டனர். இக்கருத்து, கிழக்கு மேற்குக்கு மையமாக ஓரிடத்தை முதல் மாந்த இனத்தின் தோற்ற இடமாக அடையாளம் காட்டுகின்றது. நிலக்கோணத்தின்படி இம் மைய இடம் குமரிக்கோடுதான்.

இதற்கு மேலும் வடக்கு நோக்கியும், வடமேற்கு, வடகிழக்கு நோக்கி யும் அப்பரவல் நேர்ந்திருக்க வேண்டும் என்பதே இயல்பாக நிகழக் கூடிய தாகும்.

இக்கால ஆய்வுகளும் இதற்குச் சான்று கூறுகின்றன. கொழும்பு பல்கலைக்கழக பேராசிரியர் முனைவர் ஆ. சதாசிவம் தரும் சான்றுக் குறிப்பு:

'அண்மைக்கால ஆராய்ச்சிகளின் இந்திய சரித்திரத்தில்—ஒரு பகுதியில் விளங்கிய குமரிநாடு இந்தியா, இலங்கை என்பனவற்றை உள்ளடக்கிய நீண்ட ஒரு கண்டம் என்றும், கடல்கோள்களால் அந்நாட்டு மக்கள் வடக்கே சென்று 'குமரி' எனப்படும் 'சமர்' நாட்டிலும் சிந்துநதிப் பள்ளத்தாக்கிலும் கி. மு. 4000ஆம் ஆண்டுக்கு முன்னரே பழந்தமிழ் நாகரிகத்தை நிலைநாட்டி விட்டனர் என்று கல்வெட்டுகளால் அறியப்படுகின்றன'

அகழ்ந்து காணப்பெற்ற மொகஞ்சதரோ, ஆரப்பாவிலும் இக்கருத்துக் குதவும் சுவடுகள் காணப்பட்டுள்ளன.

---

39. எசு. வையாபுரிப்பிள்ளை; சொற்கலை விருந்து பக். 16
40. எம். எசு. துரைசாமி கலைக்களஞ்சியம் 8 பக். 548

இப்பரவலில் மொழிநிலை என்ன?

இந்நிலைதான் பலுக்கு மொழியின் பிறப்புக்காலமாக இருந்திருக்க வேண்டும். அது ஒலி வழங்கும் கதிரவனது வெப்ப நிலையாகும். அதனை அண்டிய தட்ப நிலை; அண்டாத தட்ப நிலைகளுமாகும்.

கோளம் பற்றிய அறிவியல் வல்லுநர்களால் நிலக்கோளத்தில் நில மைபக்கோடு வகுக்கப்பெற்றுள்ளது. இது கதிரவனின் வெப்பம் நிலத்தின் மேல் விழும் மிகு எல்லைக் களம். இதன் தெற்கும் வடக்கும் கதிர் வெப்பம் படிப்படியாகக் குறையும் களங்கள். தெற்கு வடக்கு முனைகள் வெப்பம் தாக்காத பனிப்படலக் களங்கள். பரவிச் சென்ற மாந்த இனம் இக் கள மாற்றங்களால் அவ்வச் சூழலுக்கேற்ப மாற்றம் பெற்றது.

அம்மாற்றம் எவ்வகையது?

வெப்பம் தட்பம் இவற்றின் சூழலுக்கு ஏற்ப மாந்தனின் புற அமைப்பு நிறம் மாற்றமடைந்தமை போன்றே உள்ளுறுப்புக்களும் அமைப்பால் மாற்ற மின்றி வேறுவகையில் மாற்றம் கொண்டன. வெப்ப தட்பத்தால் சற்றுச்சற்றே சுருங்கவும் உப்பவும் பெறுதல் இயல்பே. ஆனால் எம்மாந்தனுக்கும் மொழிக்கு மூலமாவது உந்துவளி ஒன்றுதான்.

ஆனால், கதிரவனின் வெப்ப தட்பத் தாக்கத்தால்தான் பல்வகை ஒலிப் பிறப்பு மாற்றங்கள் நேர்ந்தன; பல மொழிகள் உருவாக அவையே காரணியம் ஆயின. தொண்டை முதலியவற்றின் சற்றுச் சற்றே மாற்றத்தாலும் ஒலி வேறுபாடு நேர்ந்தது. வெப்ப தட்பத் தாக்கங்கொண்டு மொழி என்னும் ஒலிக்குத் தாய், ஒளி என்பதையும் உணரலாம்.

உலகில் பற்பல மொழிகள் தோன்றினும் அவை தனித்தனி மூலமாகத் தோன்றின அல்ல. ஒரு மூல மொழிதான் தாய். அத்தாய் மிகச்சில மொழி களை முதலில் ஈன்றாள். ஒவ்வொன்றும் சில கிளை மொழிகளைத் தோற்று வித்துத்தான் தான் ஒவ்வொரு குடும்பமாகியது. கிளை மொழிகளிலிருந்து சுற்றம் போன்ற மொழிகளும், அக்கிளை மொழி, சுற்ற மொழிகளுடன் கலந்து உறவு மொழிகளும் பல்கின. இவ்வாறாக நூற்றுக்கணக்கில் பின்னர் ஆயிரக் கணக்கில் சொல்லும் அளவு மொழி பெருகியது. இத்துணை மொழிகளுக்கும் ஒலிதான் மூலகாரணம் என்னும் உண்மை வைரக் கல்வெட்டாகும்.

இவ்வாறு பல்கிப் பெருகத் தொடங்கிய காலம் முதல் மாந்த இனத்தின் பலுக்கு மொழிக் காலமேயாகும். இப்பலுக்கு மொழி, மொழியை உருவாக்கி

யது; வளர்த்தது. ஆயினும், இந்நிலையிலும் மொழி நிறைவுபெற்றதாக வில்லை.

நிறைவிற்கு மற்றொரு தோற்றம் வேண்டப்பட்டது. அது மாந்த இனத்தின் இயற்கையால் முளைத்தது.

சைகைமொழி காணப்படுவது.

ஒலி மொழி கேட்கப்படுவது.

இவை இரண்டும், இவை நிகழும் நேரத்தில்தான் பயன்படும்; பயன் தரும். நிலைத்தவை ஆகா. ஒன்று பார்வையிலிருந்து மறையும்; மற்றொன்று காற்றுடன் கலக்கும்.

வெளிப்படுத்தப்படும் கருத்து மேலும் ஒருமுறை, சிலமுறை, பலமுறை பயன்பட அது நிலைப்பாடு கொள்ளவேண்டும் இதற்குத் தோன்றியது வரி வடிவ எழுத்து. வரி வடிவ எழுத்துத்தான் மொழிக்கு நிறைவைத் தந்தது.

இவ்வரி வடிவத்தை ஈன்றதும் கையே.

பல்கிப் பரந்த மாந்த இனம் ஆங்காங்கு இவ்வரிவடிவத்தைப் பல்வேறு வடிவங்களில் கண்டது.

பலுக்குமொழிக் காலத்தில் பரவத் தொடங்கி, ஆங்காங்கு மாந்தர் வாழ்வுபெற்ற பின்னரே வரிவடிவ எழுத்து தோற்றம் பெற்றது. ஒரே குடும்பத்தைச் சேர்ந்த மொழிகளுள் சொற்கள் ஓரளவிலும் சிலவற்றில் பெருமளவிலும் ஒத்திருப்பினும் எழுத்துக்கள் ஒத்திருப்பனவல்ல; வேறுபாடு கொண்டனவாகக் காணப்படுகின்றன. இது பலுக்கு மொழிக்குப் பிறகுதான் வடிவ எழுத்து தோற்றம் பெற்றதைக் காட்டுகிறது.

வரிவடிவம் சைகை மொழியுடன் இணைந்ததாகவும் கொள்ளப்பெற்றது. சைகையால் ஏதேனும் ஒரு பொருளைக் கருவியாகக்கொண்டு உருவம் தரப் பட்டது. சீன திபேத்தியர் அக்காலத்தில் கயிற்றில் முடிச்சு போடுவதைக் கருத்தறிவிப்பாகக் கொண்டனர். முடிச்சும் கருத்தை எழுப்பியதால் எழுத்தாகக் கொள்ளப்பட்டது. அதனை 'முடிச்செழுத்து' (Knot Writing)[41] என்றனர்.

சைகை மொழிக்குக் கை அசைந்தது.

---

41. ... ... ... ... கலைக்களஞ்சியம் 2 பக். 576

வரி வடிவத்திற்கு விரல் அசைந்தது. விரல் முனை கோடிட்டது; வரைந்தது; எழுதியது.

தொல்காப்பிய முதல் உரையாசிரியர் இளம்பூரணர் 'பரவுதல்' என்னும் சொல்லுக்கு அதைக் கேட்போனால் பொருள் புரிந்துகொள்ள முடியவில்லை என்றால் 'மேல் நோக்கிச் சில மலர்கொண்டு தூவிக் காட்ட உணருமேல் அஃதே உணர்ச்சி வாயிலாக அறிக' என்றார்.[42] இதனையும் சைகைகொண்டு 'மலர் எடுத்து' எனலாம்.

முதலில் கை விரல் குகைச் சுவரில் கோடிட்டு, அடுத்து நிலத்தில் கோடிட்டு, மணல் நிலத்தில் உழும் சாலோட்டம்போல் கோடிட்டது. 'நந்து உழுத கோடு எழுத்தாகாது' என்பர். ஆனால், நந்து உழுத சால்கோட்டைப் பார்த்து எழுதிய மாந்தன் கோடு எழுத்திற்கு உதவிற்று. மேலும், சற்றுக் கடினமான இடத்தில் கீறியும், மரம், கல் முதலியவற்றில் வெட்டியும் எழுத்துலகில் மாந்தன் புகத் தொடங்கினான். இவை இயற்கையாகும். இவ்வியற்கையின் வளர்ச்சியில் நேர் கோடு வளை கோடுகளை இணைத்து உருவத்தை வரைந்து படம்போட்டுக் காட்டத் தொடங்கினான். உண்பதற்குக் கை விரல்களைக் குவித்து வாயண்டை பொருத்திக் காட்டிய மாந்தன் கிழங்குபோல தினைபோல, காய்போல படம் போட்டுக் காட்டி உணர்த்தினான். கண்ணைக் குறிக்க, அதன் பார்வையைக் குறிக்க, பார் என்று சொல்ல கண் போன்று வளை கோட்டால் வட்டம் போட்டான். பொருள்களைக் குறிக்கப் படம் போட்டது போன்று குணங்களைக் குறிக்கவும் படங்கள் போடப்பட்டன. செல்வத்தைக் குறிக்க மாட்டுக் கூட்டத்தையும், நட்பைக் குறிக்க இரு கைகள் கோத்ததையும் படமாக்கினான். இப்பட எழுத்துக்கள் மொகஞ்சதரோ அகழ்வுப் பொருள்களில் உள்ளதை அறிஞர் ஈராசு பாதிரியார் கண்டறிந்து வெளியிட்டுள்ளார். இவ்வாறு வரைந்தது பட எழுத்து. (Pictograph/ Ideographic) ஆப்பிரிக்க நாட்டு, வட அமெரிக்க நாட்டுப் பழங்குடி மக்களிடம் இப்படஎழுத்து இன்றும் நடைமுறையில் இருக்கிறது. காண்டினேவியர் ஒரு படத்தையே சற்று விரிவாகப் போட்டு ஒரு கதையைச் சொல்லும் முறையைக் கையாண்டவர்.

பட எழுத்தின் அடுத்த வளர்ச்சியாக ஒலியின்—ஒலி எழுத்தின் அறிகுறியாகக் கோடுகளால் வரைந்து காட்டும் 'வரி எழுத்து' எழுந்தது. இந்நிலை தான் மாந்தனின் எழுத்து நாகரிகத்தைத் தோற்றுவித்தது. இவ்வாறு எழுந்தது 'ஒலி வடிவ எழுத்து' (Phonetic Writing) எனப்பெற்றது. வாய்

---

42. இளம்பூரணர்: தொல். — சொல். 387 வரை

வெளியிட்ட ஒலியின் தாக்கத்தால் ஒலியெழுத்து உருவாவதை ஒலி அறிவியலார் பின்வருமாறு கண்டுள்ளனர்:

ஒலி ஓர் அதிர்ச்சித்தொடர், அந்த அதிர்ச்சியை நெகிழ்ந்து கொடுக்கும் மெல்லிய மணலிலோ பிற பொருளிலோ செலுத்தினால் அது வெவ்வேறு உருவுடைய காற்றலைகள் வாயிலாகத் தாக்கியபோது வெவ்வேறு வரிவடிவங்கள் அடைவதைக் கண்டறிந்தனர். இஃது இயற்கை ஒலியெழுத்து. இதன் இயற்கைப் போக்கில் மாந்தன் முன் கண்ட கோடிடல், கீறல், வரைதல், எழுதுதல் முதலிய செயல்களின் வளர்ச்சியால் ஒலிக்கேற்ற வரிவடிவத்தைப் படைத்தான்.

இப்படைப்பு காட்சிப்படுவது. அஃதாவது ஒளியால் காட்சிப்படுவது. காட்சியை ஏற்படுத்துவது ஒளி என்று காண்போம். மேற்கண்ட ஆய்வின் முடிவுப்படி வாய் 'ஒலியின் தாக்கம், வரிவடிவக் காட்சியாம் ஒளியைத் தந்தது'. இங்கு ஒலி, ஒளியைப் பிறப்பிப்பதாகிறது. தோற்றத்தில் ஒளி ஒலிக்குத் தாய். வரிவடிவ எழுத்தாகிய ஒலியெழுத்துப் படைப்பினால் ஒளிக்கு ஒலி தாய் ஆகிறது. இதனைச் செய்தவன் மாந்தன்.

இதைத்தான் முன்னர் (பக்கம் 7) 'மாந்தன் ஒளி, ஒலி பற்றிய அடிப்படைத் தொடர்பிலிருந்து ஒரு மாற்றம் செய்துள்ளான்' என்று எழுதி அதற்கு,

'அது என்ன மாற்றம்?' என்ற வினாவும் எழுப்பப்பெற்றது.

இவ்வினாவின் விடைதான் மேலே கண்ட வழியில் ஒளித்தாய் சேயாகி ஒலி தாய் ஆனமை. ஆம்; ஒலியின் அறிகுறியாக ஒளிப்படும் வரிவடிவஎழுத்தை உருவாக்கிய மாற்றம். இவ்வகையாக, எழுதப்படும் வரிவடிவ எழுத்து பிறந்தது. இவ்வெழுத்து வழி சொற்கள் தோன்றி வரி வடிவ மொழி உருப் பெற்றது. வரிவடிவ உருவப்பாடுதான்—எழுத்து மொழிதான் மொழியை நிறைவுடைதாக்கியது.

இப்பகுதியை படித்து வருவோர் அறிவில் ஒரு வினா எழுதல் இயல்பே.

'பொதுவில் "ஒலியில் மொழி" என்று தொடங்கிய இந்த ஆய்வில் பெரும்பகுதி தமிழ் வழியே சான்றுகள் தருகின்றமை எவ்வாறு பொருந்தும்?' என்பது அவ்வினா.

'முதல் மாந்த இனத் தோற்றம் குமரிக்கோடு என்னும் முடிவின் தொடர்பில் மாந்த இனம் பேச்சு மொழியைக் கண்டது என்னும்போது அது அவ்வினத்தின் மொழியாகத்தான் இருக்கும்' என்பதே விடை.

அவ்வாறாயின் அம்மொழி தமிழ்தான் என்பதற்குச் சான்று என்ன (?) என்னும் தொடர்வினா எழுவதும் இயல்பே.

இந்தத் தொடர் வினாவிற்கு இந்த 'ஒலியில் மொழி'யைத் தொடரும் 'மொழியில் தமிழ்' விடை தரும்.

## 3. மொழியில் தமிழ்

பலுக்கு மொழியை அடித்தளமாகக்கொண்டு உலகில் மொழிகள் பல்கின என்று கண்டோம். அவ்வாறு பல்கிய மொழிகள் எத்தனை? மொழியறிஞர் தந்துவரும் உலக மொழிக் கணக்கு நம்மை ஒரு நிலைக்கு அழைத்துச் செல்லவில்லை.

செர்மனி நாட்டு மொழியறிஞர் மாக்சுமுல்லர் (Max Muller 1823—1900) 900 மொழிகளுக்குக் குறைவில்லை என்றார். மொழியறிஞர் ஈ. கீக்கர்சு (E. Kieekars 1931) மறைந்த மொழிகளையும் சேர்த்து 176 என்றார். மொழிநிலப் படத்தை வரைந்த பல்பி (Balbi) 600 என்றார். பிரெஞ்சுக் கழகம் (French Academy) 2796 என்று கணக்கிட்டுள்ளது. எச். கிரே லூயிசு (H. Grey Luis) எழுதிய (Foundation of Language) நூல் 2500 முதல் 3000 வரை காட்டுகிறது. மேலும் இவ்வெண்ணிக்கை 4000, 6000 என்றெல்லாம் சொல்லப்படுகிறது. மேலைநாட்டு மொழியறிஞர் பேச்சு வழக்கை வைத்தே மொழிகளைக் கணக்கிடுகின்றனர். இதனால் ஒரு மொழியே அந்நாட்டின் பல பகுதிகளில் வேறுபடும் திரிபுகளால் பல மொழிகளாகக் கணக்காகிறது. சான்றாகத் தமிழைத் திருநெல்வேலித் தமிழ், இராமனாதபுரத்துத் தமிழ், சென்னைத் தமிழ், தஞ்சைத் தமிழ், யாழ்ப்பாணத் தமிழ் என்றெல்லாம் தனித்தனி மொழியாகக் கொள்ளப்படுவதைக் கூறலாம். இவ்வகையில் இந்திய நாட்டு மொழிகளே 1652 என்பது ஒரு கணக்கு. சியார்சு கிரையர்சனின் George Grierson—Linguistic Survey of India) கணக்கு 225. 1000 மக்கள் பேசும் மொழி எனக்கணக்கிட்டு 700 மொழிகள் என்றும் 5000 மக்கள் பேசும் மொழி எனக்கணக்கிட்டு 259 என்றும் இந்திய மொழிக் கணக்கு பல்வகைப்படுகிறது.

இவ்வாறு பல மொழிகள் கொண்ட மொழி உலகில்,

தமிழ் மொழியின் நிலை என்ன?

மொழியறிஞர் தமிழை எவ்வாறு அணுகினர்?

எப்படி நோட்டமிடப்பெற்றது?

எந்நெறியில் ஆராயப்பெற்றது?

எந்தத் தகுதியில் வைக்கப்பெற்றுள்ளது?

உண்மை வெளிப்படுத்தப் பெற்றதா?

இவ்வினாக்களுக்கு கிடைக்கும் விடைகள், முன்னே 'ஒலியில் மொழி'ப் பகுதியின் இறுதியில் எழுப்பி நிறுத்தப்பட்டுள்ள வினாவிற்கும் விடையாகும்.

உலக மொழிகளை வகைப்படுத்த முயன்றோர் 3 தலைக்குடிகளாக்கினர். இவ்வகைப்பாடு அறிஞர் டபிள்யூ. சிமித் (W. Smith) என்பவர் வகுத்த கருத்தின் வழி எழுந்தது. அத்தலைக்குடிகள்

1. ஆரியம் (Aryan)
2. சேமியம் (Semitic)
3. துரேனியம் (Turanian)

எனப்படும். மொழியறிஞர் பலரும் இதனை ஏற்றனர். ஒவ்வொரு தலைக்குடியிலும் பல குடும்பங்களை வகுத்தனர். அவ்வகையில் உலகில் மொழிக் குடும்பங்கள் 27 என்று பிரெஞ்சுக் கழகமும் (French Academy), 30 முதல் 40 வரை என்று மொழியியல் அறிஞர்களும் வேறுபட்ட எண்ணிக்கையில் வகுத்துள்ளனர்.

தலைக்குடிகள் மூன்றில் தமிழ் ஒரு தலைக்குடியாகக் கொள்ளப்பெறவில்லை. தமிழைத் தனியாகவன்றித் 'திராவிடம்' என்னும் பெயரில் துரேனியத் தலைக்குடியில் வைத்துத் 'திராவிடக் குடும்பம்' என்றனர். இதனை மொழியியலார் மிகப்பலரும் ஏற்றுள்ளனர். தமிழின் தனித்தன்மை கூறும் அறிஞர் கால்டுவெல்லும் ஏற்றுள்ளார். தமிழ் உணர்வாளராகிய நம் தமிழ்ப் பரிதிமாற்கலைஞரும் ஏற்றுள்ளார். மற்றொரு சாரார் அக்கேடிய மொழியின் வழிமொழியான பினிசியத்தைச் சேர்ந்தது என்றொரு கருத்தையும் தந்துள்ளனர்.

உலகில் ஐரோப்பாவும் ஆசியாவும் கூடிய யூரேசிய மொழிகளை

1. பழைய ஆசிய மொழிகள்
2. சீன திபேத்திய மொழிகள்
3. அந்தமான் மொழி
4. திராவிட மொழிகள்

எனப் பகுத்துத் தமிழைத் திராவிடத் தொகுப்புப் பெயரில் கூறினர். பழைய ஆசிய மொழிகள் என்றவற்றில் சமற்கிருதம் அடங்கும். பழைமை வாய்ந்த சமஸ்கிருதம் ஒரு தனிக் குடும்பமாகவோ தனித் தலைக்குடியாகவோ குறிக்கப் பெறாமல் ஆரியம், இந்தோ இரானியம் என்னும் தொகுப்பில் வைத்துக் கொள்ளப்பெற்றது.

உலக மொழிகளில் குறிப்பிடத்தக்க தொன்மையும் வளமையும் கொண்டவையாகக் கருதப்பெறுபவை தமிழ், சமற்கிருதம், சீனம், இலத்தீன் கிரீக்கு, எபிரேயம் என்பர். இவற்றுள் தமிழ் இயற்கை மொழித் தோற்றமும் இலக்கிய இலக்கண வளமும் நெறியும் கொண்டு பேச்சு வழக்கிலும் எழுத்து வழக்கிலும் உள்ள உயர்தனிச் செம்மொழி. சமற்கிருதம் நான்மறைப் பொருண்மையும், ஆறங்கச் சிறப்பும், நாடக இலக்கிய வளமும் கொண்டு எழுத்து வழக்குள்ள, ஆனால், பேச்சு வழக்கற்ற உயர்தனிச் செம்மொழி. உலகத் தொன்மை மொழிகளாகக் கருதப்பெறும் பிறவற்றில் ஒவ்வொன்றும் இத்துணை நிறைவின்றி ஒன்றொன்றோ, இரண்டிரண்டோ சிறப்புக்களைக் கொண்டனவாகும். ஆனால் இவற்றின் பின்வைத்தே தமிழும் சமற்கிருதமும் மொழியாளர்களால் காணப்பெற்றன. அதிலும் சமற்கிருதம் பெற்ற இடத்தை தமிழுக்குத் தரவில்லை. சமற்கிருதம் பலரால் ஆய்விற்குப் பெரும் உதவியான மொழியாகக் கொள்ளப்பெற்றது. இந்நிலையுடன் தமிழ் உயர்தனிச் செம் மொழிப் (Classical Language) பார்வையில் கொள்ளப்பெறாமல் இருந்தது. அண்மைக் காலத்தில்தான் சேர்த்துப் பேசப்பெறுகிறது.

பொதுவில் இதனை ஒருபுறம் நிறுத்தி, சிறப்பாக ஒரு கருத்தை நோட்ட மிட வேண்டும்.

தொன்மைத் தமிழ் தொடக்க காலமுதல் ஆய்வாளர்களால் நேரடியாகக் குறிக்கப்பெறாமல் **'திராவிடமொழிக் குடும்பம்'** என்னும் தொகுப்பில் வைத்தே குறிக்கப்பெற்றது.

இதுதான் தமிழை மொழி ஆய்வாளர்கள் அணுகிய முறை.

இம்முறை பேழையைத் திறக்காமலே உள்ளே பொதிந்துள்ள சரக்கை விலை பேசும் நிலை போன்றதாகும். இம்முறையால் உண்மையான உள்ளீட்டை உணர முடியாது. ஆனால், மொழி அறிஞர்களில் தொடக்ககால இடைக்கால ஆய்வாளர்கள் தமிழை ஒரு தலைக்குடியாக வைத்துக்கொள்ள வில்லை. தமிழை அறியாமலே அதன் தொடர்பான ஆய்வு முடிவுகளைக் கொண்டவர்களும் உளர். அறிஞர் கோல்புருக்கு என்பார் தமிழ் அறியாதவர். சமற்கிருத—பிற ஆரிய மொழிக் கருத்துக்களை வைத்து, தமிழ் பிராகிருதக்

குடும்பத்தைச் சேர்ந்தது' என்றார். அண்மைக்கால ஆய்வாளர்கள் தமிழை அறிந்தவராயினும், அதன் அடித்தளங்கள் காணாதவர்கள்.

இத்தகைய ஆய்வாளர்கள் தமிழைத் திராவிடத் தொகுப்பில்—அப்பெயரில் வைத்ததை நோக்கவேண்டும்.

தமிழைத் திராவிடம் என்று சொல்வதே ஒரு திரிபு நிலையின்பாற்பட்டது.

தமிழ் என்பதே திராவிடம் ஆகியது.

திராவிடத்திலிருந்து தமிழ் வரவில்லை. ஆனால், திராவிடம் என்றே பலர் கொண்டனர்; காட்டினர்.

தமிழைத் திராவிடம் என்றவர் எவர்? சமற்கிருத வடமொழியாளரே. ஆயினும் மேலை ஆய்வாளர்களிற் சிலரும், அண்மைக்கால, தமிழ் ஆழமறிந்த மொழிஞாயிறு தேவநேயப் பாவாணரும் அத்தகவினரும் 'தமிழ்தான் திராவிடம் எனப்பட்டது' என்றனர்.

வடமொழியாளரே திராவிடம் என்றவர். எனவே, அவரது மொழிச் செயல் கொண்டே இதனை விளக்கவேண்டும்.

'தமிழ்' என்பதில் 'ழ்' வடமொழியாளரால் பலுக்க இயலவில்லை. எனவே, அதனை விடுத்து,

'தமி' என்பதைத் 'த்ரமி' என்றனர். இவ்வாறு பலுக்குவது சமற்கிருத மொழியின் இயல்பு நிலை. இதற்குச் சான்றாக ஒன்றிரண்டு காட்டவேண்டி நேர்கின்றது. பவ்வம் — கடல். கடல் வளம் — பவ்வவளம் — பவ்வளம் பவளம். (இதைப் பவழம் என்றும் குறித்தனர்). இது தமிழ். வடமொழி ஆரியர் தொன்மையில் கடலைக் காணாதவர்; பவளம் அறியாதவர். அவர்க்குப் புதிதான 'பவளம்' என்னும் சொல்லில் 'பவ'—வை, 'ப்ரவ' என்று பலுக்கி, ப்ரவளம்—ப்ரவாளம் என்றனர். 'படி'—ப்ரதியாயிற்று. 'படிமம்'—ப்ரதிமா ஆயிற்று.

இவை போன்று, கார்—கருமை. அது ஆகுபெயராக, கருத்த முகிலுக்கு ஆயிற்று. சீர்—சீர்த்தி ஆவது போன்று, கார்—கார்த்தி ஆகி, 'கை' விகுதி பெற்றுக் 'கார்த்திகை' என்றாயிற்று. இது தமிழ். வடமொழியாளர் 'கார்' என்பதைக் 'க்ரு' என்று பலுக்கி க்ருத்திகை—க்ருத்திகா என்றனர்.

இவை போன்றே, தமி—த்ரமி எனப்பட்டது.

ழகரம் பலுக்க வராமையால் ஓரளவில் பலுக்க வரும் ளகரத்தைக் கொண்டு

தமிழ்—த்ரமிள் என்று தொடர்ந்து

தமிளம்—த்ரிமிளம்—த்ரமிடம்—த்ரவிடம்—த்ராவிடம் என்றனர்,

இங்கு முனைவர் சி. எர்னெஃச்டு டிரம்பு (C. Ernest Trump) என்னும் அறிஞர் குறித்த 'ளகர ஒலி உள்ள வடசொற்கள் திராவிடச் சொற்களே' என்றதையும் இணைத்து நோக்கவேண்டும். மற்றும் ழகர, ளகரங்கள் வடமொழியில் டகரமாவதை வடமொழியின் மிகு உறவு கொண்டுள்ள தெலுங்கில் 'ஏழு—ஏடு' என்றும் 'இழு—இடு' என்றும் இவைபோன்று பலவும் வருவன கொண்டும் அறியலாம்.

இவ்வாறு அவர் தம் பலுக்கலால் உருவாக்கப்பட்ட திராவிடம் அதாவது இத்திரிபு வழக்கு அவர்களாலேயே முதன்முதலாகவும் அதிகமாகவும் கையாளப் பெற்றது. இதற்குச் சில சான்றுகள்:

வராகமிகிரருடைய பிருகத் சம்மிதையில் 'த்ராவிடர்' உள்ளது.

வால்மீகி இராமாயணத்தில் வால்மீகியால் இச்சொல் குறிக்கப்பெற்றது.

மகாபாரதத்தில் சத்திரியர் 'திராவிடர்' எனப்பெற்றனர்.

பாகவதம் காந்தத்தில் சத்தியவிரதன் என்பான் 'திராவிட' எனப் பெற்றான்.

மச்சபுராணத்தில் ஒரு தமிழ் மன்னன் பெயர் த்ரமிளேசுவரன்

குமாரிலபட்டர் 'ஆந்திர த்ராவிட பாஷைகள்' என்று தமிழைத் 'திராவிடம்' என்றார். இவர் மேலும் ஒரு படி போய் 'கன்னடம் தமிழ் இரண்டிற்கும் தாய்மொழி திராவிடம்' என்றார்.

எனவே திராவிடம் தமிழின் திரிபுச் சொல். தமிழே மூலம்.

மொழிஞாயிறு பாவாணர் பதிந்துள்ளதும் இக்கருத்தே.

மற்றும், மொழியறிஞர் முனைவர் கிரையர்சன் (Dr. Grierson என்பார்

தமிழம்—தமிள—தவிள—தவிட என்று பிராகிருதத்தில் திரிந்து

பின்னர், தமிள — தவிட என்னும் வடிவங்கள், த்ரமிள — த்ராவிட — திராவிட என்று வடமொழியில் திரிந்தது'[43] என்றதும் இங்கு கொள்ளத் தக்கது.

எவ்வழியில் நோக்கினும் தமிழே மொழிப்பெயர்; இனப்பெயருக்கு முரியது. வடமொழியாளர்தாம் இப்படித் திராவிடம் என்று திரித்தனர் என்பதற்கு மாற்றுச் சான்றுகள் உள்ளன. தமிழ் என்பதன் எழுத்தொலிகள் அனைத்தையும் மாற்றாமல் பெரும்பகுதி அவ்வொலி கொண்டதாக வேற்று மொழி-வேற்று நாட்டார் வழங்கினர். ஆரிய மொழி வழிப்பட்ட மொழியிலும் இவ்வாறு தமிழ் உருவத்தைக் காணலாம். அவற்றுள் ஒரு சில:

மகாவமிசம் என்னும் நூல் பாலி மொழியில் எழுதப்பெற்றது. அதில் "தமிளோ" என்று தமிழ் சொல்லப்பெறுகின்றது. இதில் தமிழ் ஒலியை ஒரு சிறு மாற்றத்துடன் காணலாம்.

கிரேக்க நாட்டவரான எகிப்திய குலத்து வரலாற்றறிஞர் தாலமி (கி. பி. 119—161) தமிழ்நாட்டை டிமிரிகா (கா—கிரேக்கத்தில் நாடு என்று பொருள்) என்றார். இதைத் 'தமிழகம்' என்பதன் மாற்றாகவும் கொள்ளலாம். தாரநாத் என்பார் (1573இல்) எழுதிய நூலில் தமிழைத் 'திரமில்' என்றார். நேபாளத்தின் தெற்குப் பகுதியில் வாழும் பழங்குடியினர் 'திமில்' எனப் படுகின்றனர். இவர்கள் பேசும் மொழி பெரிதும் தமிழோடு ஒத்துள்ளது. கங்கையின் முற்காலத் துறைமுகம் 'தமிழுக்கு' என்று பெயர் கொண்டதாக விளங்கியுள்ளது. இவை அறிஞர் வி. கனகசபைப் பிள்ளை கண்டறிந்தவை.[44]

"ஆப்கானிஸ்தானத்தில் ஒரு நகரம் 'தமிழக்' என்னும் பெயரில் வழங்கு கின்றது. அங்கு வாழும் இசுலாமியர் தமிழ் கலந்த சொற்களில் பேசுகின்றனர்' என்று மாகறல் கார்த்திகேயனார் காட்டியுள்ளார்.[45] இவை யாவும் தொன்மைத் தமிழர் பல நிலப்பகுதிகளில் பரவிச்சென்ற வரலாற்றைக் குறிப்பாகச் சொல்வதுடன் தமிழ் ஒலிப்பையும் நினைவுறுத்துகின்றன.

எனவே, தமிழைத் 'திராவிடம்' என்று குறிப்பது திரிபான பாதைவழிக் கொண்டது.

'இயல்பே தமிழாகும்' என்க—அயலார்.

---

43 கிரையர்சன்: Linguistic Survey of India, Vol 4 Page 298

44 வி. கனகசபைப் பிள்ளை — தமிழ்ப் பெருமை (கட்டுரை) செந்தமிழ் இதழ் தொகுதி பகுதி அ

45 மாகறல் கார்த்திகேயனார் — மொழி நூல் பக்கம் 19

'திரிபே திராவிட மாம்'[46] என்று மொழிஞாயிறு பாவாணர் பாடியுள்ளமை உண்மையின் பதிவாகும்.

திராவிட மொழிக் குடும்பம் என்று மொழியியலார் கொண்டுள்ளதில் தமிழ் மொழித் தொடக்கமாகப் பின்வரும் மொழிகள் உள்ளன.

| | | |
|---|---|---|
| தமிழ் | — | தமிழ்நாட்டு மொழி |
| மலைஞாலம் | — | கேரள மாநில மொழி |
| கன்னடம் | — | கருநாட்டக மொழி |
| துளு | — | தென் கன்னடத்திலுள்ள துளு நாட்டு மொழி |
| குடகம் | — | தமிழகத்தின் மேலைப்பகுதி மொழி கொடுந்தமிழ் |
| தோதவம் | — | நீலகிரி மலைவாழ் பழங்குடியினர் மொழி |
| கோண்டு | — | மத்திய மாநிலக் கோண்டுவானா பகுதி மொழி |
| மாலர் | — | பவளத்தீவு வாழ் மக்கள் மொழி |
| பிராகூயி | — | பலுசித்தான் வாழ் பழங்குடியினர் மொழி |
| கூயி | — | கோண்டு போன்றது |
| பார்ச்சி (Parji) | — | சப்தப்பூர் மொழி (காய் என்றும் பெயர்) |
| குருக்கு | — | மேற்குத் தொடர்ச்சி மலைப்பகுதி மக்கள் மொழி |

மற்றும் கவர், உராவன் என்பன.

அறிஞர் கே. எம். சியார்சு (K. M. George) இந்திய மொழிகள் 250 என்று கொண்டு (5000 மக்கள் பேசும் மொழிகளாகக் கொண்ட கணக்கு) அவற்றைப் பின்வருமாறு பிரித்துக் காட்டியுள்ளார்:

| | |
|---|---|
| இந்தோ ஆரிய மொழி | 124 |
| திராவிட மொழி | 30 |
| சீன திபேத்திய மொழி | 73 |
| அஃச்டிரிக் மொழி | 23 |
| வகைப்படுத்தப்படாதவை | 9 |

46 ஞா. தேவநேயப் பாவாணர் — வடமொழி வரலாறு முடிவதிகாரம் வெண்பா 4

இக்கணக்கின்படி திராவிட மொழிகள் 30. இவற்றுள் சில எழுத்து வழக்கும் பேச்சு வழக்கும் உள்ளவை; சில பேச்சு வழக்குடன் பிற மொழி எழுத்துக் களைக் கொண்டவை (ஆங்கில உரோமன் எழுத்தும் உண்டு); சில எழுத் தற்றவை; பேச்சற்றவை.

இவை அனைத்துமே தமிழ் மொழியின் இழையோட்டம் கொண்டவை. எந்த ஒன்றையும் எழுத்துக்கள் வேறுபடினும் பெரும்பகுதி சொல் மூலமும் அவற்றுள் பெரும்பகுதி பொருள் தொடர்பும் தமிழ் இயைபு கொண்டவை. இவற்றுள் பல சமற்கிருதச் சொல் கலந்த வாடையால் சில மாற்றங்களைக் காட்டினாலும் அவற்றின் முதன்மைச் சொற்கள் தமிழின் வேர்ச்சொற்களுடன் ஒன்றுபவை.

இவற்றைத் தமிழின் கிளை மொழிகள் என்று மட்டும் எழுதி முடிக்க முடியாது. இவற்றின் தாய்மொழி என்பதே வைர முடிவு. திராவிடம் என்று எழுதும் கால்டுவெல் அவர்கள் 'இக்குடும்பம் (திராவிடம்) ஒரு காலத்தில் ஐரோப்பிய ஆசிரியரால் 'தமிழியம்' (Temilian) என்று அழைக்கப்பெற்றது' என்பது கொண்டு இக்குடும்பத்தைத் தமிழ்ப் பெயரால் குறித்ததையும் அறிய லாம். எனவே, இத்தொகுதியை மொழியியலார் 'தமிழ்க் குடும்பம்' என்றே குறியீடு செய்திருக்க வேணடும். செய்யவில்லை.

செய்திருந்தால் முறையாக அணுகியுள்ளனர் என்னும் அளவில் ஏற்க லாம்.

தமிழ், தன் வழிமொழிகளுக்குத் தாய் என்பது ஒரு தொடக்க உண்மை. இதன் வளர்ந்த உண்மை, உலக மொழிகள் அளவில் மற்றெந்த மொழிக்கும் குறைந்தது அன்று. மற்றெந்த மொழியுடனும் நோட்டத்திற்காக ஒப்பிட்டுப் பார்க்க வேண்டிய தனித்தகவு கொண்டது.

எனவே, தமிழ் ஒரு தலைக்குடியாகக் கொள்ளப் பெற்று,

தமிழம்
ஆரியம்
சேமியம்
துரேனியம்

என்று ஆராயப்பெற்றிருக்க வேண்டும். இவ்வாறு தனிக் குடியாகக் கொள்ளப் பெற்று ஆராயப் பெற்றிருந்தால் அந்த ஆய்வு ஒரு பகுதி அளவாவது ஏற்கப் படலாம். இதிலும் பகுதி அளவுதானா? அவ்வாறானால் நிறைவாக

ஏற்பதற்கு என்ன வேண்டும் (?) என்று வியப்புடனோ, வெறுப்புடனோ வினவலாம். நிறைக்குக் குறைப்படுவது எது? குறை என்ன?

மாந்தனின் தோற்ற கால மொழி எது (?)—அதாவது உலக முதன் மொழி எது (?) என்னும் ஆய்வு தெளிவாக எடுத்துக்கொள்ளப்பெறவில்லை என்பதே குறைப்பாடு. தெளிவாக எடுத்துக்கொள்ளப்பெற்று உலக முதன் மொழியை அறுதியிட்டு உறுதி செய்யாமல் போனதுதான் குறை. இக்குறைக்குக் கரணியம் தொடக்ககால மொழி அறிஞராகிய— இலக்கண வரையறைசெய்த கிரேக்க அறிஞர் அரிசுடாடில் (Aristotle கி. மு. 384—322) முதல் ஒப்பியல் மொழியறிஞர் மறைத்திரு இராபர்ட்டு கால்டுவெல் (Rev. Robert Caldwell 1814—1891) வரை அனைவரும் தமிழில் உள்ள சங்க இலக்கியங்களை அறியாதோர்.

அறிஞர் அரிசுடாடில் தமிழை அறவே அறியாதவர். அவரைத் தொடர்ந்த பலர் தமிழை அறியாதோர் அல்லது தமிழ் என்றொரு மொழி உள்ளதாக அதனையும் 'தமிழ்' என்னும் பெயரில் அறியாதோர். குறிப்பிடத் தக்க மொழி ஆய்வாளராம் மாக்சு முல்லர் (Max Muller 1823—1900) சமற்கிருதப் புலமை பெற்றவர். சமற்கிருத வரலாற்று நூல் எழுதியவர். தமிழைப் பற்றி ஓரளவான அறிமுக அறிவுடன் நோட்டமிட்டவர். அந் நோட்டமும் சமற்கிருத வழிக்கொண்டதாகும். இவர்,

"உலக மொழிகளில் மூன்று தலைக்குடித் தாய்களாகிய துரேனியம் ஆரியம், சேமியம் ஒரே மூலத்தின" என்றாரேயன்றி எந்த மூலத்தின என்று காணத் தவறியவர்.

அறிஞர் யெஃச்பர்சன் (Jesperson) போன்றோர் மொழித் தொகுதியைக் கண்டு அமைக்கும் நோக்கத்தினரே அன்றி அனைத்து மொழிகளின் உள் நுணுக்கங்களைக் காணாதோர். தமிழ் பயின்று, அறிந்து, பிற மொழிகள் சிலவற்றுடன் தோய்ந்து, திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் செய்தவர் அறிஞர் கால்டுவெல். இவர் நன்னூலுக்கு மூந்திய இலக்கண நூல் எதையும் காணாதவர். எனவே, தொன்மைச் சங்க இலக்கியங்களை அறியாதவர்.

இதனாலும்,

'தமிழ் பேசும் தமிழரே மேலை ஆசியாவிலிருந்து தமிழ் நிலத்திற்கு வந்தோர்'—என்னும் கருத்துடையவர். இக்கருத்தும் மறைத்திரு சி. பெர்சுவல் (C. Persual) என்பாரால் தம் 'வேத புருடன்' என்னும் நூலில் தக்கபடி மறுக்கப்பெற்றது. இவ்வாறு இம் மொழியாய்வாளர் அனைவரும் தமிழின் சங்க இலக்கியங்களைக் காணாதோர்.

சங்க இலக்கியங்களாம் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்கள் தமிழ் வளத்தின் பெட்டகங்கள். சில சொற்களன்றிப் பிற வடமொழி, பிறமொழிச் சொற்கள் கலவாதவை. தனக்கென ஒரு தனித்தகவு கொண்டவை. ஒரு மொழியின், அதிலும் இயற்கைத் தோற்றங் கொண்ட மொழிக்குரிய அடித்தள மான சொற்களின் கருவூலம். தொன்மைச் சொற்களின் சுவடுகள் கொண்டவை. இத்தகைய செறிவான மொழித்துறைக்குப் பயன்படும் சங்க நூல்களை அறியா மல், கற்காமல் செய்யப்பெற்றும் உலக மொழி ஆய்வு எவ்வாறு நிறைவு கொண்டதாகும்? இதனையும் மீறி அணுகுவது ஒரு மூளி அணுகல். ஒரு மூளி அணுகல் உலக மூல மொழியைக் காணத் தகுதியற்ற உடைசல்.

இதனால்தான் நல்ல மொழி நுணுக்க அறிவு கொண்ட அறிஞர்களாலும் உலக முதன் மொழி காணப்படாமலும், அறுதியிடப்பெறாமலும் அரைகுறை யாகவே போயிற்று.

ஆயினும், அன்னோர் அறிவில் கண்டு வெளியிடப்பெற்றுள்ள கருத்துக் கள் நம்மை உலக முதன்மொழி வளாகத்திற்குள் அழைத்துச் செல்கின்றன. அக்கருத்துக்களைப் படிப்படியாகக் கண்டு அப்படிகளில் ஏறினால் நாம் குமரிக் கோட்டை அணுகலாம். அதன்மேலும் சங்க இலக்கியச் சொற்களை — அவற் றின் மூலங்களைக் கொண்டு ஆய்ந்தால் உலக முதன்மொழியை அறிய முடியும்.

மொழி ஆய்வின் தொடக்க காலம் முதல் வெளியிடப்பெற்றுள்ள ஆய்வுக் கருத்துக்களை ஆங்கிலப் பேராசிரியர் சி. துரைசாமி என்பார் தொகுத்துப் பார்த்துத் தந்துள்ளவற்றைக்[47] காண்பது இங்கு பொருத்தமாகும். அதனால் பெறப்படும் கருத்துக்கள் உலக மூல மொழிக்குச் செல்லாது போனாலும், மூல மொழியைப் பற்றுவதற்கான ஒரு கைகாட்டிக்கோட்டை. பற்றுக்கோட்டைக் கொள்ளமுடியும். இப்பற்றுக்கோட்டை 'ஆதார மொழி' என்று குறிப்பிட்டுள் ளார். இந்தப் பற்றுக் கோடாம் ஆதார மொழி என்று குறிப்பதும் ஏதேனும் ஓர் அடையாளமோ, சுவடோ பதிந்ததாகக் காட்டப்பெறவில்லை.

> 'ஏதோ ஒரு மொழி ஆதார மொழியாக இருக்க வேண்டும்.
> ஓர் ஆதார மொழியை அணுகியதாக இருக்கலாம்;
> ஓர் ஆதார மொழியின் வழிமொழியாக இருக்கலாம்;
> ஒரு குடும்ப ஆதார மொழியின் ஒட்டுறவாக இருக்கும்'

எனத்தான் மொழியியல் அறிஞர் பலராலும் காட்டப்பெற்றுள்ளது.

---

**47 எம். எசு. துரைசாமி: கலைக்களஞ்சியம் தொகுதி 8 பக்கம் 548, 549**

இந்திய, கிரேக்க, இலத்தீன், கெல்டிக்கு, செர்மானிய மொழிகளை ஒப்பிட்டு ஆராய்ந்த மொழியறிஞர் பலர்.

'பல்வேறு மொழிகளுக்கும் முன்னால் ஆதாரமாக உள்ள இந்தோ ஐரோப்பிய மொழி ஒன்று இருந்திருக்க வேண்டும்' என்றுளர்.

இந்த ஐரோப்பிய மொழிகளுள்ளும்,

ஆங்கிலம், சமற்கிருதம் ஆகிய இரு மொழிகளும் ஒரு பொதுத்தாய் மொழியிலிருந்து பிறந்திருக்கலாம்' என்று பொதுத்தாய் என்னும் வளையத்திற்குள் கொணரப் பெற்றது. இதில் காட்டப்பெற்ற ஆங்கிலம் இடைக்காலத்தில் (கி. பி. 600) தோன்றியது. இஃது ஒரு புதிய மொழி. அதோடு ஒரு கலப்பு மொழி. இதனைத் தொன்மை வாய்ந்த சமற்கிருதத்துடன் அதன் குடும்பத் தொடர்பு கருதிக் கூறப்பெற்றுள்ளது. எனவே, இடைக்காலப் புதியமொழியாம் ஆங்கிலத்தை விடுத்தால் களத்தில் நிற்பது சமற்கிருதம் ஒன்றே.

இங்கு அறிஞர் கால்டுவெல் கண்டறிந்து கூறிய,

'இந்திய (இதில் சமற்கிருதமும் அடங்கும்) ஐரோப்பிய மொழிகளின் மூல மொழிக்குத் தமிழ் மிக நெருக்கமானது' என்னும் கருத்து நம் கவனத்தை ஈர்க்கின்றது. உலக மொழி அணுகலில் தமிழைக் காட்டிய அறிஞர் கால்டுவெல்லின் இக்கருத்து குறித்துக்கொள்ள வேண்டிய ஒரு முதன்மை அறிவிப்பு ஆகும்.

ஆயினும் 'மூல மொழிக்குத் தமிழ் மிக நெருக்கம்' என்றாரேயன்றி மூல மொழியாகத் தமிழைக் கொள்ள அவரால் இயலவில்லை. இயலாமைக்குக் கரணியம் தமிழ்ச்சொல் ஆழங்களைக்கொண்ட சங்க இலக்கியங்களையும் மொழி வரம்பைக் காட்டும் தொல்காப்பியத்தையும் அவர் அறியாததும் பயிலாததும் ஆகும்.

இதைத் தொடர்ந்து,

> " பழைய இந்திய மொழிகளின் மிகத் தொன்மையான உருவத்தை நம் ரிக் வேதப் (கி. மு. 1500) பாசுரங்களில் காணலாம். பழைய இந்திய மொழியின் மற்றொரு பகுதியிலிருந்து சமற்கிருதம், பிராகிருதம் பிறந்தன "

என்று தொன்மை மொழியாம் சமற்கிருதத்திற்குப் 'பழைய இந்திய மொழியின் மற்றொரு பகுதி தாய்' எனப்பட்டது. இதனால் உலக முதன்மொழி சிறு வேலி அடைப்புக்குள் காட்டப்பெற்றதாகிறது.

இவ்வாறெல்லாம் தொகுத்துக் காட்டுகின்ற ஆங்கிலப் பேராசிரியர் முதன்மொழி ஆய்வாளர்தம் கருத்துக்களைக் கொண்டு,

> ''முதலில் வந்த மொழி ஆராய்ச்சியாளர்கள் வடமொழிதான் ஆதார மொழி என்று சொல்லாவிட்டாலும், ஆதார மொழியி னின்று முதன்முதலில் கிளைத்த மொழியாக இருக்கவேண்டும்''

என்று முடித்தார்.[48] இம்முடிவு தொன்மைச் சமற்கிருதத்தை மொழியிலிருந்து ஒதுக்கி அதற்குத் தாய் நிலை இன்றி மூத்த மகள் பிறப்பைத் தந்துள்ளார்.

இந்த ஆதார மொழிக் கருத்துக்களே உலக முதன் மொழியை அணுகும் கருத்துக்கள். இந்த அணுகலை ஈர்த்திடும் மொழி எது? அது கண்டறியப் பெற்றால் உலக முதன் மொழியை உறுதி செய்யலாம்.

அறிவியல், பொறியியல், நிலவியல், வானவியல் முதலிய பல இயல்களை விளக்கும்போதும், ஆராயும் போதும் சான்றுகளாக மேலை நாட்டு ஆய்வாளர் கருத்துக்களே காட்டப்பெறுகின்றன. தமிழில் எழுதப்பெறும் ஆய்வாளர் கட்டுரைகளிலும் இதே நிலைதான். இது மொழியியலுக்கும் பொருந்தும். இவ்வாறு காட்டப்பெறுவதற்குக் காரணியம் மேலை ஆய்வாளர்கள் இவ்வாய் வில் கருத்தூன்றினர்; வளர்த்தனர்.

இதே நேரத்தில் தற்காலத்தில் தமிழை அதன் கிளை மொழிகளோடும் பிற உலக மொழிகளோடும் ஒப்பிட்டு ஆராய்ந்த தமிழறிஞர் கருத்துக்களையும் முடிவுகளையும் சான்றாகக் காட்டுவதில்லை. இவர்கள் பெயர்களும் அறிமுகப் படுத்தப்பெறவில்லை. தற்கால மொழி ஆய்வாளர் (Linguistics) மொழி யியற் பேராசிரியர் அனைவரும் கவனஞ் செலுத்தாமையாலே கருத்து மாறு பாட்டாலோ ஆழ்ந்து நோக்கவேண்டியிருக்கின்ற முனைப்பின்மையாலோ மூளை உழைப்பைப் பயன்படுத்த விரும்பாமையாலோ தமிழறிஞர் கருத்துக் களைக் கணக்கில் கொள்வதில்லை. தமிழ் மொழியை ஆராய்வோர் இலக்கிய இலக்கண வழக்கு, பேச்சு வழக்கு ஆகியவற்றை இணைத்தே ஆராய்ந்துள்ள னர். தற்கால மொழியியலார் பேச்சு வழக்கு கொண்டே மொழிகளை ஆராய் வது போதுமானது என்று கருதுவோர். இதனாலும் தமிழ் ஆய்வாளர் கருத் துக்களைக் கணக்கில் கொள்வதில்லை.

இங்கு தமிழ் மொழி ஆய்வாளர்களை நினைவுகூர்வது இன்றியமையாத தாகின்றது. கீழ்வரும் பெயர்களுடன் அவரவர்தம் ஆய்வில் எழுந்த ஓரிரு நூல்களையும் தர நேர்கின்றது.

---

*48 எம். எசு. துரைசாமி: கலைக்களஞ்சியம் தொகுதி 8 பக் 589*

மொழியறிஞர் மாகறல் கார்த்திகேய முதலியார்: 'மொழிநூல்'

யாழ்ப்பாணத்து நல்லூர் மறைத்திரு ஞானப்பிரகாசர்;
'சொற்பிறப்பு ஒலியியல் அகர முதலி'

பொறியியலறிஞர் பா. வே. மாணிக்க நாயக்கர்: The Tamil Alphapet—its Mystic Aspect' என்னும் ஒலியிலக்கண ஆங்கில நூல்

பல்கலைப்புலவர் கா. சுப்பிரமணிய பிள்ளை: 'மொழி நூற் கொள்கையும் தமிழ் மொழி அமைப்பும்'

நிறைதமிழ்ச் செம்மல் மறைமலையடிகள்: தனித்தமிழ்ச் சொல்லறிவிப்புகள்

மொழிஞாயிறு ஞா. தேவநேயப்பாவாணர்: 1) தமிழ் முதன்மொழி 2) ஒப்பியல் மொழிநூல் 3) வடமொழி வரலாறு

பண்டித தே. சவரிராய பிள்ளை: (தமிழ் இலத்தின் ஒப்பீடு) தமிழர் பழமை தேட்டன்—Tamilian Antiquary என்ற தமிழ் ஆங்கில இதழ்

வரலாற்றறிஞர் பி. தி. சீனிவாச ஐயங்கார்: (இந்தியாவின் கற்காலம்) 'Stone age in India'

வடுவூர் துரைசாமி ஐயங்கார்: 'Dravidian Reserches'

திருவனந்தபுரம் தி. எசு. கணேச பிள்ளை: 'தமிழ்த்தோற்றத் தேற்றம்'

பேராசிரியர் பரிதிமாற்கலைஞர்: 'தமிழ் மொழி வரலாறு'

சுப்பிரமணிய சாத்திரியார்: 'தமிழ் மொழி நூல்' (இஃது ஒரு தமிழ்ப் பகை நூல்)

கல்வெட்டறிஞர் சதாசிவப் பண்டாரத்தார்: கல்வெட்டுச் சொற்களால் மொழி ஆய்வுக் கட்டுரைகள்

பாவேந்தர் பாரதிதாசனார்: 'குயில்' இதழில் தொடர்ந்தெழுதிய 'செந்தமிழ்ச் சொல்லும் வந்தவர் மொழியும்' கட்டுரைகள்

மேலைப் பன்மொழியறிஞர் கே. சி. ஏ. ஞானகிரி நாடார்: 1 Tamil its Contribution to the European Languages 2 Greek words of Tamil Origin

பேராசிரியர் அ. சிதம்பரநாதனார்: இக்கால மொழியியல் கட்டுரைகள்

பேராசிரியர் எசு. வையாபுரிப் பிள்ளை: 'சொற்கலை விருந்து'

பன்மொழிப்புலவர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்: மேலைநாட்டு மொழியியல் (Linguistic) தமிழில் அறிமுகம் செய்து பல கட்டுரைகள்

பேராசிரியர் முனைவர் மு. வரதராசனார் 1 மொழியியல் 2 மொழி வரலாறு

மற்றும் திருசிரபுரம் பால்வண்ண முதலியார், சென்னை வீரபத்திர முதலியார் முதலியோர்

இன்னோர் தொல்காப்பியம், சங்க இலக்கியங்களில் பயின்றோர் தமிழ்த்தாத்தா உ. வே. சாமிநாத ஐயர் சங்க இலக்கியங்களை அச்சிற் கொணர்வதற்கு முன்னரே ஓலைச்சுவடிகளில் பயின்றோர். இன்னோர் தமிழை அதன் கிளை மொழிகளுடனும், இந்திய மொழிகளுடனும் ஒப்பீடு செய்தோர். பல அரிய முடிவுகளைத் தந்துள்ளனர்.

சில பகுதிகளில் ஒருமித்த பாதை இல்லை என்றாலும் தமிழ் மூல மொழி என்பதற்கு உறுதியான கருத்துக்களும் சான்றுகளும் தந்துள்ளனர். சிறப்பாக மொழிஞாயிறு ஞா. தேவநேயப்பாவாணர் தம் கூர்த்த மதியால் தமிழின் வேர்ச்சொல்லை வரையறுத்துப் பிறமொழி வேர்ச்சொற்களுடன் ஒப்பிட்டு தமிழே உலக முதன்மொழி என்று நிறுவியுள்ளார்.

புகழுடம்பில் நிற்கும் இன்னோர் அன்றி, வாழும் மொழியறிஞர் இருவரைக் குறிப்பிட வேண்டும்.

வழக்கறிஞராகத் தேறிய மொழியறிஞர் திரு ப. அருளி வேர்ச்சொல் ஆய்வுகொண்டு தமிழைப் பிற மொழிகளுடன் ஆராய்ந்து வருபவர். 'அருளி ஆற்றிய மொழியியல் உரைகள்' என்னும் தலைப்பில் ஐந்து தொகுதிகளை வெளியிட்டு 50 சொற்களின் தெளிவைத் தந்தவர். தற்போது தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் 'தனித்தமிழ் அகரமுதலி'யை உருவாக்குபவர்.

மற்றொருவர் இலக்கியச் செம்மல், பெரும்புலவர் இரா. இளங்குமரனார் 'வாழும் பாவாணர்' என்று போற்றப்படுபவர். பாவாணர் வழி தமிழ் மூலங்களை ஆய்ந்து வெளிப்படுத்தி வருபவர்.

புகழுடம்பில் நிற்கும், வாழும் இவ்வாய்வாளர்கள்தம் கருத்துக்களையும் கொண்டே உலக முதல் மொழியைக் காணவேண்டும்; காண முடியும்.

மொழியறிஞர்களில் கிரேக்க மெய்ப்பொருளறிஞர் அரிசுடாடிலை மொழியியல் அறிஞராகக் குறிப்பது இவர் முதலில் மொழி இலக்கணத்தை வரம்பு செய்தவர் என்பது கொண்டே. இலக்கணம் மொழியியலுக்குப் புறம்பான தன்று. இலக்கணம் மொழியியலின் முதற்கூறு.

தொல்காப்பியம் இலக்கணநூல் எனப்பெறினும் அது மொழியியல் தொடர்பற்றது என்றால் அது தவறான முடிவாகும்,

சொல்லை உருவாக்கும் எழுத்தின் இலக்கணம் கூறும் இயலுக்கு 'மொழி மரபு' என்று தலைப்பிட்டதே மொழியியல் கூறை அறிவிப்பதுதான். 'மூன்றே மொழி நிலை தோன்றிய நெறியே' என்னும் மொழித் தொடர்களைக் கூறுவது 'மொழி நிலை' என்னும் சொல்லால் மட்டுமன்றி, தன்மையாலும் மொழியியலின் அறிவிப்பே.

எழுத்தின் பிறப்பைக் கூறும், 'உந்தி முதலா உந்து வளி தோன்றி' என்னும் நூற்பா மொழியின் முனைப்பான ஒலி எழுத்தின் தோற்ற நுணுக்கத்தைத் தெரிவிப்பது எவ்வாறு மொழியியலினின்று பிரிந்ததாகும்?

'மெய்யினியற்கை புள்ளியொடு நிலையல்' (தொல்-எழுத்து 15) என்று எழுத்தின் வரிவடிவம் கூறும் நூற்பா மொழியியலின் கூறு அன்றோ?

மொழி என்பது அதனை ஏற்போனால்தான் பயன் கொள்கின்றது. மொழியை சொல்லை உரைப்போன் கருத்தை ஏற்போன் உணரும் நிலையுடன் பொருத்திக் கூறப்பெற்ற 'உணர்ச்சி வாயில் உணர்வோன் வலித்தே' (சொல்—387) என்னும் நூற்பா மொழியியலின் மறு கூறு சொல்வதன்றோ? இவ்வாறு தொல்காப்பியத்தில் பரவியுள்ளவற்றைக் காணின் தொல்காப்பியம் மொழியியல் பகுதி கொண்டதே என்று அறியலாம்.

18ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில்தான் மேலை நாடுகளில் கிரேக்க இலத்தீன் மொழிகளைக் கற்பிக்கும் கல்வியாக மொழிப்பாடம் தோன்றியது.

19ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில்தான் அறிஞர் கிரீம் என்பாரால் மொழியியலுக்கு விதிப்பு உண்டாகி அவர் மொழி நூல் வழி 'கிரீம் விதி' (Grims' Law) தோன்றியது.

மிகப்பழங்கால மொழியறிஞர் என்று அரிசுடாடிலைக் கொண்டாலும் அவர் கி. மு. நான்காம் நூற்றாண்டினர்.

வடமொழிக்கு இலக்கணம் வகுத்த பாணினி கி. மு. ஐந்தாம் நூற்றாண்டினர்.

நிருக்தம் என்னும் நிகண்டுக்குத் தொடர்பான நூலை எழுதிய யாஃச்கர் காலம் கி. மு. 700க்குப்பின் கி. மு. 500க்கு முன்[49] என்பது வடமொழியறிஞர் இலட்சுமன் சரூப் கண்டுள்ளதாகும்.

தொல்காப்பியமோ கி. மு. 3000 ஆண்டு முற்பட்டது. மிகக்குறைவாகச் சொல்வோரும் கி. மு. ஏழாம் நூற்றாண்டு என்பர். எவ்வாறு பார்க்கினும் உலகில் மிகத் தொன்மையான தொல்காப்பியம் நமக்குக் கிடைத்து இருக்கும் நூல்கள் அளவில் மிகத் தொன்மையானது. இதற்கு முன்னரும் இலக்கண, இலக்கிய நூல்கள் இருந்து மறைந்த கருத்து உலகறிந்தது.

ஆனால், வடமொழி ஆய்வாளர் பலர் தமிழ் நூல்களைப் பின்னுக்குத் தள்ளிப் பேசுவது வாடிக்கை. அக்நிகோத்திரம் இராமாநுச தாதாச்சாரியார் என்பார் முற்போக்கான கருத்துக்களை வழங்கிய வைணவ அறிஞர். இவர் யாஃச்கர் எழுதிய நிருக்தத்தைக் கொண்டு யாஃச்சர்பற்றி,

> " ஒரு காலத்தில் இப்படிப்பட்ட சிந்தனையாளர்கள் (மொழியியல் சிந்தனையாளர்கள்) பெருமளவில் பாரத தேசத்தில் இருந்திருக்கிறார்கள். அவர்களுள் யாஃச்கரும் ஒருவர். 'யாஃச்கர் நிருக்தம்' அவர் எழுதிய நூல். மொழியியலை வரலாற்றிலேயே முதலாகத் தெரிவிக்கும் நூல்'[50] என்று எழுதியுள்ளார்.

இவர் ஓரளவில் தொல்காப்பியத்தை அறிந்தவர். இவரே 'யாஃச்கருடைய முயற்சியைப்போல் தொல்காப்பியத்தில் எழுத்ததிகாரம் சொல்லதிகாரம் இவைகளில் மொழியியலின் மூலக்கருத்துக்களைப் பார்க்கிறோம் "[51] என்றும் குறித்துள்ளார். ஆனால் தொல்காப்பியருக்கு 2400 ஆண்டுகள் பிந்தியவராகிய அறிஞர் யாஃச்கரின் நூல் கருத்து முந்தியது என்றமை தொல் என்று எழுதியது அவர் தொல்காப்பியர் காலம் பற்றிய தெளிவான முடிவை அறியாததே ஆகும்.

சில தமிழறிஞர்களே தொல்காப்பியத்தைக் கி. பி. 700இற்குப் பின்னர் எழுந்ததாகக் கொண்டனர், இதற்குக் காரணியம் தொல்காப்பியத்தில் உள்ள

---

49. Lakshman Sarup: The Nigantu and Nirukta P. 54

50. அக்னிகோத்திரம் இராமானுச தாதாச்சாரியார்: யாஃச்கரின் நிருத்தமும் நிகண்டும் முகவுரை: பக். 2

51. " " பக். 24

சொற்களால் கொண்ட குறையான ஆய்வாகும். தொல்காப்பியத்தில் வட சொற்கள் விரல் எண்ணிக்கை அளவினதாகலாம். பல இடைச்செருகல்களால் அச்சிலவும் ஏறின.

சான்றுக்கு ஒன்று:

'வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை' (தொல். பொருள். 622) என்றொரு தொல்காப்பிய நூற்பா. இதில் 'வைசியன்' என்பது வடசொல். வணிகனைக் குறிக்கும் 'வைசிகன்' என்னும் இவ்வடசொல் வணிக குடும்ப வரலாற்றுக் காப்பியமாகிய சிலப்பதிகாரத்தில் இல்லை; வடசொற் கலப்புள்ள சிலப்பதிகாரத்தில் இல்லை; அதன்வழி வரலாறு கொண்ட மணிமேகலையிலும் இல்லை. சங்க இலக்கியங்களில்,

'அறவிலை வணிகன் ஆய் அலன்' (132—2)

'வாணிகப் பரிசிலன் அல்லேன்' (208—7) எனப் புறநானூற்றிலும்

'வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணி' (120) என்று திருக்குறளிலும்

'வணிகர் புனை மறுகு ஒருசார்' (திரட்டு 1—25) என்று பரிபாடலிலும்

வணிக, வாணிக என்பனவே உள்ளன. வைசிகன் இல்லை. ஏலாதி, சிறுபஞ்ச மூலம் முதலிய பதினெண்கீழ்க்கணக்குகளிலும் இல்லை.

'வணிகன் பெறுமே வாணிக வாழ்க்கை' என்றதில் வணிகனை வைசிகனாக்கிப் புகுத்தப்பெற்ற வடசொல் கொண்ட இடைச்செருகல் நூற்பாக்களை வைத்து ஆய்வது போன்ற பல தவறான அமைப்பு ஆய்வுகளால் கணிக்கப் பெறும் தொல்காப்பியக் காலம், எவ்வாறு தெளிவானதோ உண்மையானதோ ஆக முடியும். இது போன்ற முடிவைவைத்து யாஃச்கருக்குப் பிந்தியவராகத் தொல்காப்பியர் கூறப்பட்டமை தவறுடையது. எனவே தொல்காப்பியமே முதல் மொழியியல் நூல் எனக்கொள்ளல் வேண்டும்.

மொழி என்பது முன்னர்ப் பேசப்படுவதற்கும் பின்னர் எழுதப்படுவதற்கும் பின்னர் இரண்டனுக்கும் ஆகியது. பின்னர்ச் சொல்லைக் குறித்தது. சிறப்பாக மொழி இலக்கணத்தையும் மொழி வரலாற்றையும் குறிக்கலாயிற்று.

பழைய நூலொன்று நல்லாறன் என்பவரால் எழுதப்பெற்று 'மொழி வரி' எனப்பெயரிடப்பெற்றுள்ளது. அதன் நூற்பாக்களாகக் கிடைத்துள்ளவை இலக்கணத்தைத் தருவதுடன் மொழிக் கூறையும் குறிக்கின்றன. 'வரி' என்பது முதலில் கோடாக இடப்படும் வரிவடிவத்தையும், பின்னர் இசையையும் குறித்தது. தொடர்ந்தும் மொழிக்கூறு கொண்ட நூல்கள் மின்னலிட்டன.

பரிப்பெருமாள் என்பவர் திருக்குறளுக்கு உரை எழுதியவர். இவர் பதினோராம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். அவரது நூல்கள் பற்றிய பாடல் இது:

" தெள்ளி மொழியியலைத் தேர்ந்துரைத்துத் தேமொழியார்
ஒள்ளிய காமநூல் ஓர்ந்துரைத்து—வள்ளுவனார்
பொய்யற்ற முப்பால் பொருளுரைத்தான் தென்செழுவைத்
தெய்வப் பரிப்பெருமாள் தேர்ந்து "[52]

இப்பாடல் அவர் 'மொழியியல்' என்னும் நூலை எழுதியதாகக் குறிக்கிறது. இந்நூல் இலக்கணத்துடன் மொழி இயல்பையும் கூறுவது ஆகலாம். அத்துடன் 'மொழியியல்' என்னும் பெயரீட்டை இவ்வெண்பா அறிவிக்கின்றது. நாமறிந்துள்ளவரை 'மொழியியல்' என்னும் பெயரீடு முதன்முதலாகப் பதினோராம் நூற்றாண்டில் அமைந்துள்ளது. அதற்கு முன்னரும் இருந்திருக்கலாம்.

நாம் பெற்றுள்ளவற்றில் மொழியியல் கருத்துக்களைத் தருவது தொல்காப்பியம். இது சங்க இலக்கியங்களுக்கு இலக்கண நூல் என்பர். சங்க இலக்கியப் பாடல்கள் பலரால் பாடப்பெற்ற பாடல்களின் தொகுப்பு. பாடினோர் பல காலத்தவர். தொல்காப்பிய காலத்திற்கு முந்திய பாடல்களும் இருக்கலாம்.

எனவே, சங்க இலக்கியங்களில் அமைந்துள்ள சொற்கள் ஏறத்தாழ 5000 அல்லது 6000 ஆண்டுகளுக்கு முந்தியவை என்று சொல்வதில் குறையில்லை. அச்சொற்கள் மொழி வரலாற்றின் சின்னங்கள்.

ஒரு சோற்றுப் பதம்:

தமிழ் எழுத்துக்களில் 'ஞ'கரம் ஒரு மெல்லின எழுத்து. 'ஞ்' என்னும் மெய்யுடன் உயிர்மெய்களையும் சேர்த்து நெடுங்கணக்கில் 13 எழுத்துக்கள் உள்ளன. இவற்றுள் மொழிக்கு முதலில் வருபவை பற்றிக் கருத்து வேறுபாடு உண்டு. சங்க இலக்கியங்களில் ஞகரம் ஏழு உயிர்களுடன் சேர்ந்து மொழிக்கு முதலில் வரும் சொற்களாக உள்ளன. இங்கு 'ஆ'வுடன் கூடிய 'ஞா'வை முதலாகக் கொண்ட சொற்கள் மட்டும் ஒரு சோற்றுப் பதத்திற்காக அவற்றின் வரலாற்றுடன் காட்டப்படுகின்றன.

அவை தோற்ற வளர்ச்சியின் படிமுறையில் இவ்வாறு அமையும்:

ஞாய், ஞாயில், ஞாயிறு;

ஞால், (ஞால);

52. பரிப்பெருமாள்: திருக்குறள் பரிப்பெருமாள் உரை. உரைப்பாயிரம்

ஞாலம்; ஞான்று; ஞான்ற; ஞாங்கர்;

ஞாறிய;

ஞாண், ஞாட்பு,

ஞாழல், ஞாளி,

ஞாபகம்

இவற்றிற்கு முதனிலைகளாக

ஆய், ஞாய், ஞால் என்பன உள்ளன, இவற்றிற்கும் மூலமான வேர் 'உல்' என்னும் சுட்டொலி கொண்டது. அது,

உல்—அல்—ஆல்—ஆய்—ஞாய்—ஞால்—என 'ஞாய், ஞால்' என்னும் இரு முதனிலைகளை உருவாக்கியது.

இம்முதனிலைகளாம் ஆய், ஞாய் என்னும் இரண்டின் வழி கிளைத்த மேற்குறித்த சொற்களின் சொல் வரலாறு, பொருள் வரலாறு தனித்தனியே பின்வரும் அமைப்பில் விளக்கப்பெறும்:

சொல் முளைத்துக் கிளைத்த வரலாறு (சொ. வ.)

சங்க இலக்கிய, தொல்காப்பியச் சொல்லாட்சி (சொ. ஆ.)

மொழிப்பொருள் காரணியம் (மொ. க.)

**ஞாய்:**

சொ. வ.: ஆய்—யாய்—ஞாய்—(மோய், தாய்) பொருள்: யாய்—என்னை ஈன்றவள் ஞாய்—உன்னை ஈன்றவள்

ஆ: 'எந்தையும் யாயும் அறிய'—கலி. 111—22, 23
'ஞாயையும் அஞ்சுதி யாயின்'—கலி. 107—25
'யாயும் ஞாயும் யாராகியரோ'—குறுந். 40—1

மொ. க.: மாந்தன் உணர்ச்சி ஒலியாம் 'ஆ'வுடன்—தாய்ப்பால் பருகிய குழந்தை தான் சுவைத்த உணர்வைத் தன் நடுநாவை மேல் வாயாம் அண்ணத்தில் ஒற்ற 'ய்' ஒலிக்கும். இந்த 'ய்' கூடி 'ஆய்' ஆகி ஈன்றவளைக் குறிப்பதாயிற்று. தன்னுரிமை ஒலியாகிய'ய்' ஆயின் முன்னே பொருந்தி'யாய்' ஆகி 'என் அன்னை' என்னும் பொருள் குறித்தது. ஞகர ஒலி ஆயுடன் கூடி 'ஞாய்' கிளைத்து 'உன் அன்னை' என்னும் பொருள் குறித்தது. ஆயினின்றும் மோய் தாய் கிளைத்தன.

ஞாயில்

சொ. வ: ஞாய்—ஞாய்—இல்—ஞாயில் பொருள்: மலைப்பாறைப் பொந்து (பாழி, புழை, குகை) அம்பெய்து மறையும் மதிற் புழை

ஆ: 'ஞாயில் தோறும் புதை நிறீஇ'—பட். 288

மொ. க.: மாந்தன் முதலில் தங்கிய முதல் (இல்) இடமான முதல் தாய் இடம் ஞாய்—இல்—ஞாயில் ஆயிற்று.

ஞாயிறு:

சொ. வ.: ஞாய்—ஞாயில்—ஞாயில் — து—ஞாயிறு. பொருள்: ஒளி மண்டிலம்

ஆ: 'ஞாயிறு திங்கள் சொல்லென வரூஉம்'—தொல். சொல். 58—3
'பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாங்கு'—முருகு. 2

மொ. க.: ஒளிமண்டிலம் (ஞாயிறு) அனைத்துயிர்களுக்கும் தாய். அவ்வொளியைத்தன் முகப்பில் கண்ட இல்லாம் ஞாயிலுடன் உயிர்கள் ஒளியைத் துய்க்க—நுகரச் செய்ய, துய்த்த மாந்தன் ஞாயில்—து—ஞாயிறு என்றான்.

இவ்வொளி மண்டலம் ஒளிவீச்சாம் கதிர்களை உடைமையின் 'கதிரவன்' என்றும், வெப்பத்தைத் தருவதால் 'வெய்யோன்' என்றும், வெப்பத்தில் சுடர்வால் 'சுடர்' என்றும், வெப்பம் சுள்—சுர் என்று தைப்பதால் 'சூரியன்' என்றும் பெயரீடு பெற்றது.

ஞால்:

சொ. வ.: உல்—அல்—ஆல்—ஞால் (ஞால) பொருள்: தொங்கு, சாய், அலை.

ஆ.: 'ஞால்வாய்க் களிறு பாந்தட் பட்டென'—நற். 14—8.

மொ. க.: 'ஆல்' ஒலி எழுப்பு அசைந்தாடு என்னும் ஏவற்பொருள் தருவது. 'கரைநின்று ஆலும் (ஆடும்) ஒரு மயில்' என ஆடும் பொருள் கொண்டது. அது 'ஞால்' ஆகி ஆடும், அசையும் பொருட் டொடர்பில் 'தொங்குதல்' என்னும் பொருள் கொண்டது. ஆக 'ஞால்' என்பதன் முதற்பொருள் தொங்குதல். இஃதே 'ஞால'—

தொங்க என்று வினையெச்சப் பொருளாயிற்று. யானை தொங்கும் வாய் கொண்டதால் 'நால்வாய்' (ஞால்வாய்) எனப் பெயர் கொண்டது.

**ஞாலம்:**

சொ. வ.: ஆல்—ஞால்—ஞால்—அம்—ஞாலம் பொருள்: நிலவுலகம்

ஆ.: 'மன்கெழு ஞாலத்து மாந்தன்'—பதி. 31—2
'மலை நாறிய வியன் ஞாலம்'—மது. 4

மொ. க.: ஞால்—தொங்கு 'ஞால் இயல் மென் காது' (கலி. 96—11) என்றதில் ஞால் இயல்—தொங்கும் இயல்பு என்று, தொங்கி —அசைந்து இயங்கும் பொருள் தந்தது.
இதுபோல் பற்றுக்கோடின்றித் தனித்துத் தொங்குவது (ஞால்—அம்) ஞாலம் எனப்பெற்றது.

**ஞான்று:**

சொ. வ.: ஞால்—ஞான்—ஞான்—து—ஞான்று. பொருள்: நாள், பொழுது

ஆ.: 'வதுவை என்றவர் வந்த ஞான்றே'—நற். 386—10

மொ. க.: ஞால்—தொங்கு. சாய், கழி. ஞான்—நாள் நேரம் (இஃதே ஞால் ஞாள் நாள் ஆயிற்று)

**ஞான்ற:**

சொ. வ.: ஞால்—ஞான் —ஞான்—தல்—ஞான்றல்; ஞான்ற. பொருள்: சாய்ந்த, கழிந்த

ஆ: 'பட்ட மாரி ஞான்ற ஞாயிற்று'—புறம். 82—2

மொ. க.: ஞால்—ஞான்—தொங்கு, சாய் என்னும் பொருளுடன் ஞான்—ற்—அ என இவ்விடைநிலை விகுதி கூடி 'ஞான்ற' என்று சாய்ந்த பொருள் தந்தது.

**ஞாங்கர்:**

சொ. வ.: ஞால்—ஞாம்—ஞாம—கு ஞாங்கு (ஆங்கு) ஞாங்கு—அர்—ஞாங்கர். பொருள்: அங்கு, அவ்விடம், முன்னிடம்

ஆ.: 'ஞாங்கர்க் கிளந்த வல்லெழுத்து மிகுமே'—தொல். எழுத்து.—205—4
'ஞாங்கர் குடிநிறை வல்சிச் செஞ்சொல் உழவர்—பெரும்பாண். 196, 197

மொ. க.: ஞான்—இடம்பெறு ஞான்—கு இடம் ஆகியது, அர் கடைப் பொலி. ஞாங்கு—அர்
ஞாங்கர்—கழிந்த இடம், மேலிடம், முன் இடம் எனப் பொருள் தந்தது
ஞாங்கு ஆங்கு என்றும் ஞாங்கர் ஆங்கண் என்றும் ஆயின.

ஞாறிய:

சொ. வ.: ஞால்—ஞால் —தல்—ஞாறல் (ஞாறுதல்) ஞாறி. ஞாறிய
பொருள்: தோன்றிய

ஆ: மாமலை ஞாறிய ஞாலம்—பரி. திரட்டு 1—74

மொ. க.: ஞால்—தொங்கித் தோன்று என்னும் அடிப்பொருளுடன் ஞால்—து—ஞாறு தோன்று என்னும் பொருள் கொண்டு ஞாறி—ஞாறிய—தோன்றிய என்னும் பொருள் கொண்டது.

ஞாண்:

சொ. வ.: ஞால்—ஞான்—ஞாள் (நாள்)—ஞாண் பொருள்—தொடர்பு படுத்துவது, கயிறு

ஆ: 'வடிக்கதிர் திரித்த வன்ஞாண் பெருவலை'—நற். 74—1
'கைபுனை வல் வில் ஞாண்'—கலி. 7—6

மொ. க.: ஞால் தொங்கு தொங்குவது அசைவது. ஞாள் திரிதல் திரித்தல் பொருள்.
ஞாண் திரித்த கயிறு—நாண்—பொருள் கொண்டது.

ஞாட்பு:

சொ. வ.: ஞால்—ஞாள்—ஞாள்—பு ஞாட்பு பொருள்: பகை, போர் போர்க்களம்

ஆ: 'களிறுகண் கூடிய வாள்மயங்கு ஞாட்பு'—அகம். 322—7
(ஆள்—ஆட்படை)

மொ. க.: ஞாண்—தொடர்புப் பொருள். ஞாள்—அத்தொடர்பு பகைத் தொடர்பு (நீள்—பு—நீட்பு; வேள்—பு—வேட்பு; மீள்—பு—மீட்பு என்பன போன்று) எனவே, ஞாட்பு பகைத் தொடர்புப் பொருளடியில் போர் என்னும் பொருள் கொண்டது. அது போர் நடக்கும் களத்திற்காயிற்று.

**ஞாழல்:**

சொ. வ.: ஞால்—ஞாழ்—ஞாழ்—அல்—ஞாழல் பொருள்: ஒரு மரம்

ஆ. 'சிறு வீ ஞாழல்'—நற். 31—5
'கொய்குழை அரும்பிய குமரி ஞாழல்' நற். 54—9

மொ. க.: ஞாழ் (ஆழ்) சிறிதாகு; (காழ்) உள்வைரம் பெறு. என இரு குறிப்பில் சிறிய பூவைக் கொண்ட பெருமரத்திற்கு ஆயிற்று.

**ஞாளி:**

சொ. வ.: ஞால்—ஞாள்—ஞாள்—இ—ஞாளி பொருள்: மிக வலிய தொன்மை விலங்கு (யாள்—யாளி, ஆளி எனவுமாயிற்று)

ஆ: 'வலம்சுரித் தோகை (வால் பகுதி) ஞாளி' அகம். 122—8

மொ. க.: ஞால்—தொங்கி அசையும் பெருவாலை உடையது. ஞாள் (ஆள்)—ஆளுமை. ஞாள்—கி—ஆளுமை கொண்ட (வலிய) விலங்கு. அரிமா, வேங்கை, களிறு இவற்றிலும் வலியதாய் பெரும்பற்கள்கொண்டு வாய்பிளந்த தொன்மை விலங்கு. கோயில்களில் இவ்வுருவம் உண்டு.

**ஞாபகம்:**

சொ. வ.: ஞால்—ஞான்—ஞான்—அகம்—ஞானகம் ஞாபகம் பொருள்: கழிந்த—கடந்த நிகழ்ச்சியை நினைவில் கொள்தல்.

ஆ: 'தந்துபுணர்ந்துரைத்தல் ஞாபகங் கூறல்'—தொல். பொருள். 655—22

மொ. க.: ஞான்—அம்—ஞானம் அறிவு. அறிவுகொண்டு கழிந்ததாக—நடந்ததாக அகத்தில் உள்ளதை நினைவுபடுத்திக் கொள்ளல். சங்க இலக்கியத்தில் இச்சொல் இடம்பெறவில்லை. ஆயினும்

இது தமிழ்ச்சொல்லே. இதற்கு முதனிலையான ஞான்—அம் சேர்ந்து 'ஞானம்' என்னும் அறிவுப்பொருள் தரும் சொல்லாகும். ஞானம் தமிழ்ச்சொல் என்பதை மொழிஞாயிறு பாவாணர் 'வடமொழிக்குத் தமிழ் வழங்கிய ஞான தானம்' என்னும் நயம்பட்ட தலைப்பு தந்து விளக்கி ஞானம், தானம் என்னும் இரண்டு சொற்களும் தமிழ்ச்சொற்களே என்று வேர்ச்சொல்காட்டி நிறுவியுள்ளார். சூடாமணியிலும் (563) அறிவு என்னும் பொருள் தரும் சொல்லாக 'ஞாபகம்' தரப்பெற்றுள்ளது.

மேல் காணப்பெற்ற சங்கச் சொற்களின் பிறப்பு வரலாற்றை வேர்ச்சொல்லிலிருந்து அதனதன் வளர்ச்சியைக் கூர்ந்து நோக்கினால் இயற்கையான படிமுறை வளர்ச்சி புலப்படும். இதுபோன்றே மொழிப்பொருள் காரணியத்தை ஞாய் முதல் ஒளிவரை கூர்ந்து நோக்கினால் பொருளின் படிமுறை வளர்ச்சியைக் காணலாம்.

ஈன்ற ஞாய், தாயிடமாம் ஞாயில், ஒளி தந்து வளர்க்கும் ஞாயிறு, ஞாயிற்றிலிருந்து தோன்றிய ஞாலம், ஞாயிற்றால் ஞாலத்தில் நிகழும் கால நேரமாம் ஞான்று, காலம் கழித்த ஞான்ற, கழிந்த முன் இடம் ஞாங்கர், ஞாங்கரில் தோன்றிய ஞாறிய, ஞாறிய தோற்றத்தின் பின் தொடர்பாம் ஞாண், தொடர்பில் பகைத் தொடர்புகொண்ட ஞாட்பு எனத் தொடர்ந்து வளர்ந்த பொருள் படிமுறை வளர்ச்சி ஞாபகம் கொள்ளத்தக்கது

ஈங்கு எடுத்துக்கொள்ளப்பெற்ற எழுத்தாம் ஞகரம் அதிகம் பயன்படாதது. அதன் வழிச் சொற்களுள் பல ஞகரத்திற்கு நகரம் இடம்பெற்று ஞாயில்—நாயில் என்றும், ஞாயிறு—நாயிற்றுக்கிழமை என்றும், ஞான்ற—நான்ற (தலை நாண்டுவிட்டது என நாண்டு) என்றும், ஞாபகம்—நாபகம் என்றும் வழக்கில் திரிந்துள்ளன. ஞாங்கர் ஆங்கர்—ஆங்கு, ஆங்கன் என்றும் பயின்றன. ஆனால், பல ஞகரச் சொற்கள் தமிழின் வழிமொழியாம் மலை ஞாலத்தில் வழக்கில் உள்ளது. அங்கு யான்—ஞான் என்று, நம்மில் நான் ஆகியுள்ளது. ஞாய் அங்கு உண்டு.

இவற்றுடன் முன்காலத்தும் காலப்போக்கிலும் 'ஞா' முதன்மொழியாக ஞாத்தல் (யாத்தல்)—கட்டுதல்; ஞாஞ்சில் (நாஞ்சில்)—கலப்பை; ஞாடு (நாடு)—நிலப்பகுதி; ஞாதம் (ஞாலம்)—அறிவு; ஞாதி (தாய் ஆதி தாயாதி)—தாய்வழி உறவு; ஞாதா—அறிஞன்; ஞாயம் (நாயம்)—முறை; ஞாழ் (யாழ்)—நரம்புக் கருவி; ஞாளி—வள்ளைக்கொடி; ஞானம் (நாளம்)—குழல்நரம்பு; ஞாற்றல் (நாற்றல்)—தொங்கவிடுதல் முதலிய சொற்கள் உள்ளன. இவை இலக்கியங்

களிலும், வழக்கிலும் உள்ளன. இவற்றுள் பல தொன்மைகாலத்தில் ஆட்சியில் இருந்து சங்க இலக்கியங்களில் இடம்பெறாமல் போயிருக்கலாம். ஞகரத்திற்கு நகரமும், யகரமும் மாற்றாக அமைந்து வந்துள்ளன.

இந்த ஞகர ஒலி மென்மையானது; இனிமையானது; உரப்பி ஒலிக்க வேண்டாமது; ஒரு குழந்தையொலி. இவ்வொலி உலக மொழிகளில் ஏறியுள்ளது. தொன்மை மொழிகளில் ஒன்றான கிரேக்கம் கி. பி. எட்டாம் நூற்றாண்டில் ஒரு மாற்றம் பெற்றது. புது மொழியமைப்பு செய்யப்பெற்றது. அப்போது அம்மொழி நெடுங்கணக்கில் 12 எழுத்துக்கள் சேர்த்துக்கொள்ளப் பெற்றன. அவை யாவும் தமிழ் எழுத்துக்களாகவே உள்ளன. அவற்றுள் ஒன்று 'ஞ'. இவ்வொலியில் உண்டான சொற்களில் தமிழின் பொருள் நிலையும் ஒன்றியிருப்பதைக் காணலாம்.

தமிழ்: இஞ்சி வேர் — கிரேக்கம்: Ziugiber (ginger)

இதுபோன்று பல மொழிகளில் ஞகரம் ஏறி விளங்குகிறது. தமிழில் தற்போது இவ்வொலி அருகியதாயினும் அண்டையிலும் உலகிலும் ஒலித்துக் கொண்டுள்ளது.

ஆனாலும் மூல முதற்பொருளாம் ஞாயிறு இன்றும் கிழமைப்பெயரில் பெருவழக்கில் உள்ளது. இவ்வாறு அதிகம் பயன்படாத எழுத்து முதன்மொழிகளே இத்துணை முறையில் பெருகியிருப்பதுகொண்டே அதிகம் பயன்படும் எழுத்து மொழிகள் எத்துணை பல்கிப் பெருகியிருக்கின்றன என்பதை உணரலாம்.

இவையும் பிற பலவும் ஆ, ஈ என்னும் இயற்கையான உணர்ச்சி ஒலிகள் தோன்றி போலியொலி சேர்ந்து அசையொலிகள் பெருகி வளர்ந்து சுட்டொலிகளின் அடித்தளத்தால் ஆக்கம் பெற்று, பலுக்கு மொழியாக வளர்ந்ததன்பின் செம்மை கொண்ட காலத்தில் உருவானவை. இவ்வாறு செம்மைகொண்ட சொற்களே செந்தமிழ்ச் சொற்களாம்.

இவற்றிற்கும் முன்னையப் பலுக்கு மொழிகளுக்கும் சிறப்பாகச் சொல்லின் படிமுறை வளர்ச்சிக்கு மூல அடித்தளம் வேர்ச்சொல். குறிப்பாக மொழிப்பொருள் கரணியத்திற்கும் மூல அடித்தளம் வேர்ச்சொல்தான்.

சிறப்பாக உலக மொழிகளின் வேர்ச்சொல் ஒப்பீடுதான் உலக முதல் மொழியின் கருவரைக்கு அழைத்துச்செல்லும்.

இவ்வகை ஆய்வை மேற்கொண்டவர்களில் சென்னை அறிஞர் கே. சி. ஏ. ஞானகிரிநாடார் குறிக்கத்தக்கவர். இவர் மேலை மொழிகளை விரிவாக அறிந்தவர்; அவற்றின் வேர்ச்சொல்களைக் கண்டறியும் திறனாளர். தனக்கெனத் தனிவழி கொண்டு ஆய்ந்து முடிவுகள் தந்துள்ளார். இவ்வாய்வில் இவர் 100 சங்கச் சொற்களை எடுத்துக்கொண்டு அவற்றின் வேர் மூலத்துடன் ஐரோப்பிய மொழிகளை ஒப்பிட்டு ஆய்ந்ததில் அவர்தம் முடிவாக,

"ஐரோப்பிய மொழிகளில் எண்பது விழுக்காட்டுச் சொற்கள் தமிழின் சங்க இலக்கியச் சொற்களின் பங்களிப்பாகும்[53] என்று அறிவித்துள்ளார்.

மேலும், இவர் 300 சங்கச் சொற்களைக் கிரேக்கச் சொற்கள் 300 உடன் ஒப்பிட்டு ஆய்ந்து அவை தமிழ்ச் சொற்களின் வேருடன் இணைந்து கிளைத்தவை என்பதை வெளிப்படுத்தியுள்ளார்.

தமிழ் நாட்டுச் சொற்கள் எவ்வாறு கிரேக்கத்திற்குப் போயின(?) என்பதையும் அவரே தந்துள்ளார்.

> "எட்டாம் நூற்றாண்டளவில் கிரேக்க நாட்டிலிருந்து பசுபிக் கடல் வழியாகத் தமிழகத்திற்கு வந்த பயணிகள், வணிகர், ஆசிரியர் பொறியாளர் முதலிய பல துறையினர் தமிழ் மக்களுடன் பழகி உரையாடி, கருத்தறிந்து, தமிழையும் உணர்ந்து சென்றனர்"[54]
> என்று காட்டியுள்ளார்.

இவ்வாறு தமிழ்ச் சொற்களும் சொற்களின் வேரடிகளும், உலகத்தின் மேலை, கீழை, வடக்கு வளாக மொழிகளில் பரவியுள்ளமை தமிழ் ஓர் உலக மொழி என்பதற்குச் சான்றாகும். இவ்வகையில் உலக அளவிலும், இந்திய அளவிலும் சொற்களை ஒப்பீடு செய்த தமிழ் அறிஞர்களில், சட்ட. அறிஞர் கா. சு. பிள்ளை, யாழ். நல்லூர் ஞானப்பிரகாசர், மொழிஞாயிறு பாவாணர் சென்னை அறிஞர் ஞானகிரி நாடார், பொறியியலறிஞர் பா. வே. மாணிக்க நாயக்கர், மொழியறிஞர் ப. அருளி முதலியோர் குறிக்கத்தக்கோர். இன்னோர் தமிழ் ஒலி, வேர்ச்சொல் கொண்டு ஆய்ந்தோர். இவ்வாய்வுகளால் உலகத்தில் பரவியுள்ள தமிழ்ச் சொற்கள் பன்னூறாகி பல ஆயிரம் என்று கொள்ளத்தக்க அளவினது. இதனை விளக்கின் முது தனிநூலாக விரியும்.

சுருக்கம் கருதி விரலெண்ணிக்கையில் காணலாம்:

---

53 K. C. A. Gnanakiri Nadar: Tamil Contribution to the European Languages A Proposal—Para I

54 ,, Greek Words of Tamil Origen Preface Para VIII

| தமிழ்ச்சொல் | ஒப்புச்சொல் | உலகமொழி |
|---|---|---|
| அன்னை | அன்ப — Anba | பிரெஞ்சு |
| அப்பா | அப்ப — Abba | அங்கேரியன் |
| ஞாயிறு | ஞார் — njar | ,, |
| பழைய | பல்யோ — Palyo | கிரீக்கு |
| மரம் | முரம் — Muram | துருக்கி |
| நாள் | ஙா — Gha | ஆஃச்திரேலியா |
| எல் (பகல்) | எல் — El | கிரீக்கு |
| நீ | நீ — Nee | சீனம், மேற்கு ஆப்பிரிக்கா |
| பல் | பல்யோ — Polyo | பின்னிசு |
| கண் | யுகண் — Ugan | சீனம் |
| நரம்பு | நெர்வ் — Nerve | இலத்தீன் |
| கொல் | கில் — Kill | ஆங்கிலம் |

இவ்வகை எளிய சொற்களுடன் தொன்மை அரிய சொற்களையும் அவற்றின் வேர்ச்சொல் அமைப்பையும் விரிவாகக் கண்டால் தமிழ் உலகளாவிய மொழி என்பதுடன் உலகத் தாய்மொழி என்பதும் அறிவில் ஊறும்.

மொழியறிஞர் ப. அருளி 50 தமிழ்ச்சொற்களை எடுத்துக்கொண்டு அவற்றின் சொல் வரலாற்றுடன் அவற்றில் கிளைத்தெழுந்த சொற்களையும் உலக மொழிகளுடன் ஒப்பிட்டு, ஆய்வுரைகளைச் சென்னையில் நிகழ்த்தினார். அக்கூட்டத்தில் வடமொழியறிஞர்களும் அழைக்கப்பெற்று வந்தமைந்து தம் மாறுபட்ட கருத்துக்களையும் வைத்தனர். மாறுபாடுகளுக்குத் தக்க விளக்கந் தந்து நிறுவினார். இவ்வாய்வு ஒப்பீட்டிற்கு அவர் கொண்ட உலக மொழிகள் 36. இந்தியமொழிகள் அவற்றின் பிரிவுகளுடன் 32. தமிழின் கிளைமொழிகள் 14. இவ்வாய்வு வேர்ச்சொல் அடித்தளம் கொண்டது. இவ்வாறு அகலமாகவும் ஆழமாகவும் எவரும் ஆய்ந்திலர் எனலாம். அவ்வாய்வுகள் ஐந்து நூல்களாக வந்துள்ளன. இவ்விரிந்த ஆய்வால் அவர் தந்துள்ள முன்னுரையான உண்மை,

" வேர்ச்சொல் இயல் என்னும் துறை உலகத்தில் தோன்றுவதற்கு மூல காரணமாக இருந்த மொழி தமிழ் என்பதை உலக மொழிகளை ஆங்காங்கு ஆராய்ந்துகொண்டிருக்கும் அறிஞர்கள் இன்

றும் உணரவில்லை "[55] என்பதாகும். இது நூற்றுக்கு நூறு உண்மை.

இவருக்கு வழிகாட்டி மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் ஆவார். பாவாணர் வேர்ச்சொல்லின் மூல ஆணிவேர் கண்டறிந்தவர்.

> " உகரச் சுட்டினின்று 'உல்' என்னும் ஒப்புயர்வற்ற மாபெரும் மூலவடி தோன்றிற்று. அது பின்பு உகரத்தோடு கூடி மொழி முதலாகும் ஆறு மெய்யோடும் சேர்ந்து, குல், சுல், துல், நுல் புல், முல் என்னும் அறு பெருங்கிளைகளையும் தோற்று வித்தது "[56] என்று அறிவித்தமை மொழி உலகில் வைரம் பாய்ந்த கருவூலக் கருத்து ஆகும்.

இவர் தொடர்பின்றித் தனியே ஆய்ந்த நல்லூர் ஞானப்பிரகாசர்,

> " இடம்பற்றியனவாய், தமிழ் மக்களின் ஆதிப் பேச்சுக்களாய் எந்தமிழ் மொழிப்பரப்பு முழுதினுக்கும் மூல வேர்களாய் நின்ற சொற்கள் இலக்கண ஆசிரியரால் சுட்டுக்கள் என அழைக்கப் படுபவைகளாம் "[57] என்று 'அ, இ, உ' முன்றுடன் எகரத்தை யும் சுட்டாகக் கொண்டு ஆய்ந்தார். இக்கருத்தும் 'சுட்டொலி களே மொழி மூலம்' என்னும் கருத்தை உறுதி செய்வதே.

பாவாணருக்கு முந்தியவராக முதலில் தமிழில் 'மொழிநூல்' எழுதிய மாகறல் கார்த்திகேய முதலியார் 'சுல்' என்பதை அடியாகக் கொண்டு,

> " எல்லாச் சொற்களும் அச் 'சுல்' என்னும ஓர் வியாபக விபற்கை முதனிலையினின்றே பிறந்து விரிந்து அழகு செய்கின்றமையின் விச்சாதிபதி (வித்தைக்கெல்லாம் — சொல்கல்விக்கு — அதிபதி) சூரியனேயாவான் "[58] என்று கண்டார்.

இச் 'சுல்' என்பதே,

கல்—சுள்—சுர்—சூர்—சூரி—சூரி—அன்-சூரியன் என்றாயிற்று. இக் கருத்தும் பாவாணர் கண்ட சுட்டொலி மூலம் என்னும் கருத்திற்கு இயைபானது.

---

55 ப. அருளி : அருளி ஆற்றிய மொழியியல் உரைகள் முதல் தொகுதி பக். 10

56 ஞா. தேவநேயப் பாவாணர் : முதல் தாய்மொழி பக். 30

57 நல்லூர் ஞானப்பிரகாசர் : தமிழ் அமைப்புற்ற வரலாறு பக். 11

58 மாகறல் கார்த்திகேயனார் : மொழிநூல் பக். 65

இவ்வாறு பலர் வெவ்வேறு முனைகளிலும் காலங்களிலும் ஆய்ந்தும் ஓர் அடிப்படை ஒற்றுமை கொண்டுள்ளதை நோக்கினால், தமிழின் இயல்பு ஒரு படித்தானது என்னும் உண்மை புலனாகும்.

பொதுவாக மொழிப்பிறப்பு, வழக்கு என்று நோக்கினால் உலகில் ஆங்காங்கு தனித்தனியே மொழி தோன்றியிருக்க முடியாது. 'தொன்மைத் தோற்றங்கொண்ட ஓரிடத்தில் தோன்றிய ஒரு மொழிதான் உலகத்தில் பரவிப் பல மொழிகளாகக் கிளைக்கக் கரணியமாயிற்று' என்று கொள்வதே துணிந்த முடிபாகும். இது மொழி நுண்மைக்கும் ஒத்ததே. சமய நூலாரும் இவ்வாறு அறிவித்துள்ளனர். கிறித்துவ சமய நூலாகிய விவிலியம்,

" உலக முழுவதும் ஒரு மொழியும், ஒரே பேச்சுமாக இருந்தது "
என்கிறது.

இதனையும் ஓரளவில் ஒரு கணக்கில் கொண்டால் அந்த ஒரு மொழி ஏன் தமிழாக இருக்கக்கூடாது? இவ்வாறு நினைத்த ஆய்வாளருள் மேலை மொழியினரும் உளர். இதில் முனைப்புக் காட்டியோருள் மொழிஞாயிறு பாவாணர் முதல்வர். வேறு துறை வல்லுநராயிருந்து ஆய்ந்தோர் பலர். அவ்வாறான தமிழருள் பொறியியலறிஞர் பா. வே. மாணிக்க நாயக்கர்,

" தமிழ் ஒலி கொண்டு உலகிலுள்ள எம்மொழியையும் பலுக்க முடியும்.
இதற்குத் தொல்காப்பியத்தில் இலக்கணம் உள்ளது "[59]

என்று தாம் எழுதிய ஒலியிலக்கண ஆங்கில நூலில் காட்டியுள்ளார்.
'மொழிநூல்' கண்ட மாகறல் கார்த்திகேய முதலியார்,

" தமிழ்ச் சொற்களை மாத்திரம் ஒருவன் நன்கு ஆராய்ச்சி செய்தலைக் கொள்வானாயின் ஏனைய மொழிகளையெல்லாம் ஆராய்ச்சி செய்வ தற்கு இதுவே கருவியாகுமென்பதிற் சிறிதும் ஐயுறவில்லை "[60]
என்றார். இவர் தமிழின் நுணுக்கமறிந்து கூறியவர்.

தமிழ்ச் சொற்களை மட்டிலும் ஆராய்வது எவ்வாறு ஏனைய மொழிகளுக்கும் பொருந்தும் என்னும் ஐயம் எழலாம். இந்த ஐயம் போக்க, பன்மொழியறிஞர் நல்லூர் ஞானப்பிரகாசரே சான்றாகிறார். இவ்வறிஞர் மேலை மொழிகளுடன் **64** மொழிகளை அறிந்தவர்; ஆய்ந்தவர். தம் 84ஆம் அகவையில்தான்

---

59 பா. வே. மாணிக்க நாயக்கர் : The Tamil Alphabet—its Mystic Aspect

60 மாகறல் கார்த்திகேயனார் : மொழிநூல்—பாயிரம் பக். 4

சங்க இலக்கியங்களை ஆழமாகக் கற்றார். இவரை ஒருமுறை தமிழ்நாட்டுச் செடிமஇயற் பேராசிரியர் முனைவர் கு. சீனிவாசன் என்பார் கண்டபோது,

> " 84 வயதில் தமிழைக் கற்று ஆராய்ந்துள்ளீர்கள். இன்னும் 16 ஆண்டுகள் வாழ்ந்தால் இன்னும் எத்தனை மொழிகளைப் படிப்பீர்கள்" என்று வினவியபோது, அவர்,

> " தமிழைக் கற்ற பின்னர் வேறு மொழிகளைக் கற்க வேண்டியதில்லை. அது கொண்டே பல மொழிகளின் அறிவையும் பெற்றுவிட முடியும் என்று கண்டுள்ளேன் " என்றார்.[61]

இக்கருத்துக்களை ஒன்றுகூட்டி நோக்கினால் உலக மொழிகளில் தமிழ் இழையோட்டமாக ஊடாடி நிற்பதை உணரலாம். இந்த இழையோட்டத்தில் அதற்கொரு தனித்தகுதி உள்ளமை புலப்படும். அதனைத் தாய்மைத் தனித் தகுதியாகக் கொள்ளலாம். இத்தகுதி கொண்டு உலக முதன்மொழி நிலையில் அதனை வைத்து ஆராயவேண்டும்.

மொழியியலார் உலக மொழிகளைப் பகுத்தமைத்துள்ள மூன்று தலைக் குடிகள் ஆரியம், சேமியம், துரேனியம் அன்றோ? இம்மூன்றினுள் உலகத் தொன்மை மொழிகள் அனைத்தும் உள்ளன. அவற்றில் ஒன்றுதான் உலக முதன்மொழியாக வேண்டும். ஏதேனும் ஒரு மொழி அறவே வழக்கற்றுச் சுவடும் தெரியாமல் அழிந்திருக்கவும் கூடும். நிலவுகின்றவற்றைக்கொண்டே ஆராய முடியும். எனவே, மூன்று தலைக்குடி மொழிகளில் தொன்மை வாய்ந்த சிலவற்றின் காலத்தகுதி கொண்டு, எது உலக முதன் மொழிக்களத்திற்கு உரியது என்று தேர்ந்து அறிய வேண்டும். இத்தேர்விற்கு எது எது முதன் மொழிக்களத்தில் அமையத் தகுதி கொண்டது என்று ஒவ்வொன்றையும் கண்டு தகுதி அற்றவற்றை ஒதுக்கிக் காண்பதன் மூலம் இறுதிப்படும் இரண்டை முதன்மைக் களத்தில் நிறுத்தி அவற்றுள் ஒன்றைத் தேரலாம்.

இங்கு, இத்தலைக்குடிகள் மூன்றில் ஒரு குடும்ப மொழியாகத் திராவிடப் பெயரில் இருந்த தமிழை நாம் பிரித்து அதனைத் 'தமிழம்' என்னும் தலைக் குடியாக வைத்து மூன்றை நான்காகக் கொண்டதை நினைவுகூர்ந்து கொள்ள வேண்டும்.

இத்தலைக்குடிகளில் உள்ள மொழிகளில் ஏதும உலக முதன்மொழி என்று மொழியறிஞர்களால் அறிவிக்கப்பெறவில்லை. மொழிஞாயிறு பாவாணர் 'தமிழ் முதன்மொழி' என்று கண்டறிவித்துள்ளார். இதன் உண்மை

---

61 கு. சீனிவாசன் : செய்தி மலர், தமிழ்ப் பல்கலைக் கழகம்

யும் காணப்பெற வேண்டும். சிறந்த மொழியறிஞர் எனக் குறிக்கப்பெறும் அறிஞர் மாக்சு முல்லர்,

" மூன்று தலைக்குடி மொழிகளும் ஒரே மூலத்தைக் கொண்டவை "[62]

என்னும் கருத்தைத் தந்துள்ளார். ஆனால், அம்மூலம் எது என்று காண வில்லை. அவர் எடுத்துக்கொண்டபடி அம்மூன்றில் துரேனியத் தலைக்குடியில் உள்ள குடும்பங்களில் திராவிடப் பெயரில் தமிழ் இருப்பதால் அஃதும் வேறு ஒரு மூலத்தைக் கொண்டது என்பதே அவர் கருத்தாகக் கொள்ளவேண்டும். ஆனால், சங்க இலக்கியம், தொல்காப்பியம் இவற்றிற்கு முந்தியனவாய்க் கிடைத்துள்ள சில இலக்கியச் சிதறல்கள் முதலியவற்றை அவர் காணாமையால் தமிழ் மொழியின் கால மூலத்தை அவரால் ஆராய முடியாமல் போயிற்று எனலாம்.

மற்றொன்றையும் இங்கு நினைவுகூர வேண்டும். அது முன்னர் ஆதார மொழி என்று ஆய்ந்த ஆய்வு. அனைத்து மொழிகளுக்கும் 'ஆதார மொழி ஒன்று இருந்திருக்க வேண்டும்' என்னும் கருத்துப்படியும் எவருக்கும் அகப்படாமல் ஒரு மூல முன்மொழி ஒளிந்து கொண்டுள்ளது.

அறிஞர் மாக்சு முல்லர் கருத்துப்படி மூன்று தலைக்குடிகளும் ஒரு மூலத்தன என்ற வகையில் ஒவ்வொரு தலைக்குடியாகக் காணலாம்.

முதலில் துரேனியத்தை எடுத்துக்கொண்டால் துரேனியம் என்பது தலைக்குடி எனக் கொள்ளப்பட்டதற்கு மூலமே அதில் திராவிடமொழிக் குடும்பம் இணைக்கப்பட்டமைதான். அதனை விடுவித்துக்கொண்டமையால், எஞ்சியிருக்கும் குடும்ப மொழிகளுள் துருக்கி ஒன்றே ஓரளவில் வளமும், செம்மையும் தொன்மைக் குறிப்பும் கொண்டது. அஃதும் தன் எழுத்தாக அரபி எழுத்தைக் கொண்டுள்ளது. அது சில தொடர்புகளில் தமிழ் போன்று இனிய ஒலியுடையது: இலக்கண அமைப்பிலும் ஓரளவில் ஒற்றுமைக் குறிப்பு கொண்டது. இவற்றை விடுத்துப் பிற முனைகளை நோக்க இது தொன்மையில் தனக்கென ஒரு தகுதி கொள்ளாதது. எனவே, துரேனியம் தன் தனி முழு வலிமையில் உலக முதன்மொழிக் களத்தில் அடி வைக்க இயலாதது.

அடுத்து சேமியம் என்னும் தலைக்குடியில் குறிப்பிடத்தக்க குடும்பங்கள் ஈப்ரு என்னும் எபிரேயம், அரபு, பாபிலோனியம் என்பன. இவற்றுள் தொன்மைச் சிறப்பு கொண்டது எபிரேயம். இது யூதர் மொழி. இதன் முதல் நூல் விவிலியத்தின் பழைய ஏற்பாட்டில் மோசே குறிப்புக்களாகும். விவிலியம்

62 *மாக்சுமுல்லர்:* Lectures on the Science of Languages, Vol. I, P. 375

கி. பி. அளவினதே. எவ்வாறு நோக்கினும் எபிரேயம் கி. மு. 3000 ஆண்டு களே தொன்மை கொண்டது. இவ்வாறு கொள்வதற்கு இம்மொழியில் மெய் எழுத்துக்களே இருப்பதும் உயிர் எழுத்துக்கள் தொடக்கத்தில் இல்லாமையுமே சான்றாகும். கி. பி.இல்தான் உயிர் எழுத்துக்கள் அரபிச் சொற்களிலிருந்து எடுத்துச் சேர்க்கப்பெற்றன. இவ்வகையில் எபிரேயம் கலப்புள்ளதால் மிகத் தொன்மையானதன்று. இந்த மிகத் தொன்மையிலிருந்து விலகுவதால் சேமியத் தலைக்குடி உலக முதன் மொழிக் களத்தில் ஏறி நிற்க வலிமையற்ற தாகிறது.

ஆரியத் தலைக்குடியில் சமற்கிருதம், இலத்தீன், கிரீக், சீனம் (இந்தோ ஐரோப்பியத் தொகுப்பில்) குறிக்கத்தக்கவை. இவை தொன்மையான இலக்கிய வளம் உடையவை. சொல்வளமும் கொண்டவை. இவற்றை ஆராய்ந்த மொழியறிஞர் அனைவரும் சமற்கிருதத்தைக் கொண்டே ஒப்பிட்டு ஆராய்வா ராயினர்.

அறிஞர் யோன்சு (Jons) என்பார் 1796இல்

> " வடமொழி (சமற்கிருதம்) கிரேக்க மொழியைவிட நிறைவுள்ள தாகவும், இலத்தீன் மொழியைவிட வளமுள்ளதாகவும், இவ் விரண்டு மொழிகளைவிடத் திருத்தமுள்ளதாகவும் உள்ளது " என்றார்.

சொற்பிறப்பு, ஒலிமூலம், சிற்றளவில் எழுத்தமைப்பு முதலிய வகையில் சமற்கிருதம் பிற ஆரிய மொழிகளுக்கு முந்திய நிலையிலே பேசப்படுகின்றது.

சீனத்தை இந்திய ஐரோப்பிய மொழிக்குடும்பத்தில் வைத்தனர். பிற ஆரிய மொழிக்குடும்பத்தினின்றும் சீனம் வேறுபட்டதே. தனக்கென்று ஒரு தனித்தன்மை கொண்டது. அதனுடன் திபேத்தியம், பர்மியம், தாய்லாந்து முதலிய மொழிகளும் இணைத்துப் பேசப்பெற்றன. இவற்றில் சீனத்திற்குத் தொன்மை வளம் உண்டு. ஆனால் அதன் எழுத்து வரலாறு மிகக் குழப்ப மானது. நிலைத்த எழுத்தில் தொடர்ந்தது என்று கொள்ள முடியாது. மேலும் இதன் பேச்சு மொழி வேறு; எழுத்து மொழி வேறு. சீன எழுத் திற்குப் பற்றுக்கோடாக ப—க்வ (Ba—Kua) என்னும் எட்டுக் குறியீடுகள் ஃபு—இசி (Fu—Hsi) என்றும் சீன மாமன்னனால் உருவாக்கப்பெற்றவை என்பர். அவர் காலம் பலவாறாகக் குறிக்கப்படினும், கி. மு. நாலாயிரம் என்பர். இதிலும் வேறு ஒரு கருத்து உண்டு. மற்றொரு மாமன்னனாகிய ஊஅங்—தி (Huang—thi) என்பவரின் அமைச்சராகிய டிசங்—சி (Tsang-Si) என்பவரே சீனமொழியை உருவாக்கினார் எனவும் அவர் காலம் கி. மு. முப்பது அளவு என்று அதிக அளவில் உறுதியாகச் சொல்வர். எனவே சீனத்தின்

தொன்மை கி. மு. அளவில் முந்தியதாயினும் பன்னூறு ஆண்டுகள் என்று எட்டாதது. இவ்வாறு சீனம் உலக முதன்மொழிக்களத்தை எட்டவில்லை.

எனவே, வடமொழியாம் சமற்கிருதந்தான் ஆரியத்தலைக்குடும்பத்தில் முதன்மை கொண்டதாகிறது. ஆரியத்தலைக்குடும்பத்தின் தலைத்தாயாகக் கொள்ளலாம். இத்தகுதிகளால் சமற்கிருதம் உலக முதன்மொழிக் களத்தில் ஏறி நிற்கிறது. அது ஏறி நிற்கும்போதே அக்களத்தில் ஒரு மொழி தோன்றி நிற்பதைக் கண்டது. அது எது?

அதுதான் தமிழ் மொழி.

எவ்வாறு? இதற்கு விடை காண

தமிழ்—வடமொழி வேறுபாடு

தமிழ்—வடமொழி வழக்கு

தமிழ்—வடமொழிக் கலப்பு

தமிழ்—வடமொழி இலக்கணக் கூறு

தமிழ்—வடமொழி எழுத்துத் தோற்றம்

இறுதியாக இரண்டன் வேர்ச்சொல்

எனப் படிப்படியாக ஒப்பீடு செய்ய நேர்கின்றது.

**வேறுபாடு:**

இரு மொழிகளுக்கும் மிகுந்த வேறுபாடுகள் உள்ளன. எனினும், காரணம்—இடுகுறி வேறுபாடே போதுமானதாகும்.

வடமொழி இடுகுறியையே கொண்டது. வடமொழி மறைமுதல் அனைத்தும் இடுகுறிகளே. தொல்காப்பியருக்குப் பிந்தியவரான யாஃச்கர்தான் வடசொற்களுக்குக் காரணம் கற்பித்தார். தமிழோ 'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தன'; 'மொழிப் பொருள் காரணம்' கொண்டவை. ஒரு மொழியின் தொன்மைக்கு மொழிப் பொருள் கரணியமே உறுதிச் சான்று. இன்றும் வடமொழிக்குக் கரணியம் காணுதல் கூடாத ஒன்று என்பதே வேதவாதிகள் கருத்து. சூடாமணியின் விண்மீன் பெயர்களுக்குப் பொருள் எழுத இப்பதிப்பில் முயன்று ஒரு சோதிட ஆய்வாளரை அணுகியபோது அவர் வடமொழியில் எச்சொல்லுக்கும் காரணம் காணக்கூடாது; அவை இடுகுறிகளே என்றார்.

மொழிப்பொருள் கரணியம் கொண்டது தமிழ் என்பதால் வடமொழிக்கும் முந்திய நிலையைத் தமிழ் கொண்டதாகின்றது.

**வழக்குகள்:**

தமிழ் பேச்சு வழக்கில் தோன்றி, எழுத்து வழக்கில் வளர்ந்து இன்றும் இரு வழக்கிலும் நின்று நிலவுவது.

பிராகிருதத்திலிருந்து சமற்கிருதம் தோன்றியது; சமற்கிருதத்திலிருந்து பிராகிருதம் தோன்றியது என்னும் இரு கருத்துக்கள் அம்மொழியாளரிடையே உள்ளன. இதுபற்றி ஒரு முடிவு, வேதமொழியாக முதலில் குறிக்கப்பெற்ற இம்மொழி பலவகைச் சமற்கிருதமாகி ஒருவகை பிராகிருதம் என்றும், அதனின்று செம்மைப்படுத்தப்பெற்றது சமற்கிருதம் என்றும் ஆகின என்பதே. எனவே, முதலில் வேத மொழி. அதனின் இருபிரிவு பிராகிருதம், சமற்கிருதம். செம்மைப்படுத்தப்பெற்றது சமற்கிருதம் என்றாயிற்று.

சமற்கிருதம் என்னும் செம்மைப்படுத்தப்பெற்ற மொழி முதலில் மறை மொழி (வேத மொழி) என எழுதாக் கிளவியாய்ப் பேச்சு வழக்கில் மட்டும் இருந்தது. பின்னர் எழுத்துக்கள் பெற்று எழுதும் மொழியாய் இலக்கிய வழக்கு பெற்றது. மீண்டும் பேச்சு வழக்கு குறைந்து எழுத்து வழக்கிலேயே நிற்கின்றது. ஆயினும் அவ்விலக்கிய இலக்கணம் கற்றோர் அவைபற்றி ஆயும்போது அதனைப் பேசவும் செய்கின்றனர்.

இவ்வாறு பேச்சு, எழுத்து இரண்டினும் மாறி இரண்டும் இருந்த காலம் மிகக் குறைந்ததாக இருந்தது. இவ்வகையில் தமிழ் பேச்சுவழக்கு, எழுத்து வழக்கு இரண்டினும் காலங்காலமாய் மாற்றமின்றி நின்று நிலவுவதும் அதன் முதன்மொழித் தகவை வலியுறுத்துகிறது.

**கலப்புகள்:**

ஒரு நாட்டில் வாழும் மக்களுடன் வந்தேறிகள் கலந்து வாழ்ந்தால் இருந்த மொழியில் வந்த மொழி கலப்பதும், வந்த மொழியில் இருந்த மொழி கலப்பதும் இயல்பு. தமிழ் நாட்டில் சமற்கிருதமாம் வடமொழி இந்திய மண்ணில் புகுந்தது முதல் இம்மண்ணில் வாழ்ந்த தமிழர் மொழியிடையே புகுந்தது. அதுபோன்றே வடமொழியிலும் தமிழ் புகுந்தது. இக்கலப்பால் தமிழிலிருந்து மலைஞாலம், கன்னடம், தெலுங்கு முதலிய கிளை மொழிகள் உருவாயின. இதுபோன்றே

'திராவிடத் தாக்கத்தினாலேயே வடநாட்டில் பல உள்நாட்டு மொழிகள் வடமொழியிலிருந்து பிறந்தன'[63] என்றார் அறிஞர் ஈட்சிசன் (Hadson) என்பார். இக்கருத்தை உறுதி செய்யும் வகையில் வரலாற்றறிஞர் பி. தி. சீனிவாச ஐயங்கார்,

'மராத்தி, குசராத்தி, இந்தி, வங்கம் முதலிய வடநாட்டு மொழிகளெல்லாம் சொல்லாலும் சொற்றொடராலும் தமிழ் அடிப்படை கொண்டவை'[64] என்று காட்டினார்.

அறிஞர் கால்டுவெல்லார்,

'ஆங்கிலத்தில் எவ்வளவு தியூத்தானியச் சொற்கள் உள்ளனவோ அவ்வளவு திராவிடச் சொற்கள் சமற்கிருதத்தில் உள்ளன'[65] என்று பதிந்துள்ளார். ஆனால் வடமொழியாளரிடம் ஒரு நோய் தொடர்ந்து இருந்து வருகின்றது. அது தமிழில் வடசொற்களே மிக மிக உள்ளன. வடமொழியில் அவ்வாறில்லை என்பது. வடமொழியாளர் மட்டுமா? தமிழ் மக்களில் சில புலவர்களும் இந்நோய் கண்டவர்கள் எனச்சொல்ல வேண்டும். எந்தச் சொல்லைக் கண்டாலும் அதன் ஒலியைத் தவறாகக்கொண்டு அது வடசொல் என்று எளிதில் சொல்வது வடமொழித் தமிழாசிரியர் வழக்கம். இந்தத் திடீர் முடிவைக் கால்டுவெல்லார்,

'வடமொழிக்கும் திராவிட மொழிக்கும் பொதுவான ஒரு சொல்லை எங்கேனும் கண்டால் அதனை உடனே வடசொல் என்று கூறிவிடுவர்'[66] என்று அடையாளங் காட்டினார்.

ஆனால், வரலாறு அறிந்தோர் தமிழ் மக்கள் இந்தியாவில் எங்கும் பரந்து வாழ்ந்ததை அறிந்து, அங்கு வடமொழியாளர் வந்தபிறகு நேர்ந்தவற்றை ஆய்ந்து பார்த்து, அங்குள்ள பழம் மொழிகள் தமிழினின்றும் வேறுபட்டதைக் கண்டுள்ளனர். இதனை ஆய்ந்த அறிஞர் மாக்சு முல்லர்,

"மைய இந்தியாவிலும், இமயமலைச் சாரலிலும், மலைத்தீவுகளிலும் (Moladives) உள்ள மொழிகள் 'மண்டா' என்னும் பெரும் பிரிவைச் சார்ந்தவை"

---

63 Dr. Hadson; Asian Society—Monthly—Bengal

64 பி. தி. சீனிவாச ஐயங்கார்: Stone age in India

65 கால்டுவெல்: Comparative Grammar of the Dravidian Languages P 566

66 ,, ,, ,, ,,

"முண்டா மொழிகள் பேசுவோர் திராவிட மக்களே"[67] என்று கண்டறிந்த உண்மையை வழங்கியுள்ளார்.

சென்னைப் பல்கலைக்கழகச் சமற்கிருதப் பேராசிரியராயிருந்த முனைவர் வே. இராகவன் "சமற்கிருதத்தில் முண்ட திராவிட மொழிக் குடும்பங்களின் அம்சங்கள், சொற்கள் புகுந்திருக்கின்றன"[68] என்றமையும் இத்துடன் நோக்கத்தக்கது.

எனவே, இந்தியாவெங்கணும் குமரிக்கோட்டிலிருந்து தோன்றிப் பரவிய தொன்மைத் தமிழர் வாழ்க்கையின் சுவடுகளே உள்ளன. ஆங்காங்கு புதை பொருளாகவும், அகழ் பொருளாகவும் கடலடிக் கண்டுபிடிப்புகளாகவும் புலப் பட்டுள்ள தமிழ்ச் சின்னங்கள் தமிழ் உலகளாவியதை வெளிப்படுத்தி வருகின் றன. எனவே, அவ்வாறு பரவிய தமிழ் மைய ஐரோப்பியப் பகுதிகளில் அவ்வச் சூழலின் வெப்ப தட்பத்திற்கு ஏற்ப வேறுபட்டன. நாம் முன்னர் கண்டமைத்துள்ள ஒலியியல் மொழி விளக்கத்தில் குறித்துள்ளபடி வெப்ப தட்பத்தால், மண்வளகால் நேர்ந்த உள்ளுறுப்புக்களின் சற்றுச்சற்றே வேறுபட்ட அசைவுகளால் ஒலியும், பலுக்கலும் சற்றுச்சற்றே வேறுபட்டுப் பல மொழிகள் உருப்பெற்றன. அவ்வாறு உருவானவற்றில் ஒன்றே மைய ஐரோப்பாவில் உருப்பெற்ற வேதமொழியின் மூலமாகும். இவற்றை ஆய்ந்து வேத மொழியையும் ஆய்ந்தோர் அதற்கும் மூலமான ஒரு மொழி இருந்திருக்க வேண்டும் என்றனர். எனவே, வேதமொழி வழிவந்த சமற்கிருதமோ பிராகிருதமோ இவற்றின் வழிப்பிறவோ தமிழ் மூலங்கொண்டவை என்று கொள்வதில் தவறில்லை.

ஆனால், மொழி உணர்வில் ஆழங்கொண்ட மறைமொழியார் தமிழ் மொழிச் சொற்களைத் தம் வடமொழி உருவாக்குவதில் நாட்டங்காட்டினர்; ஓரளவில் வென்றனர் எனலாம். பல நூற்றுக்கணக்கான சொற்களை ஏற்றி உருவாக்கினர். தமிழ் நிலத்திலும் அவ்வேலையைச் செய்தனர். ஐம்பது ஆண்டுகட்கு முன்வரையிலும் காட்சி (காண்—சி), மாட்சி (மாண்—சி) என்னும் தமிழ் காக்ஷி என்றும் மாக்ஷி என்றும் வடவெழுத்தால் குறிக்கப்பெற்று வட மொழியாகவே நம்மவராலும் கொள்ளப்பெற்றமையை எண்ணிப் பார்க்கலாம். இன்று அவைகள் மாற்றம் பெற்றிருப்பினும், முழுத்தம் மாறிய முகூர்த்தம், அமிழ்தம் மாறிய அமிர்தம் முதலிய சொற்கள் இன்னும் தமிழ் என்றே தமிழர்களாலும் ஏற்கப்படாத அளவில் மறைந்துள்ளதை எண்ணலாம்.

மொழிஞாயிறு பாவாணர் அவர்கள் ஆயிரத்திற்கு மேற்பட்ட தமிழ்ச் சொற்களை அதன் மூல வேர்ச்சொல்லுடன் பொருத்திக்காட்டி வடசொல்

---

67 பி. தி. சீனிவாச ஐயங்கார்: Stone age in India

68 வே. இராகவன்: கட்டுரை: கலைக்களஞ்சியம் தொகுதி 4 பக். 463

உருவான வரலாற்றையும் தம் 'வடமொழி வரலாறு' என்னும் நூலில் விளக்கியுள்ளார்.

அவர் முடிவின்படி "வடசொற்களில் குறைந்தது ஐந்திலிருபக்கம் தமிழ்"[69] என்பதாகும்.

எனவே, தமிழ் வடமொழி வேறுபாடுகளைக் கூர்ந்து நோக்கினால் மறைமொழி உருவாகிய காலத்தும் தமிழ்க் கலப்பு அதில் இருந்தது புலப்படும். முதல் மறையாகிய இருக்கு மறையில் ஐரோப்பிய மேலையாரியச் சொற்களின் சுவடும் இல்லாத அதே நேரத்தில் தமிழ்ச் சுவடுள்ள சொற்கள் இடம் பெற்றிருத்தலைப் பல அறிஞரும் கண்டுள்ளனர்.

இவ்வாறாகத் தன்மூலத்தை மறைமொழியிலும் பின்னர் எழுந்தனவற்றிலும் பதித்திருக்கும் தமிழ் கலப்புக் சணக்கீட்டிலும் மூலங்கொண்டு உலக முதன் மொழிக்களத்தில் முன்னேறி நிற்கிறது.

## தமிழ்—வடமொழி இலக்கணக் கூறு

உணர்வொலிகளில் பிறந்து சுட்டொலிகளால் இடைச் சொல்லுருவங் கொண்டு வினைச்சொற்களால் இயங்கி, பெயர்ச்சொற்கள் பல்கிப் பெருகி, உரிச்சொற் களஞ்சியமாகத் திகழ்வது தமிழ்.

வடமொழி உணர்வொலிகளாம் மூலபலம் குறைந்தது. ஆ, ஏ, ஓ ஒலித் தோற்றம் கொண்டு பிற தோற்றங்கள் முயன்று வெளிப்படுத்தும் ஒலிகளாய் இயல்பான தோற்றத்தில் நொண்டி நிற்பது. இதன் முதல் நூலே இருக்கு மறை. இதில் எகர, ஒகரம் இல்லை. பின்வந்த சாம மறையில்தான் எகரம் உண்டு. எகரம் மாந்த உயிர்த் தோற்றக்காலத்தில் இயல்பில் எழுந்து வினா உணர்வை வெளிப்படுத்தியது.

பாணினி இலக்கணமே அதன் முதல் இலக்கண நூலாக உள்ளது. அதன் இலக்கண விதிகள் தொல்காப்பிய இலக்கண விதிகளுக்கு வேறுபட்டவை. இருக்கு மறையின் காலம் மிகையாகச் சொல்லினும் கி. மு. 2500. தொல்காப்பியம் கி. மு. 3000. (திரு. வெள்ளைவாரணர் நிறுவியது) இதற்கு முன்னர் தமிழ் இலக்கண நூல்கள் பலப்பல இருந்தன.

மாந்த உயிரினத்தின் ஒழுக்கத்தை உயிராக்கி அப்பொருள்தரும் திணை என்னும் சொல்லமைத்து ஆண், பெண், பலர் எனப்பகுத்து அதனதன் சொல்

69 ஞா. தேவநேயப் பாவாணர்: வடமொழி வரலாறு பக். 306

அதனதன் பாலினத்திற்கேற்ப அமைந்தமை தமிழின் ஒழுங்குமுறை. வடமொழியில் மனைவியைக் குறிக்கும் 'தாரம்' என்பது சொல்லளவில் ஆண்பால். மனைவியைக் குறிப்பது பார்யை. களத்திரம் என்னும் சொல் அலிப்பால். இதுபோன்றே இரண்டற்கும் அமைந்துள்ள வேறுபாடுகள் வடமொழி இலக்கணம் நெறியமைப்பற்றதைக் காட்டுகின்றன.

தமிழில் அமைந்த வாழ்வியல் இலக்கணமாகிய பொருளிலக்கணம் வடமொழியில் இல்லை என்பது மட்டுமன்று; உலகில் எம்மொழியிலும் இல்லாதது. சுருக்கம் கருதி இவ்வாறு நிறுத்தும்போதே மற்ற உலக மொழிகளுக்கு அவை தவிர வேறு ஒரு ஆதார மொழி இருப்பதாக அறிஞர் பெருமக்கள் கண்டுள்ளதையும் இங்கு நிறுத்தித் தமிழின் முதன்மையை நிறுவலாம்.

இதனை மொழிஞாயிறு பாவாணர் தம் தமிழ் முதன்மொழி என்னும் நூலில் விரிவாக ஆராய்ந்து உறுதியாக அறுதியிட்டுள்ளார்:

இலக்கியம், இலக்கணம் என்னும் தமிழ்ச்சொற்களே வடமொழி என்று நினைத்ததும் உரைத்ததும் எழுதியதும் அச்சொற்களின் வேர்ச்சொல்லால் அடிபடுபெற்றை இங்கு அடுத்து வரும் வேர்ச்சொல் பகுதியில் காணலாம்.

### தமிழ்—வடமொழி எழுத்துத் தோற்றம்

முன்னர் உணர்ச்சிப்பொலியில் எழுத்து தோன்றியமை குறிக்கப்பெற்றது. அவை உயிரின இயல்பின் பிறப்பொலி என்பது ஒரு முதன்மொழிக்குரிய சின்னம். மேலே குறித்தமை போன்று எகர, ஒகரம் வடமொழியில் இடம் பெறாமையும் பின்னர் இணைத்துக்கொள்ளப்பெற்றமையும் உலக முதன்மொழிக் களத்தில் வடமொழி பின்நிற்பதாகின்றது.

வடமொழியில் முதல் மறைமொழியாகிய இருக்கு மறை ஒலியெழுத்துக் களால் வாயால் ஒலிக்கப்பட்டுக் காதால் கேட்கப்பட்டுக் கேட்டவர் சொல்ல ஏற்பவர் ஓத, ஓதத் தொடர்ந்த வாய்மொழி நூல். வரிவடிவ எழுத்தில் எழுதப் பெறாதது. அதனால், இது தமிழிலும் 'எழுதாக் கேள்வி' எனப்பெற்றது. பாண்டியன் ஏனாதி நெடுங்கிள்ளி என்பான்,

"எழுதாக் கற்பின் நின் சொல்லுள்ளும்"[70] என்று பாடியதைக் குறுந்தொகையில் காண்கின்றோம்.

---

70 பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணன்: குறுந்தொகை 156—5

" சுருதி மறை சாகை எழுதாக் கேள்வி " என்று சேந்தன் திவாகரம் முதலிய உரிப்பனுவல்களும் பெயர்ப்பட்டியலிட்டன. இப்பெயர்களும், சுருதி—காதால் கேட்பது; மறை—மறைவாக உரைக்கப்படுவது என்னும் பொருள்களைத் தருவன.

ஏன் எழுதப்படவில்லை?

ஒன்று 'வரிவடிவ எழுத்து இல்லை' எனலாம்.

அடுத்து, 'வரிவடிவில் எழுதி வைத்தால் எழுதுபவன் ஏட்டைக் கெடுப்பான்; எழுத எழுதப் பிழைபடும்; எழுத்தில் இருந்தால் பிற இனத்தாரும் கண்டபடி படிப்பர்; சிதைந்து போகும்; அதன் தூய்மை கெடும்; அதன் தெய்வத் தன்மைக்கு அது கூடாது' எனலாம்.

இவ்விரண்டும் பொருந்துவதே. ஆனால், எழுதினால் ஏடு கெடும் என்பது போன்று படிப்பவனும் பாட்டைக் கெடுப்பான். அத்துடன் அந்தக் கருத்து செத்துவிட்டது. இருக்குமறை அச்சில் வந்து அம்மறையவரால் மிலேச்சர் எனப்பட்டாரும படித்து ஆய்ந்து பிய்த்துப் பிய்த்துப் பார்த்து விட்டனர்.

பலர் பலபடியாக எழுதுவதால் சற்றுச் சற்றாகச் சிதையும் என்னும் கருத்து ஏற்றுக்கொள்ளக்கூடியதே.

ஆனால், வரலாற்று ஒளியும், ஆய்வுப் புலப்பாடும் வரிவடிவ எழுத்தில்லாததால்தான் எழுதப்படவில்லை என்பதையே பளிச்சிடுகின்றன.

சமற்கிருதப் பேராசிரியர் வடபுலத்து இராகுல சாங்கிருத்தியாயன் என்பார் ஆய்வியல், அகழ்வியல் வல்லுநர். 15 ஆண்டுகள் சோவியத்து—இலெனின் பல்கலைக் கழகத்தில் சமற்கிருதப் பேராசிரியராகப் பணியாற்றியவர். தம் வாழ்வை மாந்தரின வரலாற்றை ஆய்வதற்கே ஈந்தவர். அவ்வரலாறாக நூல்கள் எழுதியுள்ளார். அவற்றுள் 'வால்காவிலிருந்து கங்கை வரை' என்பது குறிக்கத்தக்க ஒன்று. தமிழிலும் வெளிவந்துள்ளது. இது படிப்போர் அலுக்காமை கருதிக் கதைப்பாங்கில் எழுதப்பெற்றது. கி. மு. 6000 முதல் கி. பி. 1942 வரையிலான மாந்தரின வரலாற்றை உண்மை பொதியத் தருவது. இதில் கி. மு. 1800இல் அங்கிரா என்னும் பகுதி உள்ளது. இரண்டு ஆரிய இளைஞர் ஒருவர் கிழக்கிலிருந்தும், மற்றவர் தெற்கே தமிழகப் பகுதியிலிருந்தும் அவ்வந்

நில மக்கள் வாழ்வியலைக் கண்டு மீள்கின்றனர்; ஓரிடத்தில் கூடுகின்றனர்; அவர்தம் உரையாடல்:

தெற்கிலிருந்து வந்தவன்: இன்னொரு அற்புதம் நீ கேள்விப்பட்டிருக்க மாட்டாய். அசுரர்கள் (தெற்குத் தமிழர்) வாய்திறந்து பேசாமலேயே சம்பாஷிக்கின்றனர்.

கிழக்கிலிருந்து வந்தவன்: வாய் திறந்து பேசாமலே எவ்வாறு சம்பாஷிக்க முடிகின்றது?

தெ. வ. ஆம்! வாய் திறந்து பேசாமலே அவர்களால் சம்பாஷிக்க முடிகிறது. மண், கல், தோல் முதலிய ஏதாவது ஒன்றில் ஓர் அசுரன் சில அடையாளங்களாகக் கோடு கிழித்து மற்றவனிடம் கொடுப்பான்; அடுத்தவன் விஷயங்களையும் தெரிந்துகொள்வான். நாம் இரண்டு மணி நேரம் (இக்கால நேரப்பெயரில் எழுதிக் காட்டியுள்ளார்) பேசியும் விளங்கவைக்க முடியாத ஒரு விஷயத்தை அவன் இரண்டு மூன்று கோடுகளை இழுத்து விளங்க வைத்து விடுகிறான். இந்த விஷயத்தை ஆரியர்களாகிய நாம் இதுவரை (கி. மு. 1800 வரை) அறியமாட்டோம். இப்பொழுது தான் இந்த கோடுகளைக் கற்றுக்கொள்ள ஆரம்பித்திருக்கிறார்கள். ஆனால், வருஷக் கணக்கானபோதும் அவர்கள் இன்னும் பூரணமாகக் கற்றுக்கொள்ள முடியவில்லை.[71]

இவ்வுரையாடல் ஆசிரியர் இந்தியில் தந்தது தமிழில் மொழிபெயர்க்கப் பெற்றுள்ளது. வரலாற்றை எளிமைப்படுத்தவே கதைமுறையைக் கைக்கொண்டார். ஆயினும் இதன் கருத்துபற்றி அவர்,

'இந்தக் கதைகள் ஒவ்வொன்றிற்கும் பின்னால் அந்தந்தக் காலத்தைப் பொறுத்த பலமான ஆதாரங்கள் இருக்கின்றன.[72] என்று உள்ளீட்டு உண்மையை உறுதிப்படுத்தியுள்ளார். மறைமொழிக்காலம் சமற்கிருதத்திற்கு வரிவடிவ எழுத்து இல்லாத காலம் என்பதை மேலே கண்ட அதற்கு முற்பட்ட காலவிளக்கம் காட்டுகிறது. இவரது ஆய்வு முடிவுகளை வடமொழி வல்லுநர் கூட்டம் ஒன்றே வெருண்டும், வெகுண்டும் எதிர்த்தது; மறுத்தது. சான்றுகளை மூட்டைமூட்டையாகக் காட்டி அவர்களை எதிர்த்து வாய்மூடிகளாக்கினார் ஆசிரியர். மேலும்,

---

71 இராகுல சாங்கிருத்தியாயன்: வால்காவிலிருந்து கங்கை வரை, பதிப்பு—2, பக். 123
72 ,, ,, முன்னுரை

'பேனா, மை அல்லது ஓலை, எழுத்தாணி முதலியவைகள் உபயோகத்தில் வருவதற்கு இன்னும் எத்தனையோ நூற்றாண்டுகள் பாக்கியிருக்கின்றன[73] என்றும் விளக்கினார்.

'இன்னும் எத்தனையோ பாக்கியிருக்கின்றன' என்பதைக் கி. மு. 1800ஐ வைத்து அதற்குப் பின்னர் என்று கணக்கிடவேண்டும்.

ஏறத்தாழ இது கி. மு. 1000 ஆண்டளவில் சமற்கிருதம் வரிவடிவ எழுத்தைக்கண்டது என்று கொள்ள வைக்கிறது. இதற்கு 2000 ஆண்டுகள் முற்பட்ட தொல்காப்பியம்

'உட்பெறு புள்ளி உருவாகும்மே'[74] என்று கால் மாத்திரை ஒலியளவு கொண்ட மகரக்குறுக்கத்திற்கு வரிவடிவம் கூறியது. இவற்றையெல்லாம் ஓர்ந்து கண்ட எட்வர்டு தாமசு (Edward Thomas) என்பார்,

" வடநாட்டில் ஆதியில் தமிழ் எழுத்தே வழங்கியது. அதினின்றே வடநாட்டு லிபி ஏற்பட்டது " என்று அறுதியிட்டார்.

இதனை முன்மொழிந்து சட்டவியலறிஞர் கா. சு. பிள்ளை,

" கிரந்த எழுத்து, தமிழ் எழுத்தின் வழித்தாக வந்தது என்பது யாரும் ஒத்துக்கொள்ளக்கூடியதே "[75] என்று வழிமொழிந்தார்.

எனவே, எழுத்தமைப்பில் சமற்கிருதம் தமிழ் வழிக்கொண்டது என்பது புலனாகும்.

அழிந்துபோய் அகழ்ந்து காணப்பெற்றுள்ள ஆரப்பா, மொகஞ்சோதரா நகரங்களில் காணப்பெறும் எழுத்துக்குறிகள் இங்குப்பொருத்திக் காணத்தக்கன. இவ்வெழுத்துக் குறிகள் ஒரு புதிர். புதிரின் விடுவிப்பாக இரண்டு கருத்துக்கள் வெளியாகியுள்ளன. ஒன்று இக்குறிகள் இந்தோ ஐரோப்பிய எழுத்துக்களின் குறிகள் ஆகலாம் என்பது இரண்டாவது தமிழ்மொழியின் எழுத்துக்குறிகள் என்பது. மறைத்திரு ஈராசு (Rev. Heeras) இவ்வெழுத்துக்கள் திராவிட மொழியின் முன் உருவ (தமிழ்?) எழுத்துக்கள் என்று கண்டுள்ளமை கொள்ளத் தக்கது.

---

73 இராகுல் சாங்கிருத்தியாயன்: வால்காவிலிருந்து கங்கை வரை பக். 129, 130

74 தொல்காப்பியர்: தொல். எழுத்து 14

75 கா. சுப்பிரமணிய பிள்ளை: மொழிநூற் கொள்கையும் தமிழ்மொழி அமைப்பும் பக். 73

இதனைத் தமிழ்நாட்டு வரலாற்று நகர அமைப்புடன் பொருத்திப் பார்க்க இயைபு உள்ளது. மொகஞ்சோதரோ நகரம் இரு பிரிவுகளாகக் காணப் படுகின்றது. ஒன்று கோட்டை கொத்தளங்கள் கொண்ட மன்னன் வாழ் பகுதி. மற்றொன்று மக்கள் வாழ் பகுதி. இவ்வமைப்பைத் தமிழகத்துத் தொன்மைத் துறைமுக நகரமான பூம்புகார் அமைப்புடன் ஒப்பிடலாம்.

பூம்புகார் மன்னன் வாழ்பகுதி 'பட்டினப்பாக்கம்' என்றும், மக்கள் வாழ் பகுதி 'மருவூர்ப்பாக்கம்' என்றும் வழங்கப்பெற்றன. இது அழிந்ததும் தோன்றிய நாகர்பட்டின நகரமும் இஃதேபோன்று நாகர்பட்டினம் என்னும் பட்டினப் பகுதியும், நாகர்ஊர் — நாகூர் என்னும் மருவூர்ப் பகுதியும் கொண்ட தாக அமைந்ததும் குறிக்கத்தக்கது. இவற்றுடன் மொகஞ்சதரோ நகரமைப்பு ஒத்திருப்பது கொண்டு தமிழகத்தின் சாயலைக் காண்கிறோம். இஃது ஒரு தொடர்பாலும் நிகழ்ந்திருக்கும். இத்தொடர்பு எழுத்துத் தொடர்பிற்கும் பொருந்தும். பூம்புகார் கி. பி. இரண்டாம் நூற்றாண்டளவில் கடலில் மூழ்கியது. அதன் வாழ்வுக்காலம் கி. மு. ஆகும். மொகஞ்சதரோவின் காலம் ஏறத்தாழக் கி. மு. 2400 எனப்படுகின்றது. இப்பொருத்தத்துடன் நோக்க மறைத்திரு ஈராசு கருத்து வலுப்பெறுகிறது. அதே நேரத்தில் மொகஞ்சதரோ எழுத்துக்குறிகள் எவ்வகையிலும் சமற்கிருத எழுத்துக்களின் தொடர்பு அற்றது என்று கண்டுள்ளமையும் கணக்கில் கொள்ள வேண்டியது ஆகும்.

எனவே, இதனாலும் பின்னடையும் சமற்கிருதம் தமிழை உலக முதன் மொழிக் களத்தில் முன்னுக்கு வைப்பதாக உள்ளது.

## தமிழ் வடமொழி வேர்ச்சொல்

மொழியின் உயிர் ஊற்றம் அதன் வேர்ச்சொல்தான். தமிழ் அந்த உயிர் ஊற்றத்தைத் தெளிவாகவும், முதன்மையாகவும் கொண்டது. பிற எந்த மொழிச் சார்பும் இன்றித் தனக்கென ஒரு தனித்தகவு கொண்டது. தமிழ் வட மொழி வேர்ச் சொற்கள் பற்றிப் பன்மொழிப் புலவர் தெ. பொ. மீனாட்சிசுந்தர னார் கொண்டு தந்திருக்கின்ற ஒரு கருத்து கொள்ளத்தக்கது.

மொழியியலறிஞர்களில் குறிப்பிடத்தக்கோர் பர்ரோ, எமனோ என்னும் இருவர்.

> " பர்ரோ, எமனோ போன்றவர்கள் திராவிட மொழிகளை ஆராய்ந்து வருவதோடு வடமொழியில் வேர் அகப்படாத வடசொற்களிற் பல

திராவிட மொழிச் சொற்களாதலை மொழியாராய்ச்சி வழியே காட்டி வருகிறார்கள் "[76] என்று எழுதியுள்ளார். இவர் காட்டியுள்ள இருவர் ஆய்வுகளின் கருத்தும் வலுவானது. இவ்வலுவிற்கும் வலுக் கூட்டும் அளவில் மொழியறிஞர் ப. அருளி,

" சொல்லின் வேரைக் காணற்கும் கண்டுபிடித்தற்கும் இவ்விந்திய மண்ணில் தமிழ் மொழி ஒன்றில் மட்டும்தான் இயல்வதாகும். இவ் விந்திய நாட்டில் பயிலப்பெறும் எம்மொழியை எடுத்து வேர்ச் சொல்லாய்வு நிகழ்த்தினும் அதனின் இறுதியான முடிவாகத்தமிழ் மூல வேரே ஒவ்வொரு பொருட் சொல்லிலும் காணக் கிடைப்பதாகும் "[77] என்று உறுதிக் கருத்தாகத் தந்துள்ளார்.

இம்மூல வேர்ச்சொற்கள் சுட்டொலிச் சொற்களே என்பதை மொழி ஞாயிறு பாவாணர் 'உல்' என்னும் மூல வடிவைக்கொண்டு விளக்கியுள்ளார்.

'இப்போது உள்ள தமிழ்ச் சொற்களில் நூற்றுக்குத் தொண்ணூறு விழுக் காடு சுட்டொலிச் சொற்களே'[78] என்று கண்டு தந்துள்ளதற்கேற்ப இம்மூல வடிவு கொண்டே சொற்களின் அமைவைக் காண முடிகின்றது.

இதே நேரத்தில் சமற்கிருதச் சொற்கள் எந்தவகை மூலவேர் கொண்டவை என்று வரையறுக்க முடியாதனவாக இருந்திருக்கின்றன. அதற் குக் கரணியம் வடமொழிக்கு மொழிக்கரணியம் இல்லாமையே. சமற்கிருத அல்லது பிராகிருதச் சொற்கள் இடுகுறிச் சொற்களே என்னும் இயற்கை உண்மையே. அம்மொழியில் முதன்முதலாகத் தோன்றிய மொழியறிஞர் யாஃச்கர்தாம் மொழிக்கரணியத்தை ஏற்றியவர். அவர்தாம் வடமொழிக்கு வேர்ச்சொற்கள் என்னும் அமைப்பைக் கண்டவர். 'குத்சர் என்பவர் 'வேத மந்திரங்களுக்குப் பொருள் இல்லை. பொருளைக் கண்டுபிடிக்க முயல்வது வீண் முயற்சி' என்றார். ஆனால், யாஃச்கர் இதற்கு விடையாக 'எப்படியாவது பொருளைக் காணவேண்டும் என்றார். இவ்வாறு அக்னிகோத்திரம் இராமாநுச தாதாச்சாரியார் எழுதினார்.[79] இதற்குப் பின்னரும் பல சொற்கள் வேர் அமைவில்லாமல் நிற்பதைக் கண்டனர். இருப்பினும் சொற்களின் முதனிலை

---

76 தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்: கட்டுரை—தமிழ்—கலைக்களஞ்சியம் தொகுதி 5 பக். 504

77 ப. அருளி: அருளி ஆற்றிய மொழியியல் உரைகள் முதல் தொகுதி பக். 12

78 ஞா. தேவநேயப் பாவாணர்: முதல் தாய்மொழி பக். 17

79 இராமானுச தாதாச்சாரியார்: யாஃச்கரின் நிருக்தம் பக். 22

தாது என்று பட்டியலிட்டுத் 'தாது பாடம்' என்னும் நூல் பதிப்பிக்கப்பட்டது. அதில் 2490 சொற்கள் பட்டியலிடப்பட்டன. அவை யாவும் உண்மையில் வேர்ச்சொற்கள் அல்ல. வேர் இல்லாது இடுகுறிகளாய்த் தோன்றிய முதனிலைகளே. அதனால்தான் அப்பட்டியலை ஆய்ந்து முடிவாக அவற்றுள் 120 சொற்களே வேர்ச்சொற்கள் எனக்கண்டுள்ளனர்.

'சொல் தக்க காரணப் பெயராய் இருக்கும் மொழியே சிறந்தது' என்னும் அறிஞர் பிளாட்டோவின் அறிவிப்புக்கேற்பத் தமிழ் நூற்றுக்கு நூறு வேர்ச் சொல்லடியில் காரணச் சொற்களையே கொண்டது. தமிழ்ச்சொல்லின் வேரை எளிதாகவும் முறையாகவும் கண்டுகொள்ளலாம்.

நாம் முரண்பாடாக உணர்ந்து வழங்கிவரும் ஒரு சொல் 'நிமிடம்' என்பது. 'நிமிடம்' என்றால் ஒரு நேரக்கூறு. காலநுட்பம் என்று உரிப் பனுவல்கள் கூறும். இது 'Minute' என்னும் ஆங்கிலச் சொல்லின் மொழி பெயர்ப்பு அன்று. வடசொல் எனப்படும் 'நிமிஷம்' என்பதன் தமிழ் உருவமும் அன்று. 'நிமிடம்' தமிழ்ச்சொல்; தமிழ் வேர் கொண்ட தமிழ்ச் சொல்.

'இ' என்னும் சுட்டொலியிலிருந்து இம் — நிம்—ஞெம்—வேர்விட்டு இருகிளைகளாகித் தழைத்தது. அவற்றில் இந்த 'ஞெம் — ஞெமிடு' என்பது சங்க இலக்கியத்திலும், ஞகரம் நகரமாகி 'நெமிடு — நிமிடு' என்று இலக்கியங்களிலும் வழக்கிலும் உள்ளன.

இதன் வரலாறு:

இ— இம் — இமி — இமை — இமைப்பு
(ஒலிநேர நுட்பம்) (நேர நுட்பம் உடையது) (இமை கொட்டு —ஏவல்) (இமைத்தல் — தொழிற் பெயர்)

இ— இம் — ஞிம்—ஞெம் — ஞெமி — ஞெமிடு
(ஒலிநேர நுட்பம்) (விரல்களை நெரிக்கும் நேர நுட்பம்) (வி. நெ. நேர நுட்பமுடையது) (விரல்களால் நெரி ஏவல்)
ஞெமிடு—நிமிடு நகரத்திரிபு ஞெமிடல்—நிமிடல் (விரல்களால் நெரித்தல் —தொழிற்பெயர் நிமிடு—அம்—நிமிடம் (நேரக்கூறு)

இவ்வாறு சுட்டொலியில் தோன்றிய 'ஞெம்' என்னும் வேரில் கிளைத்த 'ஞெமிடல்' கை விரல்களால் 'நெரித்தல்' என்னும் பொருள் கொண்டது. ஒரு



சூ-a-12

குரங்கு தினைக்கதிரைக் கை விரல்களால் நெரித்துத் தினையைக் கைநிறையக் கொண்டது இதனை,

'அங்கை நிறைய ஞெமிடிக் கொண்டு' —என்று நற்றிணை (22—4) காட்டியது.

'வயங்கு வெயில் ஞெமியப் பாய்'—என்று அகநானூற்றில் (322—1) 'நெரிந்து கலைய' என்னும் பொருளில் ஞெமிய என்று 'ஞெம்' வேரைச் சுட்டி நிற்கிறது.

பின்னர் ஞகரம் நகரமாகி 'நெமிடு—நிமிடு' ஆகியது. இதனைக் கொங்குவேளிர், 'துகிலின் வெண்கிழித் துய்க்கடை நிமிடி' (நெருடி)[80] என்று பாடினார்.

இந்த 'நிமிடு' அம் கூடி (நிமிடு—அம்) நிமிடம் ஆயிற்று. நிமிடம் இசைத்துறையில் தாளத்தின் காலவகை பத்தில் ஒரு கூறு எனப்படும்.

இதனை,

'கணவலங் காட்டை நிமிடம் துடிகொண்டு'[81] என்று அரபத்தநாவலர் காட்டியுள்ளார். வழக்கிலும் நிமிடல், நிமிட்டலாக உள்ளது. கைக் கட்டை விரலையும் ஆள்காட்டி விரலையும் முனைகளால் இணைத்து அழுத்தி நெரிப்பது 'நிமிட்டல்' எனப்படும். குழந்தையின் துடுக்கடக்க அதன் தொடையில் இவ்வாறு நெரிப்பர். அதனால் தொடை சிவந்து தடித்துப் பழம்போல் தோன்றுவதை 'நிமிட்டாம்பழம்' என்று நயமாகச் சொல்லினர்.

மேலும் 'நிமிடம்' என்பதின் நேர நுட்பத்தைக்கொண்டு காலத்தைக் கணித்து வருவது கூறுவதற்கு நிமிடம்—நிமிட்டம்—நிமித்தம்—நிமித்திகம் வந்தது. நிமித்திகம் கூறுவோன் நிமித்திகன் எனப்பட்டான்.

வடமொழியாகச் சொல்லப்படும் 'நிமிஷம்' தமிழ் நிமிடம் போன்று மூல வேர்ச்சொல் கொண்டு எழுந்ததன்று. அதற்கு மூலம் ஒரு கதை; அறிவிற்குப் பொருந்தாத கதை:

நிமி என்றொரு மன்னன். அவனுக்கும் கௌசிக முனிவர்க்கும் நேர்ந்த பூசலில் ஒருவருக்கொருவர் சபித்துக்கொண்டனர். அதன்படி நிமி காற்றுருக் கொள்ள நேர்ந்தது. அவன் தேவர்களிடம் வரம் பெற்று அனைத்து உயிர்க

---

80 **கொங்குவேளிர்: பெருங்—உஞ்சை—23—33, 92**

81 ***அரபத்த நாவலர்: பரத சாத்திரம்—தாள் 27***

ளின் கண்களிலும் இடம் பெற்றான். இடம் பெற்று இமைகளை அசைத்து நிமிஷத்தை உண்டாக்கினான்.[82] இது நகைப்பிற்கு உரியது.

'நிமிடம்' என்னும் தமிழ்ச் சொல்தான் சமற்கிருதத்தில் அவர்தம் பலுக்கலுக்கேற்ப 'நிமிஷம்' ஆகியது. தமிழில் டகரம் கொண்ட சொற்கள் வடமொழியில் ஷகரம் கொண்டதை மொழிஞாயிறு பாவாணர்,

'மேழம்—மேடம்—மேஷம்;

'விடை—இடபம்—ரிஷபம்' என்று காட்டியுள்ளார்.

எனவே, 'நிமிஷம்' என்னும் வடசொல்லாகக் கருதப்படுவது 'ஞெமி—ஞிமி—நிமி' என்னும் தமிழ் வேர் கொண்டது. இவ்வாறே வடசொற்கள் மிகப் பல தமிழ் உதவிபெறுவதை அறிஞர்கள் பர்ரோ, எமனோ கண்டே, 'வடமொழி வேர் அகப்படாத வடசொற்களிற் பல திராவிட மொழிச் சொற்களாதல்' என்றதை இந்த நிமிடத்திலும கண்டுகொள்ளலாம்.

இவ்வாறு வேர்ச்சொல்லின் தொடர்பாலும் வடமொழி தமிழுக்குக் கடன் பட்டதாகி உலக முதன் மொழிக் களத்தின் விளிம்புக்கு வந்து ஒதுங்குகின்றது.

தமிழ்ச்சொல் ஒவ்வொன்றும் அதனதன் அடித்தளமான பொருட் குறிப் புள்ள வேர்ச்சொல் கொண்டு உருவானது.

இச்சொல், இவ்வேரால் உருப்பெற்றது என்று அடையாளங் காட்டுவது போன்று முந்தைத் தமிழ்ப் புலவோர் தத்தம் பாடலில் சில தொடர்களை அமைத்துள்ளமை நோக்கத்தக்கது.

'இம்மென இமிரும்' (குறி. 147) என்றதில் இமிரும் (இனிமையாக ஒலிக் கும்) என்பதற்கு வேர் 'இம்' என்பது மூல ஒலி என்று சுட்டப்பெற்றுள்ளது. இதுபோன்றே,

'அண் அணித்து ஊராயின்' (கலி. 108—36): அண்—அணி—அணிமை —அணித்து

'எல்லும் எல்லின்று' (குறு. 390—1): எல்—எல்தல்—எல்லின்று

'எல்லே இலக்கம்' (தொல். சொல். 269): எல்—எல—எலக்கு—இலக்கு —இலக்கம்

'ஒல்லென் ஒலி' (சிலம்பு. 19—36): ஒல்—ஒலி

---

82 ஆ. சிங்காரவேலு முதலியார்; அபிதான சிந்தாமணி—பக். 978

'ஒல்லெர்லி நீர்' (தொல். எழு. 482 உரை. மேற்.): ஒல்—ஒலி
'ஒள்ளொலி': ஒள்—ஒளி
'விண் விணைத்தது': விண்—விணை—விணைத்தல்
'வெள் வெளுத்தது'—(ஒளிக்குறிப்பு): வெள்—வெளு—வெளுத்தல்

உரிப்பனுவல்களாகிய சொற்களஞ்சியங்கள் இவ்வேர்களாகிய ஒலி, ஒலிக் குறிப்பானவற்றில் ஒரு முனை வேர்களைத் தொகுத்துச் சொல்வது போன்று,

'இம்மெனல் கல்லெனல் இழுமெனல் வல்லெனல்
'கொம்மெனல் ஒல்லெனல் பொள்ளெனல் ஞெரேலெனல்
கொம்மெனல் சரேலெனல் ஞொள்ளெனல் கொல்லெனல்
அம்மெனல் பிறவும் அனுகரண ஓசை'

என்று பிங்கலமும் (2116), திவாகரம், 'இந்நூல்' முதலியனவும் அடுக்கிக் காட்டியுள்ளன. இவற்றுள்,

அம், இம், கொம், பொம்;

ஒல், கல், வல், கொல், ஞொள், பொள் என்றெல்லாம் காட்டி இவை சொல்விளக்கும் ஒலிகள் (அனுகரண ஓசை) என்றன.

மேலே கண்ட தமிழ் வடமொழித் தொடர்புகள் ஆறாலும் தமிழ் வடமொழிக்கு முன் தோன்றிய மொழி என்று உணரலாம். வடமொழி பிற தொன்மை மொழிகளுக்கு முந்திய தோற்றமுடையது என்பதை அறிஞர்கள் கண்டறிவித்ததைக் கண்டோம். எனவே அதற்கு முந்திய தமிழின் தோற்றம் முதன்மை கொண்டது என்று கொள்ளத் தடை இல்லை.

மேலும், தமிழுக்கு அமைந்த தகுதிப்பாடுகளும் அதன் முதன்மையை வைரமாக்குகின்றன; சுருக்கமாக அத்தகுதிப்பாடுகள் அறியத்தக்கன. அச் சுருக்கம் இது:

உணர்ச்சியொலிகளாகிய இயல்பான ஒலியெழுத்துத் தோற்றம்;
மூச்சொலி, கணைப்பொலி, உரப்பொலி இன்மை (தொல். சொல் 401 நச்சர்);
சுழியாகவும் வளைவரியாகவும் அமைந்த வரிவடிவம்;
உலகத் தொன்மை மொழிகளில் தமிழ் ஒலிப்பின் இழையோட்டம்;
ழகரச் சிறப்பொலி;

சுட்டொலி, குறிப்பொலி, அசையொலித் தொடர்பான வேர்ச் சொல்லமைப்பு;

உலக மொழிச்சொற்களுக்கு மூலவேர் கிடைக்கின்றமை;

தொன்மைச் சிறப்பு மொழியான வடமொழிக்கு மூலவேர் கிடைக்கின்றமை;

இடுகுறிச்சொற்கள் இன்மை;

மொழிப்பொருட் காரணியச் சொற்களே கொண்டமை;

பேச்சு வழக்கிலும், எழுத்து வழக்கிலும் தொடர்ந்துள்ளமை;

வளமார்ந்த வாழ்வியல் இலக்கியங்கள் கொண்டவை;

குழப்பமற்றுச் சீரான இலக்கண நெறிகள்;

தனித்தன்மையும் இனிமைப் பொருளும் உடைமை;

பொருளதிகார—வாழ்வியல்—இலக்கணத்தைத் தனக்கெனக் கொண்டமை;

முத்தமிழ்ப் பகுப்பும், அவற்றின் வழிக் கலைப்பெருக்கமும்.

குமரிக் கோட்டில் தோன்றிய முதல் மாந்த இனத்தின் மொழியாகப் பிறந்து. கிளைத்துத் தழைத்து, பரவித் திகழும் இம்மொழி தன் தகவால் பெயர் சூட்டப்பெற்றுள்ள

## உலக முதன் மொழி தமிழ்

இம்மொழி தோன்றிய காலத்தில் இதற்கென ஒரு பெயர் சூட்டப் பெற்றிருக்கும் என்று கூற இயலாது. 'மொழி பெயர் தேஎத்தர்' (குறு. 11—7) என்றும், "மொழி பெயா தேஎத்த பன்மலை" (அகம். 31—15), 'மொழிபல பெருகிய தேஎம்' (பட். 216) எனவும், 'மொழி பெயர்த்து அதற்பட யாத்தல்' (தொல். பொருள். 643) என்றும் குறிக்கப் பெற்ற மைக்கு ஏற்ப வந்தவர் மொழியை நோக்கித் தமக்கென உள்ள மொழிக்குப் பெயர் சூட்டினர் என்பதே இயல்பில் நிகழக் கூடியது. அதன்படி தம் மொழியின் தகுதிப்பாடு அறிந்து 'தமிழ்' என்று பெயர் சூட்டினர் தொன்மைத் தமிழ்ச் சான்றோர்.

தமிழ் என்னும் மொழியின் சொல்லிற்குப் பல விளக்கங்கள் வந்துள்ளன.

தம்—ழ் (தம்—இழ்—தமிழ்) தமக்கு உரித்தாக 'ழ்' கொண்டது என்பது பொருந்தச் சொல்வதாக உள்ளது.

த்—அ—உயிர் முதல் எழுத்து; ம்—இ உயிர் அடுத்த இகரம்; ழ் (சிறப்பு மெய் எழுத்து—இவ்வகை எழுத்தமைப்பால் தமிழ் இவ்வாறு பொருத்துவது சற்று வலிந்து கொள்வதாகும்.

த்—அ (வல்லினம்) ம்—இ (மெல்லினம்) ழ் (இடையினம்) மெய் யெழுத்தின் மூவினம் கொண்டதால் தமிழ். இஃதும் இயல்பில் அமைந்ததைப் பயன்படுத்திக் கொள்வதே.

'தமில்—தமிள்—தமிழ் ஆயிற்று'[83] என்பது மாகறல் கார்த்திகேயர் கருத்து.

தமி—ழ் (தன்னிடம் மட்டும் தனியாக 'ழ்' கொண்டது—தமி—தனி)

இராமலிங்க அடிகளார் ஆன்மிகப் பாங்கில்,

'த்' என்பது சிவரூப இயற்கையுண்மைக் கட்டளை; 'அ'—இயற்கை யுண்மைப் பரிபூரணப் பொருளிலக்கரம்; 'ம்' ஆன்மாதாரமாகியும் உள்ளதெனப் பொருளாம்; இ—சிதாத்மாக்களைச் சுட்டுகின்றதாம் 'ழ்'—இந்தச் சிறப்பியல் அக்கரம் தனித்தகைமைப் பெருமைச் சிறப்பியல் ஒலியாம்' என்று விளக்கியுள்ளார்.

தமி—ழ் (தமி—தனி—ழ் விகுதி) தனித்தகவு கொண்டது. இது பாவாணர் விளக்கம். இதற்குப் பாவாணர் அமி, இமி, உமி, குமி சிமி என்னும் ஏவற்பொருள் முதனிலைகள் 'ழ்' என்னும் விகுதி பெற்று முறையே அமிழ், இமிழ், உமிழ், குமிழ், சிமிழ் என ஆனமை போன்று 'தமிழ்' என்னும் சொல் இம்மொழிக்குப் பெய ராயிற்று என்று காட்டியுள்ளார்.[84] இது பொருந்துவதாக உள்ளது; ஏற்கலாம்.

'தமி' என்னும் முதனிலை தம் என்னும் உரிமைச் சொல்லின் வளர்ச்சி, தனித்தன்மை, தனித்தகுதி என்று பொருள்படும். சிறப்பெழுத்தாகிய 'ழ்' விகுதியாக அமைய, 'தமிழ்' என்று அமைந்து 'தனித் தகவுடைய மொழி' என்று பொருள்படும்.

உலக முதன் மொழி என்னும் அளவில் முன்னே காணப்பெற்றவை அனைத்தும்—அதற்கு மேலும்—தமிழின் தனித் தகவுகளே.

மேலைத் தொன்மை மொழிகளுடன் தமிழை ஆராய்ந்த மொழியறிஞர் கே. சி. ஞானகிரியார்

'தனித்தன்மை, தனி ஒன்று சரிநிகர் அல்லது ஒப்புப்பெறாதது, இணையற்றது எனப் பொருள்தரும் 'தமி' (Tami) என்னும்

83. மாகறல் கார்த்திகேய முதலியார்: மொழி நூல் 81

84 ஞா. தேவநேயப் பாவாணர்: திராவிடத்தாய் 5

முதனிலையிலிருந்து தமிழ் என்னும் பெயர் எழுந்தது என்பது தக்க தாகும்'[85] என்று குறித்துள்ளமையும் பாவாணர் கருத்தை உறுதிப் படுத்துகிறது.

தனித்தகவுடையது என்னும் தன் பெயருக்கேற்ப, இனிமை, பொருட் செறிவு, மொழித் தகவுகள், செம்மை கொண்ட சீர்மை, கரை புரண்ட கால வெள்ளத்தில் மூழ்காமை, கரையான்களுக்கும் தப்பியமை. உலக அறிஞர்களால் போற்றப்படுகின்றமை முதலியவற்றால் திகழ்கின்றது 'மொழியில் தமிழ்'. இத் தகவுகளுக்குத் தன் பங்களிப்பை வழங்குவது 'தமிழில் எழுத்து'.

## 4. தமிழில் எழுத்து

'எழுத்து' என்றால் எழுதப்படும் வரிவடிவ எழுத்தே நினைவில் வரும். எழுத்தாளன் எனப்படுபவன் கருத்துக்களை ஏட்டில் வரிவடிவில் எழுதித் தருபவனே. எழுத்து ஒலிகளை வாயால் சொல்லிக் கருத்துக்களை வழங்குபவன் பேச்சாளன். அவனை எழுத்தாளன் என்பதில்லை.

இஃது 'எழுதப்படுதலின் எழுத்தே' என்னும் இலக்கண நூற்பாவால் நேர்ந்திருக்கும். ஆனால், வாயால் ஒலிக்கப்படுவதும் எழுத்து; கையால் எழுதப்படுவதும் எழுத்து; ஆம், ஒலி வடிவமும் எழுத்து; வரிவடிவமும் எழுத்து. செவியால் கேட்பதும் எழுத்து; கண்ணால் காண்பதும் எழுத்து.

ஒலி வடிவம் **எழுதருவதால்** எழுத்து;

வரிவடிவம் எழுதப்படுவதால் எழுத்து — இரண்டினுக்கும் 'எழு' என்பதே முதனிலை.

தொல்காப்பியம்,

"எல்லா எழுத்தும் வெளிப்படக் கிளப்பின்
சொல்லிய பள்ளி **எழு தரு** வளியின் (தொல். எழு. 102—1, 2)

என்று ஒலிவடிவை **எழுதருவதால்** எழுத்து என்று குறிக்கிறது. இவ்வொலி வடிவின் பிறப்பைக் கூர்ந்து கண்டு,

ஒன்று, ஒலி தோன்றும் களம் — **நிலை**,

இரண்டு. ஒலியை உந்தும் காற்று — ஆவளி,

---

85 கே. ஏ. ஞானகிரி நாடார்: Greek Words of Tamil Origin—முன்னுரை

மூன்று, நடக்கும் செயல் — முயற்சி

எனப் படிப்படியாக,

"நிலையும் வளியும் முயற்சியும் மூன்றும்
பயில நடப்பது எழுத்தெனப் படுமே"[86] என்றார் முந்தைய அறிஞர் ஒருவர்.

பவணந்தியாரும்

'மொழி முதற் காரணம் ஆம் அணுத்திரள் ஒலி எழுத்து' (நன். 58) என்றார். மேலும்,

தொல்காப்பியர் ஒலிப்பதை—இசைப்பதை 'எழுத்து' என்று

'ஓரளபு **இசைக்கும்** குற்றெழுத்து' என்ப

'ஈரளபு **இசைக்கும்** நெட்டெழுத்து' என்ப

'மூவளபு **இசைத்தல்** ஓர் எழுத்து இன்றே' (தொல். எழு. 3, 4, 5)

என்றெல்லாம் 'இசைக்கும்' என்றும் ஒலித்தலால் 'எழுத்து' என்றார். யாப்பருங் கல விருத்தி மேற்கோள் பாடல் ஒன்று, 'செவிப்புலனாவது ஒலியெழுத்தாகும்' என்று விளக்கமாக அறிவித்தது.

ஒலி செவியால் கேட்கப்படுவதுதானே. அதற்கு உரு உண்டா? அதனை ஒலி வடிவம் என்று குறிக்கலாமா? குறிக்கலாம். உரையாசிரியர் நச்சினார்க்கினியர்,

'இவ்வெழுத்தெனப்பட்ட ஓசையை 'அரு' என்பார் அறியாதார்; அதனை உரு என்றே கோடும்' என்று தொடங்கி அதற்கு விளக்கமாக, 'செறிப்பச் சேறல், செறிப்ப வரல், செவிக்கண் சென்று உறுதல், உருவும் உருவும் கூடிப் பிறத்தல், வன்மை, மென்மை, இடைமை எனப்படுதல், உடம்பொடு புணர்த்தல் என்பவற்றால் உரு என்பது நிலைபெற்றது'[87] என்றார். அவரே,

"எழுத்தென்றது யாதனையெனின், கட்புலனாகா உருவும் கட்புல னாகிய வடிவும் உடையவாம் வேறு வேறு வகுத்துக்கொண்டு

---

86 ... ... ... தொல். எழு. பிற—20 மேற்கோள் நூற்பா

87 நச்சினார்க்கினியர்: தொல். எழு. 1—உரை விளக்கம்

தன்னையே உணர்த்தியும் சொற்கியைந்து நிற்கும் ஓசையையாம்"[88]
என்று ஓசையைக் குறித்து முடித்தார்.

மயிலைநாதரும்,

" ஒலியெழுத்து—ஒலி படிவான எழுத்து (நன். 256 உரை) என்றார்.
எனவே, ஒலிக்கின்ற ஓசையும் உருவமே.

இந்த ஒலியெழுத்திற்கு 'மாத்திரை' என்று ஓர் அளவீடு வகுத்தனர். கண் இமைகளை இமைக்கும் நேர அளவும், கை விரல்களை நொடிக்கும் நேர அளவும் ஒத்திருப்பதைக் கண்டறிந்து ஒவ்வொன்றும் தனித்தனியே ஒவ்வொரு மாத்திரை அளவு எனப்பெற்றது. ஒருவன் இமைத்தலையும் நொடித்தலையும் தானே செய்தும் உணரலாம். பிறர் செய்வதைக் கண்டும் அறியலாம். இதற்கு இரண்டு ஏன்? பலவகைக் குறைபாடுள்ள மக்களை எண்ணி இவ்விரண்டு காணப்பெற்றது போலும். குருடன் ஒருவன் இமைத்து உணரவோ, இமைப்பதைக் காணவோ இயலாத நிலையில் நொடித்தல் ஓசையைக் கேட்டு அறியலாம். செவிடன் ஒருவன் நொடித்தல் ஓசையைக் கேட்க முடியாமையால் இமைத்தலைச் செய்தும் பார்த்தும் அறியலாம். இவ்வாறெல்லாம் நுணுகி ஓர்ந்து,

'கண்ணிமை நொடியென அவ்வே மாத்திரை' என்ற தொல்காப்பியர், இவ்வாறு அமைத்த பண்டைச் சான்றோர்தம் நுணுக்க அறிவை எண்ணி,

'நுண்ணிதின் உணர்ந்தோர் கண்ட ஆறே' (தொல். எழு. 7) என்று பாராட்டி முடித்தார்.

'அ' முதலிய குறில் ஒவ்வொன்றின் ஒலிப்பு நேரமும் ஒவ்வொரு மாத்திரை என்று அதனதன் ஒலிப்பு நேரமும், இமைப்பு நொடிப்பு நேரத்துடன் ஒத்திருப்பதைக் கண்டு விதித்தனர்.

இவ்விமை, நொடி நேரமாம் ஒரு மாத்திரை அளவையும் அதன் தொடக்கம் முதல் முடிவு வரை படிப்படியாக ஓர்ந்து பின்வருமாறு பகுத்துக் கண்டனர். ஆம், இச்சிறு நேரத்தையும் பகுத்துக் கண்டனர்.

'உன்னல் (உள்ளத்தால் நினைத்தல்) கால் மாத்திரை உறுத்தல் (அந்நினைவு உள்ளத்தே உறுத்தல்) அரை, முறுக்கல் (அந்த உறுத்தலை முறுக்கி

---

88 நச்சினார்க்கினியர்: தொல். பாயிரம் உரை விளக்கம்

விடுதல்) முக்கால், விடுத்தல் (தொண்டை வழியே வெளிப்படுத்தல்) ஒன்று என்று பகுத்துக்காட்டியதும் ஒரு நுணுக்கமே.

இந்த ஒலி வடிவ எழுத்தை முந்தைய ஆசிரியர் ஒருவர் இரண்டு நிலைகளாகக் கண்டார். ஒலி அணுக்களின் திரட்சி செவிப்படும் அளவில் ஒலியாக வருவதை **ஒலியெழுத்து** என்று,

"இசைப்படு புள்ளின் எழாஅல் போல
செவிப்புல னாவது **ஒலியெழுத் தாகும்**" என்றும்

அவ்வொலி வெவ்வேறு எழுத்தொலியாய் அமைவதைத் **தன்மை எழுத்து** என்று

"... ... ... அகத்தெழு வளியின்
மிடற்றுப் பிறந்திசைப்பது **தன்மை எழுத்தே**"[89]

என்றும் பெயரிட்டு விளக்கியுள்ளார்.

இவ்வாறு ஒலி எழுத்தாக உருப்பெற்றுப் பல்வகை எழுத்துக்களாகப் பலுக்கப் பெற்றபின் அவற்றை முறைப்படுத்தி நெடுங்கணக்காக அமைத்துள்ளமை **படிமுறை வளர்ச்சி** யறிந்து செய்யப் பெற்றதாகும்.

இக்காலத்தில் நாம் எழுதும் எழுத்துருவங்கள் ஏறத்தாழ 300 ஆண்டுகளுக்கு முன்னர் உருச் செப்பம் செய்யப்பெற்றவை. தமிழில் முதன்முதலில் வடிவ எழுத்து தோன்றியதற்கும் இக்காலத்திற்கும் இடையில் பல்லாயிரம் ஆண்டுகள் நகர்ந்துவிட்டன. இப்பல்லாயிரம் ஆண்டுகளும் மாந்தரின் வாழ்வில் ஒரு நீண்ட ஆழமான வரலாறாகும். இவ்வரலாற்றின் தோற்றக்காலம் கணிக்க இயலாததாகும். ஓரளவான எல்லையாக, குமரிக் கோடுங் கடலால் கொள்ளப்பட்ட காலத்தின் மிக மிக முந்தியது என்று குறிக்கலாம்.

உலக மொழிகள் பலப்பலவாய்ப் பல்கியுள்ளன. அவற்றுள் மிகத் தொன்மை வாய்ந்த தேர்ந்த மொழிகள் சிலவே. அவை ஒரு கைவிரல் எண்ணிக்கையில் அடங்கிவிடும். அவற்றுள்ளும் தொன்மையானவை தமிழ், வடமொழியாம் மறைமொழி, எபிரேயம், சீனம் ஆகும். இவற்றுள்ளும் பிற உலக மொழிகளுள்ளும் சொற்களில் ஒற்றுமை தென்படும். ஆனால் எழுத்தில் ஒன்றி நில்லா வேறுபாடுகளே உள்ளன.

---

89 ... ... ... ... யாப்பருங்கல விருத்தி—96 உரை மேற்கோள்

தொன்மை மொழிகளுள்ளும் எழுத்துருவிலும் தமிழ் எழுத்துக்கள்தாம் மூதன்மைத் தொன்மை உடையவை. தமிழ் எழுத்தைப் பார்த்தே தொன்மை வாய்ந்த வடமொழியும் தன் எழுத்துருவத்தை ஆக்கிக்கொண்டது.

எட்வர்டு தாமசு என்பார்

'வட நாட்டில் ஆதியில் தமிழ் மொழியே வழங்கிற்று.
அதனின்றே வடமொழி எழுத்துக்கள் தோன்றின'

என்று எழுதியதில் நூற்றுக்குநூறு உண்மை உண்டு. இதனை மிகவிளக்கமாக வடமொழியறிஞர் இராகுல சாங்கிருத்தியாயன் நிறுவியுள்ளார்.

மேல் நாட்டு மொழியறிஞர் சிலர் தமிழ் எழுத்திற்குப் 'பிராமி' எழுத்து மூலம் என்றும், பினீசிய எழுத்தைப் பார்த்தே தமிழ் எழுத்துக்கள் உருவாக்கப் பெற்றன என்றும் எழுதினர்.

பிராமி எழுத்து பாணினி காலத்தில் உருப்பெற்று அசோகர் காலத்தில் மிகைப்படுத்தப்பெற்றது. தொல்காப்பியர் பாணினிக்கு முற்பட்டவர் என்பது முடிந்த முடிபு.

எனவே பிராமிக்கு முந்தியது தமிழ் எழுத்து. பினீசிய மொழி வல மிருந்து இடமாக எழுதப்பெறுவது. தமிழோ இடமிருந்து வலமாக எழுதப் பெறுவது. இம்முரண்பாட்டைக் காட்டி மொழியறிஞர் வை. சதாசிவப் பண்டாரத்தார் மறுத்தார். இம்மறுப்பு மாற்றாரால் மீற முடியாதது.

எவ்வகையில் நோக்கினாலும் தமிழ் பிறமொழிச் சார்பில் தோன்றிய தன்று. தமிழ் தனி மூல மொழி. உலகில் முதன் முதலில் தோன்றியவன் தமிழ் மாந்தன் என்பது முன்னே நிறுவப்பட்டது. அம்மூல மாந்தனால்— தமிழனால் பையப் பைய, ஆனால் செம்மையாக உருவாக்கப்பட்டவை தமிழ் எழுத்துக்கள். இவ்வடிவ எழுத்தமைப்பு இயற்கைப் பாங்கு கொண்டது என்பதும் இங்கு நிறுவப்படும்.

இவ்வெழுத்து வடிவம் 'வரிவடிவம்' எனப்பெறுகின்றது. 'வரி' என்றால் வளைவு, கோடு என்பன பொருள்கள். வளைவுக்கோடுகளாக வரிக்கப் பெற்றவை தமிழ் எழுத்துக்கள். இவ்வாறு வரிப்பதால் 'வரிதல்' என்னும் சொல் எழுத்தைக் குறிப்பதாயிற்று. அஃது வரை என்றாகி 'வரைதல்' என்னும் பெயரையும் பெற்றது. மணலையோ, மரப்பட்டையையோ, ஓலையையோ இலையையோ எழுது கருவியாக விரலோ, பிறகருவிகளோ தீண்டி உருவாக்குவ தால் 'தீட்டல்' எனப்பெற்றது. எழுதப்படும் களத்தில் தொடர் புள்ளிகளைப்

பொறிப்பதால் 'பொறித்தல்' எனப்பெற்றது. ஓலையை எழுத்தாணியால் கீறி எழுதப்பெறுவதால் 'கீறல்' எனப்பெற்றது. கீறி எழுதுபவன் 'கீரன்' எனப் பெற்றான். (கீறல்—கீரல் என்று வருவது வழக்கால் நேர்வதாகும்) நக்கீரன் கீரங்கொற்றன் முதலிய பெயரினர் பெரும் புலவர்களாக விளங்கினர்.

கீறலாகும்போது எழுத்து கலங்குவதும் உண்டாவதால் 'கிறுக்கல்' என்றும் கொள்ளப்பெற்றது. எழுதப்பட்ட கருத்தைப் படிப்போர்க்குத் தெரிவிப்பதால் 'தெரித்தல்' என்றும் பெயர்பெற்றது. இவற்றையெல்லாம் ஓர்ந்து கண்ட உரிப்பனுவலார், எழுதுவதன் பெயர்களாக,

" தெரித்தல், வரிதல், தீட்டல், பொறித்தல்
வரைதல், கீறல், கிறுக்குதல், எழுத்தே "[90]

என்றனர்.

கீறலாகத் தமிழ் எழுத்தை எழுதுவதில் மிகுதியாகப் பனை ஓலை பயன் பட்டது. எழுத்தாணியால் கீறப்படும்போது எழுத்தாணி ஓலையில் பதித்த சுவடுகளால் பனை ஓலை சுவடி எனப்பெற்றது.

சுவடி என்னும் பெயர் பெறுவதற்குமுன் அது 'ஓலை' எனப்பெற்றது. அச்சொல்லும் எழுத்துக் காரணத்தால் அமைந்ததாகும்.

'ஒல்' என்பது ஒலிக்குறிப்பு
" 'ஒல்' என் ஒலி புனல் ஊரன் "

"ஆயர் 'ஒல்' என் ஒலித்தனர்"[91] என்றெல்லாம் பாடினர். 'ஒல்' என்னும் ஒலிக்குறிப்பிலிருந்து 'ஒலி' பிறந்தது. இது ஒலி வடிவத்துக்கும் பொருந்தும். எழுத்தாணியால் எழுதப்பெற்றதால் அதனைப் படிப்போர் ஒலியாகப் படிப்பதால் ஒலியைத் தருவது 'ஓலை' எனப்பெற்றது. நாலடியார்,

" பச்சோலைக் கில்லை ஒலி"[92] என்றார். இயற்கையில் பச்சோலை ஒலிப்பதில்லை. காய்ந்ததுதான் ஒலிக்கும். இவ்வாறும் ஒலியைத்தருவதால் 'ஓலை' ஆயிற்று.

---

90 மாறன் பொறையனார்: ஐந்திணை ஐம்பது

91 திருத்தக்கதேவர்: சீவ. சிந்தாமணி—348

92 நாலடியார்—256

வேறு பல காரணங்களாலும் 'இரேகை' (மெல்லிய மயிரிழைக் கோடு) 'கணக்கு' (கண்ணுக்குப் புலனாவது) எனப்பட்டது. எழுதப்படும் தொழிலை 'எழுதுகை, வரியாடல்' எனவும் வழங்கினர்.

எழுதப்படும் களமாக மரங்கள்; உரித்தெடுக்கப்பட்ட மரப்பட்டைகள் இலைகள், மணல், ஓலைகள் பயன்படுத்தப்பட்டன.

எழுதப் பயன்படுத்தப்பட்ட கருவி எழுதுபடை, எழுத்தூசி, எழுத்தாணி தூரிகை, துகிலிகை எனப்பட்டது. எழுதுகோல் எனவும் வழங்கப்பட்டது. "எழுதுங்கால் கோல் காணாக் கண்ணே போல்" (குறள் 1285) என்று திருவள்ளுவர் பாடினார். எழுதுகிறவன் எழுத்தாளன் எனப்பட்டான். இக் காலம் வழங்கப்படும் பொருளில் முன்னர் 'எழுத்தாளன்' வழங்கப்பெறவில்லை. அரசு அலுவலரில்

பண்ட வீரரின் எண்ணிக்கை
அவர் பெறும் ஊதியம்
போரிடும் வலிமை இழந்தவர்
வேற்றிடம சென்றவர்

முதலிய விவரங்களைக் கணக்கிட்டுக் குறிப்பவனே முன்னர் எழுத்தாளன் எனப்பட்டான். இப்பணியாற்றிய எழுத்தாளன் ஒருவன் தமிழில் புலமை பெற்றவன். அவன் பெயர் சேந்தம்பூதனார். மதுரை எழுத்தாளன் சேந்தம்பூதனார் எனப் பெயர் பெற்றான். குறுந்தொகையில் இரண்டு (90, 226) பாடல்களைப் பாடினான்.

இவ்வாறெல்லாம் வரிவடிவ எழுத்துப் பெயரில் சொற்கள் உருவாயின. இவ்வாறாக்கிய தமிழ் எழுத்தின் தோற்றம் எத்தகையது? அது இயற்கைப் பாங்கு கொண்டது என்று குறிக்கப்பட்டது.

## 5. எழுத்தில் சொல்

### வேரும் வேர் அடியும்

எழுத்தும் எழுத்துக் கூட்டல்களுமே சொல் என்பதை அறிவோம். அத்துடன் பொருள் தருவதுதான் சொல் என்பதும் புரிந்ததே. முதலில் நெட்டொலிகள் தோன்றி ஒவ்வொரு நெட்டொலியும் ஒவ்வொரு உணர்வுக் குறிப்பை அறிவித்தமை காணப்பட்டது. அவ்வாறே ஒவ்வொரு நெட்டொலியும் ஒவ்வொரு நெட்டெழுத்தாகி ஒவ்வொரு பொருளை உணர்த்திற்று.

நெட்டெழுத்து ஒவ்வொரு மெய்யெழுத்து கூடி இரண்டெழுத்தாக நின்று,

ஆ—ஆன்: மாடு ஈ—ஈன்: பெற்றெடு

ஊ—ஊன்: இறைச்சி ஏ—ஏன்: வினாப்பொருள்

இவ்வாறாக ஈரெழுத்தொருமொழிகள் பெருகின. பின் மேலும் எழுத்துக்கள் கூடிச் சொற்கள் பெருகின.

தமிழ்ச் சொல்லின் வளம் பற்றி முன்னர் மொழி வரலாற்றின் சின்னமாக விளக்கப்பட்டது கொண்டு உணரலாம். அது ஒரு சோற்றுப் பதம்.

உலகின் தென் மொழி ஒவ்வொன்றும் தன் தனக்கென ஒவ்வொரு மூலம் கொண்டது. அதனதன் சொல் ஒவ்வொன்றும் ஒவ்வொரு மூலவேர் கொண்டது. அதனை 'வேர்ச்சொல்' என்கின்றோம்.

வேரில் ஆணிவேர் உண்டு; சல்லி வேர்கள் உள்ளன. ஆணி வேர்க்கும் மூல வேர் முனை உண்டு. இதனை 'வேரடிச்சொல்' எனலாம். 'வேர்' என்பது செடிமச்சொல். இதன் தொடர்பில் சொல்லின் வளர்ச்சியையும்

வேரடிச்சொல் — வேர்ச்சொல்

(விதைச்சொல் — கருச்சொல்)

முளைச்சொல் (முதனிலை) — தளிர்ச்சொல் (ஓரெழுத்தொருமொழி)

இலைச்சொல் (வளர்மொழி) — தழைச்சொல் (பொருள் செறிந்த மொழி)

கிளைச்சொல் (பொருள் கிளைப்பது)

அரும்புச்சொல் (நுண்பொருள்) — மலர்ச்சொல் (விரிபொருள்)

காய்ச்சொல் (வன்சொல்) — கனிச்சொல் (இன்சொல்)

எனவெல்லாம் குறிக்கலாம்.

## 6. சொல்லின் பெயர்

சொல் குறிக்கும் பலவற்றில் உயர்திணை, அஃறிணை எனும் இரண்டும் சிறப்பாகக் குறிக்கப்பட்டன.

" உயர்திணை என்மனார் மக்கட்சுட்டே
அஃறிணை என்மனார் அவரல பிறவே
ஆயிரு திணையின் இசைக்குமன் சொல்லே "

என்கிறது தொல்காப்பியம். திணை என்றால் ஒழுக்கம். உயர்வாகக் குறிக்கப் படும் ஒழுக்கங்களைக் கொண்ட மாந்தர் உயர்திணையினர். உயர் அல்லாத திணை அல் திணை. அஃதாவது உயர்வு அல்லாத திணை அஃறிணை எனப் பட்டது. இவ்வாறு வருதல் தமிழின் இயல்புகளில் ஒன்று. ஒழுக்கங்களைக் குறிக்கும் சொல் இவற்றோடு நிற்பதில்லை. ஆனாலும் இவை உலக அளவில் எல்லாத் துறையிலும் பொருந்தும். மாந்தன் உயர்திணை. இன்று வரையும் உயிரோடு இயங்கும் மாந்தன்தான் உயர்திணை. உயர்ந்த ஒழுக்கங்களைக் கொண்டவன் அவன். அல்லாத ஒழுக்கங்களைக்கொண்ட திணை அஃறிணை.

அறிவியலும் வேறு பல துறைகளும் வளர்ந்துள்ள இக்காலத்திலும் உயர்திணை மாந்தன்தான். மாந்தனைப்போல் இயங்குகின்ற அறிவியல் உருவாக்கிய பொருள்கள் பல உலவுகின்றன. செவ்வாய்க் கோளில் மாந்தன் இறங்க முயற்சி செய்கிறான். நிலவில் இறங்கி நடந்த அவன் மாந்தன்தான். ஆனால் அறிவியலும் அணுமின்னியலும் வளர்ந்துள்ள இக்காலத்தில் நிலவில் செவ்வாய்க் கோளில் மாந்தன் இயங்கிச் செய்கின்ற செயல்களை அவனைப் போன்ற உருவமுடையவையும் வேறு சிலவும் செய்கின்றன. மாந்தன்போல் உருவம் அமைக்கப்பட்ட பொறிகள் இரும்பு, ஈயம், செம்பு, பித்தளை, வெள்ளி தங்கம், வைரம் இவைகளாலும் இவை கூட்டியும் உருவமைக்கப்படுகின்றன. நிலத்திலிருந்து இயக்கும் கணிப்பொறி அவற்றை இயங்க வைக்கிறது இதன் முன்னேற்றமாக இப்போது அவையே தன்னமைப்பில் இயங்குமாறு செய்து அவற்றின் செயல்களை நிலத்திலுள்ள கணிப்பொறி பதிந்து காட்டிவிடுகிறது. இவ்வாறு உருவாக்கப்படுவதோடு தோலாலும், மரத்திலிருந்து வடியும் பாலாகிய இரப்பராலும் சில கலப்புப் பொருள்களாலும் உருவாக்கப்படுகின்றன. இவற்றிலும் ஆழமாக மாந்தன் உடலில் அமைந்த தசை, எலும்பு, ஊன் இவற்றைப் போன்ற அமைப்பிலும், இவைதான் என்று சொல்லும் நிலையிலும் மாந்தன் உரு அமைந்தவை இயக்கப்படுகின்றன. ஆனாலும் இவை மாந்தர் எனப்படுவதில்லை. மாந்தனுக்குத் தனிச்சிறப்பாக உள்ள ஆறாவது அறிவாம் பகுத்தறியும் அறிவும் இந்தச் செயற்கை மாந்த உருவத்திற்கு உண்டு. முன்னர் நிகழ்ந்தவற்றை நினைவில் திரும்பக் கொணரும் நினைவாற்றலும் உண்டு. ஆனாலும் மாந்தனில்லை. ஆங்கிலத்தில் 'ரோபோ' என்றுதான் பெயர் வைத்தனரேயல்லாமல 'மேன்' என மாந்தர் பெயர் வைக்கவில்லை. சிந்தனைகூட இந்த ரோபோவிற்கு உண்டு என்பர். ஆனால் மாந்தனுக்கு உரிய தன்னுணர்வு மட்டும் ரோபோவிற்கு இல்லை. ரோபோ போன்று இயங்

கும் பொறிகளுக்கும் இல்லை. அவையெல்லாம் உயர்த்திணைக்குரிய செயல்களைச் செய்யுமாயினும் அஃறிணைதான். அறிவியலாரும் முடிவாக அவ்வாறு தான் கொள்கின்றனர்.

மாந்தன் உருவாக்கியவற்றில் சொல்லும் சொல்லால் ஆகிய மொழியும் தனிச் சிறப்புடையவை. அச்சொல் பல்வகையான பொருள்களைத் தரும் என்றாலும் அதன் பாகுபாட்டையும் இணைத்துத் தொல்காப்பியர்,

" சொல்லெனப் படுவது பெயரே வினையென்று
ஆயிரண் டென்ப அறிந்திசி னோரே "

என்றார். ஆகச் சொல்லை பெயர், வினையென்றுதான் முதலில் பிரித்தார். அவை இரண்டிலும் 'பெயரே' என்று பெயருக்கு மட்டும் ஏகாரம் குறித்தார். வினையை 'வினை' என்றுதான் குறித்தார். இவ்வாறு 'அ' இரண்டாக. அவையிரண்டாகக் கூறியவரை அறிந்திசினோர் என்றார். அறிந்திசினோர் என்றால் அறிஞர், அறிந்தவர் எனத்தான் பொருள்கள். இச்சொல்லில் இசின் என்றொரு இடைநிலை சேர்ந்து அறிந்திசின் என்றாயிற்று. இதுபோன்றே கண்டிசினோர், உணர்ந்திசினோர் என இரண்டிலும் இசின் இடம்பெற்றது. அறிந்ததை நடைமுறையில் கண்டவர் கண்டிசினோர். கண்டதன் உண்மை நிலையை உள்ளத்தால் உணர்ந்தவர் உணர்ந்திசினோர். இவ்வாறு அறிந்த வரும் கண்டவரும் உணர்ந்தவரும் சொல்லைப் பெயர், வினை என்ற இரண்டைத்தான் சொல்லாகக் குறித்தனர்.

மேலே கண்ட தொல்காப்பிய நூற்பாவிற்கு அடுத்த நூற்பா,

" இடைச்சொற் கிளவியும் உரிச்சொற் கிளவியும்
அவற்றுவழி மருங்கின் தோன்று மென்ப "

என்று இடைச்சொல்லும் உரிச்சொல்லும் தனி மூலங்கள் கொண்டவை அல்ல. பெயர், வினை வழியே தோன்றும் என்ற உண்மையை தனி நூற்பாவாகச் சொல்லிப் புலப்படுத்தினர். பிற்காலத்திலோ,

" பெயர்வினை இடைஉரி என்ற நான்கே
நுவலுங் காலை முறைசிறந்தனவே "

என்று கொள்ளப்பட்டது. அஃதாவது பெயர், வினையோடு இடை, உரியும் இணைத்தே பேசப்பட்டன. இருப்பினும் இவை பெயர், வினை அடியாகத் தான் தோன்றுபவை. முன்னர்க் கூறப்பட்டதுபோல் தனி மூலங்களல்ல. முன்னுள்ள இரண்டு தொல்காப்பிய நூற்பாக்களையும் கூர்ந்து நோக்கினால்

சொல்லெனப்படுவ என்று தொடங்கிப் பெயர், வினை என்றுதான் குறித்தார். ஆனால் அடுத்த நூற்பா இடைச்சொற் கிளவியும் என்றும் உரிச்சொற் கிளவியும் என்றும் இடையோடும் உரியோடும் சொல் சேர்க்கப்பட்டது. இடைச்சொல் உரிச்சொல் எனத்தான் சொல்லவேண்டும். சொல்லைச் சேர்க்காமல் இடை என்றால் இரண்டிற்கு இடையேயுள்ள எதையும் குறிக்கும். உடம்பின் இடையில் உள்ள உறுப்பையும் இடை என்கின்றோம். இடப்படுவது இடை. எடப்படுவது எடை என்பதைப் போல. சொல்லைக் குறிக்காமல் உரி என்று மட்டும் சொன்னால் தொங்கவிடப்படும் உறியைக் குறிக்கும், உரிமைத் தன்மையின் பகுதியைக் குறிக்கும். எனவே, இடைச்சொல் என்றும் உரிச்சொல் ஆனால் பெயர், வினையைச் சொல் சேர்த்துச் சொல்ல வேண்டியதில்லை. பெயர் என்றாலே அதற்குரிய சொல் சேர்த்துச் சொல்லவேண்டும். என்றுமே பொருளைக் குறித்துவிடும். வினை என்றாலும் அவ்வாறே.

பெயர் என்பது 'பெய்' என்பதை வேர்ச்சொல்லாகக் கொண்டது. 'ஏய்' என்பது உயர் என்று வரும். இது போன்றே வினையும் தன் தொழிற் பொருளைக் குறிக்கும்.

பெயர் என்பதன் வேர்ச்சொல் 'பெய்' என்றால் வெளிப்படுவது என்று பொருள். விண்ணிலிருந்து வெளிப்படும் பலவற்றில் மழை ஒன்று. அது 'பெய்யெனப் பெய்யும் மழை' என்று பெய்வதாகக் குறிக்கப்பட்டது. பெய்வதால் அஃதே பெயல் என்றும் பெயர்பெற்றது. பெயல் என்றால் 'பெயராக மழையைக் குறிக்கும்—வினையாகப் பெய்வதைக் குறிக்கும்.

விண்ணிலுள்ள சூரியனிலிருந்துதான் நிலம் முதலிய பல தோன்றின. சூரியனின் ஆவி சிதறி ஆவியாகவே உருண்டை வடிவம்பெற்று அவ்வுருண்டை வடிவம் ஆறிப்போய் நிலமானது. நீர்பெற்றது. மாந்தன் வாழ்வதற்கு ஒரே இடமாகவும் உள்ளது. இவ்வாறு நிலத்தில் வாழ்கின்ற மாந்தன் பெய்யும் மழையைப்போல் அஃதாவது வெளிப்படும் மழையைப் போல் வெளிப்படும் பொருளைப் பெய்து பெயர் என்ற சொல்லை முதலில் அடைந்தது. பின்னர் பெயன் அஃதாவது பெய்வது என்னும் செயலைக் கொண்டு வினை அமைந்தது. இதனால்தான் தொல்காப்பியர் இவற்றைத் தனித் தோற்றமாகச் சொல்லி இடை, உரியை அவற்றின் வழித்தோற்றம் என்றார். இவ்விளக்கத்தால் பெயர் முதலிடம் பெறுகிறது. அதனால்தான் தொல்காப்பிய நூற்பாவில் பெயரே என்று தேற்றேகாரம் கொடுக்கப்பட்டது. சொல் எனப்படுவ என்றாரே

யன்றிப் பெயர்ச்சொல் வினைச்சொல் என்று சொல் சேர்த்துச் சொல்லவில்லை. ஆனால் அடுத்த நூற்பாவில் இடைச்சொல், உரிச்சொல் என்று சொல் சேர்த்தது மன்றி,

"இடைச்சொற் கிளவியும்
உரிச்சொற் கிளவியும்"

எனக் கிளவி என்ற சொல்லையும் இணைத்தார். இவ்விணைப்பு ஏன்? இடைச் சொல் உரிச்சொல் என்று சொல்லவேண்டியதை வலியுறுத்துவது மட்டுமன்றிக் கிளவி என்ற சொல்லைக் கிளத்தல், அஃதாவது எடுத்து மொழிதல், அழுத்த மாகச் சொல்லல் என்ற பொருள்களையும் உள்ளடக்கினார். இதனால் மற் றொன்றையும் புலப்படுத்திக்கொள்ளலாம். முன்னர்த் தொல்காப்பியத்தில் கிளவி எனும் சொல் அதிக எண்ணிக்கையில் வருவதையும் ஒரு பகுதியே கிளவியாக்கம் என்று பெயர் பெற்றதையும் காண்கின்றோம். கிளவியாக்கம் என்பது சொல்லை ஆக்குவதையும் குறிக்கும். மொழியை ஆக்குவதையும் குறிக்கும். எனவே கிளவி என்ற சொல்லுக்குத் தனிச்சிறப்பமைப்பு உண்டு. இவ்வாறு முதலில் கிளக்கப்பட்டதுதான் பெயர். அதன்பின் வினை. இவற்றிலிருந்து தான் இடை, உரி எனக் கண்டோம். ஆனால் பிற்கால இலக்கணத்தார் முன்னர்க் கண்ட பெயர் வினையோடு இடைச்சொல்லும் உரிச்சொல்லும் சேர்த்து நான்கையும் ஒரு தோற்றமாகக் கூறியது மட்டுமன்றி 'நுவலுங்காலை முறை சிறந்தனவே' என்று குறித்தார். நுவலுங்காலை என்பது இவை நான்கையும் சொல்லும் பொழுது என்றும் பொருள்படும். உலக வழக்கைச் சொல்லுவது என்றும் பொருள்படும். எவ்வாறெனின் நுவலுதல் எனும் சொல் இவை போன்ற பல குறிப்புப் பொருள்களைத் தருவது. நுவலுங்காலை என்பதோடு முறை சிறந்தன என்று சொல்லி இவை நான்கையும் இவ்வரிசையில் சொல்வது தான் முறை. அவ்வரிசையில் சொல்வதுதான் சிறப்பு என்பதோடு இம்முறை சிறந்த முறை என்றும் தொல்காப்பியத்திற்குச் சற்று வேறுபட்ட பொருட் குறிப்பையும் கொள்ள வேண்டியுள்ளது. எவ்வாறாயினும் முறையிலும் சிறப் பிலும் பெயர் தனியிடம் பெற்றது. முதலிடமும் பெற்றது.

பெயர் என்பது பெய் எனும் வேர்கொண்டது என்றோம். பெய்தல் வெளிப்படுதல் என்றும் கண்டோம். விண்ணிலிருந்து பெய்யும் மழை வெளிப் படுகின்றது. அவ்வாறு வெளிப்படும்போது

"நீர் என்ற பொருள் வெளிப்படுகின்றது
விண் என்ற இடம் வெளிப்படுகின்றது

அது பெய்கின்ற கார் காலம் வெளிப்படுகின்றது.
விண்ணிலிருந்து வரும் பல உறுப்புகளில் இஃதும் ஒன்று என்ற
சினை வெளிப்படுகின்றது
குளிர்ச்சியுடையது எனும் தன்மை, அஃதாவது குணம்
வெளிப்படுகின்றது. பெயல் என்ற தொழில் வெளிப்படுகின்றது.

இவற்றை ஒருங்கிணைத்துப் பார்த்தால் பெயர், இடம், காலம், திணை குணம், தொழில் என்னும் ஆறைக் காணலாம். இதுபோன்றுதான் வெளிப்படுவதாகிய, பெய்தலாகிய பெயர்

'பொருள் இடம் காலம் சினை குணம் தொழில்' என்னும் ஆறு பெயர்களாக வகுக்கப்பட்டது. இந்த ஆறு மட்டும் பெயரின் தனித்தன்மை. இவ்வாறும் பிறவற்றிற்கு ஒருங்கிணைந்து அமைவதில்லை. இதனாலும் பெயர் தனிச்சிறப்புடையது.

இவற்றையெல்லாம் ஒருங்கிணைத்துப் பார்த்தால் சொல்லிலும் பெயர் தனியிடம் பெறுகின்றது. அதனால்தான் சொல் எனப்படுவது பெயரே என்றார். பெயர் இவ்வாறு தமிழில் மட்டுமன்றி தமிழடியாகவும் தமிழைச் சான்றாகவும், தமிழை எடுத்துக்காட்டாகவும் கொண்ட மொழிகள் பல பெயரைத் தனிச்சிறப்புடன் கொள்கின்றன. உலகில் தொன்மை மொழிகளாகக் கருதப் படும் எபிரேயம், கிரேக்கம், இலத்தீன், சீனம் முதலிய மொழிகள் பெயரையே சிறப்பாகக் கொள்கின்றன. இவை கொண்டும் பெயருக்கு உலகிலேயே தனித் தன்மை உண்டு என்று நிறைவாகக் கொள்ளலாம்.

## 7. பெயரில் உரி

பெயரிலிருந்துதான் உரிச்சொல் தோன்றியது. வினையிலிருந்தும் உரிச்சொல் தோன்றும். எனவே உரிச்சொல் என்பதற்கு உரிய சொல் உரிமையுடைய சொல் என்பன பொருள்கள் என்றாலும் பெயருக்கும் வினைக்கும் உரியது என்பதும் உண்டு. ஆராய்வுரையின் தொடக்கப்பகுதியில் இவ்வுரிச் சொல் விளக்கப்பட்டது. உரிச்சொல்லுக்குரிய தனித்தன்மை,

" பலபொருள் ஒருசொல்லும்
ஒருபொருள் பல சொல்லும் "

என்பனவாகும்.

" சால உறுதவ நனிகூர் கழி மிகல் "

என்னும் நூற்பா, சால தொடங்கி கழி வரை ஆறு சொற்களுக்கும் மிகுதி என்னும் ஒரு பொருளைக் குறித்தது. இவ்வாறே ஒரு சொல்லும் பல பொருளைத் தரும். இஃது உரிச்சொல்லின் தனித்தன்மை, தனிச்சிறப்பு, தனி அமைப்பு என்றும் சொல்லலாம். உரிச்சொல் பெயருக்கும், வினைக்கும் இடைக்கும் உரிமையுடையது மட்டுமன்றிச் செய்யுளுக்கு அதிக உரிமை கொண்டது. இக்காலத்தில் உரைநடையிலும் அவ்வுரிமை உள்ளது. உரு என்பது 'உல்' என்னும் வேரடிச் சொல்லிலிருந்து தோன்றியது. எள் என்பது எர், ஏர் என்றெல்லாம் விரியும். எல் என்பதன் மூலப்பொருள் ஒளி என்பதா கும். அதனால்தான் ஒளியைத் தருகின்ற சூரியன் எல் என்ற சொல்லாலும் குறிக்கப்பட்டது. தொடர்ந்து எல்லை என்ற சொல்லும் உருவாகியது. எல் எனும் சூரியன்தான் பகற்பொழுது தோன்றுவதற்கும் மறைவதற்கும் எல்லை யாக உள்ளது. உயர்திணை அல்லாத திணை அஃறிணை எனப்பட்டது போல எல் என்பதும் ஓர் அமைப்புக்குக் காரணம் ஆயிற்று. சூரியன் தோன்றிப் பகலை உருவாக்குவதால் பகற்பொழுதுக்கும் எல் என்றொரு சொல் உண்டு. பகற்பொழுதைக் குறிக்கும் எல் அல்லாதது அஃதாவது இரவு அல் எனும் சொல்லையும் கொண்டது. அல்லும் பகலும் என்றுகூட வழங்குகிறோம். இலக்கியங்கள் எல்லும் அல்லும் என்று குறிக்கும். எல் அல்லாதது அல். இது போன்றே பல பொருள்களுக்கும், பல சொற்களுக்கும் உரிமை கொண்ட உரிச்சொல் வேறுபட்ட மாறுபட்ட பொருள்களையும் குறிக்கவரும். இவற்றி லும் பெயரில்தான் இத்தன்மைகள் அதிகம் உண்டு. இதனால் பெயருக்கு உரிச் சொல் அதிக உரிமை உடையதாகின்றது. உரிச்சொல்லில் பெயர், வினை இடை என்ற மூன்றும் உண்டு. உரிச்சொல்லைக் குறிக்கும் இலக்கண நூல்களில் இந்நூலைப் போல உரிப்பனுவல்கள் உரிச்சொல்லின் விளக்கங்களைத் தரு கின்றன.

## 8. உரியில் பனுவல்

உரிச்சொற்கள் எல்லாம் ஒரு பொருள் பல சொல்லாயும் பல பொருள் ஒரு சொல்லாயும் அமைவது. இதனால் சொல் பெருக்கம்தான் நிறையும். அதற்கு உரைநடையில் பட்டியலாகத் தருவது எடுத்துப் புரட்டிப் பார்த்துக் கொள்வதற்குப் பயனாகும். ஆனால் முற்காலப் புலவோர் அனைத்தையும் மனப்பாடமாகக் கொள்ளும் முறைகொண்டோர். அதற்குச் செய்யுளே உகந்தது. அதனால் முற்கால நூல்கள் செய்யுளில் செய்யப்பட்டமை போலவே உரிப்பனுவல்களும் செய்யுளால் ஆயின. பனுவல் என்றால்

செய்யுள். உரிச்சொற்களைக் கூறும் செய்யுளாகையால் உரிச்சொல் பனுவல் எனப்பட்டது. சுருக்கங்கருதி உரிப்பனுவல் என்று இந்நூலில் வழங்கத் தொடங்கினேன். உரிச்சொல் பனுவல் எனும் சொற்றொடரைக் கயாதரத்தில் காணுகிறோம். கயாதரருக்கு அடைமொழியாகக் கூறப்பட்டுள்ளது.

தமிழில் உரிப்பனுவல்கள் ஏறத்தாழ நான்காம் நூற்றாண்டளவிலேயே உருவாகத் தொடங்கிவிட்டன. கணக்கற்ற நூல்கள் யாக்கப்பெற்றிருக்கும் போலும். நமக்குக் கிடைப்பன சிலவே. பலவற்றின் பெயர்களையே அறிகிறோம். கேள்விப்படுபவை. கிடைத்தவை ஆகிய பலவற்றில் பல மருத்துவ வாழ்வுக்கணி (சோதிடம்) நூல்களாக உள்ளன. மிகச் சிலவே தமிழ்ச்சொல் தொடர்பானவை.

நமக்குக் கிடைத்துள்ள முதல் உரிப்பனுவல் சேந்தன் திவாகரம். திவாகர முனிவர் என்பார் இதை இயற்றினார். அவரைப் பாதுகாத்துப் போற்றி இந்நூலை எழுதத் தூண்டியவர் சேந்தன் என்னும் வள்ளல். செய்வித்தோராகிய சேந்தன் பெயரையும் நூலாசிரியனாகிய தன் பெயரையும் இணைத்துச் சேந்தன் திவாகரம் என்று பெயரிட்டார். இந்நூல் நூற்பா போன்ற அடிகளில் அமைந்தது பத்துத் தொகுதிகளைக் கொண்டது. பத்தாவது தொகுதியாக பல்பெயர்க் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி என்று அமைந்துள்ளது. இப்பகுதியில் ஏழு நாள்கள் என்றால் அந்த ஏழு ஞாயிறு முதல் சனி வரை என்று பட்டியலிடப்படும். இந்நூலின் போற்றி பிள்ளையாராக இருப்பதால் இவர் சைவ சமயத்தவர்.

இவரது மாணவர் பலருள் பிங்கலர் என்பவர் ஒருவர். அவர் சிறந்த சொற்புலமை பெற்றவர். திவாகரரிடமும் கற்றவர். முன்னே குறிப்பிடப்பட்ட திவாகரத்துக்கு முன்னர் ஆதி திவாகரம் என்றொரு நூல் இருந்துள்ளது. அந்நூல் அளவிளமுடியாத நூற்பாக்களைக் கொண்டதாக அமைந்திருந்தது போலும். அது பயில்வோர்க்கு வாய்ப்பாக இல்லாமையால் திவாகர முனிவர் தன் சேந்தன் திவாகரத்தை எழுதினார். இதனை ஏறத்தாழ அடியொற்றித் தானொரு உரிப்பனுவல் உருவாக்கத் தொடங்கிய பிங்கலரும் பிள்ளையார்க்கே வணக்கம் கூறினார். இந்நூலும் நூற்பா அமைப்பில் அமையினும் நூற்பாக்கள் அகவற்பா அமைப்பைக் கொண்டவை. பத்துத் தொகுதிகளைக் கொண்ட இந்நூல் ஒவ்வொரு தொகுதியும் வகை என்னும் உட்பிரிவுகளால் பலவகையாக விரிந்திருந்தது. பிங்கலம், பிங்கலந்தை என்றும் வழங்கப்படும். முன்னர் இந்நூலும் நிகண்டு என்னும் சொல்லால் வழங்கப்பட்டதில்லை. இந்நூல் நான்காயிரத்து நூற்று தொண்ணூற்றோர் அகவல்களை உடையது.

பிங்கலத்திற்குப் பின்னரும் உரிப்பனுவல்கள் பல எழுந்தன. ஏறத்தாழ அவற்றின் பெயர்களையே அறிகிறோம். இந்நூலில் நான ஒவ்வொரு செய்யுளுக்கும் எழுதியுள்ள விரிவுரையில் ஒப்பீடு என்றொரு பகுதியை வகுத்திருக்கிறேன். அதில் சூளாமணியிலுள்ள சொற்களுக்கு ஒப்பாக அன்றி அவையேயாக உள்ள வேறு சில நிகண்டுகளின் சொற்களைக் காட்ட முனைந்த நான் பிங்கலம், கயாதரம், நாமதீபம் என்பவற்றையே தேர்ந்து கொண்டேன். இந்நூல்களுக்கு இடைக்காலம் நான்கு முதல் ஆறுவரை அமைந்த நூற்றாண்டுகளாகும்.

சில நூற்றாண்டுகளில் மொழி வழக்குகள் மாறுவது இயற்கை. அதனினும் மிகத் தொன்மை வாய்ந்த மொழி அதன் மக்களால் வழங்கப்படும்போது மாறுவதற்குக் கரணியங்கள் உண்டு. சொற்களின் கடுமையும் மக்களால் மிகுதியாகப் பயன்படுத்தப்படுவதும் இவ்வாறு மாற வாய்ப்பளிக்கும். இதனால் நான் நூற்றாண்டு இடைவெளிகளுள்ள மூன்று நூல்களைச் சூடாமணியுடன் ஒப்பிடத் தேர்ந்துள்ளேன்.

இவ்வகையில் கயாதரம் கயாதரர் என்பவரால் எழுதப்பட்டது. இந்நூலாசிரியரும் தன் சிறப்புப் பாயிரத்தில் அவரைக் குறித்துள்ளார், கயாதரம் புலவோரால் போற்றப்பட்டதாயினும் பயிலும் மக்களால்கூட மிகுதியாகப் போற்றப்படவில்லை. ஓரளவிலேயே கற்கப்பட்டது. எனவே அதுபற்றிய விவரங்களைத் தராமல் சொற்களை ஒப்பீடாகப் பயன்படுத்தியமை மட்டிலும் குறிக்கத்தக்கது.

நான்காவதாகிய நாமதீபம் என்பது முந்தைய நூற்றாண்டு நூல். கல்லிடை நகர் சிவசுப்பிரமணியக் கவிராயர் என்பார் அதன் ஆசிரியர். மற்றைய நூல்களிலிருந்து இந்த நூற்பிரிவு வேறுபட்டது. படலங்கள் என்ற பெரும்பிரிவு ஆறையும் படலங்களின் உட்பிரிவுகளாக வர்க்கங்கள் பதினாறையும் கொண்டு அமைந்தது இது. நூலில் அமைந்த பொருள் தலைப்புகளும் உரிப்பனுவல்கள் பலவற்றிலும் வேறுபட்டாலும் நாமதீபம் சற்று அதிக வேறுபாடு கொண்டது. இந்நூல் வெண்பாவால் ஆகியது. 808 வெண்பாக்களைக் கொண்டது. இந்நான்கு கொண்டு மட்டுமன்றிப் பிறவற்றையும் ஒருசேர நோக்கிச் சில கருத்துக்களைச் சொல்லவேண்டும். அக்கருத்துக்கள் உரிப்பனுவல்களின் பயன் என்ன? அந்நூல் சொற்கள் கையாட்சிக்கு எவ்வாறு பயன்பட்டன? என்பனவற்றின் விளக்கமாக அமையும்.

முற்காலத்தில் தமிழைப் பயில்வோர் தொடக்கத்தில் உரிப்பனுவல்களையே பயிலவேண்டும். மனப்பாடம் செய்யவேண்டும். எந்நிலையில் கேட்டாலும் ஒரு பொருட்குப் பல சொல்லையும் பல பொருள்கட்கு ஒரு சொல்லையும் சொல்லவேண்டும். அவ்வாறு பயின்று சொற்களில் படிந்தால்தான் செய்யுள்களைப் புரிந்துகொள்ளவும் தாம் செய்யுளுக்கேற்பச் சொற்களை அமைக்கவும் இயலும்.

காலப்போக்கில் இரு பொருளில் எழுதும் சிலேடை செய்யுள்களில் அதிகம் கையாளப்பட்டது. அவ்வாறு கையாளவும் படிப்போர் அதனைப் புரிந்துகொள்ளவும் உரிப்பனுவல் மனப்பாடம் இன்றியமையாதது. ஏறத்தாழப் பதினான்காம் நூற்றாண்டுவரை இப்பயிற்சிப் பழக்கம் தவறாமல் இருந்தது. பின்னர் வரவரக் குறைந்தது. ஆனாலும் மாபெரும் புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் காலத்தில் அவரது மாணவர்கள் நிகண்டு பயின்றவர்கள். சில மனப்பாடம் செய்தவர்கள். பெரும்புலவர் தியாகராசச் செட்டியாரும் மகாமகோபாத்தியாயர் எனப்படும் மிகப்பெரும் ஆசிரியருமாகிய உ. வே. சாமிநாத ஐயர் அவர்களும் உரிப்பனுவல் பயின்றவர். இக்காலத்தில் நிகண்டு என்றாலோ, உரிப்பனுவல் என்றாலோ அப்படியென்றால் என்ன? என்று வினவும் நிலைதான் உள்ளது. பல புலவர்களுக்கே இந்நிலை உண்டு.

நிகண்டு என்னும் சொல் நைகண்டுகம் என்னும் வடசொல்லின் திரிபாகும். தமிழில் மிகுதியாக வழங்கத் தொடங்கியது. உரிச்சொற்களின் தொகுதிதான் நிகண்டு என்றாலும் உரிச்சொல்லின் பெயருடனே உரிச்சொல் நிகண்டு என்றொரு நிகண்டு உண்டு. உரிச்சொற் பனுவல் மறைக்கப்பட்டு நிகண்டு பெரு வழக்காகியது. கலைக்கோட்டுத் தண்டு என்றொரு இலக்கண நூல் உண்டு. அதன் ஆசிரியர் கலைக்கோட்டுத் தண்டன். அவர் நிகண்டன் கலைக்கோட்டுத் தண்டன் என்று குறிக்கப்பெறுவார். இவர் பழம்பெரும் புலவர். நிகண்டு என்னும் சொல்லுக்குத் தொகுதி என்று பொருள். நிகண்டு நூல்களின் உட்பிரிவுகள் தேவப்பெயர்த் தொகுதி. மக்கட்பெயர்த் தொகுதி என தொகுதிப் பெயரால் குறிப்பிடப்படும். மற்றொரு பொருள் கூட்டம் என்பது. பல்பொருள் கூட்டத்து பலபெயர்த் தொகுதி எனற ஓர் உட்பிரிவின் தலைப்பில் கூட்டம் என்ற சொல்லைக் காண்கிறோம். இவ்விரு பொருள்கள் அல்லாமல் மூன்றாவது பொருளாகப் பேச்சு வழக்கில் உண்மை என்ற பொருள் ஏற்பட்டது. நிகண்டவாதி என்று வாதமிடுவோரில் ஒரு பிரிவினர் உள்ளனர். அவர் உண்மையை வாதிடுபவர் என்ற பொருளில் கையாளப்பட்டார். வாதமிடுவோர் இரண்டு கருத்துகளில் எக்கருத்து உண்மை? எக்கருத்தை நிலைநாட்ட வேண்

டும்? என்று காணும் குறிக்கோள் உடையோர். இவ்வாறு உண்மை காணப் படுவதால் நிகண்டிற்கு உண்மை என்ற பொருள் நேர்ந்தது. வழக்கில் நிகண்டுப்பேச்சு, நிகண்டு பேசுதல், நிகண்டு எழுதியோன் என்னும் தொடர்களில் எல்லாம் உண்மைப் பேச்சு, உண்மை பேசுதல், உண்மை எழுதியவன் என்ற பொருள்களில் நிகண்டு உண்மையாக அமைந்துள்ளது. இதன்படி நோக்கினால் நிகண்டன் கலைக்கோட்டுத் தண்டன் உண்மைக்கு வாழ்ந்தவனாகிய கலைக்கோட்டுத் தண்டன் என்று கொள்ளவேண்டும். இவ்வாறு உணமைப்பொருள் வழக்கிலிருந்ததே தவிர இலக்கிய அமைப்பில் இல்லை, நிகண்டிற்கே நிகண்டு அகராதி என்றொரு நூல் உண்டு. இவ்வாறு நோக்க நிகண்டன் என்பது நிக்ண்டு எழுதியவன் என்று குறிப்பிடாது. நிகண்டில் பயிற்சியும் மனப்பாடப் படிப்பும் ஓய்ந்து போனாலும் இக்காலத்திலும் ஆசிரிய நிகண்டு என்றொன்று எழுந்தது. இதை ஆண்டிப்புலவர் என்பவர் எழுதினார். இந்நூலை இக்காலத்தளவில் இறுதி நிகண்டு நூல் என்று சொல்லலாம். நூலகங்களில்தான் உரிப்பனுவல்களைக் காணமுடிகிறது. அதனினும் சில பழமையான நூலகங்களில்தான் பழைய பதிப்புகளைக் காண இயலும்.

இக்காலத்தில் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் திவாகரம் பிங்கலம், சூடாமணி முதலியவற்றைப் பதிப்பித்துள்ளனர். பெரும்பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையவர்கள் நாமதீப நிகண்டைப் பதிப்பித்தார். அதன் மறுபதிப்பாகத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் நான் பதிப்புத்துறைத் துணை இயக்குநராக இருந்தபோது மிக விருப்புடன் வெளியிட ஆவன செய்தேன். அக்காலத் துணைவேந்தர் முனைவர் வ. அய். சுப்ரமணியன் அவர்கள் என் வற்புறுத்தலை ஏற்றுப்பெரு மனத்துடன் இசைவு தந்தார்கள். அப்பதிப்பும் விற்பனையாகிவிட்டமை மகிழ்ச்சிக்குரியது.

உரிப்பனுவல்கள் பட்டியல் ஒருபுறமிருக்க அதன் எதிர்காலப் பயிற்சி பற்றி எண்ணினால் ஏக்கம் மட்டுமன்று. ஐயகோ! என்ற அழுகையும் சிலருக்கு வரலாம். தொன்மைப் பயிற்சி நூல், அதனினும் இக்காலத்தில் பயன்படாத நூல் ஏன் உலவ வேண்டும்? என்ற வினாவும் தவறில்லாததாக அமையலாம்.

இக்கால எழுத்து வழக்கிலும் பேச்சு வழக்கிலும் வடமொழியும் ஆங்கிலமும் ஆட்சிபுரிந்து கொண்டுள்ளன. இவ்வாட்சிகளால் தமிழ்ச் சொற்கள் பல

மறைந்துவிட்டன, பல மறைந்து வருகின்றன. பல மறைந்து போகும். எஞ்சுவது என்ன? அம்மா, அப்பா என்று இல்லத்தில் அழைத்து வழங்கும் உறவுச் சொற்கள் எஞ்சலாம். அவையும் நீண்டகாலத்திற்கு வாரா, ஏனெனில் அம்மா மம்மியாகி வருகிறது. அப்பா டாடியாகி வருகிறது. அங்கிள் வழக்கிற்கு வந்துவிட்டது. ஆன்ட்டியும் அவ்வாறே. உறவுச் சொற்களும் மறைந்தால் தமிழ் அச்சு நூல்களில் அவற்றின் பழைய பதிப்புகளில்தான் தமிழ் உருவத்தைக் காண முடியும். அண்டி வந்துகொண்டிருக்கும் எதிர்காலத்தில் இக்காலம் வழங்கும் வடமொழியும் தமிழும் ஏறிவிட்டால் என்ன எஞ்சும்? இவற்றைப் பற்றிச் சிந்திக்காத தமிழன்தான் எஞ்சுவான். அறிஞர்கள், பாடநூல்களில் பாடங்களை அமைப்பவர்கள் இவ்வெதிர்கால நிலையைச் சற்று நோட்டமிட வேண்டும். நோட்டமிட்டுப் பாட அமைப்பில் இவை வாய்க்க, வாய்ப்பாக அமைய இடமுண்டாக்க வேண்டும். பாடங்களை அமைப்பவர்கள் கூட இப்போதுள்ள பாடநூல் பதிப்பகத்தாரின் விருப்பத்திற்குத் தலைசாய்த்தும் இணங்கிப் போகின்றனர் என்று பேசப்படுகின்றது. இந்நிலை தமிழுக்கு மேலும் தேக்கத்தையும் ஏக்கத்தையும் தருவதாகும்.

'சொல்லில் உயர்வு தமிழ்ச்சொல்லே' என்று பாடிய பாரதி பிறர் பேசுவதாக எடுத்துக்காட்டி, ஒரு பாடலில்

" மெல்லத் தமிழினிச் சாகும் — அந்த
மேற்கு மொழிகள் புவிமிசை யோங்கும் "

என்று பதிந்து வைத்துள்ளார். அவரே அடுத்து, என்று சொலத்தகாதவன் சொன்னான் என்று தன் உள்ள எரிச்சலைக் காட்டிக்கொண்டார். தமிழ் உணர்வில் ஊறிய பாரதிக்கு அந்த எரிச்சல் வயிற்றெரிச்சலாகவும் இருந்திருக்கும். பாப்பாவை ஓடி விளையாடச் சொன்ன அவன், தமிழைத்

'தொழுது படித்திடடி பாப்பா' என்று பாடியமை அவன் உள்ளுணர்வின் வடிப்பாகும். பாரதியின் எண்ணங்கள் எல்லாம் எந்த முடிவைக் கொண்டிருந்தன என்றால், அவன் தன் கட்டுரை ஒன்றில் எழுதியத் தொடர்தான் நினைவுக்கு வருகிறது.

'நான் சொல்வதைக் குறித்து வைத்துக்கொள். தமிழ் எதிர்காலத்தில் ஒளிவிட்டுத் திகழும்' என்று தன் கருத்தைக் கல்வெட்டாக்கி உள்ளான்.

ஒரு காலத்தில் பாரதி தமிழறியாதவன் என்று சொன்ன பெரும்புலவர்களும் வாழ்ந்தனர். பாரதி எழுதிய பாஞ்சாலி சபதத்தை அறிவோம். அதில்

ஒரு பதிப்பில் பிற்சேர்க்கையாக பாரதியே குறிப்புரை எழுதியுள்ளான். அதைப் படித்தால் பாரதியின் தமிழுணர்வும் புலமைத் தெளிவும் புலனாகும். பாரதியின் கல்வெட்டாகக் குறித்த கருத்து கண்கூடாகக் காணப்படவேண்டுமென்றால் பன்முயற்சிகள் தமிழரிடையே, தமிழ் பயின்றோரிடையே, தமிழகத்து அரசியலாரிடையே, அவரினும் தமிழுணர்வு உணர்வுள்ளவரிடையே முளைத்துத் தளிர்த்துத் தழைத்துப் பூத்துக் காய்த்துக் கனிந்ததாக வேண்டும். அவ்விதை முளைத்து நம் வழியினர்க்கு வழிகாட்டவேண்டும். இவ்ற்றிற்குச் செய்ய வேண்டிய பலவற்றுள் உரிப்பனுவலைப் பாடமாக்கலும் பயிலச் செய்தலும் ஒன்றாகும். அப்பொழுதுதான் உரிப்பனுவல் தோன்றியதன் கதிர் விளையும்.

## 9. பனுவலில் மணி: சூளாமணியா? சூடாமணியா?

உரிப் பனுவல்களில் இந்நூலில் சூடாமணிச் சொற்கள்தான் இன்றியமையாதது. உரிப்பனுவல்களின் பெரும் அமைப்பு, உட்பிரிவு முதலியவை சற்றுச்சற்றே வேறுபட்டாலும் அடிப்படைக் கருத்து நழுவவில்லை. சூடாமணி நூற்செய்யுட்கள் அறுசீர் விருத்தங்கள். பயிலுவதற்கு எளியவை. அதனினும் இந்நூற் பதிப்பில் பதிப்பமைப்பு மேலும் எளிமையாக்கும்.

ஆனால் இந்நூலின் இறுதியில் மெய்யெழுத்துக்களை எதுகையாக வைத்துக் ககரத்திலிருந்து தொடங்கி னகரம் வரை எதுகை அமைப்பில் நூற் பிரிவு முடிகின்றது. இதன் தலைப்பு ககர வர்க்கம்—னகர வர்க்கம் என்று அமைந்துள்ளது.

இது அத்துணைச் சிறப்புடையதாக இந்நூலுக்கு அமையவில்லை. வலிந்து சொற்களை இழுத்தமைப்பதாக உள்ளது. இஃதொரு குறை என்றே சொல்லலாம்.

உரிப்பனுவல்களில் சூடாமணிதான் மணிச்சொல்லைப் பெற்றுள்ளது என்றாலும் பயிலுமளவிலும் ஒளிவிடச்செய்யும் மணிதான். சூடாமணிக்கு முந்தைய உரிப்பனுவல் ஆசிரியர்கள் பலர் தம் பெயரையே நூலுக்கும் அமைத்தனர். ஆனால் இந்நூலின் ஆசிரியர் மண்டலப் புருடர் தம் நூலுக்கு வேறு பெயரை அமைத்துள்ளார். அதனைப் புது வகையாகவும் அமைத்துள்ளார். புத்தொளி உள்ளதாகவும் அமைத்துள்ளார். அப்புத்தொளியையும் மணியொலியாக அமைத்துள்ளார்.

## சூளாமணியா? சூடாமணியா?

ஒருவன் மகனுக்கு மகன் பிறந்தால் அவன் 'பேரன்' எனப்பெறுகிறான். 'பெயரன்' என்பதுதான 'பேரன்' ஆயிற்று.* மகளானால் 'பேர்த்தி-பெயர்த்தி' ஆகிறாள். பேர்த்தியைப் 'பேத்தி' என்கிறோம். பாட்டன் பெயரை மகன் பெற்ற குழந்தைக்கு இடுவது மரபு. செட்டிநாட்டு நகரத்தாரிடையே இம் மரபைக் காண்கிறோம். அழகப்பாவின் பேரன் அழகப்பன்; முத்துக்கருப்பன் பேரன் முத்துக்கருப்பன். பெண் குழந்தைகளும் அழகம்மை, முத்துக்கருப்பி என்று பெயரிடப்படுகின்றனர்.

பாட்டனுக்கே 'பேரன் — பெயரன்' என்ற வழக்கும் உண்டு. பேரனால் பாட்டன் பெயர் தொடர்கிறது; விளங்குகிறது. பேரனால் பெயரும் புகழும் பெறும் பாட்டனையே 'பேரன்' என்பதும் உண்டு. 'நீ என் அடிமை' என்று தடுத்தாட்கொள்ள வந்த அந்தண வடிவத்தவர் சுந்தரமூர்த்தியிடம் 'உன் பாட்டன் எழுதிக்கொடுத்த எழுத்தைப் பார்' என்பவர்,

> 'ஐயா மற்றுங்கள் பேரனார் (பாட்டனார்) தம்
> தேசுடை எழுத்தேயாகில் தெளியப் பார்த்தறிமின்'

என்றதைச் சேக்கிழார் காட்டுகிறார். இவ்வாறாகப் பாட்டனும் 'பேரன்' ஆவான். ஆனாலும் குழந்தை, பேரன் என்று பெயர் பெறுவதே பெரு வழக்கு.

இவ்வாறு குழந்தைக்குப் பெயர் சூட்டப்பெறுவது தொடங்கிற்று. பின்னர்ப் பாட்டன்களாகிப் பெயர்பெற்ற பெரியோர் பெயரை இட்டனர். தொடர்ந்து மரபால் பெயர், இயல்பால் பெயர், நிறத்தால் பெயர், உருவத்தால் பெயர், செயலால் பெயர், தெய்வத்தால் பெயர் எனப் பெயரிடுதல் வளர்ந்தது.

இதுபோன்றே நூலுக்குப் பெயர் சூட்டுவதும் தொடங்கி வளர்ந்தது. முன்னோர் செய்த முதல் நூலின் பெயரை இடுவது என்று தொடங்கியது. பின்னர், எழுதிய ஆசிரியன் பெயரால், நூலின் மிகுதிப் பொருளால், பாடல்களின் எண்ணிக்கை அளவால், நூல் செய்தற்கு உதவி செய்வித்தோனால், நூலின் தன்மையால் பெயர் சூட்டினர். இவ்வறுவகைக் கரணியங்கள் அல்லாமல் இடுகுறியாலும் நூல் பெயர் பெறும் என்றார் பவணந்தியார். இவற்றிற்குச் சான்றுகள் காட்டும் மயிலைநாதர் என்னும் உரையாசிரியர் 'சூளாமணி' என்னும் காப்பியம் 'தன்மையால் பெயர் பெற்றது' என்றார்.

---

* **பெயர், பேர் என்னும் இரண்டையும் இந்நூலாசிரியர் கையாண்டுள்ளார்.**

மண்டலவர் படைத்த இந்த உரிப்பனுவலும் தன்மையால் பெயர் பெற்றது. தன்மை என்றால் எதன் தன்மை? மணியின் தன்மை. மணியின் தன்மை என்ன? திரட்சியும் ஒளியுமான தன்மை கொண்டது மணி. இந் நூலும் பெயர்களால் தொகுக்கப்பெற்ற திரட்சி கொண்டது; பொருளாலும் அமைப்பாலும் விளக்கந்தரும் ஒளி கொண்டது. இவ்வாறு மணியின் தன்மையால் பெயர் பெற்றது. மணி என்றால் எந்த மணி? மணி ஒன்பது வகைப் படும். அவை:

மாணிக்கம், நீலம், வைரம், வைடூரியம், கோமேதகம் மரகதம் புட்பராகம், முத்து, பவளம் எனப்படும். இவை ஒன்பதும் மணிகளே. ஆயினும், இவற்றுள் இரண்டு மட்டும் சிறப்பாக மணிப்பெயருடன் கூறப்படும். அவை மாணிக்கமும் நீலமும். நீலமணி, நீலமாமணி என்று நீலம் குறிக்கப் படும்.

'நீலமணி மிடற்று ஒருவன்' என்றார் அவ்வையார்.

'நீல மணிப்பெயர் மணி என நிகழ்த்தும்' என்று பிங்கலரும்,

'மணியெனும் பேர் நீலமாமணியின் பேரே' என்று மண்டலவரும் பெயர் குறித்தனர். மணி என்பதே நீலத்தின் பெயர் என்றனர். நீல நிறக் கண்ணன் மணிவண்ணன் எனப்பெற்றான்.

மற்றொரு மணியாகிய மாணிக்கமோ 'மாணிக்கமணி' எனப்படுவ தில்லை. மணி என்றாலே மாணிக்கந்தான். சங்க இலக்கியங்களில் மாணிக்கம் என்னும் சொல் இல்லை.

'வடமலைப் பிறந்த மணியும்' என்ற உருத்திரங்கண்ணனார் தொடருக்கு நச்சினார்க்கினியர், 'மேருவிலே பிறந்த மாணிக்கம்' என்றும்

'பாம்பு மணி உமிழ' என்ற கபிலர் தொடருக்கு. 'பாம்பு மாணிக்கத்தை ஈன' என்றும் விளக்கம் தந்தார்.

சிவந்த உதட்டிற்கு உவமை கூற வந்த மருதன் இளநாகனார் 'மணி புரை செவ்வாய்' என்றார்.

சங்க இலக்கியங்களில் எங்கும் இவ்வாறாக. சிலம்பிலிருந்து மாணிக்கம் தெரித்து விழும் சிலப்பதிகாரத்திலும் 'மாணிக்கம்' என்ற சொல் இல்லை.

'எண்காற் பொற் சிலம்பு மணியுடை அரியே' என்று கண்ணகியைப் பேசவைத்த இளங்கோவடிகளார்,

'வாய்முதல் தெரித்தது மணியே' என்றும்,

'மணிகண்டு தாழ்ந்த குடையன்' என்றும் மாணிக்கத்தை 'மணி' என்றே குறித்தார். இலக்கியங்களிலும் உரைகளிலும் மாணிக்கத்தை 'மணி' என்று அறியும் நாம் மாணிக்கவாசகரை 'மணிவாசகர்' என்கின்றோம்.

மணியை வைத்து இவ்வளவு விளக்குவது இந்நூற் பெயரின் அடித் தளத்தை அணுகுவதற்காகும். இவ் அணுகலுக்கு நீலத்தைப்பற்றி இந்த அளவே அறிவது போதுமானது. எனவே, நீலத்தை இவ்வளவோடு நிறுத்தி மாணிக்கத்தைக் காணவேண்டும்.

மாணிக்கத்தின் நிறம் சிவப்பு.

'மாமணி செம்மணி மாணிக்கம்' என்று பிங்கலர் காட்ட,

'செம்மையே மற்றை மாமணி மாணிக்கம்' என்று மண்டலவர் தேற்றேகாரம் கொடுத்து உறுதிப்படுத்தினார்.

இதன் சிவந்த நிறத்திற்கு.

மாதுளம் பூ, செம்பருத்திப் பூ, கவிரம் பூ, மஞ்சாடிப் பூ, உலோந்திரப்பூ குன்றிமணி, முயலின் குருதி, செம்மை ஈயம் (சிந்தூரம்) ஆகிய எட்டையும் அடியார்க்குநல்லார் மேற்கோள் பாடலால் காட்ட, கல்லாடனாரும் வழிமொழிந் தார்.

மிளிரும் மாணிக்கத்தின் ஒளிக்கு,

கதிரவன், நெருப்பு, விளக்கு, மின்மினி, தாமரைப் பூ, செங்கழுநீர்ப் பூ மாதுளம் பூ, மாதுளை முத்து, வானம்பாடியின் கண், பட்டுப்பூச்சி ஆகிய பத்தையும் முன் கூறிய இருவரும் குறித்தனர்.

சிவந்தும் திறந்தும் விளங்கும் இம்மணி உண்மையில் மணிகளில் எல்லாம் தலையாய மணி. இதன் பெருமையை எல்லாம் உளத்துக்கொண்டே மண்டலவர் தம் நூலுக்குப் பெயர் சூட்டினார். ஆனால் மணி என்னும் ஒரு சொல் மட்டிலும் இந்நூற்பெயரைக் குறிக்கவில்லை, அடைமொழியுடன் சேர்ந்த கூட்டுச் சொல்லாகவே குறிக்கிறது. ஒரே ஒரு அடைமொழி கூடிய கூட்டுச் சொல்லாக அமைந்திருக்குமானால் ஆய்விற்கு இடம் இல்லை. இரண்டு வகை அடைமொழிகள் தனித்தனியே மணியுடன் கூடிக் குறிப்பதால் சற்று ஆழமாகக் காணவேண்டியுள்ளது.

மணிகள் அணியாகும் சிறப்பியல்பை வைத்து 'தெய்வமணி' ஐந்து என்று கூறினர். அவை,

சிந்தாமணி, சூளாமணி, சிமந்தகமணி, சூடாமணி, கௌத்துவமணி.

இவற்றுள் 'கௌத்துவம்' மார்பில் அணியப்படுவது. 'சீமந்தகமணி' கழுத்தில் அணியப்படுவது. மற்றைய மூன்றும் தலையில் சூட்டப்பெறுவன. எனவே 'சிகாமணிகள்' என்றும் 'தலைமணிகள்' என்றும் சிறப்பிக்கப்படும்.

இம்மூன்றும் சொல்லமைப்பில் ஓர் ஒற்றுமை கொண்டவை. சிந்தா சூளா, சூடா என்னும் ஒருவகை கொண்டவை. இலக்கணத்தால் இவை ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் எனப்படும்; எதிர்மறைப்பொருள் கொண்டவை. இவற்றைக்கொண்டு சிந்தாத மணி, சூளாத மணி, சூடாத மணி எனப் பொருள் கொள்ளலாமா? இவ்வாறு கொள்ளத் தடை உண்டு. 'பாயா வேங்கை' என்பது ஒரு வழக்கு. பாயும் புலியை நீக்கி, நிற்கும் வேங்கை மரத்தைக் குறிக்கும். இவ்வாறு மேற்கண்ட அடைமொழிகளைக் கொண்டால் இன்றியமையாத மணியையே நீக்கிவிடும். ஆனால், ஆசிரியர் பெயர் அறிய முடியாத 'தமிழ் விடு தூது' என்னும் நூல்,

" சிந்தா மணியென் றிருந்த உனைச்
சிந்தென்று சொல்லிய நா சிந்துமே "

என்று சிந்தாத மணிபோலப் பாடியது. எதிர்மறைக் குறிப்பு இருப்பினும் நயத்திற்காகச் சொல்லப்பட்டது; மணி சிந்தும் பொருள் அன்று. வேண்டு மானால் சிதறும் பொருள் எனலாம். மேலும், சிவபெருமானைப் பாடும் சம்பந்த முனிவர் என்பார்,

'வயற்கமலைத் தேவர்கள் சிந்தாமணி' என்றார். சிவபெருமான் சிந்தாத என்னும் எதிர்மறைப்பொருளால் பாடப்படுபவர் அல்லர். இவ்வடை மொழியுடன் கலைமகள் சிந்தாதேவி எனப்பெற்றாள். சாத்தனார்,

'சிந்தாதேவி செழுங்கலை நியமத்து'

என்றும்,

'சிந்தா விளக்கின் செழுங்கலை நியமத்து'

என்றும் கலைமகளைக் குறித்தார். எதிர்மறைப் பொருள் கொண்டால் கலை மகள் 'சிந்தாதவள்' என்பது பொருந்தாது. விளக்கிற்கும் இவ்வெதிர்மறை பொருந்தாது. இவ்வெதிர்மறைச் சூழலிலிருந்து மீள மாணிக்கவாசகர் ஒரு வழி காட்டுகிறார்,

'சிந்தாமணி... ... ... ...'' என்ற ஒரு பாடலைத் தொடங்கியவர் நான்காவது அடியில் எதுகையோடு 'சிந்தாகுலம்... ... ... ...' என்றொரு சொல்லை வைத்தார். சிந்தாகுலம் என்றால் மனக்கவலை. சிந்தை—ஆகுலம் எனப் பிரியும். (ஆகுலம்—கவலை) இவ்வாறே சிந்தை—தேவி எனப்பிரிந்து பொருள் தரும். இதற்குப் பொருள் விரித்த உ. வே. சா. அவர்கள்

'யாவர்க்கும் சிந்தையிற்றோன்றிச் சொற்பொருள்
உணர்த்துபவன் என்பது பொருள்'

என்றார்.

சிந்தாமணியும் இது போன்றே சிந்தை மணி என்று பிரிந்து பொருள் தரும். சிந்தாமணி என்னும் பெயர்கொண்ட நூல் சீவக சிந்தாமணி. சீவகன் கதையைக் கூறுவது. ஐம்பெருங்காப்பியங்களில் ஒன்றானது. இப்பெயரை இக்காப்பியம் பெற்றதற்குக் காரணியமும் தன்மையே. சிந்தாமணியாகச் சீவகன் கொள்ளப்பட்டுள்ளான். அவன் பிறந்து கிடந்தபோதே தாய் விசயை,

'சிந்தாமணியே கிடத்தியே' என்றாள். பின்னும் அதன் ஆசிரியர் திருத்தக்க தேவர்,

'சிந்தாமணி ஏய்ந்த சித்திர மண்டபத்துச் செல்வன் புக்கான்' என்றார். இதற்குப் பொருள் தந்த நச்சினார்க்கினியர்,

'சிந்தாமணியின் தன்மை பொருந்திய செல்வன்' என்றார். காப்பியத்தை நிறைவேற்றும் தேவர்

'சிந்தாமணியின் சரிதம் சிதர்ந்தேன்' (விரிவாகச் சொன்னேன்) என்று சீவகனைச் சிந்தாமணியாக நிறைவேற்றினார். இச் சீவகன் என்னும் சிந்தாமணியை, நச்சர்

'மேல் நினைத்தன கொடுக்கின்றானாதலின்' 'சிந்தாமணி ஏய்ந்த செல்வன் என்றார்' என்று விளக்கி, சிந்தாமணி 'நினைக்கின்றவற்றைக் கொடுப்பது' என்னும் கருத்தையும் வெளிப்படுத்தினார்.

'சிந்தாமணியைக் கண்ட பொருள் தொடர்பில் சூளாமணியைக் காண வேண்டும். சூளாமணி பொருளில் சிந்தாமணியுடன் ஒத்தும் வேறுபட்டும் நிற்கிறது. உடன்பாட்டுப் பொருளில் ஒத்து நிற்கிறது. எதிர்மறைப் பொருளில் வேறுபடுகிறது. அதாவது சூளாத மணி என்பதும் பொருந்துகிறது. சூளா என்னும் சொல்லின் பொருள் வழியாக அதனைக் காணலாம்.

தொளை என்றால் ஓட்டையிடப்படுவது. தொள் என்பதற்குத் தொளையிடு என்று பொருள். தொளையிடப்பெற்ற காதைத் தொள்ளைக்காது என்கிறோம். இத் தொள் என்பது தொள்கர் என்று தொழிற்பெயராகும்.

"தொள்கலும் குயிறலும் தொளைத்தல் ஆகும்" என்றார் பிங்கலர். இத் தொள்கல் தோட்டல் தோட்கல் என்று தொளையிடுதலைக் குறிக்கும்.

'கேள்வியால் தோட்கப் படாத செவி' என்று வள்ளுவர் சான்று தருகிறார். இது தோளாத என்று பெயரெச்சமாகித் தொளையிடப்பெறாத என்னும் எதிர்மறைப் பொருளைத் தரும்.

இதுபோன்றே சூள் என்னும் சொல் வளர்ந்து சூழ்தல் ஆகும். குடைதல் தொளைத்தல் என்பன இதன் பொருள்கள். இதன் இலக்கியச்சொல் குயிறல். சூள் எதிர்மறைப் பொருளுக்காகச் சூளாத என்றாகிச் ஈறுகெட்டுசூளாஎன்றாகும். மணியுடன் புணர்ந்து சூளாமணி ஆகும். தொளையிடப்பெறாத மணி என்று பொருள்.

மணியை மாலையாக்க வேண்டுமானால் அதைத் தொளையிட்டு நூலிலோ பொன் சரட்டிலோ கோக்க வேண்டும். இவ்வாறு முத்து முதலியவற்றில் தொளையிட்டுக் கோக்கும் கலை தெரிந்த தொழிலாளர் இருந்தனர்.

'மணி குயிற்றுநர் முத்தம் கோப்பார் ஆகும்' என்று பிங்கலர் அவரை 'மணி குயிற்றுநர்' என்றார். இன்று இக்கலைத் தொழிலினர் தமிழகத்தில் இல்லை. ஐதராபாத்திலும் சூரத்திலும் மிகுதியாக உள்ளனர்.

நூலில் மணி கோக்கப்படுவதை வைத்து வள்ளுவரும்,

'மணியில் திகழ்தரு நூல்போல்' என்று உவமையாக்கினார். இக்குறள் ஒரு கருத்தை அறிவிக்கிறது. மணியில் கோக்கப்பட்ட நூல் மணிக்குள் இருந்து திகழ்தரும். இதனால் அதாவது நூல் உள்ளிருப்பதால் மணி தன் இயல்பான ஒளியில் குறைகின்றது. திருத்தக்க தேவரும் 'கோவா மணி' என்று பாட உரை வகுத்த நச்சர் 'துளையிடாத மாணிக்கம்' என்றார். தொளையிடப் பெறாத மணியில்தான் மணியின் இயல்பான ஒளி உண்டு. தொளையிடப் பெறல் மணிக்குக் குறை. எனவே, தோளாத மணி—சூளாத மணிதான் சிறந்தது. இவ்வாறு சூளாமணி சூளாத மணி என்று எதிர்மறைப் பொருளை தந்து தன் பெருமையை நாட்டுகின்றது. இவ்விரண்டு சொற்களையும் இணைத்துக் காட்டுவதுபோல் திருத்தக்க தேவர்,

"தோளா மணி குவித்தாற் போன்றிலங்கு தொல்குலத்துச்
சூளா மணியாய்ச் சுடர இருந்தானை"

என்று சீவகனைப் பெருமைப்படுத்தினார். நச்சர் இச் சூளாமணியை 'நாயக மணியாய் விளங்க இருந்தானை' என்றார். இவ்வகையில் சூளாமணி எதிர் மறைப் பொருளாலும் தகுதியுடையதாகின்றது. மாணிக்க மணி கோக்கப் படுவதைவிடப் பதிக்கப்படுவதே சிறப்பு.

இவ்வாறு எதிர்மறைப் பொருளன்றி உடன்பாட்டுப் பொருளும் சூளாமணிக்கு உரியது. சூள் என்பதற்கு உயர்ந்த இடம், உச்சி எனப் பொருள்.

சூளி உச்சியை உடையது;

சூளை உச்சியில் முடியில் அணியும் அணி

குளிகை உச்சியை உயரத்தை உடைய குன்று. செய்குன்றையும் குன்று போன்று உயர்ந்த கோபுரம் கொண்ட வளமனையையும் குறிக்கும்.

'கோபிர மன்றம் சூளிகை' என்றார் கச்சியப்பர். தலையில் அணியப் பெறும் அணிவகை ஒன்றினையும் சூளிகை குறிக்கும் என்பதை,

'சூளிகையும் சூட்டும்' என்னும் சேரமான்பெருமாள் கூற்றால் அறிய லாம். உச்சியில் தலையில் அணியப்பெறும் சூளிமணி சூளிகைமணி சூளாமணி ஆயிற்று. ளகரம் சொல்லில் ழகரமாக ஆதல் வழக்கு. இவ்வழக்கில் சூள் சூழ் ஆகித் தலையணியைக் குறிக்கும்.

'மென் பூச் சூழும் (சூழ் உம்) எழுதி' என்றார் மணிவாசகர். சூழியானை யின் முகபடாம். முகபடாம் அணிந்த யானை 'சூரியானை' எனப்பெறும்.

'சூழியானைச் சுடர்ப்பூண் நன்னன் என்பர் மாமூலனார். மண்டலவரும் இந்நூலில் 'சூழியே சுனையும் வெய்ய தும்பியின் முகபடாமும்' என்றார்.

'நெடுமதிற் சூழி' என்னும் ஐயனாரிதனார் ஆட்சியில் மதிலின் உச்சி சூழி எனப்பெற்றது. இவ்வளர்ச்சியில் சூளிமணி, சூழிமணி என்றும், சூளாமணி சூழாமணி என்றும் சொல்லமைப்பு கொண்டது. சூழாமணி என்பதை நினைவிற் கொள்ளவேண்டும்.

ஐஞ்சிறு காப்பியங்களில் முதன்மையாக வைக்கப்பெற்ற காப்பியம் சூளாமணி எனப்பெயர்பெற்றது. சீவகனைச் சித்தாமணி என்று சிறப்பித்தமை போன்று சூளாமணிக் காப்பியத் தலைவன் பயாபதி என்பான்.

'உலகின் முடிக்கொரு சூளாமணி ஆகினான்' என்று சிறப்பித்துள்ளார் தோலாமொழித்தேவர்.

இச்சூளாமணிச் சொல்லமைப்பிலேயே சூடாமணி நம்மை அணுகுகிறது. சூடாமணியும் சூளாமணி போன்றதே. இரண்டையும் ஒன்றாகவும் கொள்வர். ஆனால் தெய்வமணி எனப்பெற்ற ஐந்தில் இரண்டும் வெவ்வேறாக வைத்து எண்ணப்படுவதால் தனித்தனியே காணப்பெற நேர்கின்றது

சூடு உச்சி, குடுமி

சூடம் தலையுச்சி

சூடலம் தலை

சூடு (வினையாக) சூடுதல் தலையில் அணிதல்

சூடிகை தலையில் சூடப்பெறுவது

மூடு மூடப்பெறுவது மூடை; மேடு மேடானது மேடை; கூடு கூடானது கூடை. இவை போன்று சூடப்பெறுவது சூடை. சூடப்பெறும் மணி சூடைமணி.

'சூடைமணி' என்னும் சொல்லுருவத்திற்குக் கம்பர் சான்று தருகிறார். இராமனிடம் அடையாளப் பொருளாகக் கொடுக்குமாறு சீதை தான் பொதிந்து வைத்திருந்த மணியை அனுமனிடம் கொடுப்பவள்,

'**சூடையின் மணி** கண்மணி ஒப்பது

ஆடையின்கண் இருந்தது பேரடையாளம்'

என்றாள். '**சூடை**' என்னும் சொல்லாட்சியை அழுத்தமாக்குவது போன்று அடுத்த அடியில் எதுகையாக '**ஆடை**' என்று அமைத்துள்ளார். எனவே

'**சூடைமணி**' என்பது உரிய சொல்.

நிரம்பவழகிய தேசிகர் என்பாரும், '**சூடை** விளங்கு மாமணி' என்று 'சூடை' என்னும் சொல்லுருவைக் காட்டினார்.

சிந்தை + மணி = சிந்தாமணி;

சூளை + மணி = சூளாமணி போன்றே

சூடை + மணி = சூடாமணி ஆயிற்று.

சிகை + மணி = சிகாமணி எனப்படுவதும் மேலும் ஒரு சான்றாகும்.

'சூடாமணி' என்பதற்குத் தலையாய சிறந்த மணி என்று பொருள். இச்சூடாமணி, சூளாமணியை ஒத்ததே. ஆனால், இரண்டும் ஒன்று அன்று என்பதை நினைவிற் கொள்ளவேண்டும். உடன்பாட்டுப்பொருள் ஒத்தது; எதிர்மறைப்பொருளில் வேறுபட்டது என்பதைக் குறிப்பாகக் கொள்ளல் வேண்டும்.

மணி சூடப்பெறுவதற்கு உரியது. சூடப்பெறாத மணி பயன்படாத வீண் பொருள்.

வாழ்வுப் பயன்பெறாத கணவனை இழந்தவள் 'கைம்பெண்' எனப் பெறுவாள். கைம்பெண்ணைப் பாடவந்த பாவேந்தர் பாரதிதாசனார்

" பாடாத் தேனீ, உலவாத் தென்றல்
பசியாத நல்வயிறு பார்த்ததுண்டோ "

என்று அடுக்கினார். இவைபோன்று சூடப்பெறாத மணி 'சூடாமணி' என்றால் சிறந்த இந்த மணியும் கணவனற்ற 'கைம்பெண் மணி'யாகி அவலப் பொருள் ஆகும். எனவே எதிர்மறைப் பொருள் பொருந்தாது.

நிறைவாகச் சூடைமணி—சூடாமணி என்பதே பொருந்துவது.

இதுவரை, மணி

சிந்தாமணி

சூளாமணி

சூழாமணி

சூடாமணி

எனும் சொல்லமைப்புகளும், பொருள் விரிவுகளும் காணப்பட்டன. ஒவ்வொன்றும் தனித்தனியே ஒவ்வொரு நூலுக்கும் பெயராயிற்று.

மணிப்பெயரில் அகநானூற்றின் இரண்டாவது பகுதி 'மணிமிடை பவளம்' எனப்பெற்றது; 'மணிமேகலை' காப்பியப் பெயர். இவை மணிச்சொல்

தொடக்கத்தில் அமைந்தவை. இடையில் அமைந்து நான்மணிக்கடிகை இரட்டை மணிமாலை, மும்மணிமாலை, மும்மணிக்கோவை, நான்மணிமாலை நவமணிமாலை, பன்மணிமாலை என மாலை நூல்கள் பெயர்பெற்றன.

உரிச்சொல் புனுவல் நூல்களும் 'அபிதான மணிமாலை' 'நவமணிக் காரிகை நிகண்டு' என இடைமணிப் பெயர் பெற்றுள்ளன.

அடைமொழி பெற்ற மணிப்பெயரில் முதலில் சிந்தாமணிதான் நூற் பெயராயிற்று. திருத்தக்கதேவர்தாம் முதலில் சிந்தாமணிச் சொல்லைத்தமிழில் அறிமுகம் செய்தவர். இச்சொல் அவர் படைப்பன்று. அவர் ஆக்கிய சீவக சிந்தாமணிக் காப்பியத்திற்கு நான்கு வடமொழி நூல்களை மூலமாகக் கொண்டார். அவற்றுள் ஒன்று கத்திய சிந்தாமணி என்பது. இதில் உள்ள சிந்தாமணியையே தம் நூலுக்குக் கொண்டார். தொடர்ந்து நிகண்டு நூலிலும் சிந்தாமணி பெயருடன் சிந்தாமணி நிகண்டு (கி. பி. 1874) என் றொன்று உருவானது. இதை எழுதியவர் யாழ்ப்பாணத்து வைத்தியலிங்கம் பிள்ளை. சூடாமணிப் பெயரில் வேதகிரியார் சூடாமணி என்றொன்று உண்டு. இந்நூல் அறுநூறு செய்யுள்களைக் கொண்டது. பத்தொன்பதாம் நூற் றாண்டில் பல்பொருட் சூடாமணி என்றொரு நூல் உருவாயிற்று.

சூடாமணிப் பெயரில் மதங்க சூளாமணி என்றொரு இசைநூல் உண்டு. வேறு சிறுசிறு நூல்களும் எழுந்துள்ளன. எத்தனை சூடாமணிப் பெயர்க ளிருப்பினும் இச்சூடாமணி நிகண்டுதான் பயில்வோருக்கு அறிமுகமாகவும் சிறப்புடையதாகவும் அமைகின்றது.

இனி இத்தகைய சிறப்புடைய நூலை எழுதிய ஆசிரியர் அறிந்து கொள்ளத் தக்கவர்.

## 70. மணியின் மண்டலவர்

சூடாமணி நூலின் ஆசிரியர் மண்டலவர் எனப்படுவார். இப்பெயர் அவருக்கு ஏன் அமைந்தது? என்பது கருதத்தக்கது. நாட்டுப் பிரிவில் இக் காலத்தும் வட்டம், மாவட்டம், மண்டலம் என்று விரிந்து அமைவதைக் காண்கின்றோம். அவ்வாறு ஒரு மண்டலத்துக்குத் தலைவராக இருந்து இப் பெயர் பெற்றார் என்று எழுத முடியவில்லை. இந்நூலின் சிறப்புப் பாயிரத்தில் தன்னைக் குறிப்பிடும் இவர் 'மண்டலவனே' என்கின்றார். தன்னடக்கமாக அன் விகுதியிட்டுக் கூறப்பட்டிருக்கலாம். ஆனால் இந்நூலின் முதற்பதிப்பில் மண்டலப்புருடர் எழுதிய சூடாமணி நிகண்டு என்றுள்ளது. மண்டலவர்.

"சூடாமணியென ஒன்று சொல்வன்' என்றுதான் எழுதினாரேயன்றி சூடாமணி நிகண்டு என்று பெயரைக் குறிக்கவில்லை. ஆனால் சூடாமணி நிகண்டு என்றே பதிப்புகளில் உள்ளது.

இவர் ஏன் மண்டலப்புருடர் எனக் குறிக்கப்பட்டார்? அருகபதம் பெற்றோரில் ஒரு சாரார் மண்டலவர் எனக் குறிக்கப்பட்டனர். அவ்வாறு அருகபதம் பெற்ற தகுதியில் இவர் பெயரை மண்டலவர் எனக் குறிப்பிட இயல வில்லை. அருகபதம் பெறுவதென்றால் துறவியாக இருந்து உரிய பக்குவங் களில் வளர்ந்து அப்பெயரைப் பெற வேண்டும். சமணத்துறவிகள் அடிகள் என்றே குறிப்பிடப்பெறுவர். இவர் அவ்வாறு குறிப்பிடப்படாமல் புருடன் என்ற சொல்லைச் சேர்த்துக் குறிப்பிடப்பட்டுள்ளார். புருடன் என்பது புருசன் என்னும் சொல்லின் திரிபாகும், புருசோத்தமனை புருடோத்தமன் என்றும் வழங்குகிறோம். வழக்கில் புருசன் என்பது கணவன் என்ற பொருளில் வருகிறது. அச்சொல்லுக்குப் பொருளோ ஆண்மகன் என்பதுதான். ஆனால் அப்பொருளை மனத்துட்கொண்டு எதிரில் போவோர் வருவோரை, 'அதோ ஒரு புருசன் போகிறான், இதோ ஒரு புருசன் போகிறான்' என்று சொல்ல முடியாது.

மண்டலவர் சமணத் துறவியாக இருந்தால் அவரை புருடன் என்ற சொல்லால் குறிப்பிட்டிருக்க வேண்டியதில்லை. புருடன் என்று குறித்தமை கொண்டு அவர் துறவியல்லாமல் சிறந்த சான்றோனாக வாழ்ந்துள்ளார் என்று தான் கொள்ளவேண்டும்.

இவர் இந்நூலைத் தேர்ந்து, கண்டு, உருவாக்கியுள்ளார். இவர் தம் சிறப்புப் பாயிரத்தில் இவர் நூலுக்கு முதல் நூலாக அருகக் கடவுளே எழுதிய தாகவும் கணதரர் என்பவர் வழிநூல் எழுதியதாகவும் குறித்துள்ளார். இவரைப் பாதுகாத்துப் போற்றி வளர்த்தவர் குணபத்திரர் என்ற வள்ளல். ஒவ்வொரு தொகுதியின் தொடக்கத்திலும் இக்குணபத்திரரைப் போற்றி வணங்குகின்றார். அதே போன்று ஒவ்வொரு தொகுதியின் ஈற்றுப் பாடலி லும் போற்றுகின்றார். ஒவ்வொரு தொகுதியிலுள்ள பாடல்களின் கூட்டு எண்களையும் குறிக்கின்றார். இவற்றால் இவரது நல்லியல்புகளையும் மரபு வழுவாமையையும் உணரலாம்.

இந்நூல் அறுசீர் ஆசிரிய விருத்தத்தால் ஆகியது. பிற நிகண்டுகளை நோக்க எளிமை கொண்டது. ஆற்றொழுக்கான அகவலோசை கொண்டது; செய்யுள்களைக் கொண்டது.

இந்நூலில் ஒவ்வொரு உட்பிரிவும் அருக வாழ்த்தைக்கொண்டு அமைந் துள்ளது, இதனை விடாக் கொள்கையாக இவர் கையாண்டுள்ளார். இவர்

நூலமைப்பில் குறிப்பிடத்தக்க மற்றொன்று, ஒவ்வொரு தொகுதியின் இறுதிப் பாடலும் அடுத்து வரும் தொகுதியை அறிமுகப்படுத்துவதாகும். இம் முறைகளைத் திட்டமிட்டுக் கையாண்டுள்ளார். இவர் வீரை மண்டலவர் என்றும் குறிப்பிடப்படுவார். வீரை என்பது இவரது ஊரின் பெயர். வீர மங்கலம், வீரமாங்குடி என வீரப்பெயருடைய பல ஊர்கள் உள்ளன. அவற்றில் ஒன்றன் சுருக்கமாக இஃது அமையும். காரைக்கால் காரை என்றும் காரைக்குடி காரை என்றும் குறிக்கப்படுவதுபோல இவ்வீரை அமைந்தது. சங்ககாலத்தில் வீரை வெளியானார் என்றொரு புலவர் வாழ்ந்துள்ளார். அவரது பாடல் ஒன்று புறநானூற்றில் உள்ளது. வீரைவெளி என்பது ஊர்ப் பெயர் என்றும் வீரைவெளியன் அவர் பெயர் என்றும் குறிப்பிடுவர். அவ்வாறன்றி வீரை என்பதையே ஊர்ப்பெயரின் சுருக்கமாகக் கொள்ளவேண்டும். வெளியன் என்று பெயர் அமைய வாய்ப்பு உண்டு. ஊரன் என்று பெயர் அமைவதும் வெள்ளிவீதியார் என்று தெருப்பெயர் கொண்டு அமைவதும் அறியப்பட்டவைகளே. அவ்வாறே கொண்டு வீரை வெளியனாரும் நோக்கத்தக்கவராவார். சங்ககாலப் பெயரமைப்போடு இவர் திகழ்வது குறிப்பிடத்தக்க ஒன்று.

இவர் பண்டையோர் வழக்கிலிருந்து வேறுபடாமல் தந்நூலை அமைத்துள்ளார். ஆனால் முன்னர்க் குறையாகக் குறிக்கப்பட்ட எதுகை காட்டி வர்க்கம் என்று அமைத்துள்ளமை வேறுபட்ட ஒன்றாகும். முந்நூல்களைப் போல இந்நூலும் பன்னிரண்டு தொகுதிகளில் அமைந்துள்ளது.

எனவே இவரை நாட்டுப் பிரிவின் பெயராகவும் அருகபதம் பெற்றவர் பெயராகவும் கொள்ள இயலவில்லை. இவ்வாறு தனியொரு தன்மையைக் குறிக்கவே புருடன் என்ற சொல் சேர்க்கப்பட்டு மண்டலப்புருடன் எனப் பட்டார். இவர் உரிச்சொற்களை ஆழ்ந்துகண்டு உளத்தில் பதித்து நிரலாக்கிக் கொண்டு பாடல்களில் அமைத்துள்ளார். முன்னூல்கள் இவருக்குத் துணை புரிந்திருப்பினும் இவர் தம் பாங்காகத் தனியொரு நடையையும் நிரலமைப்பையும் கையாண்டுள்ளார். இவற்றாலும் சூடாமணி நிகண்டு மிகுதியாகப் பயிற்சியில் கொள்ளப்பட்டமையாலும் இவரொரு தனிச்சிறப்பைப் பெறுகிறார். மண்டவம் என்றொரு சொல் உண்டு. அது மண்டலம் என்பதன் திரிபுதான். மண்டவம் என்றால் சங்கச்சாவடி என்று பொருள். இதனை நிகண்டிலும் காணலாம்.

## 11. சமயத் தாக்கம்

இந்திய நாட்டில் சமயங்கள் பெருகி வளர்ந்தன. இருப்பினும் சைவ சமயத்திற்கு மிகுதியும் இடம் உண்டு. வைணவம் பல இலக்கியங்களைத்

தந்துள்ளது. பௌத்தமும் இலக்கியங்களைத் தந்துள்ளது. மற்றையவை சிறுசிறு சமயங்கள். அவை ஒவ்வொன்றிற்கும் கோட்பாடுகளைக் குறிக்கும் நூல் உருவாகியது.

சமண சமயத்தவர், இளங்கோவடிகள் தொடக்கமாகப் பல இலக்கியங்களையும் இலக்கணங்களையும் படைத்துள்ளனர். இச்சமயத் துறவிகள் விடாப்பிடியான சமணக் கோட்பாடுகளைக் கையாள்பவர்கள். ஒரு காலத்தில் சமணத் துறவிகள் சில மன்னர்களுக்கு அஞ்சித் தலைமறைவாக வாழ வேண்டி நேர்ந்தது. அவ்வாறு வாழ அவர்கள் பெரும் பகுதியாக மலைகளையே தேர்ந்தனர். திருச்சிராப்பள்ளி மலைக்கோவிலில் உயரே அமைந்துள்ள உச்சிப்பிள்ளையார் கோவிலுக்குப் பின்புறத்தே ஒரு குடைவு மலை உள்ளது. அதில் உள்ள படுக்கை குறிப்பிடத்தக்கது. அதற்குச் செல்வதற்கே சற்று முயற்சியை மேற்கொள்ள வேண்டும். இதனைவிட நார்த்தாமலையில் ஒரு குடைவு உண்டு. அதை இக்காலத்திலும் சென்று காண வசதியாகக் கைப்பிடியை அமைத்துள்ளனர். அக்காலச் சமணத் துறவிகள் இங்கு மறைந்து வாழ்ந்தனர். அக்குடைவிற்குச் செல்வதற்கு மிகக் கூர்ந்த நோக்குடன் ஒவ்வொரு அடியாக மலைச்சரிவில் வைத்து ஏழு அடி நடந்தால் அவ்விடத்தை அடையலாம். சற்றுத்தவறினாலும் அடிவாரத்தில் பிணமாகவேண்டியதுதான். இதற்கு ஏழடிப்பட்டம் என்று பெயர். இவ்வாறமைந்த மலைக்குடைவுகளில் சமணத் துறவிகள் படுப்பதற்கு வழவழப்பாகப் பாறைக் கல்லைத் தேய்த்துத் தலையணை உயரமின்றிப் படுத்துள்ளனர். ஒரு படுக்கையில் அவருக்குரியதாக அவரது பெயர் வெட்டப்பட்டிருக்கும். முன்னர்க் குறித்த திருச்சி மலைக்குடைவில் உள்ள ஒரு படுக்கையில் சிரா என்று குறிக்கப்பட்டுள்ளது. அவர் வாழ்ந்தமையால்தான் திருச்சிராப்பள்ளி என்று பெயர் பெற்றது. பள்ளி என்பது படுக்கையையும் குறிக்கும். சிந்தித்து எழுதுமிடத்தையும் குறிக்கும். சமணத் துறவிகள் தம்தம் பள்ளியில் இரண்டையும் செய்தனர். சமணத் துறவிகளால் தமிழ் பல இலக்கியங்களையும் பல இலக்கணங்களையும் பெற்றுள்ளது. இவ்வகையில் சமணம் தமிழுக்குத் தொண்டாற்றியுள்ளதாகக் குறிக்கலாம். அத்தொண்டால் பயன்பெற்றோர் தமிழர்.

தமிழ்நாட்டில் மட்டுமின்றி வடபுலத்திலும் பல சமணத் துறவிகள் வாழ்ந்த இடங்கள் உள்ளன. தமிழகத்துச் சிற்றன்னவாயிலில் ஒரு மலையில் சமணத் துறவிகள் வாழ்ந்து தாம் வாழ்ந்த குடைவுகளில் ஓவியங்களை வரைந்துள்ளனர். சிற்றன்னவாயில் ஓவியம் நாடறிந்த ஒன்று. இஃதே போன்று எல்லோராவில் சிற்பங்கள் அமைந்துள்ளன. அவையும் சமணம் தந்த பரிசே.

சமணம் இத்துணைச் சிறப்புடையது என்றாலும் அன்னோர் இல்லறத்தை ஒதுக்கிப் பாடியமை செல்லாக் காசாயிற்று. ஆனால் சீவக

சிந்தாமணி பல மணங்களுக்கு இடந்தந்து இல்லறத்திற்கு அதிகப்படியான தனிச்சிறப்பு தருகின்றது. பலதார மணத்திற்கு வழிவகுத்தது. பெண்கள் இன்பக் கருவிகளாகக் கொள்ளப்படவும் பலர் தள்ளப்படவும் அமைந்தனர்.

சீவகசிந்தாமணியின் ஆசிரியர் ஒரு சவாலை ஏற்று அந்தப் பலதார மணத்து நூலை எழுதினார். அந்நூலை எழுதுவதால் அவர்தம் சமணத் துறவிக் கோட்பாட்டிலிருந்து நழுவக்கூடாது என்று கருதிய அவர் ஆசிரியர் அந்நூலை எழுதுவதற்கு முன்னர் அப்பக்கம் ஓடிய ஒரு நரியைக் காட்டி இதைப்பற்றி ஒரு நூல் எழுது என்று பணித்தார். அதனை ஏற்று நரி விருத்தத்தை எழுதினார். பின்னரே சீவகசிந்தாமணி உருவாகியது. ஆயினும் அதன் மூலக்கதை வடமொழியிலுள்ளது. தமிழகத்தில் சமயத் தாக்கம் கோயில்களில் மட்டுமல்லாமல் மாந்தரின் அன்றாட வாழ்விலும் இடம் பெற்றது. அத்தாக்கத்தால் தமிழ் மரபுகள் பல குலைந்தன. தமிழ்ப் பண்பாடுகள் பல சிதைந்தன. ஒன்றில் நம்பிக்கை வைப்பது என்பதையே அடித்தளமாகக் கொண்டு உருவாக்கப்பட்ட பல பொய்க் கதைகள் மாந்தரால் பெரிதும் போற்றப்பட்டன.

சமயப் பெருக்கத்திற்காக அதன் தலைவர்கள் பல வியத்தகு செயல்களைச் செய்ததாகவும் பல செயற்கரிய வெற்றிகளைக் குவித்ததாகவும் எழுதி மாந்தரது பகுத்தறிவைச் சமயச் சிறைக்குள் அடைத்தனர்.

தமிழகத்தில் பிற சமயங்களைவிட சைவமும் அடுத்து வைணவமும் பரவலாக அமைந்தன. இரு சமயக் கோயில்களும் பல்கிப் பெருகியுள்ளன. அதிலும் சைவ சமயத்துத் துவக்கக் கடவுளாகிய பிள்ளையார் கோயில்கள் கணக்கிலடங்காதவை. தஞ்சை — திருவையாற்றுச் சாலையிலுள்ள கண்டியூர் எனும் ஊரில்மட்டும் நான்முகனுக்குக் கோயில் உண்டு. அக்கோயில் முன்னர்ச் சமணச் சார்பிலிருந்து பின்னர் வழி மாறிப்போயிற்று. அங்கும் திருநீறு வழங்கப்படுவதுண்டு.

சமயத் தாக்கத்தால் நன்மைகள் விளையும் என்று மாந்தர் நம்பினர். அந்நம்பிக்கை வெற்று நம்பிக்கையாக அல்லது தன்னார்வ நம்பிக்கையாக அமைந்தனவே தவிர நம்பிக்கைக்கொள்ளும் அளவில் இல்லை. சைவம் மிகப் பரவலாக இருப்பினும் வைணவத்தார் தம் சமயத்தில் கொள்ளும் பிடிப்பளவிற்குச் சைவத்தார் ஈடுசெய்ய முடியவில்லை. ஆயினும் திருநீறு வழங்கும் கோயில்களே மிகுதியாக உள்ளன.

இவ்வாறு குறிப்பிடும்போது தமிழில் படைக்கப்பட்ட சமயச்சார்புடைய இலக்கியங்கள் இலக்கிய அளவில் மிகப்பயன்பட்டுள்ளன. தமிழ் போற்றிக்குத்

துணையாக அமைந்தன. சேக்கிழாரின் பெரியபுராணமும் பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடற் புராணமும் குறிக்கத்தக்கவை.

இலக்கியங்கள் போன்றே இலக்கண நூல்கள் தமிழுக்குக் கட்டுக் கோப்பான பாதுகாப்பைத் தந்துள்ளன. அவற்றிலும் சமணத்தார் செய்தவை குறிக்கத்தக்கவை. இவ்வகையில் பெருநோக்குடன் நோக்கினால் சமயத் தாக்கமும் சில நன்மைகளைத் தந்துள்ளது என்று குறிக்கலாம். பழம்பெரும் இலக்கியங்களில் மணிமேகலை பௌத்தச் சார்புடையது. பௌத்த சமயக் காப்பியம் என்றே சொல்லலாம்.

அதற்குப் பின்னர், இளங்கோவடிகள் எழுதிய சிலப்பதிகாரம் ஆசிரியர் நோக்கில் சமணத்தைச் சார்ந்தது என்றாலும் இலக்கியத்தில் 'சிலப்பதிகாரம் என்றோர் மணிபாரம் படைத்த தமிழ்நாடு' என்று பாரதி பாடும் அளவிற்கு தமிழுக்கு மணிபாரமாகத் திகழ்கின்றது. மணிபாரம் மட்டுமன்றி வரலாற்றுச் செய்திகளையும் பண்பாட்டுச் செய்திகளையும் தமிழரின் வீரச் செய்திகளையும் ஆங்காங்கு தந்துகொண்டே செல்வது. சிலம்பில் வஞ்சிக்காண்டம் தனியொரு வீர வரலாற்றைத் தருவது. வடவரை வென்று அவர் தலையில் கண்ணகி சிலைக்குக் கல் கொணர்ந்ததை அறிவிக்கின்றது. உண்மையாக அங்கிருந்து கனகவிசயர் என்ற சிற்றரசர் தலையில் வைத்துக்கொண்டுவர முடியுமா என்றால் கண்ணகி சிலையைப் பார்த்தோர் முடியும் என்று கூறுவர். கண்ணகி சிலை ஒன்றரை அடிக் கல்லில் செதுக்கப்பட்டது. அச்சிலையின் அடியில் ஒன்பது மணிகள் இடம் பெற்றிருக்கலாம் என்ற நோக்கில் வெடிவைத்துத் தகர்க்கப் பட்டது. தகர்க்கப்பட்டதன் மேல் பகுதி கரந்தைக் கல்லூரி மாணவர்களால் காணப்பட்டு அக்கல்லூரியில் பேராசிரியராகப் பணியாற்றிய சி. கோவிந்தராச னாரிடம் வழங்கப்பட்டது. இச்செய்தியை யான் இன்றும் முதல்வராக உள்ள டாக்டர் கலைஞர் அவர்களிடம் ஒரு கூட்ட மேடையில் கூறியபோது அவர் துள்ளிப் பின்பக்கம் என்னைப் பார்த்து அமர்ந்தார். அவ்விவரத்தைக் கூற அப்பேராசிரியரை அழைத்து வருமாறு குறித்தார். அதன்படி கண்ணகி சிலைப்பகுதியுடன் அப்பேராசிரியரை அழைத்துச்செல்ல நேர்ந்தது. அச் சிலைப்பகுதி அரசிடம் ஒப்படைக்கப்பட்டது. இன்றும் அரசிடம் உள்ளது. இவ்வாறு அமைந்த சமயத் தாக்கங்களும் இங்கு குறிக்கத்தக்கனவாகும்.

## 12 சமயத்தொடு வடமொழித் தாக்கம்

வடமொழித்தாக்கம் இந்தியா எங்கனும் நிகழ்ந்துள்ளது. ஒரு காலத் தில் ஆரியச் சிதைவு மொழியாக மையத்தரைக்கடல் பகுதியிலிருந்து வந்து புகுந்தது. இந்தியா எங்கனும் பரவி பல புது மொழிகளையும் தோற்றுவித்

துள்ளது. அது பிறவற்றைவிட தமிழுக்குச் செய்த தீங்குகள் மிக அதிகம். வடமொழிப் புராணக் கதைகள் பல தமிழ் நூல்களாயின. அவற்றால் பழந் தமிழ் நூல்களும் வடமொழி வழிவந்தவை என்று முன்னரும் கூறப்பட்டது. இன்றோ, வடமொழிக் கலப்பால் தமிழ்ச் சொற்கள் பல அழிந்துள்ளன, பல திரிந்துள்ளன, பல சிதைந்துள்ளன. மிகத் தொன்மையும் ஆழமும் கொண்ட தமிழ் தன் தன்மையிழந்து இன்று தலை குனியுமளவிற்குத் தாழ்ந்துள்ளது. முன்னர்க் குறித்தது போல் ஆங்கிலக் கலப்பும் இதற்குக் காரணியமாகும்.

வடமொழித் தாக்கம் தமிழ்மொழியை மட்டுமன்றி தமிழ் மாந்தரது வாழ்வியலிலும் புகுந்தது. இன்றும் தமிழரின் இல்ல விழாக்கள் பல மங்கல விழாக்களும் அவல விழாக்களுமாக வடமொழியிலேயே செய்யப்படுகின்றன. கோயில்களில் வடமொழியே தனிச்சிறப்பு பெற்றது. தவத்திரு குன்றக்குடி அடிகளார்தான் தமிழில் வழிபாடு செய்யவேண்டும் என்ற கோட்பாட்டை அறிவித்துப் பரப்பினார். அவர் சைவத் திருமடத்துக் கோயில்களில் தமிழ் வழிபாடே கைக்கொள்ளப்பட்டது.

பண்பாட்டு மரபுகளிலும் வடமொழிக்குத் தனி இடம் தரப்பட்டது. எத்துணையோ தமிழ் மரபுகள் காலூன்றி நிற்கஇயலாமல் கலங்கிச் சிதைந்தன. தமிழகத்திற்கும் தமிழ் மாந்தர்க்கும் இவற்றிற்கு விடிவுகாலம் என்று கொள்வு தற்கு ஒரு சிறு குறியும் தோன்றவில்லை. வடமொழி மறைகளுக்குத் தரும் சிறப்பைத் தமிழ் நூல்களுக்கோ படைப்புகளுக்கோ தருவதில்லை. இவற்றை யெல்லாம் மீறித் திருக்குறள் ஒன்றுதான் பழந்தமிழ்க் கோட்பாட்டை பறை சாற்றி நிற்கின்றது. மக்களாலும் பெரிதும் மதித்துப் போற்றப்படுகின்றது. வடமொழித் தாக்கத்தை வென்று அதன் அழுக்கத்திலிருந்து மீண்டு அந்நூல் தான் தமிழரை உலகிற்கு அறிமுகப்படுத்துகின்றது. உலகத்தாராலும் கொள்ளப்படுகின்றது.

காலங்கள் மாறினும் புதுக்கோலங்கள் புகினும் திருக்குறள் உண்மை யைச் சாற்றுகின்ற காரணத்தால் அது உலகில் ஒளிவிட்டுத் திகழ்கின்றது. உண்மை என்றும் மறைவதில்லை; கெடுவதில்லை. இது நிலைத்த ஓர் கருத்தாகிவிட்டது.

ஆயினும் இனிமேலும் இந்நிலை அறிஞர்களால் கவனத்தில் கொள்ளாது போனால் தமிழ்ப் பண்பாடு மட்டுமன்றி தமிழர் வாழ்வியலும் சீர்கெட்டுப் போகும். இந்திய நாட்டளவில் எடுத்துக்கொண்டால் வந்த வடவரையும் ஆங்கிலரையும் அவர்தம் மொழிகளையும் ஏன் கோட்பாடுகளையும் கூட தாம் கொள்வதிலே பெருமைகொள்கின்றனர் தமிழர். தமிழ் நாட்டைப் போல

பிற பகுதிகள் அவ்வாறு செயலில் கொள்ளவில்லை. இந்நிலை வளர்வது தமிழ் வழியினரை மிக வாட்டத்திற்குள்ளாக்கும் என்றும் கொள்ளலாம். புதுமைப் பற்றும் பழமை மறப்பும் தமிழகத்தில் நீடிக்குமானால் தமிழ் மாந்தரே அடையாளங் காணத்தக்கவராகப் போவர். ஒரு குமுகாயத்திற்கு எவ்வெவ்வகைத் தீங்குகள் நேரவேண்டுமோ அவையெல்லாம் வடமொழித் தாக்கத்தால் நேர்ந்துள்ளன. அத்தாக்கம் இந்நூலையும் தாக்கியுள்ளது. சூடாமணி நிகண்டு எனப் பெயர் பெற்றதும் அது பட்டியலிடும் உரிச்சொற்க ளில் பல வடமொழியாக இருப்பதும் கூர்ந்து நோக்கத்தக்கதாகும்.

தமிழகத்தில் இதற்கென்று ஓர் இயக்கம் தோன்றி அஃதும் இளைஞர் இயக்கமாக ஆகுமானால் ஓரளவு விடிவுகாலம் தோன்றலாம். அவ்விடிவைத் தரும் கதிரவன் ஒளியை எதிர்பார்ப்போமாக!

## 13. பொலிக தமிழ்ச் சொல்

இந்த ஆராய்வுரையின் தொடக்கத்தில் தமிழ்ச்சொல்லின் உருவாக்கம் பற்றிய அடித்தளம் காட்டப்பட்டது. தனக்கென ஓர் உயிரோட்டம் கொண்ட தாகத் தமிழ் வாழ்ந்தது; வளர்ந்தது. அவ்வுயிரோட்டப் பயிரோட்டத்தில் களைகள் தோன்றின. களையெடுப்பு நிகழவேண்டும்.

தமிழ் மொழியைப் பற்றி பாரதிதாசன் முதலில் குரல் கொடுத்தார். அடுத்து பாவேந்தர் பாரதிதாசனார் பகுத்தறிவுடன் கூட்டிக் குரல் கொடுத்தார். அவர் யாத்த தமிழியக்கம் என்னும் நூல் நடைமுறைப்படுத்தப்பட வேண்டிய ஆக்கக் கருத்துக்களைத் தருவதாகும். ஒவ்வொரு துறைக்கும் வழிவகுத்து அந்நூலைப் படைத்துள்ளார். அதன் முதலில் தொடங்கும் பத்துப் பாடல் களே தமிழ்ச் சொல்லின் பொலிவுகளை அறிமுகப்படுத்துவனவாகும். பாரதி யின் தமிழுக்கு ஏற்றம் தந்தது மட்டுமன்றி ஆக்கமும் ஊட்டினார். பாடல்க ளால் இவர்கள் பயனளித்திருப்பினும் உரைநடை அளவில் மொழியறிஞர் தேவநேயப் பாவாணர் அவர்கள் மறைமலையடிகள் வழிநின்று தந்த மொழிக் கருத்துகள் பலவாகும். அவர் ஆய்வுகளால் தமிழ் வேர்ச்சொற்களும் வேரடிச் சொற்களும் வெளிப்பட்டன. அவை தமிழ்ப் பொலிவிற்கு எத்துணைக் காரண மாக அமைந்தன என்று நோக்குவது ஓர் ஆக்க எண்ணமாகும். அவர் தமிழின் ஓர் வேரடிச் சொல்லாக உல் என்பதைக் காட்டியுள்ளார். அவ்வேரடி யிலிருந்துதான் உல, உலவு, உலகம் என சொற்கள் வளர்த்து பல்கின. அவா கையாண்ட முறை தனியொரு தன்மை கொண்டதாயினும் உலகமொழிகளின் பாங்கையும் அணைத்துக் கொண்டதாகும். அவர்தம் ஆக்கத்தால் தமிழ்ச் சொற்களின் பொலிவை உணர்ந்து மகிழ முடிகின்றது.

ஓர் வேரடிச் சொல்லிலிருந்து எத்துணைச் சொற்கள் பெருகும் என்று எல்லையிட முடியாது. இலக்கியப் படைப்பு, சிறந்த சொற்பொழிவு இலக்கண அமைப்பு, கவிதைகள், பாடல்கள் எனப் பல்வழியிலும் தமிழ்ச் சொல் பொலிவதால் அம்மொழி மட்டுமன்றி அதனைப் பயிலும் வேற்றினத்தாரும் வேற்று நாட்டாரும் பயனடைவர்; பொலிவடைவர். இதனை வெளி நாட்டு அறிஞர் பலர் வெளிப்படுத்தியுள்ளனர். வடமொழியிலும் இராகுல சாங்கிருத்தியாயன் போன்றோர் தமிழ்ச் சொல்லின் பொலிவை எடுத்துக் காட்டியுள்ளனர். அவர்தான் வடபுலத்தில் தமிழ் பரவியிருந்ததையும் 'தமிழக்' என்றொரு நகர்ப்பகுதி இருந்ததையும் குறித்துள்ளார். இன்றும் வட புலத்தில் குடியேறியோர் பலர் தம் முன்னோர் அடையாளம் தெரியாமல் மாறிப் போயுள்ளனர். வடபுலத்து மொழிகள் சிலவற்றுள்ளும் தமிழ் திரித்து வழங்கப்படுவதை மொழியறிஞர்கள் குறித்துள்ளனர். தமிழ் மொழியின் ஆழமும் அகலமும் கண்டோருள் இலங்கையர், அவருள்ளும் யாழ்ப்பாணத்தார் குறிக்கத்தக்கவர்கள். யாழ்ப்பாணம் என்ற சொல்லமைப்பே தமிழ் நாட்டின் தனிச்சிறப்புடைய இசைக்கருவியாகிய யாழையும் அதனை மீட்டிய பாணரையும் சொல்லிக்கொண்டுள்ளது. தமிழுக்கு நூல்களை வழங்கிய பங்கும் அவர்களுக்கு உண்டு. இன்றும் யாழ்ப்பாணத்தில் வாழும் தமிழர்கள் மொழியுணர்வில் தமிழகத்தாரினும் மேம்பட்டவர். மொழிநூல் இலக்கியத்தில் ஆழமாகவே புகுந்தவர்.

ஒரு மொழி தன் சொல்லால் தன் வளத்தைக் காட்டமுடியும். தமிழ்ச் சொல் வழக்குகள் பழம்பெரும் மரபுகளை நினைவுபடுத்துகின்றன. சென்னைப் பல்கலைக் கழகத்துப் பதிப்பாகிய பல்கலைக் கழகப் பேரகராதி தமிழ்ச் சொற்களின் பொலிவைத் திறம்பட எடுத்து வைக்கின்றது. திருச்சி பாரதிதாசன் பல்கலைக் கழகம் தமிழில் பாடநூல்களை உருவாக்கத் தொடங்கியது. அவற்றில் தமிழ்ச் சொற்களையே பயன்படுத்த வேண்டும் என்ற குறிக்கோள் நோக்கமாயிற்று. திங்களுக்கொரு கூட்டம் கூடி ஒரு துறைப் பேராசிரியர் பலரும் தமிழறிஞர் மூவரும் அதில் இடம் பெற்று தமிழ்ச் சொற்களை உருவாக்கினர். அதற்கு முன்னோட்டமாக அத்துறைப் பாடநூல்களில் வரும் ஆங்கில, வடமொழிச் சொற்களின் பட்டியலை அதில் பங்குபெறுவோருக்கு அனுப்பி அவரவர் முன்கூட்டியே சொற்களைக் கண்டுவர வாய்ப்பு தரப்பட்டது. கூடுவோரில் பலர் தமிழார்வத்தினர். புதிய தமிழ்ச் சொற்கள் உருவாக வேண்டும் என்ற ஆர்வமுள்ளோர் பலர் இருந்தனர். அதனால் பல தமிழ்ச் சொற்கள் பொலிவுள்ளவைகளாக எழுந்தன. பல் துறைகளில் உருவாக்கப் பட்ட சொற்களின் தொகுப்பை ஒரு நூலாகப் பதிப்பிப்பது என்று முடிவெடுக்கப் பட்டது. அஃது எந்த அளவு செயல்பட்டிருக்கிறதோ அறியேன். அவ்வாறு

ஓர் தொகுப்பு வெளிவந்தால் பொலியும் பல தமிழ்ச் சொற்களைக் கண்டு மகிழலாம்.

இக்காலத் தமிழ் இதழ்கள் சிறந்த சொற்களைக் கையாளுகின்றன என்று கூற இயலாது. அவ்வந் நேரத்திற்கேற்ப, அவரவர் ஆர்வத்திற்கேற்ப செய்திகளைத் தருவது, கருத்துக்களைச் சொல்வது, விளக்கங்களை வழங்குவது என்ற கடைப்பிடிகளே உள்ளன. மொழி பற்றிய நினைப்பும் இல்லையென்றால் மொழி ஆக்கம் பற்றி என்ன சொல்வது?

தமிழ் இனிமை என்ற பொருளுடையது என்பர். 'கழாரம்பர்' என்னும் பழம்பெரும் ஆசிரியர் தம் பேரிசையில் 'தமிழ் சிவம் இனிமை என்னும் தனிப் பொருளதாம்' என்று இனிமைப் பொருள் காட்டி எழுதினர். பலரும் அதனைப் பின்பற்றினர். பாவேந்தர் பாரதிதாசனார்,

"இனிமைத் தமிழ்மொழி எமது எமக்குநல்
இன்பந் தரும்படி வாய்த்த நல்லமுது"

என்று பாடி, தமிழின் சுவையைக் கனியைப் பிழிந்துதிட்ட சாறு என்றும் பாடினார். இனிமைச் சொற்கள் பலவற்றை இந்நூலும் அறிவிக்கிறது.

முதன் மடமாக தேவப்பெயர்த் தொகுதியும் மக்கட்பெயர்த் தொகுதியும் இப்பதிப்பில் உள்ளன. இப்பதிப்பில் சூடாமணிப் பாடல் ஒவ்வொன்றும் பத்துப் பத்து விளக்கங்களுடன் அமைக்கப்பட்டுள்ளது. அவற்றுள் சொற்பாகுபாடு என்றோர் அமைப்பு உள்ளது. அவ்வமைப்பில் பின்வரும் விளக்கங்களைக் காணலாம். சூடாமணியின் ஒரு பாடலில் உள்ள சொற்களில் சங்க இலக்கியச் சொற்கள், பிற தமிழ்ச் சொற்கள், கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை, வடசொற்கள், மணிப்பவளச் சொற்கள் வகைப்படுத்தப்பட்டுள்ளன. அவையும் தமிழ்ச் சொற் பொலிவை அறிவிப்பனவாகும்.

ஒரு மொழியில் சொற்கள் பல்கியிருப்பதும் ஆழமான கருத்தைத் தருவதும் மொழியின் சிறப்பை மட்டுமல்லாமல் மொழிக்குரிய தமிழரின் சிறப்பையும் அறிவிப்பதாகும். சங்க இலக்கியங்களில் இவ்வகைச் சொற்களைக் காண இயலும். காலப்போக்கில் இம்முறை குறைந்துகொண்டே வந்தது. அவ்வப்போது தோன்றிய மொழியறிஞர் பல சொற்களைப் படைத்தனர். முன்னரே அவ்வறிஞர் குறிக்கப்பட்டுள்ளனர். அன்னோர் தமிழ்மொழி பற்றி எழுதியுள்ள நூல்கள் மொழிக்கு ஆக்கம் மட்டுமல்லாமல் தமிழ்மொழி பொலிவு பெறவும் வழிவகுப்பனவாகும்.

எவ்வாறு நோக்கினும் தமிழ் பயன்பாட்டிற்கு நலம் தருவதும் கருத்துக்களை வழங்குவதற்கு இடம் தருவதும் கொண்டதாகும். இவ்வாறமைந்த

அமைக்கப்படுகின்ற தமிழ்ச்சொல் பொலிக என்பதுடன் இவ்வாராய்வுரை நிறைவு செய்யப்படுகின்றது.

இப்பணியை யான் தொடங்கியது முதல் எனக்கு உதவியும் யான் சொல்வதை ஏற்றும் செயற்படுத்தியும் வரும் நண்பர் திரு அ. பஞ்சநாதன் அவர்கட்கு என்றும் நன்றியுடையேன்.

அச்சுப் பணியைச் செய்த அச்சகத்தார்க்கும் இப்பணி தொடங்க மனம் பற்றிய இன்றைய இயக்குநருக்கும் என் நன்றி உரியதாகுக.

நூல் விரிவுரையுடன் பதிப்பாகிக் கொண்டிருக்கும்பொழுதே இவ் வாராய்வுரையைத் தட்டச்சு செய்யத் தொடங்கினேன். தட்டச்சு செய்ய இயலாமை நேர்ந்தபோது கையால் எழுதினேன். அதனையும் தொடர முடியாது கண் பார்வை குறைந்தது. தொடர்ந்து இவ்வாராய்வுரையை முடிப்பதற்கு சொல்லி எழுதச்செய்யவேண்டி நேர்ந்தது. என் நண்பர் திரு. மாரிமுத்து என்பார் புலவர் கோ. நாகேந்திரன் அவர்களை அறிமுகம் செய்து அனுப்பினார். புலவர் அவர்கள் என் கையாகவும் என்கண்ணாகவும் அமைந்து இவ்வாராய்வுரை நிறைவேற பேருதவி புரிந்தார். என் நூல்களில் இறுதி நூலாகிய இப்பதிப்பு யான் நினைத்தபடி நிறைவேறுகிறது என்றால் அதற்குப் புலவர் கோ. நாகேந்திரன் அவர்களே காரணியம் ஆவர். கைம்மாறு கருதா அவர்தம் பெருந்தகவை எண்ணி உள்ளம் உவந்து அவர் வாழ்க! அவர் இல்லம் பொழிக! வாழ்வில் வளமும் நலமும் ஓங்குக என்று வாழ்த்துவதோடு நெஞ்சத்தின் அடித்தளத்திலிருந்து வரும் நன்றியையும் படைக்கின்றேன்.

கலைக்குடில்,
58, எழில்நகர், தஞ்சை

அன்பன்,
**கோவை. இளஞ்சேரன்.**



## AN APPEAL

Manuscripts on Palm Leaf or Paper of the ancient works of the wise men of the past, are the great treasures, solely inherited by the Nation and it is the moral obligation of persons who possess them to preserve them safely for the future generations of mankind.

Probably you have some of these in your possession or you know friends or neighbours who possess them. You can make a great contribution to the cause of the preservation not only of our National Culture but also to the Culture of Humanity as a whole by arranging to present such manuscripts to the famous T. M. S. S. M. Library, Thanjavur.

The manuscripts so presented will be accepted and acknowledged with pleasure and gratitude by the authorities of the Library, preserved with meticulous care and made available to successive generations of readers and scholars for study and research. The hitherto unpublished works found among them, will be printed and published in due course, as facilities occur, with the expression of the Library's gratitude for your gift.

The great Scholar-King of Tanjore, Rajah Serfoji, has attained immortal fame by dedicating enormous time and wealth to the expansion and firm establishment of this world-famous 'Sarasvati Mahal Library.' It is open to you to share the honour of Serfoji, in your own measure by contributing your manuscripts to the great institution built by him.

This great Honour is beckoning to you to accept it. Will you hasten to take it up? The Library waits for your answer.

**DISTRICT COLLECTOR & DIRECTOR,**
Sarasvati Mahal Library, Thanjavur.

# வேண்டுகோள்



கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள், அரிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும், பனையோலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவை, பல்வேறு இடங்களில் முடங்கி உள்ளன. சுவடிகள் பழுதடைவதற்குமுன் சரசுவதி மகாலுக்கு அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவை மக்களுக்குப் பயன்படும்.

மகாலுக்குக் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர் களும், சுவடி எழுதியோரும் அழியாப் புகழை, பெருமைசால் சரசுவதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாகி வருமாயின் சுவடி தந்தார் பெயர் இடம் பெறுவதோடு, அப்பதிப்பில் ஐந்து பிரதிகளும் பெறுவர்.

எனவே, "நாம் பெற்ற பேறு பெறுக இவ் வையகம்" என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளைச் சரசுவதி மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறேன்.

*தஞ்சாவூர்,*
*21-12-98*

**மாவட்ட ஆட்சியர் மற்றும் இயக்குநர்,**
***சரசுவதி மகால் நூலகம்.***

# சூடாமணி

## (உரிச்சொற் பனுவல் — நிகண்டு)

### சிறப்புப் பாயிரம்

### வாழ்த்தும் நூற்பெயரும்

பொன்னுநன்மணியுமுத்தும்புனைந்தமுக்குடைநிழற்ற
மின்னுபூம்பிண்டிநீழல்வீற்றிருந்தவனைவாழ்த்தி
மன்னியநிகண்டுசூடாமணியெனவொன்றுசொல்வன்
இந்நிலந்தன்னின்மிக்கோர்யாவருமினிதுகேண்மின்

1 பொன்னும்நன் மணியும் முத்தும்
புனைந்தமுக் குடைநி ழற்ற,
மின்னுபூம் பிண்டி நீழல்
வீற்றிருந் தவனை வாழ்த்தி,
மன்னிய நிகண்டு சூடா
மணியென[1] ஒன்று சொல்வன்;
இந்நிலம் தன்னின் மிக்கோர்
யாவரும் இனிது[2] கேண்மின்!

**பொருள்:**

பொன்னும் நன்மணியும் முத்தும — பொன்னாலும் குற்றமில்லாத் மாணிக்கத்தாலும் முத்தாலும்
புனைந்த — முறையே செய்தும் பதித்தும் கோத்தும் அழகாக ஒப்பனை செய்யப்பெற்ற

---

பாட வேறுபாடு:

1. 'சூளாமணி என' — ''சூடாமணி'' வழங்கு பெயர் என்பது ஆய்வுரையில் நிறுவப் பெற்றுள்ளது.

2. இருந்து கேண்மின் — இருந்துதான் கேட்பர். மனம் உவந்து 'இனிது' கேட்கு மாறு வேண்டுதல் பொருந்தும். இதனை அடியொற்றிய அரும்பொருள் நிகண்டும் (செய். 2) 'செவிமடுத்து இனிது கேண்மின்' என்பதாலும் 'இனிது' பாடம் பொருந்தும்.

'இசைந்து கேண்மின் — இப்பாடத்திற்கும் மேற்காட்டியது பொருந்தும்.

## செய்யுள்—2

முக்குடை நிழற்ற — மூன்று குடைகள் நிழல்தர
மின்னு பூம் பிண்டி நீழல் — ஒளிவிளங்கும் மலர்களைக்கொண்ட அசோக மரத்தின் நிழலில்
வீற்றிருந்தவனை — பெருமிதத்துடன் அமர்ந்துள்ள அருகக் கடவுளை
வாழ்த்தி — யான் போற்றி
நிகண்டு மன்னிய — சொல் தொகுதிகள் பொருந்திய
**சூடாமணி** என — **சூடாமணி** என்னும் பெயரில்
ஒன்று சொல்வன் — ஒரு நூலைச் சொல்வேன்.
இந்நிலம் தன்னில் — இவ்வுலகத்தில் தமிழ் வழங்கும் இடமெல்லாம்
மிக்கோர் யாவரும் — நூலறிவில் மேம்பட விரும்புவோர் அனைவரும்
இனிது கேண்மின் — மனம் உவந்து கேட்பீர்.

**பொருள் விளக்கம்:**

நல்ல மாணிக்கம் — குணம் பன்னிரண்டு அமைந்து குற்றம் பதினாறு அற்றது:

மூன்று குடை — சந்திராதித்தம், நித்தியவிநோதம், சகல பாசனம் என்பர் அருக சமயத்தார்:

அசோக மரம் — அருகக்கடவுள் அமர்தற்குரிய மரம்

நிகண்டு சூடாமணி — இந்நூல் ஆய்வுரையில் விளக்கம் உளது

மிக்கோர் — நூலறிவில் மிகுதற்கு இந்நூல் அடித்தள நூலாதலின் நூலறிவில் மேம்பட விரும்புவோர் என எதிர்காலம் நோக்கி உரைக்கப் பெற்றது

யான் என்னும் தோன்றா எழுவாய் வருவித்துரைக்கப்பட்டது. ஒன்று சொல்வேன் என்றால் ஒன்று, 'தனிச்சிறப்புடைய நூல்' என்று ஆசிரியரின் தன்னம்பிக்கையை உணர்த்துகின்றது. (1)

## மூன்று வகை முன் நூல்கள்

பூமலியசோகினீழற்பொலிந்தவெம்மடிகண் முன்னாள்
ஏமமாமுதநூல்சொல்லக்கண தரியன்றபாவாற்
றாமொருவழி நூல்சொல்ச்சார்பு நூல்பிறருஞ்சொல்லத்
தோமிலாமூன்றுநூலுந்துவமெனவுதித்தவன்றே

## செய்யுள்—2

2 பூமலி அசோகின் நீழல்
பொலிந்தஎம் அடிகள் முன்நாள்
ஏமமா முதல்நூல் சொல்லக்
**கணதரர்** இயன்ற பாவால்[1]
தாம்ஒரு வழிநூல் சொல்லச்
சார்புநூல் பிறரும் சொல்லத்
தோம்இலா மூன்று நூலும்
துவம்என உதித்த அன்றே.[2]

### பொருள்:

பூ மலி அசோகின் நீழல் — பூக்கள் மிகுந்த அசோகமரத்தின் நிழலில்
பொலிந்த எம் அடிகள் — அழகாய் அமர்ந்த அருகக் கடவுள்
முன் நாள் — தொன்மைக் காலத்தில்
ஏமம் ஆம் முதல் நூல் சொல்ல — மாந்தரின் இன்பத்திற்குரிய முதல் நூலைச் சொல்ல
**கணதரர்** — கணதரர் என்னும் பெயர் கொண்ட அருகசமய ஆசிரியர்
இயன்ற பாவால் — தமக்கு இயல்பான பாடல்களால்
தாம் ஒரு வழிநூல் சொல்ல — தாம் ஒரு வழிநூலைச் சொல்ல
பிறரும் சார்புநூல் சொல்ல—பிற ஆசிரியர்களும் சார்புநூல் சொல்ல
தோம் இலா — குற்றம் இல்லாத
மூன்று நூலும் — இம்மூன்று வகை நூல்களும்
துவம் என — நிலைத்த நூல்களாக
உதித்த — தோன்றின

### பொருள் விளக்கம்:

'அடிகள்' என்பது கடவுளைக் குறித்தும், அடியவர்களைக் குறித்தும் வரும். இது சமண சமயத்தார் வழக்கு.

---

### பாட வேறுபாடு:

1. **'இலக்கணத்தியன்ற பாவால்; இயற்கணத்தியன்ற பாவால் — 'தாம் ஒரு வழிநூல் சொல்ல' என்று தொடர்கின்றது.' 'கணதரர் தாம்' என்று இயையும் இயையு இவ்விரண்டு பாடங்களால் அமையாது.**

2. **'உதித்தது அன்றே' — 'மூன்று நூலும்' என்னும் பன்மை 'உதித்த' என்னும் பன்மை வினைகொண்டு முடியும்.**

## செய்யுள் — 3

**கனதரர்** — 'கணதர்' என்றும் குறித்தனர். முன்னை முனிவர் ஒருவர் நொய்யரிசியையே உணவாகக் கொண்டதால் வடமொழியில் இப்பெயர் பெற்றார். அவர் பெயர் இவருக்கு இடப்பெற்றது.

இயன்ற பா — எடுத்துக்கொண்ட பொருளிற்கு இயல்பாகத் தமக்கு இயைந்து வரும் பாடல் (செய்யுள்)

துவம் — 'சோர்வில்லாமை' என்னும் பொருள் தொடர்பில் நிலைத்து நிற்பதைக் குறிக்கும். பாடல் 548 காண்க. (அன்று, ஏ அசை நிலைகள்) (2)

## இந்நூல் எழக் கரணியம்

அங்கதுபோயபின்றையலகினூல்பிறந்தமற்றுஞ்
செங்கதிர்வரத்திற்றோன் றுந்திவாகரர்சிறப்பின்மிக்க
பிங்கலருரை நூற்பாவிற்பேணினர்செய்தார்சேர
இங்கிவையிரண்டுங்கற்கவெளிதலவென் றுசூழ்ந்து

3 அங்கது போய பின்றை
அலகுஇல் நூல் பிறந்த; மற்றும்
செங்கதிர் வரத்தில் தோன்றும்
**திவாகரர்** சிறப்பின் மிக்க
**பிங்கலர்** உரைநூற் பாவில்
பேணினர், செய்தார்; சேர
இங்கிவை இரண்டும் 'கற்க
எளிதல' என்று சூழ்ந்து... ... *

**பொருள்:**

அங்கு — வடபுலமாகிய அவ்விடத்தே
அது — அந்நிலை
போய பின்பு — நிகழ்ந்து கழிந்த பின்னே
அலகு இல் நூல் பிறந்த — எண்ணிக்கை இல்லா நூல்கள் தோன்றின.
மற்றும் — மேலும்

**பாட வேறுபாடு:**

* **'குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்'** என்னும் **இலக்கணப்படி இப் பாடலைத் தொடர்ந்து கருத்துக்கள் உள்ளமையால் இது குளகப் பாட்டு, குளகம் என்று குறிக்க ... ... இவ்வாறு குறிப்பிடப்பெறும்**

## செய்யுள்—3

செங்கதிர் வரத்தில் தோன்றும் திவாகரர் — சிவந்த கதிர்களையுடைய இளஞாயிற்றின் மேன்மைப் பெயரினால் தோன்றிய திவாகரரும்

பிங்கலர் — பிங்கலரும்

உரை நூற்பாவில் —இலக்கணம் உரைத்தற்குரிய நூற்பாவினால்

பேணினர் செய்தார் — விரும்பி திவாகரம், பிங்கலம். என்னும் நூல்களை முறையே செய்தனர்.

இங்கு இவை இரண்டும் — இத்தமிழகத்தில் திவாகரம், பிங்கலம் என்னும் இவ்விரண்டு நூல்களும

சேர — இணைத்துப் பார்த்து

கற்க எளிது அல — கற்பதற்கு எளிமை அல்லாதவை

என்று சூழ்ந்து — என்று ஆழ்ந்து எண்ணி

### பொருள் விளக்கம்:

அங்கு — அருகர் வடமொழியில் மூலநூல் செய்ததாகக் குறிப்பதாலும், அடுத்துத் தமிழகத்தைக் குறிக்க 'இங்கு' என்று வருவதாலும் வட புலமாகப் பொருள்கொள்ளப்பெற்றது.

திவாகரர்—ஒரு சமணச் சான்றோர். தமிழில் கிடைத்துள்ள நூல்களில் முதல் உரிச்சொற் பனுவல் (நிகண்டு) செய்தவர். தம் பசி களைந்து பேணிய சேந்தன் என்னும் மன்னனுக்கு நன்றி படைக்கும் நோக்கில் அவன் பெயரையும் தன் பெயரையும் இணைத்துத் தாம் செய்த நூலுக்குச் 'சேந்தன் திவாகரம்' என்று பெயரிட்டார்.

செங்கதிர் வரத்தில் தோன்றும் — தினம்—பகல்; கரன்—கதிர்களாகிய கைகளையுடையவன் எனும் வடசொல் கதிரவனைக் குறிக்கும். இக் கதிரவன் பெயரிடப்பெற்றநால் 'செங்கதிர் வரத்தில் தோன்றும்' எனப் பட்டது. இவர் மாணவராகிய பிங்கலரும் இவரைச் 'செங்கதிர் வரத்தில் தோன்றும் திவாகரர்' என்று இத்தொடரால் போற்றியமை குறிக்கத் தக்கது.

பிங்கலர் — சேந்தன் திவாகரத்தை அடுத்துத் தமிழில் உரிச்சொற் பனுவல் செய்த சமணச் சான்றோர். பிங்கலம் — பொன்மை (சூடா. 553) பொன் நிறத்து ஒளிதரும் கதிரவனைக் குறிக்கும் சொல். திவாகரர் மாணவராகிய இவரும் கதிரவன் பெயர் பெற்றவர்.

**நூற்பா** — இதற்கு வடசொல்லாம் சூத்திரம் என்பதைக் கையாண்டார். **நூல்** — இலக்கணம்; பா —அதற்குரிய பாடல்.

## செய்யுள் — 4

சேர — திவாகரம் வழங்கிய காலத்திலேயே அடுத்துத்தோன்றிய பிங்கலம் அதனின்று வேறுபட்டும், சில்லிடங்களில் முரண்பட்டும் உளது. இரண்டும் வேறுபாடுகளால் படிப்போர்க்குக் குழப்பத்தைத் தருவதால் இரண்டையும் இணைத்து ஒருசேரக் கற்பது கடினம் என்பதைக் குறிக்கவே 'சேரக் கற்பது எளிதல' என்றார். அன்றி, இரண்டும் 'கற்பதற்கு எளிதல' என்று பொருளன்று. (3)

## தன்னாசிரியன் அறிமுகம்

சொல்லொடுபொருளுணர்ந்தோன்சோதிட நீதிவல்லோன்
நல்லறிவாளனெங்கள் நறுங்குன்றைஞானமூர்த்தி
பல்லுயிர்க்கொருதாயாகும்பரமன்மாமுனிவன்மெய்ந்நூல்
வல்லுநர்வல்லார்க்கெல்லாம்வரையறத்தரையில்வந்து

4 சொல்லொடு பொருளு ணர்ந்தோன்
சோதிட நீதி வல்லோன்
நல்லறி வாளன் எங்கள்
நறுங்குன்றை[1] ஞான மூர்த்தி
பல்லுயிர்க் கொருதாய் ஆகும்
பரமன்மா முனிவன் மெய்ந்நூல்
வல்லுநர் வல்லார்க் கெல்லாம்
வரையறத் தரையில் வந்து......

---

**பாட வேறுபாடு:**

1. **'நறுங் கொண்டல்' — இக்கருத்தில் 'மைம்முகில் குணபத்திரன்' என்று புகழப்படுகிறார் (செய். 681) மூதல் அறிமுகமாக வாழ்ந்த ஊரைக் குறிப்பது சிறப்பு என்பதால் 'நறுங்குன்றை' கொள்ளப்பெற்றது.**

**'நறுங்கொடை' — பின்னர் (செய். 353) 'நிரப்பு அடும் குணபத்திரன்' என்பதால் இவர் கொடைத்தன்மை அறியப்படினும் மேற்சொன்ன காரணியத்தால் 'குன்றை'ப் பாடம் கொள்ளப்பெற்றது.**

## செய்யுள் — 5

**பொருள்:**

சொல்லொடு பொருள் உணர்ந்தோன் — சொல்லின் தன்மையையும் அதற்குரிய பொருளையும் உணர்வில் கொண்டவனும்.

சோதிட நீதி வல்லோன் — சோதிட நூலிலும் அறங்கூறும் நூலிலும் வல்லவனும்

நல்லறிவாளன் — நன்றின்பால் உய்க்கும் தூய அறிஞனும்

பல்லுயிர்க்கு ஒரு தாய் ஆகும் பரமன் — ஓரறிவு முதல் ஆறறிவுவரை அனைத்துயிர்க்கும் தாய் போன்று அன்புடையவனாகி அருள் வழங்குபவனும்

மாமுனிவன் — பெருமைக்குரிய முனிவனுமாகிய

நறுங்குன்றை — நல்ல குன்றையூரில் வாழும்

எங்கள் ஞான மூர்த்தி — என்போன்றோர்க்கு அறிவுத்தந்தையாக

மெய் நூல் — மெய்ம்மைப் பொருள் தரும் நூல்களில்

வல்லுநர் வல்லார்க்கு எல்லாம் வரை அற — வல்லவர் அல்லாதவர் என்று வரைவின்றி அனைவர்க்காகவும் இந்நிலத்தில் வந்து பிறந்து தோன்றி,

**பொருள் விளக்கம்:**

தாயாகும் பரமன் — அன்பால் தாயையும் அருளால் கடவுளையும் குறித்தார்

வரை அற — வல்லார்க்கு அவர்க்கேற்ற ஆழ்பொருளும் அல்லார்க்கு அவர்க்கேற்ற சூழ்பொருளும் அறிவுறுத்தும் பாங்கால் எவ்வரையறையும் கொண்டு எவரையும் நீக்காமல்

குன்றை — திருமுனைப்பாடி நாட்டில் உள்ள திருநறுங்குன்றம். திருநறுங்கொண்டை என்ற வழக்கும் உண்டு. இங்கு சமணச் சமயச் சான்றோர் பீடம்உண்டு. (4)

## தன்னாசிரியன் பெருமை

பரிதியொன்றுதயஞ்செய்துபங்கயமநேககோடி
முருகெழமலர்வித்தென்னமுகமுடனகமலர்த்தி
மருவுமுத்தமிழைமுன்னாள்வளர்த்தபாண்டியனேபோல்க்
கருதியவெல்லாந்தந்துகவிமணிமாலைசூடி

செய்யுள் — 5

சிறப்பு

5 பரிதியொன்[1] றுதயம் செய்து
பங்கய ம்அநேக கோடி
முருகெழ மலர்வித் தென்ன
முகமுடன் அகம லர்த்தி
மருவுமுத் தமிழை முன்னாள்
வளர்த்தபாண் டியனே போலக்
கருதிய எல்லாம் தந்து
கவிமணி மாலை[2] சூடி ... ...

**பொருள்:**

பரிதி ஒன்று உதயம் செய்து — ஒரு கதிரவன் தோன்றி
அநேக கோடி பங்கயம் — பல கோடிக்கணக்கான தாமரைகள்
முருகு எழ மலர்த்தது என்ன — மணம் எழும்படி மலரச் செய்தது போல,
முகமுடன் அகம் மலர்த்தி — தம்மைச் சேர்ந்தாருடைய முகத்தோடு மனத்தையும் உவப்பால் மலரச்செய்து
மருவும் முத்தமிழை — இயல், இசை, நாடகம் எனப் பொருந்திய மூன்று தமிழையும்
முன் நாள் வளர்த்த பாண்டியனே போல — சங்ககாலத்தில் வளர்த்த பாண்டிய மன்னனைப் போல
கருதிய எல்லாம் தந்து — தம்மை அணுகியோர் கருதியவற்றை எல்லாம் கொடுத்து
கவி மணி மாலை சூடி — பலரும் போற்றிப் பாடிய பா மாலைகளைச் சூடி

**பொருள் விளக்கம்:**

பருதி ஒன்று — ஞாயிறு ஒன்றுதான். எனினும் தம் ஆசிரியரது தனிச் சிறப்பைக் குறிக்க ஒன்றை அவர்மேல் வைத்துப் பாடியதாகவும், அவராற்

---

**பாட வேறுபாடு:**

*1. 'பருதி' — எதுகை கருதிப் பருதி என்றிருப்பினும் சொல்பிழையானது. பரிதி என்பதே கதிரவனுக்குரிய சொல்.*

*2. கவின்மணி மாலை'—முத்தமிழ் வளர்த்த பாண்டியனுக்குப் புலவர் பாடிச் சூடியது போல, இவரும் 'கவியாகிய மணிமாலையைச் சூடி' என்பதே சிறப்பு.*

செய்யுள்—6

கல்விப் பயன் பெற்றோர் கணக்கற்றவராக 'அநேக கோடி தாமரை' கூறிய தாகவும் கொள்ளவேண்டும்.

முருகு எழ மலர்வித்தல் —பயின்றோர் கல்வி மணம் மிகப்பெற்று, எழுச்சி பெற்று மகிழ்ந்ததைக் குறிக்கும்

கவிமணி மாலை சூடி — மன்னர்போலப் பெருமையுடன் திகழ்ந்ததால் புலவர் போற்றிப் புகழ்ந்து பாடிய சிறப்பினையுடையவர் என்பதாகும். உருவகம்.

மலர்வித்தென்ன — மலர்வித்தது என்ன என்பதன் தொகுத்தல் விகாரம்; கவிமணி மாலை — உருவகம். (5)

## தன்னாசிரியன் புகழ்ப்பெயரும் செய்வித்தமையும்

செகமெனுபளிங்குமாடத்திகிரிவேந்தரையேபோலப்
புகழெனும்பஞ்சிசேர்த்திப்பொலிவுறுபேரத்தாணி
மகிழ்குணபத்திரனெங்கள்வழித்தெய்வம்போல்வான்சொல்ல
இகபரமிரண்டும்வேண்டியியலிசைவல்லோர்கேட்ப

6 செகமெனும் பளிங்கு மாடத்
திகிரிவேந் தரையே போலப்
புகழெனும் பஞ்சி சேர்த்திப்
பொலிவுறு பேர்அத் தாணி
மகிழ்குண பத்திரன் எங்கள்
வழித்தெய்வம் போல்வான் சொல்ல
இகபரம் இரண்டும் வேண்டி
இயலிசை வல்லோர் கேட்ப ... ...

**பொருள் :**

செகம் எனும் பளிங்கு மாடம் — உலகம் என்னும் பளிங்காலாகிய மண்டபத்தில்
திகிரி வேந்தரையே போல — ஆணை ஆழியைக்கொண்ட மன்னரையே ஒப்ப
புகழ் எனும் பஞ்சி சேர்த்தி—புகழ் என்னும் பஞ்சணை சேர்க்கப்பெற்று
பொலிவு உறு—அழகு பெற்றுள்ள
பெருமை அத்தாணி மகிழ் குணபத்திரன்—பெருமையுள்ள அரசு கட்டிலின் மீது அமர்ந்து மகிழ்கின்ற குணபத்திரன் என்னும் பெயரையுடைய

## செய்யுள் — 7

எங்கள் வழிந்தெய்வம் போல்வான் — எங்கள் குடிவழித் தெய்வம் போன்றவன்

சொல்ல—உரிச்சொற் பனுவல் நூலை இயற்றென்று சொல்ல

இகம் பரம் இரண்டும் வேண்டி—வாழ்வாங்கு வாழும் வாழ்வின் பயனும், வாழ்வின் பின்பெறும் வானுறையும் தெய்வப் பயனும் ஆகிய இரண்டையும் விரும்பி

**பொருள் விளக்கம்:**

இயல், இசை வல்லோர் கேட்ப—இயல் தமிழிலும், இசைத் தமிழிலும் வல்லவர் கேட்க

திகிரி — மன்னர்தம் ஆணை செலுத்தும் ஆட்சிச் சின்னமாகக் கொண்ட ஆணைச்சக்கரம். இதனை 'ஆணை ஆழி' என்பர்.

வேந்தனையே — ஓகாரம் தேற்றம்

வழித் தெய்வம் — தம் குடிவழி முன்னோர் வாழ்வாங்கு வாழ்ந்து புகழுடம்பு பெற்றுத் தம் குலத்திற்கே தெய்வமாகியவர்

இயல் இசை வல்லார் கேட்ப — உரிச்சொற் பனுவலில் உள்ள சொற்கள் இயல் தமிழுக்கும், இசைத்தமிழுக்கும் உரியவை. ஆகையால் இவர்கள் கேட்ப என்றார். நாடகத் தமிழச் சொற்கள் இவ்விரண்டாலும் அமைவன வால் அதனைக் குறிக்காது விடுத்தார்.

செகம் எனும் பளிங்குமாடம்; புகழ் என்னும் பஞ்சி — உருவகங்கள் (6)

## நூற்பொருளடக்கமும், நெறிநூல்களும்

விரவியதேவர்மக்கள்விலங்கொடுமரமிடம்பல
பொருள்செயும்வடிவுபண்புபோற்றியசெயலொலிப்பேர்
ஒருசொற்பல்பொருளினோடுமுரைத்தபல்பெயர்க்கூட்டந்தான்
வருமுறைதிவாகரம்போல்வைத்துப்பிங்கலந்தைதன்னில்

7 விரவிய தேவர், மக்கள்,
விலங்கொடு மரம்,இ டம்,பல்
பொருள்,செயும், வடிவு பண்பு,
போற்றிய செயல்,ஒ லிப்பேர்,
ஒருசொல்பல் பொருளி னோடும்
உரைத்தபல் பெயர்க்கூட் டந்தான்
வருமுறை திவாக ரம்போல்
வகுத்துப்பிங் கலந்தை தன்னில், ... ...

## செய்யுள்—7

**பொருள்:**

விரவிய—தமிழில் பலவாக விரவியுள்ள பெயர்ச்சொற்களுள்
தேவர்பேர்—தேவப்பெயர்த் தொகுதியும்
மக்கள்பேர்—மக்கட்பெயர்த் தொகுதியும்
விலங்குபேர்—விலங்கின் பெயர்த் தொகுதியோடு
மரம்பேர்—மரப்பெயர்த் தொகுதியும்
இடம்பேர்—இடப்பெயர்த் தொகுதியும்
பல்பொருள்பேர்—பல்பொருட் பெயர்த்தொகுதியும்
செயும் வடிவுபேர்—செயற்கை வடிவப் பெயர்த் தொகுதியும்
பண்பு பேர்—பண்பு பற்றிய பெயர்த் தொகுதியும்
போற்றிய செயல் பேர்—பேணி மேற்கொள்ளப்பெறும் செயல் பற்றிய பெயர்த்தொகுதியும்
ஒலி பேர்—ஒலி பற்றிய பெயர்த்தொகுதியும்
ஒருசொல் பல்பொருளினோடும் பேர்—ஒருசொற் பல்பொருட் பெயர்த் தொகுதியுடனும்
உரைத்த பல்பெயர்க் கூட்டம் பேர்—தினாகரத்துள் சொல்லப்பெற்ற பல்பெயர்க் கூட்டத்து ஒருபெயர்த் தொகுதியும
திவாகரம் வரும் முறை போல் வைத்து—திவாகரத்தில் வரும் முறைபோல வைத்து
பிங்கலந்தை தன்னில்—பிங்கலந்தையில்

**பொருள் விளக்கம்:**

விலங்கு ஒடு—தேவர், மக்கள், விலங்கு எனக் குறித்த உயிர்ப்பொருள்களி னின்றும், தொடர்ந்து வரும் மரம், இடம் முதலிய உயிரல் பொருள்களைப் பிரித்துக்காட்ட 'ஒடு' சேர்த்தார்

போற்றிய—எச்செயலைச் செய்யினும் அதனைச் செய்வோர் அதனில் மனம் வைத்துப் பேணி மேற்கொள்ளும்

ஒலி பேர்—பேர், பெயர் என்னும் பொருளில் இடைநிலை விளக்காக வைக்கப்பெற்றது. 12 வகைகளுடனும் சென்று சோந்து பொருள் தரும். பத்துத்தொகுதிகளும் ஒருபொருட் பல்பெயர்த் தொகுதிகள். ஆகையால் பத்தாவதாகிய ஒலியில் 'ஒடு' சேர்த்தார்.

பொருளின் ஒடு உம்—11ஆவதாகிய 'ஒரு சொற் பல்பொருட் பெயர்த் தொகுதி', எதுகைச் சொல்லமைப்புடையது; அகரமுதலி போல. 12ஆவது 'பல்பெயர்க்கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி' என்பது இருசுடர், முத்தமிழ் முதலிய கூட்டப் பெயர்ப் பொருளை விரித்துச் சொல்லும் பகுதி.

முன்னதனின்றும் இது வேறுபட்டதாகையால் இவ்விரண்டையும் பிரித்துக் காட்ட 'ஒடு' கொடுத்தார். ஒருசொற் பல்பொருட் பெயர்த் தொகுதிதான் தமிழ் பயில்வார்க்குச் சொற் பொருள் காண மிகுதியும் பயன்படும் சிறப்புடையது. எனவே உம்மை கொடுத்தார். (உம்மை—எச்சவும்மை)

உரைத்த பல்பெயர்க் கூட்டம்—இவ்வாசிரியர் திவாகரர், பிங்கலர் என்னும் இருவரது நூல்களையும் நெறியாகக்கொண்டு இந்நூலை அமைக்கின்றார். 12ஆவது தொகுதியாகிய பல்பெயர்க்கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி பிங்கலத்தையில் இல்லை. பிங்கலர் உரைக்காதது. சேந்தன் திவாகரத்தில் உள்ளது, திவாகரர் உரைத்தது. எனவே 'திவாகரரால் சொல்லப்பெற்ற' என்று பொருள் கொள்ளப்பெற்றது, இதனைத் தொடுத்துமொழிவார் போல இந்நூலாசிரியர் 12ஆவது தொகுதியின் கடைக்காப்புப் பாடலும் நூலின் இறுதிப் பாடலுமான பாடலை 'உரைத்த பல்பேர்க் கூட்டத் தொருபெயாத் தொகுதி தன்னில்' என்று 'உரைத்த' என்னும் சொல்லை வைத்தார்.

தான் — அசை

வருமுறை — இத்தொடரை 'வருமுறை உரைத்தான் வீரைமன்னன் மண்டலவன்தானே' என்று விலங்கின் பெயாத்தொகுதிக் கடைக்காப்பிலும்

'மரப்பெயர்த் தொகுதி தன்னை வருமுறை கூறலுற்றாம்' என்று மரப்பெயர்த் தொகுதித் தொடக்கப் பாவிலும் வைத்தார். இவ்விரு தொகுதிகளிலும் மேலும் பலவற்றிலும் தொடக்கச் சொற்களாகவும், முடிவுச் சொற்களாகவும் வரும் முறை திவாகரத்துடன் ஒத்தும் பிங்கலந்தையுடன் ஒவ்வாமலும் இருத்தல் குறிக்கத்தக்கவை. திவாகரத்தை அடிபொற்றி இவ்வாசிரியர் செல்கின்றமை புலனாகின்றது. எனவே, 'திவாகரம் வரும் முறை' எனப்பெற்றது.

விலங்கொடு — 'விலங்கு இன் ஒடு' என்று 'இன்' சாரியை ஓசை இனிமை கருதி மட்டும் அன்று; நூலாசிரியர் 'விலங்கின் பேர்த் தொகுதி' என்றும், 'விரவிய விலங்கின் ஈட்டம்' என்றும் அத்தொகுதியின் தொடக்கத்தும் கடைக்காப்பிலும் குறித்தமை கொண்டுமாகும். அத்தொகுதியும் 'இன்' சாரியை கொண்ட பெயர் பெற்றது.

பண்பு, செயல், ஒலி—'பற்றிய' —

'பண்பு பற்றிய பெயரின் ஈட்டம்' என்றும்
'செயல் பற்றும் பெயர்க் கூட்டத்தை' என்றும்
'செயல் பற்றும் பேர்' என்றும்

## செய்யுள் — 8

'ஒலி பற்றும் பெயர்க் கூட்டத்தை' என்றும்,
'ஒலி பற்றும் பேர்ச்சொல்லும்' என்றும்

'பற்று'ச்சொல் இணைத்தமை கொண்டு அவ்வத் தொகுதிகள் 'பற்றிய' என்னும் சொற்பெய்து அமைக்கப்பெற்றன.

பெயர், பேர் — இரு சொற்களையும் ஆசிரியர் ஆங்காங்கு கையாண்டுள்ளார். பெயர் 13 இடத்தும், பேர் 8 இடத்தும் வந்துள்ளன. பெரும் ஆட்சி கொண்டும், ஒலி நயங்கொண்டும் பெயர் என்னும் சொல்லொடு 'தொகுதிப்பெயர்' என்று அமைக்கப்பெற்றது. (7)

## பனுவற்பாடலும் அவையடக்கமும் தன் பெயரும்

ஒருங்குளபொருளுமோர்ந்திட்டுரைத்தனன்விருத்தந்தன்னில்
இருந்தவைநல்லோர்குற்றமியம்பிடாரென்பதெண்ணித்
திருந்தியகமலவூர்திதிருப்புகழ்புராணம்செய்தோன்
பரந்தசீர்க்குணபத்திரன்றாள்பணிந்தமண்டலவன்றானே

8 ஒருங்குள பொருளும் ஓர்ந்திட்
டுரைத்தனன் விருத்தம் தன்னில்,
'இருந்தவை நல்லோர் குற்றம்
இயம்பிடார்' என்ப தெண்ணித்
திருந்திய கமல ஊர்தி[1]
'திருப்புகழ் புராணம்' செய்தோன்
பரந்தசீர்க் குணபத் திரன்தாள்
பணிந்தமண் டலவன் தானே

---

**பாட வேறுபாடு:**

1 'கமலமூர்த்தி' பிங்கலத்தில் (192) அருகன் ஊர்தியாக அம்புயம் (கமலம்) சொல்லப்படுகிறது. சேந்தன் திவாகரம் (11) அபிதானமணிமாலை (4) முதலிய பல உரிப் பனுவல்களில் அருகப் பெயர்களில் 'கமலஊர்தி' உள்ளது.; 'கமலமூர்த்தி' இல்லை. பின் எழுந்த அகர முதலிகள் பலவும் 'கமல ஊர்தி' என்பதையே குறிக்கின்றன. இந்நூல் செய்யுள் 354இல் 'மடம் அவிழ் கமல ஊர்தி வந்த வாமனை' என்றுள்ளது. இதில் 'வந்த' என்பது கமலத்தை ஊர்தியாகக் கொண்டுவந்த என்னும் பொருளைத்தருவதும் 'கமல வூர்தி' என்னும் பாடத்தை உறுதிசெய்கின்றது.

## செய்யுள் — 8

**பொருள்:**

உள பொருள் ஒருங்கு உம் — (பிங்கலந்தையில்) உள்ள பொருள்கள் அனைத்தையும்,

ஓர்ந்திட்டு — ஆராய்ந்து பார்த்து,

அவை இருந்த நல்லோர் — அவையில் இருந்த சான்றோர்,

குற்றம் இயம்பிடார் என்பது எண்ணி — குற்றம் சொல்லார் என்பதை நினைந்து,

விருத்தம் தன்னில் — ஆசிரிய விருத்தச் செய்யுளால்

உரைத்தனன் — உரைத்தான்
(உரைத்தவன் எவன் என்றால்)

திருந்திய கமல ஊர்தி திருப்புகழ் புராணம் செய்தோன் — செவ்விய அருகக் கடவுளின் தெய்வப் புகழைப் புராணமாகச் செய்தவனாகிய

பரந்த சீர் குணபத்திரன் தாள் — விரவிய பெருமையை உடைய குண பத்திரன் என்பவனது திருவடிகளை

பணிந்த மண்டலவன் — வணங்கிய மண்டலவன்.

**பொருள் விளக்கம்:**

ஒருங்கு உம் — பொருள் இயைபு கருதிப் பொருளும் என்பதிலுள்ள உம்மை ஒருங்கும் என்று ஒருங்குடன் கூட்டப்பெற்றது.

உரைத்தனன் — நூலாசிரியர் தம்மைப் படர்க்கையில் வைத்துக் குறிக் கின்றார். 'யான் எனது என்னும் செருக்கறுத்'தவராதலின் யான் என்று தன்மையில் கூறார் ஆயினார். ஒவ்வொரு தொகுதியின் கடைக் காப்புப் பாடலிலும் இவ்வாறே படர்க்கையில் தம்மைக் குறிக்கின்றார்.

விருத்தம் — அறுசீர் ஆசிரிய விருத்தம்

இருந்த அவை என்பது அவை இருந்த என மாற்றப்பெற்றது

## செய்யுள்—8

குற்றம் இயம்பிடார்—அவையில் குற்றம் கூறாமை சான்றோர் இயல்பு. குற்றம் இருப்பினும் "சான்றோர் சமழ்த்தனர் நிற்பவே மற்றவரை
ஈன்றார்க் கிறப்பப் பரிந்து"
என்று நாலடியாரும் குறித்தார். இவ்வாசிரியர் தேர்ந்த மொழிப்புலவராக இந்நூலைக் குற்றமறச் செய்திருப்பினும் இதனை அவையடக்கமாகக் கூறுகின்றார்.

திருப்புகழ் புராணம் — இப்பெயரில் ஒரு நூல் உண்டென்றும் கூறுவர்.

குணபத்திரன் — இந்நூலாசிரியரின் ஆசிரியர். சமணச் சான்றோர். மன்னன் போன்ற சிறப்புடன் புலமை நடத்தியவர். ஒவ்வொரு தொகுதியின் கடைக்காப்புப் பாடலிலும் இவரைப் போற்றிப் பாடுகின்றார்.

மண்டலவன் — நூலாசிரியர். மண்டல புருடர் எனப் பிற்காலத்தில் குறிக்கப்பெற்றார். ஆய்வுரையில் விவரங்கள் உள.

தான், ஏ — அசைகள்



# முதல் தேவப்பெயர்த் தொகுதி

**(அருகன் முதல் வானவில் நிறைவாக 157 பொருள்களின் பெயர்கள்)**

## முதல் தேவப்பெயர்த் தொகுதியில்

| | | |
|---|---|---|
| அருகன் முதல் பேய்வரை | 39 | கடவுள் தேவப் பொருட் பெயர்கள் |
| வானம் முதல் விண்மீன் வரை | 73 | இயற்கைத் தேவப் பொருட் பெயர்கள் |
| நாழிகை முதல் அயன் வாழ்நாள்வரை | 32 | காலத் தேவப் பொருட் பெயர்கள் |
| மழை முதல் வானவில் நிறைய | 13 | வான வரவுத் தேவப் பொருட் பெயர்கள் |

**அடங்கியுள்ளன**

## தேவப் பெயர்த் தொகுதிப் பொருட் பெயர்கள்
## அகர நிரல்

**ஆக பொருட்பெயர்கள் 157**

செய்யுள் —9

# முதல் தேவப் பெயர்த் தொகுதி

## சமணத்தேவன் அருகன் பெயர்கள்

அநகனெண் குணனிச்சிந்தனறவாழிவேந்தன்வாமன்
சினன்வரனுறுவன்சாந்தன்சீனேந்திரனீதிநூலின்
முனைவன்மாசேனன்றேவன்மூவுலகுணர்ந்தமூர்த்தி
புனிதன்வென்றோன்விராகன்பூமிசைநடந்தோன்போதன்

9 அநகன், எண்குணன், நிச்சிந்தன்,
அறவாழி வேந்தன், வாமன்,
சினன்,வரன், உறுவன், சாந்தன்,
சீனேந்திரன், நீதி நூலின்
முனைவன்,மா சேனன். தேவன்,
மூவுல குணர்ந்த மூர்த்தி,
புனிதன், வென்றோன், விராகன்,
பூமிசை நடத்தோன், போதன், ... ...

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

அருகன்—சமண சமயத்தின் துறக்க நிலையாகிய கேவலி என்னும் அருகத்துவ நிலையை அருளுபவன்
அநகன்—கலக்கமில்லாதவன்
எண்குணன்—சூடா. செய். 1129இல் காணப்பெறும் எட்டு குணங்களையுடையவன்
நிச்சிந்தன்—நினைத்தற்கு அரியவன்
வாமன்—வணக்கத்திற்குரியவன்
சாந்தன்—அமைதியானவன்
சினேந்திரன்—சூடா. செய். 1132இல் காணப்பெறும் எட்டுக் குற்றங்களை வென்றவன்
முனைவன்—முதல் அறிவன்
விராகன்—அவாவற்றவன்
போதன்—அறிவுள்ளவன்

## செய்யுள் — 10

### அருகன் தொடர்ச்சி

பண்ணவன்கமலவூர்திபரமேட்டிகாதிவென்றோன்
புண்ணியன்புலவன்புத்தன்பூரணன்பொன்னெயிற்கோன்
விண்ணவன்விமலன்வீரன்விநாயகன்வீதசோகன்
அண்ணல்வில்மதனைவென்றோனருட்கொடிவேந்தனாசான்

10 பண்ணவன், கமல வூர்தி,[1]
பரமேட்டி, காதி வென்றோன்,
புண்ணியன், புலவன், புத்தன்,
பூரணன் பொன்னெ யிற்கோன்,
விண்ணவன், விமலன், வீரன்,
விநாயகன், வீத சோகன்,
அண்ணல்.வில் மதனை வென்றோன்
அருட்கொடி வேந்தன், ஆசான் ... ...

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

பண்ணவன்—தகுதிபெற்றோன்
பரமேட்டி—மேலிடத்திருப்பவன்
காதி வென்றோன்—காதி என்னும் வினையை வென்றவன்
புத்தன்—அறிவுள்ளவன்
பூரணன்—நிறைவானவன்
பொன் எயில் கோன்—சமய சரணத்தைச் சுற்றியுள்ள உதயதரம், பிரீதி தரம், கலியாணதரம் என்னும் மூன்று கோட்டைகளை[2] வென்றவன்
விமலன்—மலம் அற்றவன்
விநாயகன்—உறுதி போதிப்பவன்
வீதசோகன்—துயரமில்லாதவன்

### அருகன் தொடர்ச்சி

முத்தன்மாமுனிகருத்தன்முக்குடைச்செல்வன்முன்னோன்
சித்தனெண்சிறப்புமுள்ளோன்திகம்பரன்கொல்லாவேதன்
நித்தனின்மலனின்னாமனிராயுதன்நேமிநாதன்
அத்தனனந்தன்சோதியரியணைச்செல்வனாதி

---

**பாட வேறுபாடு:**

1 **'கமலமூர்த்தி' செய். 8இன் பா. வே. குறிப்பு இங்கும் பொருந்தும்.**

2 **திருநூற்றந்தாதி செ. 18 உரை.**

## செய்யுள்—11

11 முத்தன்;மா முனிவன், கருத்தன்
முக்குடைச் செல்வன், முன்னோன்,
சித்தன்,எண் சிறப்பும் உள்ளோன்,
திகம்பரன், கொல்லா வேதன்,
நித்தன்,நின் மலன்,நின் நாமன்,
நிராயுதன், நேமி நாதன்,
அத்தன்,அ னந்தன், சோதி,
அரியணைச் செல்வன், ஆதி ... ...

**பெ. பொ. விளக்கம்**

முத்தன்—காமம் முதலிய விட்டவன்

கருத்தன்—உலகு படைத்தவன்

முக்குடை—சந்திராதித்தியம், நித்தியவிநோதம், சகலபாசனம் என்பர்[1]

சித்தன்—செயல் முடிக்கும் வல்லவன்; எண்சிறப்பு, சுடர்மண்டலம், சுர துந்துபி, தெய்வத்துவனி, சிங்கப்பிடர் அணை, பிண்டி, வெண்சாமரை மலர்மாரி, பொற்குடை என வானவர் அருகனுக்குச் செய்யும் எட்டு வகைச் சிறப்புகள்[2]

திகம்பரன்—திக்குகளையே ஆடையாகக் கொண்டவன்.

கொல்லா வேதன்—கொல்லாமையை மறையாக்கியவன்

நித்தன்—பிறப்பு இறப்பு இல்லா நிலைத்தவன்

நின்னாமன்—பெயரற்றவன்

நிராயுதன்—படைகளற்றவன்

நேமி—ஆழி

அத்தன்—ஆளுமையுள்ளவன்

ஆதி—முலவன்

---

**பாட வேறுபாடு:**

1 சிலப்பதிகாரம்—11-1 அடியார்க்குநல்லார் உரை.

2 அவிரோதி ஆழ்வாரின் திருநூற்றந்தாதியில் காணப்பெறுவது.

## செய்யுள்—12

### அருகன் தொடர்ச்சி

ஆத்தன்குற்றங்களில்லானசோகமர்கடவுளாதன்
சாத்தன்வேதாந்தனாதன்சமியநாமயன்சுயம்பு
நீத்தவன்பிதாவிதாதாநிரம்பரனனந்தஞானி
தீர்த்தன்மால்பகவன்சாமிசீபதிசீமான்செய்யோன்

12 ஆத்தன்,குற் றங்கள் இல்லான்,
அசோகமர் கடவுள், ஆதன்,
சாத்தன்,வே தாந்தன் நாதன்,
சமி,யநா மயன்,சு யம்பு,
நீத்தவன்,பி தா,வி தாதா,
நிரம்பரன், அனந்த ஞானி,
தீர்த்தன்,மால் பகவன், சாமி
சீபதி, சீமான், செய்யோன்,

**பெ. பொ. விளக்கம்:**

ஆத்தன்—தக்கவன்
ஆதன்—முதல்வன்
சாத்தன்—கொடியவரை ஒறுப்பவன்
சமி—விருப்பு வெறுப்பில் சமமானவன்
அநாமயன்—நோயில்லாதவன்
சுயம்பு—தானே தோன்றியவன்
விதாதா—படைப்பவன்
நிரம்பரன்—ஆடை அணியாதவன்
பகவன்—பகுத்து அளித்துக் காப்பவன்
சாமி—உடைமையெல்லாம் உடையவன்
சீபதி—சீமாட்டியின் கணவன்
செய்யோன்—நேர்மையானவன்

## செய்யுள் 13

### அருகன் நிறைவு

நிருமலன்வரதன்சாதுநிரஞ்சனன்விறலோன்யோகி
தருமராசன்யுகாதிசதுர்முகன்சாதரூபி
திருமறுமார்பன்நீடுசிவகதிக்கிறைதொண்ணூறே
அருகன்பேராகுமற்றுமபிதானமனந்தமாமே

13 நிருமலன், வரதன், சாது
நிரஞ்சனன், விறலோன், யோகி
தருமரா சன்,யு காதி,
சதுர்முகன், சாத ரூபி,
திருமறு மார்பன், நீடு
சிவகதிக் கிறைதொண் ணூறே
**அருகன்**பேர் ஆகும் மற்றும்
அபிதானம் அனந்தம் ஆமே.

**பெ. பொ. விளக்கம் :**

வரதன்—வரம் அளிப்பவன்
நிரஞ்சனன்—குற்றம் இல்லாதவன்
விறலோன்—வலிமையுள்ளவன்
யுகாதி—உலகத் தோற்ற முதல்வன்
சதுர் முகன்—நான்கு முகங்களை உடையவன்
சாதரூபி—பொன் போன்ற நிறத்தவன்
திருமறு மார்பன்—திருமகளை மறுவாக மார்பில் கொண்டவன்
சிவகதிக்கு இறை—செம்மையான வீட்டுலகிற்குத் தலைவன்
தொண்ணூறு—அருகன் பெயர்களின் கூட்டுத்தொகை எண்
அபிதானம்—பெயர்
அனந்தம்—கணக்கற்றது
நீடு—அடைமொழி
ஆம்—ஆகும் என்பதன் தொகுத்தல்
ஏ—அசை

சூடாமணிப் பெயர்களோடு

# பிங்கலம், கயாதரம், நாமதீபம்

ஆகிய மூன்று உரிச்சொற்பனுவல்கள்

# ஒப்பீடு

| சூடாமணி செய்யுள் 9—11 | பிங்கலம் செய்யுள். 191 | கயாதரம் செய்யுள். 15 | நாமதீபம் செய்யுள் |
|---|---|---|---|
| அருகன் 1+90 | அருகன் 1+14 | அருகன் 16 | அருகன் பொருட் |
| அநகன்* | ... | ... | பெயரும், பெயர் |
| எண்குணன் | எண்குணன் | எண்குணன் | களும் இடம் |
| நிச்சிந்தன் | ... | ... | பெறவில்லை |
| அறவாழிவேந்தன் | அறவாழிவேந்தன் | அறவாழிஅண்ணல் | |
| வாமன் | ... | ... | |
| சினன் | ... | ... | |
| வரன் | ... | ... | |
| உறுவன் | ... | ... | |
| சாந்தன் | ... | சாந்தன் | |
| சினேந்திரன், | சினேந்திரன். | சினேந்திரன், | |
| முனைவன் | முனைவன் | முனைவன் | |
| மாசேனன், தேவன் | ... | ... | |
| முவுலகுணர்ந்த | ... | ... | பின்வருபவைதேவர் |
| மூர்த்தி | ... | ... | என்னும் பெயர்ப் |
| புனிதன் | ... | ... | பொருளில் அர் |
| வென்றோன் | ... | ... | என்னும் பன்மை |
| விராகன், | ... | ... | இறுதி நிலையுடன் |
| பூமிசைநடந்தோன் | பூமிசைநடந்தோன் | போதிநடந்தோன் | உள்ளன. வெண்பா |
| போதன் | ... | ... | எண்: 63 |

---

* நூலாசிரியர் செய்யுளில் பெயர்களின் கூட்டுத்தொகையைக் குறிப்பர். அது தலைப்புச்சொல் (அருகன் போன்றது) அடங்காதது அதன்ால். தலைப்புச்சொல் 1 என்றும் குறித்து கூட்டுத்தொகை 90 என்றும் கூட்டல் குறியுடன் காட்டப்பெற்றுள்ளது. இவ்வமைப்பற்றவை செய்யுளில் அமைந்த எண் நிலைக்கேற்றவை,

| சூடாமணி | பிங்கலம் | கயாதரம் | நாமதீபம் |
|---|---|---|---|
| பண்ணவன், | பண்ணவன், | ... | பண்ணவர் |
| கமலவூர்தி | ... | ... | |
| பரமேட்டி | ... | ... | |
| காதிவென்றோன் | ... | ... | |
| புண்ணியன், | புண்ணியன் | ... | |
| புலவன் | ... | ... | புலவர் |
| புத்தன் | ... | ... | |
| பூரணன் | ... | ... | |
| பொன்னெயிற் கோன் | பொன்னெயில் நாதன் | பொன்னெயில் நாதன் | |
| விண்ணவன், | ... | ... | |
| விமலன், | ... | ... | |
| வீரன், விநாயகன், | ... | ... | |
| வீதசோகன், | ... | ... | |
| அண்ணல், | ... | ... | |
| மதனைவென்றோன், | ... | ... | |
| அருட்கொடியோன், | ... | ... | |
| ஆசான், | ... | ... | |
| முத்தன், மாமுனி | ... | ... | முனிவர் |
| கருத்தன் | ... | ... | |
| முக்குடைச்செல்வன் | முக்குடையோன் | முக்குடையோன் | |
| முன்னோன், | ... | ... | |
| சித்தன், | ... | ... | |
| எண்சிறப்புள்ளோன் | ... | ... | |
| திகம்பரன, | ... | திகம்பரன | |
| கொல்லாவேதன் | ... | ... | |
| நித்தன், நின்மலன், | ... | ... | |
| நின்னாமன், | ... | ... | |
| நிராயுதன், | ... | ... | |
| நேமிநாதன், | ... | ... | |
| அத்தன், ஆனந்தன், | ... | ... | |
| சோதி, | ... | சோதி | |
| அரியணைச் செல்வன், | அரியணைச் செல்வன் | | |
| ஆதி, | | | |

| | | | |
|---|---|---|---|
| ஆத்தன், | ... | ... | |
| குற்றங்களில்லான், | ... | ... | |
| அசோகமர்கடவுள் | அசோசமர்கடவுள் | அசோகமர்ந்தோன் | |
| ஆதன், சாத்தன், | ... | ... | |
| வேதாந்தன், | ... | ... | |
| நரதன், சமி, | ... | ... | |
| சுயம்பு, நீத்தவன், | ... | ... | |
| பிதா. விதாதா, | ... | ... | |
| நிரம்பரன் | ... | ... | |
| அனந்தஞானி | ... | ... | |
| தீர்த்தன், மால், | ... | ... | |
| பகவன், | பகவன் | பகவன் | பகவர் |
| சாமி, | ... | ... | |
| சீபதி, சீமான் | ... | ... | |
| செய்யோன் | ... | ... | |
| நிருமலன் | ... | ... | |
| வரதன், | வரதன் | ... | |
| சாது, | ... | ... | |
| நிரஞ்சனன் | ... | ... | |
| விறலோன் | ... | ... | |
| யோகி | ... | ... | |
| தருமராசன் | ... | ... | |
| யுகாதி | ... | ... | |
| சதுர்முகன் | ... | ... | |
| சாதரூபி | ... | ... | |
| திருமறுமார்பன் | ... | .. | |
| சிவகதிக்கிறை | ... | ... | |

**சூடாமணிச் சொற்களைவிட பிற மூன்று நூல்களில் உள்ள மிகைப்பெயர்கள்**

பிங்கலத்தில்—பட்டாரகன்
கயாதரத்தில்—சுத்தன், அதிசயன், புங்கவன்
நாமதீபத்தில்— ......

# சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 9 முதல் 13 முடிய உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் : (சொல்லுருவம் மட்டும்)**

சினன்—பதிற்றுப்பத்து, பாட்டு எண். 22, அடி எண். 1; வென்றோன்—புறநானூறு, 125-10; புலவன்—அகநானூறு, 345-6; அண்ணல்—சிறுபாணாற்றுப்படை, 200; ஆசான்—பரிபாடல், 2-61; முத்தன்—கலித்தொகை, 9-20; முன்னோன்—நெடுநல்வாடை, 177; அத்தன்—குறுந்தொகை, 93-3; ஆதி—மதுரைக்காஞ்சி, 390; ஆதன்—ஐங்குறுநூறு, 1-1; சாத்தன்—புறம், 178-5; நீத்தவன்—கலி, 87-11; மால்—திருமுருகாற்றுப்படை, 12; செய்யோன்—56-8; விறலோன்—நற்றிணை, 304-10; திருமறுமார்பன்—கலி, 104-10.

**பிற தமிழ்ச் சொற்கள்**

எண்குணன், அறவாழிவேந்தன், உறுவன், முனைவன், தேவன், பூமிசை நடந்தோன், போதன், பண்ணவன் பொன்னெயிற்கோன், விண்ணவன், அருட்கொடியோன், மாமுனி, கருத்தன், முக்குடைச்செல்வன், முன்னோன், சித்தன், எண்சிறப்புமுள்ளோன், கொல்லாவேதன், அரியணைச்செல்வன், ஆத்தன், குற்றங்களில்லான், அசோகமர்கடவுள், பகவன்.

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை :**

முனைவன், பண்ணவன், உறுவன், ஆதன்.

**வடசொற்கள்:**

அருகன், அநகன், நிச்சிந்தன், வாமன், வரன், சாந்தன், மாசேனன், புனிதன், விராகன், பரமேட்டி புண்ணியன், புத்தன், பூரணன், வீரன், விநாயகன் வீதசோகன், முத்தன், திகம்பரன், நித்தன், நின்னாமன் நேமிநாதன், ஆனந்தன், சோதி, சாத்தன் (சாஸ்தா), வேதாந்தன், நாதன், சமி, அநாமயன், சுயம்பு, பிதா,

## செய்யுள்—14

விதாதா, நிரம்பரன், தீர்த்தன், சாமி, வரதன், சாது, நிரஞ்சனன், யோகி, தருமராசன், சாதரூபி, சீபதி.

**மணிப் பவளச் சொற்கள்:**

சினேந்திரன், மூவுலகுணர்ந்தமூர்த்தி, கமலவூர்தி, காதி வென்றோன், விமலன், மதனை வென்றோன், கொல்லாவேதன் நின்மலன், நிராயுதன், அநந்தஞானி, நிருமலன், யுகாதி, சதுர்முகன், சிவகதிக்கிறை, சீமான்.

## சைவத் தெய்வம் — சிவன்

சங்கரனிறையோன்சம்புசதாசிவன்பேயோடாடி
பொங்கரவணிந்தமூர்த்திபுராந்தகன்பூதநாதன்
கங்கைவேணியன்கங்காளன்கடுக்கையங்கண்ணிசூடி
மங்கையோர்பாகன்முன்னோன்மகேச்சுரன்வாமதேவன்

14 சங்கரன், இறையோன், சம்பு,
சதாசிவன், பேயோ டாடி,
பொங்கர வணிந்த மூர்த்தி,
பராந்தகன், பூத நாதன்,
கங்கைவே ணியன்,கங் காளன்,
கடுக்கையங் கண்ணி சூடி,
மங்கையோர் பாகன், முன்னோன்,
மகேச்சுரன், வாம தேவன்: ... ...

**பெ. பொ. விளக்கம் :**

சிவன்—செம்மையன்
சங்கரன்—அழிப்பவன்
இறையோன்—எங்கும் தங்கியவன்
சம்பு—இன்பம் கொடுப்பவன்
புராந்தகன்—(புரம் அந்தகன்) மூன்று கோட்டைகளை அழித்தவன்
வேணியன்—சடைமுடியன்
கங்காளன்—முழு எலும்புகளை அணிந்தவன்

### செய்யுள்—15

கடுக்கை— கொன்றை
கண்ணி— தலைமாலை
மகேச்சுரன்—கடவுளரில் மேம்பட்டவன்
வாமதேவன—ஐந்து முகங்களில் வடக்குப் பார்வையுள்ள முகத்தெய்வம்.[1]
(14)

## சிவன் தொடர்ச்சி

நீலகண்டன்மாதேவன்நிருமலன்குன்றவில்லி
சூலபாணியனீசானன்பசுபதிசுடலையாடி
காலகாலன்கபாலியுருத்திரன்கைலையாளி
ஆலமர்கடவுணித்தனைம்முகன்பரசுபாணி

15 நீலகண் டன்,மா தேவன்,
நிருமலன், குன்ற வில்லி,
சூலபா ணியன்,ஈ சானன்,
பசுபதி, சுடலை யாடி,
காலகா லன்,க பாலி
உருத்திரன், கைலை யாளி,
ஆலமர் கடவுள். நித்தன்,
ஐம்முகன், பரசு பாணி,

### பெ. பொ. விளக்கம்

நீலகண்டன்—நீலநிறக் கழுத்துடையவன்
சூலபாணி—சூலத்தைக் கையில் கொண்டவன்
ஈசானன்—ஐந்து முகங்களில் மேல்நோக்கிய பார்வையுள்ள முகத்தன்[2]
பசுபதி—ஆன்மாக்களைக் காப்பவன்
காலகாலன்—கூற்றுவனுக்கும் கூற்றுவன்
கபாலி—தலையோட்டை அணிந்தவன்
உருத்திரன்—பெருஞ்சினத்தவன்

---

1 சைவ சமய நெறி, பொதுவியலில் 332-இன் உரையிற் காணப்பெறுவது.

2 சிவதரு மோத்திரம், பரிதா 89:இன் உரையிற் காணப்பெறுவது.

## செய்யுள்—16

கைலை ஆளி—கயிலாயத் தலைவன்
ஆலமர் கடவுள்—ஆலமரத்தடியில் அமரும் கடவுள்
நித்தன்—பிறப்பு இறப்பு இல்லாதவன்
பரசுபாணி—மழுப்படையைக் கையில் கொண்டவன் (15)

### சிவன் தொடர்ச்சி

அந்திவண்ணன்முக்கண்ணன்அழலாடிபாண்டரங்கன்
சந்திரசேகரனானந்தன்சடைமுடியனந்தனாதி
தந்தியீருரியோனம்பன்தற்பரனீரணிந்தோன்
நந்தியேச்சுரனேறூர்ந்தோனக்கன்மாஞானமூர்த்தி

16 அந்திவண் ணன்,முக் கண்ணன்,
அழலாடி, பாண்ட ரங்கன்,
சந்திரசே கரன்,ஆ னந்தன்,
சடைமுடி யனந்தன், ஆதி,
தந்தியீ ருரியோன், நம்பன்,
தற்பரன், நீற ணிந்தோன்,
நந்தி,ஈச் சுரன்,ஏ றூர்ந்தோன்,
நக்கன்,மா ஞான மூர்த்தி

**பெ. பொ. விளக்கம்:**

அந்திவண்ணன்—செக்கர் வானம் போன்ற நிறமுடையவன்
அழல்—நெருப்பு
பாண்டரங்கன்—நீறுபூசி ஆடும் 'பாண்டரங்கம்' என்னும் கூத்தை ஆடியவன்
அநந்தன்—அழிவில்லாதவன்
தந்தியுரியோன்—யானைத்தோலை உரித்துப் போர்த்தியவன்
நந்தி—மகிழ்ச்சியுடையவன்
நக்கன்—அழிக்கும் தலைவன்
ஞானம் மூர்த்தி—மெய்யறிவே உருவானவன் (16)

### சிவன் நிறைவு

வரன்மறைமுதலீசன்மானிடமேந்திசோதி
பிரமன்மாற்கரியோன்தாணுபிஞ்ஞகன்பினாகபாணி
பரமனெண்டோளன்பர்க்கன்பவன்யோகிபகவானேகன்
அரனுமாபதிசிவன்பேரறுபத்தாறனந்தமாமே

## செய்யுள் —17

17 வரன்,மறை முதலி, ஈசன்
மானிட மேந்தி, சோதி,
பிரமன்மாற் கரியோன், தாணு,
பிஞ்ஞகன், பினாக பாணி,
பரமன்,எண் டோளன், பர்க்கன்,
பவன்,யோகி, பகவான், ஏகன்,[1]
அரன்,உமா பதி, சிவன்பேர்
அறுபத்தா றனந்தம் ஆமே.[2]

### பெயர்ப் பொருள் விளக்கம்:

வரன்—மேலானவன்
மான் இடம் ஏந்தி—மானை இடக்கையில் ஏந்தியவன்
தாணு—அசைவில்லாதவன்
பிஞ்ஞகன்—தலைக்கோலம் உடையவன்
பினாகம் பாணி—பினாகம் என்னும் வில்லைக் கையில் உடையவன்
பரமன்—பீடுடையவன்
பர்க்கன்—பேரொளி உடையவன்
பவன்—அனைத்தையும் தோற்றுவிப்பவன்
ஏகன்—ஒன்று என்னும் இன்றியமையாமை கொண்டவன்
அரன்—உலகம் முடிவாக அழிப்பவன்
உமாபதி—உமைக்குக் கணவன்
அறுபத்தாறு—சிவன் பெயர்கள் 66
ஏ—அசை (17)

---

### பாட வேறுபாடு:

1 "எண்டோளன் கூற்றைப் பதைத்திட உதைத்த பாதன்
அரனது நாமம் ஆறைந்திரட்டியாம் அனந்தம் மற்றும்"

இப்பாடத்தால் பர்க்கன், பகவான், ஏகன், உமாபதி என்னும் சிவனைப் பற்றிய சொல்லாட்சிகள் விடுபட்டனவாகும். 'சிவன்' என்னும் பெயரே இல்லாமல் போகும். எண்ணிக்கையும் வேறுபடும். எனவே, மேற்பாடம் கொள்ளப் பெற்றது.

2 "அரனது நாமம் ஆறைந் திரட்டியாம் அனந்தம் மற்றும்"...மேல் குறித்த பாடத்திற்கேற்ப ஆறைந்திரட்டி—60 என்னும் எண்ணிக்கை அமைந்துள்ளது. மேற்கண்ட காரணியம் இதற்கும் ஆகும்.

செய்யுள்—17

## ஒப்பீடு

| சூடாமணி செய்யுள் 14—17 | பிங்கலம் செய்யுள். 94, 95 | கயாதரம் செய்யுள். 5,6 | நாமதீபம் செய்யுள் 9—18 |
|---|---|---|---|
| சிவன்: 1+66 | சிவன்: 1+100 | சிவன்: 38 | சிவன்: 1+157 |
| சங்கரன் | சங்கரன் | சங்கரன் | சங்கரன் |
| இறையோன் | இறைவன் | இறை | இறை |
| சம்பு | சம்பு | சம்பு | சம்பு |
| சதாசிவன் | சதாசிவன் | சதாசிவன் | ... |
| பேயோடாடி | பேயோடாடி | ... | பேயோடாடி |
| அரவணிந்தமூர்த்தி | அரவணிந்தோன் | நாகாபரணன் | பாம்பணிந்தோன் |
| புராந்தகன் | திரிபுராந்தகன் | புராந்தகன் | ... |
| பூதநாதன் | பூதபதி | ... | பூதப்படையோன் |
| கங்கைவேணியன் | கங்காதரன் | கங்காதரன் | கங்கை யணிந்தோன் |
| கங்காளன் | கங்காளன் | கங்காளன் | கங்காளன் |
| கடுக்கையங் கண்ணிசூடி | கொன்றை மாலையன் | ... | கடுக்கை யணிந்தோன் |
| மங்கையோர்பாகன் | நாரிபாகன் | ... | உமைபங்கன் |
| முன்னோன் | முன்னவன் | ... | ... |
| மகேச்சுரன் | மகேச்சுரன் | ... | ... |
| வாமதேவன் | வாமதேவன் | ... | வாமதேவன் |
| நீலகண்டன் | நீலகண்டன் | ... | காளகண்டன் |
| மாதேவன் | மாதேவன் | ... | மாதேவன் |
| நிருமலன் | அமலன் | ... | ... |
| குன்றவில்லி | குன்றவில்லி | ... | ... |
| சூலபாணியன் | சூலி | ... | குலமேந்தி |
| ஈசானன் | ... | ... | ஈசானன் |
| பசுபதி | பசுபதி | பசுபதி | பசுபதி |
| சுடலையாடி | ... | ... | ஈமத்தாடி |
| காலகாலன் | காலகாலன் | காலகாலன் | ... |
| கபாலி | கபாலி | ... | கபாலமேந்தி |
| உருத்திரன் | உருத்திரன் | உருத்திரன் | உருத்திரன் |
| கைலையாளி | கைலையாளி | ... | கயிலைநாதன் |
| ஆலமர்கடவுள் | ஆலமர்கடவுள் | ... | ஆலமர்ந்தோன் |

## செய்யுள் —17

| சூடாமணி | பிங்கலம் | கயாதரம் | நாமதீபம் |
|---|---|---|---|
| நித்தன் | நித்தன் | நித்தன் | நித்தன் |
| ஐம்முகன் | ஐம்முகன் | ஐம்முகன் | ஐந்துமுகன் |
| பரசுபாணி | மழுவாளி | ... | மழுவேந்தி |
| அந்திவண்ணன் | அந்திவண்ணன் | அந்திவண்ணன் | அந்திவண்ணன் |
| முக்கண்ணன் | முக்கண்ணன் | முக்கண்முதல்வன் | இந்தினன் தீமுக்கணான் |
| அழலாடி | அழலாடி | ... | அழலாடி |
| பாண்டரங்கன் | பாண்டரங்கன் | பாண்டரங்கன் | பாண்டரங்கன் |
| சந்திரசேகரன் | சந்திரசேகரன் | ... | பிறையணிந்தோன் |
| ஆனந்தன் | ஆனந்தன் | ஆனந்தன் | ஆனந்தன் |
| *சடைமுடி | சடையோன் | சடையோன் | சடையன் |
| அனந்தன் | அனந்தன் | அனந்தன் | அந்தமிலான் |
| ஆதி | ஆதி | ஆதி | ஆதி |
| தந்தியுரியோன் | யானையுரித்தோன் | ... | ஆனையைக் காய்ந்தோன் |
| நம்பன் | நம்பன் | ... | நம்பன் |
| தற்பரன் | தற்பரன் | ... | தற்பரன் |
| நீறணிந்தோன் | நீறணிகடவுள் | ... | வெண்ணீற்றன் |
| நந்தி | நந்தி | ... | நந்தி |
| ஈச்சுரன் | ஈச்சுரன் | ... | ஈச்சுரன் |
| ஏறூர்ந்தோன் | விடையோன் | விடையூர்தி | விடையூர்தி |
| நக்கன் | நக்கன் | நக்கன் | நக்கன் |
| ஞானமூர்த்தி | ஞானமூர்த்தி | ... | ... |

---

* 'சடைமுடியனந்தன்' என்பதொரு பெயராகக் கொள்ளப்பெற்றது. ஆயினும் பிற உரிச்சொற்பனுவல்கள் சடையான், சடையன் எனும் பெயரை—சடைப்பெயரளவு தனியே கூறுகின்றன. 'சடையாய் எனுமால்' எனும் தேவாரமும் 'சடையனார்' என்னும் நம்பியாரூரர் தந்தை பெயரும் இப்பெயர் ஆட்சியைக் காட்டுகின்றன. எனவே, தனியாக உணருமாறு காட்டப்பெற்றது. அவ்விகுதி இன்மையாலும் இதனைத் தனிப்பெயராகக் கொண்டால் 66 என்னும் பெயர்த்தொகை கூடாமையாலும் அடைமொழியாகக் கொள்ளப்பெற்றது.

## செய்யுள்—17

| தொகுதி | | | சூடாமணி |
|---|---|---|---|
| வரன் | வரன் | ... | வரன் |
| மறைமுதலி | ... | ... | மறைமுதலி |
| ஈசன் | ஈசன் | ஈசன் | ஈசன |
| மானிடமேந்தி | மானிடமேந்தி | ... | மானேந்தி |
| சோதி | சோதி | சோதி | சோதி |
| பிரமன்மாற் கரியோன் | மாலயற்கரியோன் | ... | அயனுக்கெட்டான், மாலுக்கெட்டான் |
| தாணு | தாணு | ... | தாணு |
| பிஞ்ஞகன் | பிஞ்ஞகன் | பிஞ்ஞகன் | பிஞ்ஞகன் |
| பினாகபாணி | பினாகி | பினாகி | பினாகி |
| பரமன் | பரமன் | பரமன் | பரமன் |
| எண்டோளன் | எண்டோளன் | ... | எண்டோளன் |
| பர்க்கன் | பர்க்கன் | ... | ... |
| பவன் | பவன் | ... | ... |
| யோகி | யோகி | ... | யோகி |
| பகவான் | பகவன் | பகவன் | ... |
| ஏகன் | ... | ... | ... |
| அரன் | அரன் | அரன் | அரன் |
| உமாபதி | உமாபதி | ... | ... |

**மிகை: பிங்கலம்:** அருபி, பரன், கறைமிடற்றோன், பாப்பதிகொழுநன், கண்ணுதல், எண்குணன், சசிதரன், பிறப்பிலி, நாயகன், சயம்பு, காமநாசன், பிதா, கருணாலயன், தேவதேவன், முத்தன், முதல்வன், சுத்தன், வேதமுதல்வன், அநாதி, நிருத்தன், பூதேசன், அங்கணன், நிமலன், திரியம்பகன், விமலன், நாதன், வாமன், கிரீசன், புண்ணியன், புலித்தோலுடையான், பித்தன், நாசமில்லோன், பாசுபதன், பிரான், காமாரி, புராரி, அந்தகாரி.

,, **கயாதரம்:** அநாதி, அத்தன், சூலி, சுத்தன், தக்கன் மருகன், இக்கன்படவிழித்தோன், அமலன், பித்தன் முத்தன்.

## செய்யுள்—17

,, **நாமதீபம்:** பெம்மான், செம்மல், திகம்பரன். ஐந்தொழிலான் நவமூர்த்தி, திரிமூர்த்தி, ஐயைந்துமூர்த்தி, சந்தியைந்தன் எழுத்தைந்தன், அருள்வடிவன், சுந்தரர்தூதன், குபேர சிநேகன், சுருதியோதினான், ஆகமங்கள் ஓதினான் எண்குணத்தினோன். துடியேந்தி, தீயேந்தி, நஞ்சுண்டோன் சாமி, பித்தன், ஞானி, பரன், பங்கிற்பூணூலன், அண்ணல், சுகன், நடன், விடையுயர்த்தோன், தோலுடையன், தேவதேவன், அத்தன், காவலன், பிரான் அங்கணன், மன்றாடி, விமலன். சங்கக்குழையன் பிச்சாடனன், நிட்களன், நின்னாமன், நிரஞ்சனன் நிரந்தரன், நிர்க்குணன், சாட்சாத்காரன், நிர்ப்பேதன் நிர்ச்சங்கன், அத்துவிதன், பூரணன், அகண்டன், அசலன் சூக்கன், மூத்தன், அநுபவன், முதல், கண்ணுதல், புராரி சித்தன், எண்ணெண்விளையாட்டான், தந்திதாதை, குகன் தாதை, சருவஞ்சன், அன்னையிலான், தந்தையிலான் பிறப்பிலான், அளவிலான், அரியன், பெருமான், அன்பர்க் கெளியான், சாமப்பிரியன், அட்டமூர்த்தி, மனத்தினெட்டான் வாக்கினெட்டான், தத்துவாதீனன், மலவயிரி, சேய்க்கறி யுண்டோன், சிங்கநகமணிந்தோன்; இதுபோல் ஆமை அறுகு, ஆர், கொக்கிறகு, தும்பை, பன்றிக்கோடு மத்தம், அக்கம், எருக்கு, வன்னி, என்பு, வில்வம் மால்கண், கரந்தை, மீன்கன் ஆகிய இவற்றுடன் ‘அணிந்தோன்’ ஒன்றிய பெயர்கள் உள்ளன.

பார்தேராய்க்கொண்டோன்; இதுபோல் வேதம்பரி அயன்பாகன், மால்கணை, தீக்கணைகூர், கால்விசை மேருகோதண்டம், அரவநாண், ஞாயிறுமதிஆழி, பால் வேலைஅம்புத்தூணி ஆகிய இவற்றுடன் ‘ஆகக்கொண்டோன்’ என்னும் சொல் ஒன்றிய பெயர்கள் உள்ளன.

காலனைக்காய்ந்தோன்; இதுபோல் காமனை புலியை ஆகிய இவற்றுடன் ‘காய்ந்தோன்’ என்னும் சொல் ஒன்றிய பெயர்கள் உள்ளன.

செய்யுள்—17

# சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 14 முதல் 17 முடிய உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் : (சொல்லுருவம் மட்டும்)**

*முன்னோன்—நெடு, 177, ஆலமர் கடவுள்—புறம், 198-9, ஆதி—மதுரை, 390,*

**பிற தமிழ்ச் சொற்கள்**

*சிவன், இறையோன், பேயோடாடி, கங்காளன், கடுக்கையங்கண்ணிசூடி, மங்கையோர்பாகன், மாதேவன், குன்றவில்லி, சுடலையாடி, காலகாலன், கைலையாளி, ஐம்முகன், அந்திவண்ணன், முக்கண்ணன், அழலாடி, ஆதி, நம்பன், தற்பரன், நீறணிந்தோன், ஏறூர்ந்தோன், மறைமுதலி, மானிடமேந்தி, பிஞ்ஞகன், எண்டோளன், பகவான், அரன்.*

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை :**

*முன்னோன், ஆதி, நம்பன், முதலி.*

**வடசொற்கள்:**

*சங்கரன், சம்பூ, புராந்தகன், கங்கைவேணியன், மகேச்வரன், ஈசானன் பசுபதி, கபாலி, நித்தன், பரசுபாணி, பாண்டரங்கன், சந்திரசேகரன், ஆனந்தன், நந்தி, ஈச்சுரன், நக்கன், வரன், ஈசன், சோதி, தாணு, பினாகபாணி, பரமன், பர்க்கன், பவன், யோகி, ஏகன்.*

**மணிப்பவளச் சொற்கள்:**

*சதாசிவன், அரவணிந்தமூர்த்தி, வாமதேவன், நீலகண்டன், நிருமலன், சூலபாணியன், சடைமுடி அனந்தன், தந்தியீருரியோன், ஞானமூர்த்தி, பிரமன்மாற்கரியோன், உமாபதி.* **(17)**

## செய்யுள்—18

### ஓர்குண்டலன் (பலதேவன்)

இலகுமோர்குண்டலன்மற்றிரேவதிகொண்கன்முற்றும்
நிலவியமுசலிவெள்ளைநிகழ்நீலாம்பரனநந்தன்
அவமுறுபடையாக்கொண்டோனச்சுதன்முன்னர்வந்தோன்
பலபத்திரன்காமபாலன்பனந்தாமன்பலதேவன்பேர்

18 இலகும்ஓர் குண்ட லன்,மற்
றிரேவதி கொண்கண், முற்றும்
நிலவிய முசலி, வெள்ளை,
நிகழ்நீலாம் பரன்,அ நந்தன்,
அலமுறு படையாக் கொண்டோன்,
அச்சுதன், முன்னர் வந்தோன்,
பலபத்திரன், காம பாலன்,
பனந்தாமன் பலதே வன்பேர்.

**பெ. பொ. விளக்கம்:**

பலதேவன்—வலியதேவன்
முசலி—உலக்கைப் படையினன்; குளவி போன்ற படையினன் எனவும் சொல்வர்
நிலம் அம்பரன்—கருப்பு உடையினன்
அலப்படை—கலப்பைப்படை
அச்சுதன்—அழிவில்லாதவன்
காமபாலன்—காமனைக் காப்பவன்
பனத்தாமன்—பனம்பூ மாலையன்.

### ஒப்பீடு

| சூடாமணி—18 | பிங்கலம்—143 | கயாதரம் | நாமதீபம்—52 |
|---|---|---|---|
| பலதேவன் 1+11 | பலபத்திரன் 1+14 | ... | பலதேவன் 1+10 |
| ஓர்குண்டலன் | குண்டலவன் | இப்பெயர்கள் | ஓர்குண்டலன் |
| இரேவதிகொண்கன் | இரேவதிகொழுதன் | இல்லை | இரேவதிமன் |
| முசலி | முசலி | | முசலி |
| வெள்ளை | வெள்ளை | | வெள்ளை |
| நீலாம்பரன் | நீலாம்பரன் | | நீலாம்பரன் |

## செய்யுள் — 18

| | | |
|---|---|---|
| அனந்தன் | அனந்தன் | அனந்தன் |
| அலப்படை-கொண்டோன் | அலாயுதன் | அலாயுதன் |
| அச்சுதன்முன்னர் வந்தோன் | அச்சுதன் முன்னோன் | ... |
| பலபத்திரன் | பலபத்திரன் | பலபத்திரன் |
| காமபாலன் | காமபாலன் | காமபாலன் |
| பனந்தாமன் | பனந்துசன் | பனந்தாமன் |

**மிகை:** **பிங்:** உரோகினிதநயன், காளிந்திமர்த்தனன், கருந்துகிலுடையன்

**கயா:** ... ... ...

**நாம:** ... ... ...

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 18இல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

வெள்ளை—பெரும்பாண், 153.

**பிற தமிழ்ச் சொற்கள்:**

ஓர்குண்டலன், முசலி, அலப்படைகொண்டோன், பனந்தாமன்.

**க, சொ. ஆக்கத்திற்குரியவை:**

முசலி, அலப்படை.

**வட சொற்கள்:**

அனந்தன், பலபத்திரன்.

**மணிப் பவளச் சொற்கள்:**

இரேவதிகொண்கன், நீலாம்பரன். அச்சுதன்முன்னர்வந்தோன், காமபாலன், பலதேவன்.

## செய்யுள் — 19

### திருமால்

மாதவன்மாயன்செய்யவாமனன்வாசுதேவன்
சீதரனந்தகோபன்றிருமகனுவணமேற்ற
கேதனன்பதுமநாபன்கேசவன்பஞ்சவர்க்குத்
தூதனேசாரங்கபாணிசுரிமுகச்சங்கமேந்தி

19 மாதவன், மாயன், செய்ய
வாமனன், வாசு தேவன்,
சீதரன், நந்த கோபன்,
திருமகன், உவணம் ஏற்ற
கேதனன், பதும நாபன்,
கேசவன், பஞ்ச வர்க்குத்
தூதனே சாரங்க பாணி,
சுரிமுகச் சங்க மேந்தி ... ...

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

மாதவன் — மது என்பவன் மரபினன்
வாமனன் — குள்ள வடிவினன்
வாசுதேவன் — வாசுதேவன் மகன்
சீதரன் — திருமகளை மார்பில் (தரித்தவன்) கொண்டவன்
உவணம் கேதனன் — கழுகுக் (கருட) கொடியினன்
பதுமநாபன் — கொப்பூழில் தாமரை மலர் கொண்டவன்
கேசவன் — அழகிய மயிருடையவன்
சாரங்கபாணி — சாரங்கம் என்னும் வில்லைக் கையில் கொண்டவன்
சங்கம் ஏந்தி — சங்கைக் கையில் ஏந்தியவன்
செய்ய (அடைமொழி) — தேர்ந்த
சுரிமுகம் (அடைமொழி) — வலமாகச் சுரிந்த முகத்தையுடைய

### திருமால் தொடர்ச்சி

கொண்டல்வண்ணன்கோவிந்தனச்சுதன்மால்
விண்டுவேலையிற்றுயின்றோன்விரகினாலுந்திபூத்தோன்
வண்டுழாய்மவுலியாதிவராகன்வைகுண்டநாதன்
முண்டகாசனைகேள்வன்றாமோதரன்முராரிநேமி

## செய்யுள்—20

20 கொண்டல்வண் ணன்,கா குத்தன்,
கோவிந்தன்,அச்சு, தன்,மால்,
விண்டு,வே லையிற் றுயின்றோன்,
விரகினால் உந்தி பூத்தோன்,
வண்டுழாய் மவுலி, ஆதி
வராகன்,வை குண்ட நாதன்,
முண்ட காசனை கேள்வன்,*
தாமோதரன், முராரி, நேமி ... ...

### பெ. பொ. விளக்கம்

கொண்டல் வண்ணன்—கார்முகில் நிறமுடையவன்
காகுத்தன்—ககுத்தன் மரபினன்
வேலை—பாற்கடல்
உந்தி பூத்தோன்—கொப்பூழில் தாமரை மலர் பூக்கப்பெற்றவன்
மால்—பெருமையுடையவன்
விண்டு—பரந்த புகழுடையவன்
துழாய் மௌலி—துழசி கொண்ட அரசமுடியை உடையவன்
ஆதி வராகன்—மூலப் பன்றியாகத் தோன்றியவன்
முண்டகாசனை கேள்வன்—தாமரை மீதுள்ள திருமகள் கணவன்
தாமம் உதரன்—கயிற்றால் கட்டப்பெற்ற வயிற்றை உடையவன்
முராரி—முரன் என்பவனுக்குப் பகைவன்
நேமி—செலுத்துவோன்
விரகினால்—வலிமையினால்
ஏற்ற—ஏற்று எழுதிய

## திருமால் தொடர்ச்சி

வலவன்தேவகிமைந்தன்வனமாலிபடியிடந்தோன்
சலசலோசனனந்தசயனன்பீதாம்பரன்பேர்
உலகளந்தருள்வோன்பஞ்சாயுதனுலகுண்டபெம்மான்
அலகைதன்முலையோடாவியருந்தினோனாரசிங்கன்

---

* 'முண்டகா சனையின் கேள்வன்' யன்றிருப்பின் அறுசீர் நிறைவாகும்.

## செய்யுள்—21, 22

21 வலவன், தேவகி மைந்தன்,
வனமாலி, படியி டந்தோன்,
சலசலோ சனன், அ னந்த
சயனன், பீ தாம்ப ரன்பேர்
உலகளந் தருள்வோன் பஞ்சா
யுதன், உல குண்ட பெம்மான்,
அலகைதன் முலையோ டாவி
அருந்தினோன், நார சிங்கன் ... ...

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

வலவன்—தேர் ஓட்டி
வனம் மாலி—துழசி மாலையணிந்தவன்
படி இடந்தோன்—நிலத்தைக் கிழித்தவன்
சலசம் லோசனன்—தாமரை மலர்போன்ற கண்ணையுடையவன்
அனந்தன் சயனன்—ஆதிசேடன் என்னும் பாம்பின்மேல் படுத்திருப்பவன்
பிதம் அம்பரன்—பொன் ஆடை உடுத்தவன்
பஞ்ச ஆயுதன்—வில், வாள், சங்கு, ஆழி, தண்டு என்னும் ஐந்து படைக் கருவிகளை உடையவன்
அலகை—பேய் போன்ற பூதனை
நரம் சிங்கம்—மாந்த உருவமும் அரிமா உருவமும் கூடிய உடலை உடையவன்
பேர்—இடைவிளக்காக நின்றது.

## திருமால் நிறைவு

அரவணைச்செல்வன்கண்ணனறிதுயிலமர்ந்தமூர்த்தி
பிரமனைப்பெற்றதாதைபின்னைகேள்வன்முகுந்தன்
கரியவனெடியோன்காவற்கடவுணாரணனேழேழே
அரியின்பேராகுமற்றுமபிதானமனந்தமாமே

22 அரவணைச் செல்வன், கண்ணன்,
அறிதுயில் அமர்ந்த மூர்த்தி,
பிரமனைப் பெற்ற தாதை,
பின்னைகேள் வன், மு குந்தன்,

**செய்யுள்—20-22**

கரியவன், நெடியோன், காவற்
கடவுள்,நா ரணனே ழேழே[1]
அரியின்பேர் ஆகும் மற்றும்
அபிதானம் அநந்தம் ஆமே.

**பெ. பொ. விளக்கம்:**

அரவு அணை—பாம்புப் படுக்கை
கண்ணன்—கருப்பு நிறத்தன்
தாதா—தந்தை
பின்னை கேள்வன்—நப்பின்னை என்பவள் காதலன்
முகுந்தன்—காமம் கொடுப்பவன்
நாரணன்—நீரில் வாழ்பவன்
ஏழேழு—நாற்பத்தொன்பது
ஏ—அசை.

# ஒப்பீடு

| சூடாமணி19—22 | பிங்கலம்—130 | கயாதரம்—8. 9 | நாமதீபம்44—51 |
|---|---|---|---|
| அரியின் பெயர்: 1+49 | நாராயணன்; 70 | அரி: 30 | விடுணு: 123 |
| மாதவன் | மாதவன் | மாதவன் | மாதவன் |
| மாயன் | மாயவன் | மாயன் | மாயன் |
| வாமனன் | வாமனன் | திரிவிக்கிரமன் | வாமன் |
| வாசுதேவன் | வாசுதேவன் | ... | வாசுதேவன் புதல்வன் |
| சீதரன் | சீதரன் | ... | சீதரன் |
| நந்தகோபன்மகன் | நந்தகோபாலன் | நந்தகோன் புதல்வன் | நந்தகோன் புதல்வன் |

**பாட வேறுபாடு:**

1 'என்றிவை ஆறெட்டே '—நாரணன் என்னும் பெயர் விடப்பட்டு ஆறெட்டு என்று 48 எண்ணிக்கை தரப்பட்டுள்ளது. திருமாலுக்குரிய பெயர்களுள் நாராயணன் மிகுந்த வழக்கானது. பிற உரிப்பனுவல்களும் இப்பெயரை விடவில்லை,

## செய்யுள் — 20-22

| சூடாமணி | பிங்கலம் | கயாதரம் | நாமதீபம் |
|---|---|---|---|
| உவணகேதனன் | உவணமுயர்ந்தோன் | ... | புள்ளுயர்த்தோன் |
| பதுமநாபன் | பதுமநாபன் | ... | பதுமநாபன் |
| கேசவன் | கேசவன் | கேசவன் | கேசவன் |
| பஞ்சவர்க்குத் தூதன் | ... | ... | ஐவர் தூதன் |
| சார்ங்கபாணி | சார்ங்கபாணி | ... | ... |
| சங்கமேந்தி | சங்கமேந்தி | ... | ... |
| கொண்டல் வண்ணன் | கொண்டல் வண்ணன் | ... | முகில் வண்ணன் |
| காகுத்தன் | காகுத்தன் | ... | காகுத்தன் |
| கோவிந்தன் | கோவிந்தன் | கோவிந்தன் | கோவிந்தன் |
| அச்சுதன் | அச்சுதன் | அச்சுதன் | அச்சுதன் |
| மால் | மால் | மால் | மால் |
| விண்டு | விண்டு | விண்டு | விண்டு |
| வேலையிற் றுயின்றோன் | புணரியிற் றுயின்றோன் | ... | வேலையிற் றுயின்றோன் |
| உந்திபூத்தோன் | உந்திபூத்தோன் | ... | ... |
| துழாய்மௌலி | துளபமௌலியன் | ... | துழாய்ப்புயன் |
| ஆதிவராகன் | ஆதி வராகன் | ... | வராகன் |
| வைகுந்தநாதன் | வைகுண்டநாதன் | ... | வைகுண்டன் |
| முண்டகாசனை கேஸ்வரன் | ... | ... | ... |
| தாமோதரன் | தாமோதரன் | தாமோதரன் | தாமோதரன் |
| முராரி | முராரி | முராரி | முரனைவென்றோன் |
| நேமி | சக்ராயுதன் | ... | நேமி |
| வலவன் | வலவன் | ... | வலவன் |
| தேவகிமைந்தன் | ... | ... | தேவகிமைந்தன் |
| வனமாலி | வனமாலி | ... | ... |
| படிபிடந்தோன் | படிமுழுதிடந்தோன் | ... | பாரிடந்தோன் |
| சலசலோசனன் | சலசலோசனன் | ... | ... |

## செய்யுள்—20—22

| | | | |
|---|---|---|---|
| அனந்தசயனன் | அனந்தசயனன் | ... | பாம்பிற்றுயில்வோன் |
| பீதாம்பரன் | பீதாம்பரன் | பீதாம்பரன் | பீதாம்பரன் |
| உலகளந்தருள்வோன் | உலகினையளந்தோன் | ... | பாரளந்தோன் |
| பஞ்சாயுதன் | பஞ்சாயுதன் | பஞ்சாயுதன் | பஞ்சாயுதன் |
| உலகுண்டபெம்மான் | உலகமுண்டோன் | உலகமுண்டோன் | பாருண்டோன் |
| அலகைமுலையோடாவியருந்தினோன் | அலசைமுலையுண்டோன் | ... | பேய்முலையோடுயிர்தின்றோன் |
| நாரசிங்கன் | நாரசிங்கன் | நாரசிங்கன் | நரசிங்கன் |
| அரவணைச்செல்வன் | அரவணைச்செல்வன் | ... | ... |
| கண்ணன் | கண்ணன் | கண்ணன் | கண்ணன் |
| அறிதுயிலமர்ந்தமூர்த்தி | அறிதுயிலமர்ந்தோன் | ... | ஞானத்துயிலோன் |
| பிரமனைப்பெற்றதாதை | பிரமன் தந்தை | ... | பிரமனத்தன் |
| பின்னைகேள்வன | பின்னைகேள்வன் | ... | ... |
| முகுந்தன் | முகுந்தன் | முகுந்தன் | முகுந்தன் |
| கரியவுன் | கரியோன் | கரியவன் | கரியோன் |
| நெடியோன் | நேடியோன் | நெடியோன் | நீண்டோன் |
| காவற்கடவுள் | காவற்கடவுள் | ... | காவற்கடவுள் |
| நாரணன் | நாராயணன் | நாரணன் | நாரணன் |

**மிகை: பிங்கலம்:** சனார்ந்தனன், திருமால், வாமன், திரிவிக்கிரமன், திருமறுமார்பன், வரதன், அனந்தன், கடல்வண்ணன், சௌரி, மதுசூதனன், திருமகள்கொழுநன், பூமகள்கொழுநன், உவணவூர்தி, பரந்தாமன், பகவன், பூவைவண்ணன், இருடிகேசன், தசாவவதாரன், குறவன், நெடுமால், நந்தகோபாலன், ஆயிரம்பெயரோன், அருந்தமன்.

,, **கயா:** கருணாகரன், வரன், கமலைக்குரியவன், வரியுரகன் பகையூர்வாகனன், மதுசூதனன், ஆயன், வரையெடுத்தோன், கற்கி.

செய்யுள் 20—22

**மிகை: நாம;** இராமன், பலதேவன், பரசன், கிட்டிணன், மீனன் கூர்மன், குதிரையன், ஆயிரநாமன், ஆலிற்றுயில்வோன் கோலிற்றுயில்வோன், ஆழியான், செங்கணான், பச்சை விசயசாரதி, கோபாலன், மாரனத்தன், கோசலை புதல்வன், அசோதைபுதல்வன் தாசரதி, பொன்னைப் புணர்ந்தோன்; இதுபோல் அவனியை, சீதையை, எண்மரை, ஆய்ச்சியரை இவற்றுடன் 'வென்றோன்' சொல் ஒன்றிய பெயர் கள். உபேந்திரன், பெருமாள், நாற்கையன் புருடோத்தமன், வில்லன், வாளன், சங்கன், தண்டன் புள்ளூர்ந்தோன், பொன்னைவென்றோன்; இதுபோன்று திரிசிரனை, பொற்கண்ணனை, வாலியை, கும்பகன்னனை விராதனை, காலகேயரை, கரனை, வாணனை, கஞ்சனை, மூலனை, சோமுகனை, கயிடவனை கவந்தனை, வஞ்சமானை, தந்தவக்கிரனை, மாலியை சிசுபாலனை, இலங்கேசனை, மதுவை, தாடகையை சுமாலியை, துந்துமியை, தூடணனை, சாத்தூலியை ஆகிய இவற்றுடன் 'வென்றோன்' சொல் ஒன்றிய பெயர்கள், புள்வாய், கீண்டோன், மலைக்குடை செய்தோன், வண்டுருவன் சோரன், மருந்திடந்தோன், பண்டியட்டோன், சாலமெய்தோன் பாம்பாடி, பண்டுருவன், கன்றாற்கனியெறிந்தோன் சீதைசிறைகடிந்தோன், பூபாரந்தீர்த்தவன். நாரயணன் சுரர்க்கமுதநல்கினோன், வாரிகடைந்தோன், வாரிவரம் பிட்டோன், வாரியடைத்தோன், காரி, மணிப்புயன் மறுப்புயன், இராகவன், ஆயன், விட்டுணு.

# சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 19 முதல் 22 முடிய உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் : (சொல்லுருவம் மட்டும்)**

அரி—முருகு 76 மால்—முருகு 12 விண்டு—மதுரை 202 நேமி—சிறுபாண் 253 வலவன்—சிறுபாண் 260, கண்ணன்—பரி 15-49 நெடியோன்—பெரும்பாண் 402

## செய்யுள் —23

**பிற தமிழ்ச் சொற்கள்**

மாதவன், மாயன், சங்கமேந்தி, கொண்டல்வண்ணன் வேலையிற்றுயின்றோன், உந்திபூத்தோன், துழாய்மௌலி, படியிடந்தோன், உலகளந்தருள்வோன், உலகுண்டபெம்மான், அலகைமுலையோடாவியருந்தினோன், அரவணைச்செல்வன், கரியவன் காவற்கடவுள்.

**க, சொ. ஆக்கத்திற்குரியவை:**

மௌலி, வலவன்.

**வட சொற்கள்:**

வாமனன், சீதரன், பதுமநாபன், கேசவன், சார்ங்கபாணி காகுத்தன், அச்சுதன், வைகுந்தநாதன், தாமோதரன், முராரி நேமி, வனமாலி, சலசலோசனன், அனந்தசயனன், பீதாம்பரன் நாரசிங்கன், முகுந்தன், நாரணன்.

**மணிப் பவளச் சொற்கள்:**

வாசுதேவன், நந்தகோபன்மகன், உவணகேதனன், பஞ்சவர்க்குத் தூதன், ஆதிவராகன், முண்டகாசனைகேள்வன், தேவகிமைந்தன் பஞ்சாயுதன், அறிதுயிலமர்ந்தமூர்த்தி, பிரமனைப்பெற்றதாதை பின்னைகேள்வன்.

### நான்முகன்

பிரமன்மேதினிபடைத்தோன்பிதாமகன்பிதாவிதாதா
வரனயன்மலரோனிந்தமண்பொதுத்தந்தைவேதா
இரணியகருப்பன்போதனிவர்யமாலுந்திவந்தோன்
குரவனோதிமமுயர்த்தகொடியினனன்னவூர்தி

23 **பிரமன்**,மே தினிப டைத்தோன்,
பிதாமகன், பிதா,வி தாதா,
வரன்,அயன், மலரோன், இந்த
மண்பொதுத் தந்தை, வேதா,

**செய்யுள்—23, 24**

இரணிய கருப்பன், போதன்,
இனியமால், உ. ந்தி வந்தோன்,
குரவன்,ஓ திமம்உ யர்த்த
கொடியினன், அன்ன ஊர்தி; — —

**பெ. பொ. விளக்கம் :**

பிரமன்—மறை ஓதுவோன்
மேதினி—உலகம்
பிதாமகன்—தந்தைக்குத் தந்தை
விதாதா—உலகைப் படைத்தவன்
அயன்—திருமாலிடத்தில் பிறந்தவன்
வேதா—படைப்பவன்
இரணியம் கருப்பன்—கருவில் பொன்னன்
போதன்—அறிவுடையவன்
குரவன்—தந்தை
ஓதிமம்—அன்னம்
இந்த—அண்மைக் குறியீடு
இனிய—(அடைமொழி) அழகிய

## பிரமன் தொடர்ச்சி

இறைசதானந்தனீண்டவெண்கணன்விதிசுயம்பு
மறையவனநந்தன்ஞானிமான்மகன்வாணிகேள்வன்
முறைதெரிபகவன்வானோர்முதல்வனான்முகன்விரிஞ்சன்
நறைமலிகமலயோனி நாமமாறைந்துமாமே.

24 இறை,சதா னந்தன், ஈண்ட
எண்கணன், விதி,சு யம்பு,
மறையவன், அநந்தன், ஞானி,
மான்மகன், வாணி கேள்வன்,
முறைதெரி பகவன், வானோர்
முதல்வன்,நான் முகன்,வி ரிஞ்சன்,
நறைமலி கமல யோனி
நாமம்ஆ றைந்தும் ஆமே.

## செய்யுள்—23, 24

**பெ. பொ. விளக்கம்**

இறை—தலைவன்
சதானந்தன்—மிகுந்த மகிழ்ச்சி உடையவன்
விதி—யாவற்றையும் விதிப்பவன்
ஞானி—அறிவுடையவன்
மால் மகன்—திருமால் மகன்
வாணி கேள்வன்—நாமகள் கணவன்
விரிஞ்சன்—படைப்பவன்
கமலம் யோனி—கொப்பூழ்த் தாமரையைப் பிறப்பிடமாகக் கொண்டவன்
ஈண்ட—கடிய
முறைதெரி—அறந்தெரிந்த
நறைமலி—தேன் மிகுந்த
நாமம்—பெயர்
ஆறைந்து - முப்பது

# ஒப்பீடு

| சூடாமணி23—24 | பிங்கலம்—156 | கயாதரம்—12. 13 | நாமதீபம்54—55 |
|---|---|---|---|
| பிரமன்: 1+30 | பிரமன்: 1+39 | 28 | பிரமன்—28 |
| மேதினி படைத்தோன் | படைப்போன் | — | மண் படைத்தோன் |
| பிதாமகன் | பிதாமகன் | பிதாமகன் | பிதாமகன் |
| பிதா | ... | ... | ... |
| விதாதா | விதாதா | விதாதா | விதாதா |
| வரன் | வரன் | ... | வரன் |
| அயன் | அயன் | அயன் | அயன் |
| மலரோன் | மலரோன் | ... | மலரோன் |
| மன்ன பொதுத்தந்தை | மன்ன பொதுத்தந்தை | ... | ... |
| வேதா | வேதா | வேதா | வேதா |
| இரணியகருப்பன் | இரணியகருப்பன் | இரணியகெற்பன | இரணியகெர்ப்பன் |
| போதன் | போதன் | போதன் | ... |
| மாலுந்தி வந்தோன் | உந்தியில் வந்தோன் | ... | ... |

## செய்யுள்—23, 24

| சூடாமணி | பிங்கலம் | கயாதரம் | நாமதீபம் |
|---|---|---|---|
| குரவன் | குரவன் | ... | ... |
| ஓதிமமுயர்த்த கொடியோன் | அன்ன முயர்த்தோன் | அன்னக் கொடியோன் | அன்ன முயர்ந்தோன் |
| அன்னவூர்தி | ஓதிமவாகனன் | ... | அன்னமூர்த்தோன் |
| இறை | இறை | இறை | இறை |
| சதானந்தன் | சதானந்தன் | சதானந்தன் | சதானந்தன் |
| எண்கணன் | எண்கணன் | எண்கணன் | எண்கண்ணன் |
| விதி | விதி | விதி | விதி |
| சுயம்பு | ... | ... | ... |
| மறையவன் | மறையோன் | சதுமறையோன் | மறையோன் |
| அநந்தன் | அநந்தன் | ... | அனந்தன் |
| ஞானி | ஞானன் | ... | ஞானி |
| மான்மகன் | மான்மகன் | மால்மகன் | மால்சேய் |
| வாணிகேள்வன் | பாரதிகொழுநன் | வெள்ளைத்தையல் தன்கேள்வன் | வாணிமன்னன் |
| பகவன் | பகவன் | ... | ... |
| வானோர் முதல்வன் | வானவர் முதல்வன் | ... | வானோர் முதல்வன் |
| நான்முகன் | நான்முகத்தோன் | நான்முகன் | சதுமுகன் |
| விரிஞ்சன் | விரிஞ்சன் | விரிஞ்சன் | ... |
| கமலயோனி | கமலயோனி | ... | கமலன் |

**மிகை: பிங்:** அந்தணன், ஆரணன், சம்பு, தாதா, பிரசாபதி வேதன், கம், சூதன், பரமேட்டி, திசைமுகன் இறைவன்

**கயா:** தூய்யவன். சூதன், நாற்கையவன், வெய்யவன் தாதை. தாதா, பரமேட்டி, பாதலந்தந்தோன் பிரசாபதி, கம், பதுமமைந்தி, சம்பு, சாதன்

**நாம:** பிதா, சம்பு, பரமேட்டி, குரவன், சூதன்.

செய்யுள்—23. 24

# சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 23 முதல் 24 முடிய உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள் :**

இறை—பெரும்பாண் 265, விதி—முருகு 95

**பிற தமிழ்ச் சொற்கள்:**

மலரோன், மண்பொதுத்தந்தை, போதன், மாலுந்திவந்தோன், குரவன், ஓதிமமுயர்த்த கொடியோன், அன்னஆர்தி, எண்கணன், மறையவன், ஞானி, மான்மகன், வாணிகேள்வன். விரிஞ்சன், பகவன், வானோர்முதல்வன், நான்முகன்.

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை :**

குரவன், இறை, விதி

**வட சொற்கள்:**

பிரமன், விதரதா, வரன், அயன், வேதா, சதானந்தன், சுயம்பு, அந்நந்நன் கமலயோனி.

**மணிப் பவளச் சொற்கள்:**

மேதிவி படைத்தோன், பிதாமகன், இரணியகருப்பன்.

**புத்தன்**

தருமராசன்முனீந்திரன்சினன்பஞ்சதாரைவிட்டே
அருள்சுரந்தவுணர்க்கூட்டுந்ததாகதனாதிதேவன்
விரவுசாக்கியனேசைனன்விநாயகன்சினந்தவிர்த்தோன்
அரசுநீழலிருந்தோனறிவரன்பகைவன்செல்வன்

## செய்யுள் —25

25 தருமரா சன்,மு னீந்திரன்,
சினன்,பஞ்ச தாரை விட்டே
அருள்சுரந் தவுணர்க் கூட்டும்
ததாகதன், ஆதி தேவன்,
விரவுசாக் கியனே, சைனன்,
விநாயகன், சினந்த விர்த்தோன்,
அரசுநீ ழல்இ ருந்தோன்,
அறிவரன், பகைவன், செல்வன்.

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

தருமராசன்—அறத்தின் தலைவன்
முனீந்திரன்—முனிவர்க்கரசன்
சினன்—அவாவை வென்றவன்
ததாகதன்—தூய அறிவினன்
சாக்கியன்—தேக்கமரச்சோலையில் வாழ்பவன்
சைனன்—ஆன்மிகப் பயிற்சியினன்
விநாயகன்—நன்மையை அறிவுறுத்துபவன்
அரசு நிழல்—அரசமர நிழல்
அறிவரன்—அனைத்தையும் அறிந்த மேலானவன்
பகைவன்—காமனுக்குப் பகைவன்
செல்வன்—அருட்செல்வம் நிறைந்தவன்
விரவு—பொருந்திய

### புத்தன் தொடர்ச்சி

அண்ணலேமாயாதேவி சுதனகளங்கமூர்த்தி
கண்ணியகலைகட்கெல்லாம்நாதன்முக்குற்றமில்லான்
எண்ணில்கண்ணுடையோன்வாமனேற்றபுண்ணியத்தின்மூர்த்தி
புண்ணியமுதல்வன்சாந்தன்பூமிசைநடந்தோன்புத்தன்

## செய்யுள்—26

26 அண்ணலே, மாயா தேவி
சுதன், அகளங்க மூர்த்தி,
கண்ணிய கலைகட் கெல்லாம்
நாதன், முக் குற்ற மில்லான்,
எண்ணில்கண் ணுடையோன், வாமன்,
ஏற்றபுண் ணியத்தின் மூர்த்தி,
புண்ணிய முதல்வன், சாந்தன்,
பூமிசை நடந்தோன், **புத்தன்.**

**செ. பொ. விளக்கம்:**

**புத்தன்**—மெய்யறிவைக் கண்டவன்
சுதன்—மகன்
அகளங்க மூர்த்தி—களங்கமில்லாத வடிவினன்
வாமன்—அழகானவன்
சாந்தன்—பொறுமையுள்ளவன்
பூமிசை—பூவின்மேல்
கண்ணிய—கருதிய
ஏற்ற—ஏற்றுக்கொண்ட

## ஒப்பீடு

| சூடாமணி 25, 26 | பிங்கலம் 194 | கயாதரம் 14 | நாமதீபம் 127 |
|---|---|---|---|
| புத்தன் 1+24 | புத்தன் 1+13 | புத்தன் 17 | பவுத்தன் 5 |
| தருமராசன் | தருமன் | ... | |
| முனீந்திரன் | ... | ... | |
| சினன் | சினன் | ... | |
| ததாகதன் | ... | ததாகதன் | (மானிடவர்க்கத்துள் |
| ஆதிதேவன் | ... | ... | இந்திரியத்தைப் |
| சாக்கியன் | ... | ... | பொருளென்போன் |
| சைவன் | ... | ... | பெயர்களாக |
| விநாயகன் | ... | ... | உள்ளவை) |
| சினந்தவிர்த்தோன் | ... | ... | |
| அரசுநீழலிருந்தோன் | போதிவேந்தன் | போதியான் | |

## செய்யுள் 25—26

| | | | |
|---|---|---|---|
| வரன் | வரன் | ... | ... |
| பகவன் | பகவன் | ... | ... |
| செல்வன் | ... | ... | ... |
| அண்ணல் | ... | ... | ... |
| மாயாதேவிசுதன் | ... | ... | ... |
| அகளங்கமூர்த்தி | ... | ... | ... |
| தலைகட்கெல்லாம் நாதன் | ... | ... | ... |
| முக்குற்றமில்லான் | ... | ... | ... |
| எண்ணில்கண்ணுடையோன் | ... | ... | ... |
| வாமன் | வாமன் | வாமன் | ... |
| புண்ணியத்தின் மூர்த்தி | ... | ... | ... |
| புண்ணியமுதல்வன் | ... | ... | ... |
| சாந்தன் | சாந்தன் | சாந்தன் | ... |
| பூமிசைநடந்தோன்பார்மிசைநடந்தோன் | | ... | ... |

மிகை: பிங்: புங்கவன், முனைவன், புனிதன், அறிவன், பிடகன்.

,, கயா: புப்பிடகன், தவன், நல்லறிவன், காமன், பகைவன், அனுக்கிரன், கருமமுத்தன், சுகதன், அறவன், மாமுனிவன், கோ, பாரமிதையவன், கோதமன்.

,, நாம: சிவரன், தேரன், கந்தமுத்தன்.

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 25 முதல் 26 முடிய உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள்:**

*சினன்—பதி 221· செல்வன்—முருகு 151, அண்ணல்—கிறுபாண் 200.*

## செய்யுள்—25, 26, 27

**பிற தமிழ்ச் சொற்கள்**

ஆதிதேவன், சாக்கியன், சினந்தவிர்த்தோன், அரசுநிழலிருந்தோன், பசுவன், முக்குற்றமில்லான், எண்ணில் கண்ணுடையான், பூமிசை நடந்தோன்.

**த, சொ. ஆக்கத்திற்குரியவை:**

சினன், அண்ணல்.

**வடசொற்கள்:**

புத்தன், தருமராசன், முனீந்திரன், ததாகதன், சைனன், விநாயகன், வரன், வாமன், புண்ணிய(த்தின்)மூர்த்தி, சாந்தன். அகளங்கமூர்த்தி.

**மணிப் பவளச் சொற்கள்:**

மாயாதேவிசுதன், கலைகட்கெல்லாம்நாதன், புண்ணியமுதல்வன்;
(25, 26)

### இந்திரன்

மேகவாகனன்வேன்விக்குவேந்தன்விண்முழுதாளி
பாகசாதனனேவச்சிரபாணிகோபதிசிறப்பாம்
நாகநிணகர்க்குநாதனான்மருப்பியானையூர்தி
போகிவாசவனேவேந்தன்புரந்தரன்புலவன்சக்கிரன்

27 மேகவா கனன்,வேல் விக்கு
வேந்தன், விண்முழு தாளி,
பாகசா தனனே வச்சிர
பாணி,கோ பதி,சி றப்பாம்
நாகநி ணகர்க்கு நாதன்,
நான்மருப் பியானை யூர்தி,
போகி,வா சவனே, வேந்தன்,
புரந்தரன், புலவன், சக்கிரன், ......

## செய்யுள் 27, 28

**பெ. பொ. விளக்கம்:**

இந்திரன்—(இந்திரம்—கிழக்கு) கிழக்குத் திசைக்கு உரியவன். நெல் முதலான கூலங்களைக் கொடுப்பவன்.
பாகசாதனன்— பாகன் என்னும் பகைவனைக் கொன்றவன்
ஆளி—ஆள்பவன்
வச்சிரபாணி—வச்சிரப் படையை உடையவன்
கோபதி—வானத்துத் தலைவன்
போகி—இன்பங்களைக் கொள்பவன்
வாசவன்—செல்வம் உடையவன்
புரம் தரன்—பகைவர் உடம்பைப் பிளப்பவன்
சக்கிரன்—கொடியவரை வெல்வதில் வல்லவன்
ஏ—எண்ணிடைச் சொல்
சிறப்பு ஆம் நாகநீள்நகர்—சிறப்புடைய தேவருலகத் தலைநகர் (27)

## இந்திரன் தொடர்ச்சி

மருதநன்னிலத்துவேந்தன்மருத்துவன்வானோர்கோமான்
புருகூதன்சசிமணாளன்புரோகிதன்கௌசிகன்னே
கரியவன்சுனாசிரனாகண்டலனுடன்வலாரி
அரிசதக்கிருதுநீண்டவாயிரங்கண்ணனிந்திரன்

28 மருதநன் நிலத்து வேந்தன்,
மருத்துவன், வானோர் கோமான்,
புருகூதன், சசிம ணாளன்,
புரோகிதன், கௌசி கன்னே
கரியவன், சுனாசி ரன்,ஆ
கண்டலன், உடன்வ லாரி,
அரிசதக் கிருது, நீண்ட
ஆயிரங் கண்ணன், இந்திரன்.

**பெ. பொ. விளக்கம்:**

மருத நன்னிலத்து வேந்தன்—வயல், வயல்சார்ந்த நிலத்தின் தலைவன்
மருத்துவன்—(மருந்து—காற்று) ஒரு கருவை ஏழு பங்கு காற்றாக்கியவன்.
புருகூதன்—வேள்விக்கு வரவேற்கப்படுபவன்

**செய்யுள் — 27-28**

சசி — இந்திராணி
புரோகிதன் — ஆன்மிக ஒழுங்குகளில் முன்கொள்ளப்பெறுபவன்
கௌசிகன் — குசிகர் மரபினன்
சுனாசீரன் — சிறந்த படைகளையுடையவன்
ஆகண்டலன் — பகைவர்களைக் கண்டிப்பவன்
வலாரி — வலன் என்பவன் பகைவன்
அரி — பகைவர்களை அழிப்பவன்
சதக்கிருது — நூறு வேள்விகளை உடையவன்
நன்மை (நிலம்) — அடைமொழி கௌசிகன்னேன் விரிந்தல்
ஏ — அசை விகாரம்
உடன் — மூன்றாம் வேற்றுமைச் சொல்லுருபு
நீண்ட — பெருகிய

# ஒப்பீடு

| சூடாமணி 27—28 | பிங்கலம்—160 | கயாதரம்—16 | நாமதீபம்—62 |
|---|---|---|---|
| இந்திரன் 1—28 | இந்திரன் | இந்திரன்—13 | இந்திரன் 29 |
| மேகவாகனன் | மேகவாகனன் | முகிலூர்தி | மேகமூர்ந்தோன் |
| வேள்விக்கு வேந்தன் | வேள்விநாயகன் | ... | ... |
| விண்முழுதாளி | விண்முழுதாளி | ... | விண்கோ |
| பாகசாதனன் | பாகசாதனன் | பாகசாதனன் | பாகசாதனன் |
| வச்சிரபாணி | வச்சிரப் படையோன் | வச்சிரபாணி ... | வச்சிரன் ... |
| கோபதி | கோபதி | | |
| நாகர்க்குநாதன் | பொன்னகர்ச் செல்வன் | ... | ... |
| நான்மருப்பி யானையூர்தி | அயிராவதன் | ... | ... |
| போகி | போகி | ... | போகி |
| வாசவன் | வாசவன் | வாசவன் | வாசவன் |
| வேந்தன் | வேந்தன் | ... | ... |
| புரந்தரன் | புரந்தரன் | புரந்தரன் | புரந்தரன் |
| புலவன் | புலவன் | ... | புலவன் |

செய்யுள் 27, 28

| | | | |
|---|---|---|---|
| சக்கிரன் | சக்கிரன் | ... | சக்கிரன் |
| மருத நிலத்து வேந்தன் | மருதக்கிழான் | ... | மருதநாதன் |
| மருத்துவன் | ... | ... | மருத்துவன் |
| வானோர்கோமான் | தேவர்வேந்தன் | சுரர்பதி | அண்டர்கோன் |
| புருகூதன் | புருகூதன் | ... | புருகூதன் |
| சசிமணாளன் | சசிவல்லவன் | ... | சசிமன் |
| புரோகிதன் | புரோகிதன் | ... | புரோகிதன் |
| கௌசிகன் | கௌசிகன் | .. | கோசிகன் |
| கரியவன் | கரியவன் | ... | கரியோன் |
| சுனாசிரன் | சுனாசி | ... | சுனாசி |
| ஆகண்டலன் | ஆகண்டலன் | ஆகண்டலன் | ஆகண்டலன் |
| வலாரி | வலாரி | வலாரி | வலாரி |
| அரி | அரி | அரி | அரி |
| சதக்கிருது | சதமகன் | சதமகவான் | சதமகன் |
| ஆயிரங்கண்ணன் | ஆயிரங்கண்ணன் | ... | ஆயிரங்கண்ணன் |

**மிகை: பிங்:** அமராவதியோன், சக்கிரநந்தனன், மகவான், வானவூர் வரைசிறகரிந்தோன், திருமலிசுவர்க்கன், புலிதன் காண்டாவனன், மால், வெள்ளைவாரணன் ஐந்தரு நாதன்.

**கயா:** புரந்தரன், வெண்போதகத்தன்

**நாம:** மால், உச்சிரவாவூர்ந்தோன், வெள்ளையானையூர்ந்தோன் இடிக்கொடியன், மகவான்.

# சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 27 முதல் 28 முடிய உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

அரி—முருகு 76, இந்திரன்—பரி 8, 33, போகி—பெரும்பாண் 90, வேந்தன்—நெடு 187, புரந்தரன்—பரி 5, 56, புலவன்—அகம் 345, 6, மருத்துவன்—கலி 17, 19,

## செய்யுள்—27. 29

### பிற தமிழ்ச் சொற்கள்:

வேள்விக்கு வேந்தன், விண்மூழுதாளி, நான்மருப்பியானையூர்தி, மருத நிலத்து வேந்தன், வானோர்கோமான், கரியவன், ஆயிரங்கண்ணன்,

### கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை:

மூழுதாளி, புலவன், மருத்துவன்.

### வட சொற்கள்:

இந்திரன், மேகவாகனன், பாகசாதனன், வச்சிரபாணி, போகி, ளாசவன், புரந்தரன், சுக்கிரன், புருகூதன், புரோகிதன், கௌளசிறன், சுனாசீரன், ஆகண்டலன், வலாரி, சதாக்கிருது.

### மணிப் பவளச் சொற்கள்:

நாகர்க்குநாதன், கோமதி சசிமணாளன்,

## பிள்ளையார் (விநாயகன்)

அங்குசபாசமேந்திஅம்பிகைதனயன்முன்னோன்
ஐங்கரன்மூத்தோனொற்றையணிமருப்பினனேரம்பன்
கங்கைபெற்றோன்முக்கண்ணன்கணபதியீசன்மைந்தன்
வெங்கயமுகனேயாகுவாகனன்விநாயகன்பேர்

29 அங்குச பாச மேந்தி,
அம்பிகை தனயன், முன்னோன்,
ஐங்கரன் மூத்தோன், ஒற்றை
அணிமருப் பினன், ஏ ரம்பன்,
கங்கைபெற் றோன், முக் கண்ணன்,
கணபதி, ஈசன் மைந்தன்,
வெங்கய முகனே ஆகு
வாகனன், விநாய கன்பேர்.

## செய்யுள்—29

**பெ. பொ. விளக்கம் :**

**விநாயகன்**—மேம்பட்ட தலைவன், தன்னினும் வேம்பட்ட தலைவன் இல்லாதவன்
அங்குசம், பாசம் ஏந்தி—தோட்டியையும், சுண்டு கயிற்றையும ஏந்திய வன்
ஐங்கரன்—ஐந்து கையினன்
மருப்பு—கொம்பு
ஏரம்பன்—உருத்திரன் பக்கத்திலுள்ளவன்
கணபதி—கணங்களுக்குத் தலைவன்
ஈசன்—சிவன் மகன்
கயம் முகம்—யானை முகமுடையவன்
ஆகு—பெருச்சாளி
அங்குசபாசன்—எண்ணும்மைத்தொகை
அணி—அழகு
வெம்மை—அடைமொழி
கயம்—விரும்பத்தக்க யானை
ஏ—அசை
விநாயகன் பேர், அங்குசபாசமேந்தி எனபூட்டுவிற் பொருள்கோள்

## ஒப்பீடு

| சூடாமணி—29 | பிங்கலம்—93 | கயாதரம்—10 | நாமதீபம்—26 |
|---|---|---|---|
| விநாயகன் 1—13 | விநாயகன் 1—14 | விநாயகன் 12 | விநாயகன் 36 |
| அங்குச பாசமேந்தி | பாசாங்குச தரன் | பாசாங்குசன் | அங்குசமேந்தி பாசமேந்தி |
| அம்பிகைதனயன் | பார்ப்பதிபுதல்வன் | சாமளைமைந்தன் | கவுரிசேய் |
| முன்னோன் | ... | ... | ... |
| ஐங்கரன் | ஐங்கரன் | ஐங்கரன் | ஐங்கரத்தினான் |
| மூத்தோன் | ... | ... | ... |
| ஒற்றைமருப்பினன் | ஏகதந்தன் | ஏகதந்தன் | ஒருதந்தன் |
| ஏரம்பன் | ஏரம்பன் | ஏரம்பன் | ... |
| கங்கைபெற்றோன் | கங்கைசுதன் | ... | ... |
| முக்கண்ணன் | முக்கண்ணன் | ... | முக்கண்ணன் |

### செய்யுள் — 29

| | | | |
|---|---|---|---|
| கணபதி | கணபதி | கணபதி | கணபதி |
| ஈசன்மைந்தன் | இறைமகன் | ... | சிவன்சேய் |
| கயமுகன் | அத்திமுகத்தோன் | தந்திமுகத்தன் | தந்திமுகன் |
| ஆகுவாகனன் | ஆகுவாகனன் | ஆகுவாகனன் | ஆகூர்ந்தோன் |

**மிகை: பிங்:** அரிதிருமருகன், நந்திக்கடவுள். மும்மதன்.

**கயா:** இந்துமுடிக்கண்ணுதல், பெருவயிற்றுக்குந்தான் எந்தை, மால்மருகன்.

**நாம:** கனியேந்தி, கொம்பேந்தி, நால்வாயன், சடையன் முன்னோன், மூலமுதல், கந்தனுக்கு மூத்தேகன், ஆகுயர்த்தோன், மால்சபந்தீர்த்தோன், பூதபத்தன், இலம்போதரன், பூமிவர்ந்தோன், புகர்முகத்தோன், முறக்கன்னன், விக்கினேசன், கயாரி, குடிலாகனத்தான், செந்நிறத்தான், நாலிதழ்க்கஞ்சன், பேரசனப்பிரியன், வல்லவைமன், ஆணைமுதுகோடணிந்தோன், கால்குறியன், வக்கிரகண்டன், காகமாகினோன், பொன்னிதந்தோன்.

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 29ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள்:**

முன்னோன்—நெடு 177; மூத்தோன்—புறம் 183-64.

**பிற தமிழ்ச் சொற்கள்**

அங்குசபாசமேந்தி. ஒற்றைமருப்பினன், முக்கண்ணன்.

**க, சொ. ஆக்கத்திற்குரியவை:**

ஏத்தி. முன்னோன்.

செய்யுள்—30

**வடசொற்கள்:**

விநாயகன், ஏரம்பன். கணபதி, ஆகுவாகனன்.

**மணிப் பவளச் சொற்கள்:**

அமபிகைதனயன், ஐங்கரன், கங்கைபெற்றோன், ஈசன்மைந்தன், சுயமுகன்,

## சிம்புள் ஆனோன் (வீரபத்திரன்)

உக்கிரனழற்கண்ன ந்தோனுமைமகன்சிம்புளானோன்
முக்கணன்சடையோனானை முகவனுக்கிளையோன்வில்லி
செக்கர்வானிறத்தன்குரோதன்சிறுவிதிமகஞ்சிதைத்தோன்
மிக்கபத்திரைக்குக்கேள்வன்வீரபத்திரன்பேராமே

30 உக்கிரன், அழற்கண் வந்தோன்,
உமைமகன், சிம்பு ளானோன்,
முக்கணன், சடையோன், யானை
முகவனுக் கிளையோன், வில்லி,
செக்கர்வான் நிறத்தன், குரோதன்,
சிறுவிதி, மகஞ்சி தைத்தோன்,
மிக்கபத் திரைக்குக் கேள்வன்,
**வீரபத் திரன்**பேர் ஆமே.

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

வீரபத்திரன்—வீரபத்திரன் காப்பாளன்
உக்கிரன்—சினமுடையோன்
அழல்கண் வந்தோன்—சிவனது நெற்றிக்கண்ணிலிருந்து தோன்றியவன்
சிம்புள் ஆனோன்—எட்டுகால் பறவை வடிவானோன்
யானைமுகவன்—பிள்ளையார் தோற்றரவன்
செக்கர்வான்—மாலைக்காலச் சிவந்த வானம்
குரோதன்—வன்மைச் சினமுடையவன்
சிறுவிதி மகம் சிதைத்தோன்—தக்கனுடைய வேள்வியை அழித்தவன்
மிக்க—அழகில் சிறந்த

பேர்+ஆம் ஏ—அசை

செய்யுள் 30

## ஒப்பீடு

| சூடாமணி 25, 30 | பிங்கலம் 114 | கயாதரம்— | நாமதீபம் 38, 39 |
|---|---|---|---|
| வீரபத்திரன் 1+12 | வீரபத்திரன் 1—13 | ... | வீரபத்திரன் |
| உக்கிரன் | உக்கிரன் | | உக்கிரன் |
| அழற்கண் வந்தோன் | அழற்கண் வந்தோன் | | சிவன்தீக்கண் உதித்தோன் |
| உமைமகன் | உமைமகன் | | உமைசேய் |
| சிம்புளானோன் | சிம்புளானோன் | | ... |
| முக்கணன் | முக்கணன் | | ... |
| சடையோன் | சடாதரன் | | செஞ்சடையான் |
| யரனைமுகவனுக் கிளையோன் | கணபதிக் கிளையோன் | | ... ... |
| வில்லி | வில்லி | | |
| செக்கர் வானிறத்தான் | ... | | ... ... |
| குரோதன் | ... | | ... |
| சிறுவிதி | தக்கன்வேள்வி முனிந்தோன் | | தக்கன்மகா சங்காரி |
| பத்திரைக்குக் கேள்வன் | பத்திரைக்குக் கேள்வன் | | ... ... |

**மிகை:** பிங்; ஏமவீரியன், ஈசன்மைந்தன், ஆயிரமுகத்தோன்.

,, கயா: ......... ......... .........

,, நாம: ஆயிரமுகமுள்ளான், ஆயிரந்தலையுள்ளான், ஈராயிரந் கையுள்ளான், ஈராயிரந்தோளுள்ளான், ஈராயிரஞ்செவி யுள்ளான், மூவாயிரங்கண்ணுள்ளான், மாலாற்றலட் டோன், மால்சிரங்கமட்டான், மால்தண்டழித்தோன், உம்பர்களைக்கொண்டெழுப்பினோன், மூரல்திதிரிநுங்கி னோன்.

செய்யுள்—30, 31

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 30ல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள் :**

**பிற தமிழ்ச் சொற்கள் :**

*அழற்கண் வந்தோன், உமைமகன், சிம்புளாளோன், முக்கணான், சடையோன், யானைமுகவனுக்கிளையோன், வில்லி, செக்கர்வானிறத்தான், சிறுவிதி.*

**க. சொ. ஆக்கத்திற்குரியவை :**

*சிம்புள், முகவன், வில்லி, சிறுவிதி.*

**வடசொற்கள் :**

*வீரபத்திரன், உக்கிரன், குரோதன்.*

**மணிப்பவளச் சொற்கள் :**

*பத்திரைக்குக் கேள்வன்.*

### முருகன்

*முருகன்வேள்சாமியாறுமுகன்குகன்குழகன்மாயோன்*
*மருகன்சேய் கார்த்திகேயன்வரை பகவெறிந்தோன்செட்டி*
*அரண் மகன்கங்கைமைந்தனாண்டலைக்கொடியுயர்த்தோன்*
*சரவணபவன்கடம்பன் தாரகற் செற்றோனாசான்*

31. *முருகன், வேள், சாமி, ஆறு*
*முகன், குகன், குழகன்* [1], *மாயோன்,*
*மருகன், சேய், கார்த்தி கேயன்,*
*வரைபக வெறிந்தோன், செட்டி*

---

**பாடவேறுபாடு:**

1 குறவன்—வள்ளிக் குறத்தியின் மணாளன், இவ்வாறு இலக்கிய வழக்கில்லை.

## செய்யுள் — 32

அரன்மகன், கங்கை மைந்தன்,
ஆண்டலைக் கொடியு யர்த்தோன்,
சரவண பவன்க, டம்பன்,
தாரகற் செற்றோன், ஆசான்.

**பெ. பொ. விளக்கம் :**

முருகன் — இளமையழகுடையவன்
வேள் — விரும்பப்படுபவன்
குகன் — பாதுகாப்பவன்
குழகன் — இளமையானவன்
கார்த்திகேயன் — கார்த்திகை மகன்
வரைபகஎறிந்தோன் — கிரவுஞ்சம் என்னும் மலை பிளக்க வேலெறிந்தவன்
ஆண்டலைக்கொடி — கோழிக்கொடி
சரவணம் பவன் — சரவணம் என்னும் பொய்கையில் தோன்றியவன்
கடம்பன் — கடம்பம்பூ மாலையணிந்தவன்
தாரகன் செற்றோன் — தாரகன் என்னும் பகைவனை அழித்தவன்

## முருகன் தொடர்ச்சி

வேய்ந்தபூங்குறிஞ்சிவேந்தன்வேலினுக்கிறைவிசாகன்
சேந்தன்காங்கேயன்செவ்வேள்சிலம்பன்மாமஞ்ஞையூர்தி
வாய்ந்தசூர்ப்பகைவன்வள்ளிமணவாளன்றெய்வயானை
காந்தனேகுமரன்கந்தன்கலையுணர்புலவனும்பேர்

32 வேய்ந்தபூங் குறிஞ்சி வேந்தன்,
வேலினுக் கிறை,வி சாகன்,
சேந்தன்,காங் கேயன், செவ்வேள்,
சிலம்பன்மா மஞ்ஞை யூர்தி,
வாய்ந்தசூர்ப் பகைவன், வள்ளி
மணவாளன், தெய்வ யானை
காந்தனே, குமரன் கந்தன்,
கலையுணர் புலவ, னும்பேர்.

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

குறிஞ்சிவேந்தன் — மலை, மலைசார்ந்த நிலத்தலைவன்
விசாகன் — விசாகநாளில் பிறந்தவன்

## செய்யுள் — 32

சேந்தன் — திருச்செந்தூரில் இடம் பெற்றவன்
காங்கேயன் — கங்கையின் மகன்
சிலம்பன் — மலையில் வாழ்பவன்
மஞ்ஞையூர்தி — மயிலை ஊர்தியாகப் பெற்றவன்
சூர் — சூரபன்மன்
காந்தன் — கணவன்
குமரன் — குமரப் பருவத்தினன்
புலவன் — அறிவுடையவன்
கந்தன் — தன்னை வணங்குவோர்க்குப் பற்றுக் கோடானவன்

வேய்ந்த பூ — தலையில் சூடிய பூ
மா — நீலநிறம்
வாய்ந்த — உரிய வீரத்துடன் பொருந்திய
கலை உணர் — பல கலைகளையும் உணர்ந்த

உம் — உயர்வு சிறப்பு.

## ஒப்பீடு

| சூடாமணி—31, 32 | பிங்கலம் —110 | கயாதரம்—11 | நாமதீபம்29—33 |
|---|---|---|---|
| முருகன் 1—31 | முருகன் 38 | முருகன் 19 | முருகன் 64 |
| வேள் | ... | வேள் | வேள் |
| சாமி | சாமி | ... | சுவாமி |
| ஆறுமுகன் | அறுமுகக்கடவுள் | ... | சண்முகன் |
| குகன் | குகன் | குகன் | குகன் |
| குழகன் | குழகன் | ... | குழகன் |
| மாயோன்மருகன் | அரிதிருமருகன் | ... | மால்மருகோன் வாசவன்மருமான் |
| சேய் | சேய் | சேய் | சேய் |
| கார்த்திகேயன் | கார்த்திகேயன் | கார்த்திகேயன் | கார்த்திகேயன் |
| வரைபக வெறிந்தோன் | குன்றெறிந்தோன் | குன்றெறிந்தோன் | — |
| செட்டி | செட்டி | ... | செட்டி |
| அரன்மகன் | அரன்மகன் | ... | சிவன்மைந்தன் |

### செய்யுள் —32

| | | | |
|---|---|---|---|
| கங்கைமைந்தன் | கங்கைமைந்தன் | ... | ... |
| ஆண்டலைக்கொடி யுயர்த்தோன் | சேவலங் கொடியோன் | வாரணகேதனன் | |
| சரவணபவன் | சரவணபவன் | சரவணன் | சரவணபவன் |
| கடம்பன் | கடம்பன் | கடம்பன் | கடம்பணிவோன் |
| தாரகற்செற்றோன் | தாரகாரி | தாருகற்காய்ந்தோன் | — |
| ஆசான் | ஆசான் | ... | — |
| குறிஞ்சிவேந்தன் | குறிஞ்சிக்கிழவன் | ... | குறிஞ்சிமன் |
| வேலினுக்கிறை | வேலன் | அயிலேந்தி | வேலன் |
| விசாகன் | விசாகன் | விசாகன் | விசாகன் |
| சேந்தன் | சேந்தன் | சேந்தன் | சேந்தன் |
| காங்கேயன் | காங்கேயன் | ... | காங்கேயன் |
| செவ்வேள் | செவ்வேள் | செவ்வேள் | — |
| சிலம்பன் | சிலம்பகன் | ... | — |
| மஞ்ஞையூர்தி | மயில்வாகனன் | மயிலூர்தி | மயிலூர்தி |
| சூர்ப்பகைவன் | அசுரற்றடிந்தோன் | சூர்ப்பகை | சூரனையட்டோன் |
| வள்ளிமணவாளன் | வள்ளிகேள்வன் | வள்ளிதுணைவன் | வள்ளிமன் |
| தெய்வயானை காந்தன் | தெய்வகுஞ்சரி மணாளன் | .. | தெய்வயானைமன் |
| குமரன் | குமரன் | குமரன் | குமரன் |
| புலவன் | கலையறிபுலவன் | ... | புலவன் |
| கந்தன் | கந்தன் | கந்தன் | கந்தன் |

**மிகை: பிங்:** கௌரிமைந்தன், வள்ளிப்பூக்குமரன், ஆறிருகரத்தோன். அறுமீன்காதலன், தேவசேனாபதி, பாவகி, யானைமுகவற் கிளையோன்.

**கயா:** .........

**நாம:** கவுரிமைந்தன், வீரர்முன்னோன், தந்திக்கிளையோன், ஈசன் குரு, அயன்குரு. கும்பன்குரு, சுரந்தணித்தோன், இந்திராணி மருகோன், திருமருகோன், உருத்திராயுதன், தந்திக் கிளையோன், ஆறுதலன், தேவர்சிறைகாய்பவன், பன்றி திறலட்டோன். பவளவடிவன், சமனைவென்றவன், கற் கிவிறலழிப்போன், கீரனைமீட்டோன், அருணகிரிக்கருள்

### செய்யுள் — 32

வோன், ஓர்புலவன்மேற்பாடினோன், பதினெண்கண்ணன், ஈராறுபுயததான். ஈராறுகையான். ஈராறுசெவியான்; வெட்சி யணிவோன். காந்தளணிவோன், குராவணிவோன், நீலமணி வோன், வேடன், கோழிக்கொடியோன், தாருகனையட்டோன். சிங்கானனையட்டோன், அன்றில்வெற்பட்டோன். நாரத சிநேகன், விண்ணூர்நாட்டினோன், உம்பர்கோமான், வேதாவைச்சிறையிட்டோன். ஆடூர்ந்தோன், சுப்பிரமணியன்.

## சொற்பாகுபாடு

### சூடாமணிச் செய்யுள் 31, 32ல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள் :**

முருகன்-பொருநராற்றுப்படை; வேள்—மதுரை 344; சேய்-சிறுபாண் 3; கடம்பன்—புறம் 335; ஆசான்—பரி 2-61; சேந்தன்—நற். 190-3; செவ்வேள்-பட்டினப்பாலை 154; சிலம்பன்—குறுந்தொகை 362-7; புலவன்—அகம் 345-6; கந்தன்—புறம் 380-12;

**பிற தமிழ்ச் சொற்கள்:**

ஆறுமுகன், குகன், குழகன், மாயோன் மருகன், வரைபகவெறிந்தோன் செட்டி, ஆண்டலைக்கொடியுயர்த்தோன், குறிஞ்சிவேந்தன், வேலினுக்கிறை மஞ்ஞையூர்தி, சூர்ப்பகைவன், வள்ளிமணவாளன், அரன்மகன்.

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை :**

வேள், குழகன், சேந்தன், குகன்.

**வட சொற்கள்:**

சாமி, சரவணபவன், விசாகன், காங்கேயன்.

**மணி பவளச் சொற்கள்:**

கங்கைமைந்தன், தாரகற்செற்றோன், தெய்வயானை காந்தன், கார்த்தி கேயன்.

## செய்யுள்—55

## ஒப்பீடு

| சூடாமணி—55 | பிங்கலம்—23 | கயாதரம்—32, 33 | நாமதீபம்— 89, 90 |
|---|---|---|---|
| காற்று 1—23 | காற்று 1—39 | காற்று 31 | காற்று 38 |
| வாதம் | வாதம் | வாதம் | வாதம் |
| கால் | கால் | கால் | கால் |
| வளி | வளி | வளி | வளி |
| மருத்து | மருத்து | மருத்து | மருத்து |
| வாடை | வாடை | — | — |
| பவனம் | பவனம் | பவனன் | பவனன் |
| வாயு | வாயு | வாயு | வாயு |
| கூதிர் | கூதிர் | கூதிர் | — |
| மாருதம் | மாருதம் | மாருதம | மாருதம் |
| மால் | மால் | மால் | மால் |
| கோதை | கோதை | கோதை | — |
| கொண்டல் | கொண்டல் | கொண்டல் | — |
| உலவை | உலவை | உலவை | உலவை |
| கோடை | கோடை | — | — |
| ஊதை | ஊதை | ஊதை | ஊதை |
| வங்கூழ் | வங்கூழ் | வங்கூழ் | வங்கூழ் |
| ஒலி | ஒலி | ஒலி | ஒலி |
| சதாகதி | சதாகதி | சதாகதி | சதாகதி |
| உயிர்ப்பு | உயிர்ப்பு | உயிர் | உயிர் |
| அரி | அரி | அரி | அரி |
| கந்தவாகன் | கந்தவாகன் | கந்தவகன் | கந்தவகன் |
| பிரபஞ்சனன் | பிரபஞ்சனன் | பிரபஞ்சனன் | — |
| சலனன் | சலனன் | சலனன் | சவனன் |

**மிகை: பிங்:** அநிலம், பவமானன், சமீரணன், கூதை, வேற்றலம் உயிர், மாபலன், பரிசனன், ஆசுகன், கந்தவகன் காலிலி, விண்டு, நீளை, வந்து, நீல், நிழலி.

**கயா:** சமீரன், வெற்றம், நீழை, நீல், புரிசனன், மாபெலன் ஆசுகன், அனிலன், வலபவமானன்

## செய்யுள் — 55

**நாம:** வந்து, புட்கோள்முன்னோன், அருணன்முன்னோன், இடிவேந்தன், முன்னோன், மின்வேந்தன்முன்னோன், கம், அனிலம், ஆயுசகன், காசிபன்சேய், ஆசுகம், பெலன், பரிசன், வயினதேவன், கலைவாகனன், மேல்வட திக்காள்வோன், சமீரன், அனுமன்தாதை, வீமன்தாதை, காளகன், பவமான்

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 55ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள்:**

காற்று—பெரும்பாண் 240; வாதம்—கலி 96-36; கால்—முருகு 14 வளி—முருகு 170; மருத்து—பரி 4-32; வாடை—நற் 5-8; கூதிர்—நெடு 12 மால்—முருகு 12; கோதை—முருகு 200; கொண்டல்—மதுரை 530 உலவை—நற் 2-2; கோடை—பெரும்பாண் 272; ஊதை—நற் 15-3 வங்கூழ்—அகம் 255-4; ஒலி—பொருந 206; உயிர்ப்பு—கலி 35-22 அரி—முருகு 76

**பிற தமிழ்ச் சொற்கள் :** —

**க. சொ. ஆக்கத்திற்குரியவை :**

வளி, கால், மருத்து, கொண்டல், ஊதை, வங்கூழ் உயிர்ப்பு

**வடசொற்கள்:**

வாதம், பவனம், வாயு, மாருதம், சதாகதி, கந்தவாகன் பிரபஞ்சன், சலனன்.

## காற்றின் சிறப்புப் பெயர்கள்

கோடைமேல்காற்றின் நாமம்கொண்டல்கீழ்காற்றிற்கேற்கும்
வாடையினாமம்வீசும்வடகாற்றுவடந்தையென்ப
கூடியகூதிருதைகுளிர்பனிக்காற்றினாமம்
சாடியசுழற்காற்றின்பேர்சாரிகைசூறையாமே

## செய்யுள்—56

56 கோடை, மேல் காற்றின் நாமம்;
கொண்டல், கீழ் காற்றிற் கேற்கும்;
வாடையின் நாமம் வீசும்
வடகாற்று வடந்தை என்ப;
கூடிய கூதிர், ஊதை
குளிர்பனிக் காற்றின் நாமம்;
சாடிய சுழற்காற் றின்பேர்
சாரிகை, சூறை ஆமே.

### பொ. பொ. விளக்கம்

கோடை—மேற்கு மலைக் கோட்டிலிருந்து வரும் காற்று
கொண்டல்—காலை இளவெயில் இளவெப்பம்கொண்டு கிழக்கிலிருந்து வீசுவது
வாடை—வடக்கிலிருந்து வாடவைக்கும் குளிர்காற்று
வடந்தை—வடக்குத் திக்கிலிருந்து வீசுவது
கூதிர்—நடுங்கவைக்கும் குளிர் தருவது
ஊதை—உயிர்ப்பு ஓசையுடன் வீசுவது
சுழற்காற்று—சுரிபாகச் சுழன்று அடிக்கும் காற்று
சாரிகை—உள்ளே சுழன்று சுழன்று வீசுவது
சூறை—அகப்படும் பொருள்களைக் கவர்வது

மேல்—மேற்கு
கீழ்—கிழக்கு
பனிக்காற்று—பனித்துளியுடன் குளிர்ந்து வீசுவது
சாடிய—தாக்கிய
குளிர்பனி, சுழற்காற்று—வினைத்தொகைகள்

## ஒப்பீடு

| சூடாமணி—56 | பிங்கலம்—25-28, 30 | கயாதரம்—34 | நாமதீபம்—91 |
|---|---|---|---|
| காற்றுச் சிறப்புப் பெயர் 5—8 | காற்றுச் சிறப்புப் பெயர் 15 | காற்றுச் சிறப்புப் பெயர் 10 | காற்றுச் சிறப்புப் பெயர் 13 |
| மேல்காற்று | மேல்காற்று | மேல்காற்று | மேல்கால் |
| கோடை | கோடை | கோடை | கோடை |

## செய்யுள்—56

| | | | |
|---|---|---|---|
| கீழ்காற்று | கீழ்காற்று | கீழ்காற்று | கீழ்கால் |
| கொண்டல் | கொண்டல் | கொண்டல் | கொண்டல் |
| வடகாற்று | வடகாற்று | வடகாற்று | வடகால் |
| வாடை | வாடை | வாடை | வாடை |
| வடந்தை | வடந்தை | வடந்தை | வடந்தை |
| பனிக்காற்று | பனிக்காற்று | பனிக்காற்று | பனிக்கால் |
| கூதிர் | கூதிர் | கூதிர் | கூதிர் |
| ஊதை | ஊதை | ஊதை | ஊதை |
| சுழற்காற்று | சுழன்றெழுகாற்று | — | சுழற்கால் |
| சாரிகை | சாரிகை | — | சாரிகை |
| சூறை | சூறை | — | சூறை |

மிகை பிங்: வளி, சூறாவளி

கயா: — —

நாம: — —

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 56ல் உள்ள சொற்களுள்

**பிற தமிழ்ச் சொற்கள்:**

கோடை—பெரும்பாண் 272; கொண்டல்—மதுரை 530; வாடை—நற் 5-8; வடந்தை—நெடு 173; கூதிர்—நெடு 12; ஊதை—நற் 15-3; சாரிகை—பரி 6-36.

**பிற தமிழ்ச்சொற்கள்:**

மேல்காற்று, கீழ்காற்று, வடகாற்று, பனிக்காற்று, சுழற்காற்று, சூறை.

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை:**

கோடை, கொண்டல், வாடை, வடந்தை, கூதிர், ஊதை, சூறை.

**வட சொற்கள்:** — —

**மணிப்பவளச் சொற்கள்:** — —

## செய்யுள் —57

## தென்றல். நெருப்பு

வருதென்கால்சிறுகாறென்றிமலயக்கால்வசந்தன்தென்றல்
அரிவசுத்தகனனங்கியனலயவாகனன்றீ
எரிசுசிசிகியேயாரலியங்குகாற்றின்சகாயன்
கருநெறிகனலியேயங்காரகன்சித்திரபானு

57 வருதென்கால், சிறுகால், தென்றி
மலயக்கால், வசந்தன், தென்றல்
அரி, வசு, தகனன், அங்கி,
அனல், அய வாக னன், தீ,
எரி, சுசி, சிகியே ஆரல்,
இயங்குகாற் றின்ச காயன்,
கருநெறி, கனலி யே அங்
காரகன், சித்திர பானு.

**பெ. பொ. விளக்கம்:**

தென்றல்—தெற்கிலிருந்து வருவது
தென்கால்—தெற்குக் காற்று
சிறுகால்—சிற்றசைவில் வரும் காற்று
தென்றி—தெற்குத் திசையுடையது
மலயக்கால்—பொதி மலையினின்றும் வரும் காற்று
வசந்தன்—வயந்த பருவத்தில் வருவது

அரி—அழிப்பது
வசு—பேரொளியுடையது
தகனன்—சாம்பலாய் எரிப்பது
அங்கி—மேலுயர்ந்து வளர்வது
அனல்—எரிபொருள்களால் நிறைவாகாதது
அயவாகனன்—ஆட்டை ஊர்தியாகக் கொண்டவன்
தீ—கொழுந்துவிட்டெரிவது
எரி—எரிப்பது
சுசி—துயரம் தருவது
சிகி—பிழப்புடையது
ஆரல்—தன்னிடம் சேர்ந்ததை உணவாகக் கொள்வது

**செய்யுள் 57—58**

சகாயன்—நண்பன்
கருநெறி—கரிய புகை ஒழுங்குடையது
கனலி—சினப்பது
அங்காரகன்—கரியாக்குபவன்
சித்திரபானு—அழகிய அனல் ஒளியுடையது

இயங்குகால்—வினைத்தொகை
கருநெறி—பண்புத்தொகை

## நெருப்பின் தொடர்ச்சி

தழலுதாசனன்சிறந்ததனஞ்சயன்சாதவேதாச்
செழுமையமுளரிதென்கீழ்த்திசையிறைசேர்ந்தார்க்கொல்லி
எழுவிதநாவேவன்னியேற்றபாவகனேதேயு
அழல்சுடர்ஞெகிழியின்னநெருப்பின்பேராறைந்தாவே.

58 தழல், உதா சனன், சிறந்த
தனஞ்சயன், சாத வேதா,
செழுமைய முளரி, தென்கீழ்
திசையிறை, சேர்ந்தார்க் கொல்லி,
எழுவித நாவே, வன்னி,
ஏற்றபா வகனே, தேயு,
அழல், சுடர், ஞெகிழி, இன்ன
நெருப்பின்பேர் ஆறைந் தாமே.

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

நெருப்பு—'ஞெல்' என்னும் வேர்ச்சொல் கொண்டு 'ஞெலி' என்று வெப்பம் தருவது
தழல்—பற்றிப்படர்வது
உதாசனன்—வேள்விப்பொருளை உண்ணுபவன்
தனஞ்சயன்—செல்வத்தை அழித்து வெல்வது
சாதவேதா—மறைகள் தோன்ற உதவியானது
முளரி—முள்போன்ற விறகுகளின் தொடர்பாவது
எழுவிதநா—எழுவகை நாக்குப்போன்ற பிழம்பையுடையது
வன்னி—வன்மையானவற்றையும் தன்னதாக்குவது

செய்யுள் 57—58

பாவகன்— தூய்மை செய்பவன்
தேயு— ஒளியுடையது
அழல்—அனற்றுதலை உடையது
சுடர்—சுடர் விடுவது
நெகிழி —தன்வெப்பத்தால் உருக்கி நெகிழவைப்பது

## ஒப்பீடு

| சூடாமணி—57, 58 | பிங்கலம்—29, 44 | கயாதரம் 34—36 | நாமதீபம்—91 |
|---|---|---|---|
| தென்றல் 1—5 | தென்றல் 1—4 | தென்றல் 4 | தென்றல் 7 |
| தென்கால் | தென்கால் | — | தென்கால் |
| சிறுகால் | — | — | சிறுகால் |
| தென்றி | — | — | தென்றி |
| மலயக்கால் | மலயக்கால் | மலயக்கால் | மலயக்கால் |
| வசந்தன் | வசந்தன் | வயந்தன் | வசந்தம் |
| நெருப்பு 1—30 | நெருப்பு 1—34 | நெருப்பு 29 | நெருப்பு 34 |
| அரி | அரி | அரி | அரி |
| வசு | வசு | வசு | வசு |
| தகனன் | தபனன் | தகனன் | தகனன் |
| அங்கி | அங்கி | அங்கி | அங்கி |
| அனல் | அனல் | அனல் | அனல் |
| அயவாகனன் | — | — | ஆடூர்தி |
| தீ | தீ | தீ | தீ |
| எரி | எரி | எரி | எரி |
| சுசி | சுசி | சுசி | சுசி |
| சிகி | சிகி | சிகி | சிகி |
| ஆரல் | ஆரல் | — | ஆரல் |
| காற்றின்சகாயன் | — | வாயுசகன் | வாயுசகன் |
| கருநெறி | கருநெறி | — | — |
| கனலி | கனலி | கனல் | கனல் |
| அங்காரகன் | அங்காரகன் | அங்காரகன் | அங்காரகன் |
| சித்திரபானு | சித்திரபானு | சித்திரபானு | சித்திரபானு |
| தழல் | தழல் | தழல் | தழல் |
| உதாசனன் | உதாசனன் | உதாசனன் | உதாசனன் |

### செய்யுள் 57—58

| | | | |
|---|---|---|---|
| நனஞ்சயன் | தனஞ்சயன் | தனஞ்செயன் | தனஞ்சயன் |
| சாதவேதா | — | சாதவேதா | சாதவேதா |
| முளரி | முளரி | முளரி | முளரி |
| தென்கிழ்த்திசை யிறை | — | தென்கிழக்கோன் | தென்கிழ்த்திசை யோன் |
| சேர்ந்தார்க்கொல்லி | — | — | சேர்ந்தார்க்கொல்லி |
| எழுவிதநா | எழுநா | எழுநா | எழுநா |
| வன்னி | வன்னி | வன்னி | வன்னி |
| பாவகன் | பாவகன் | பாவகன் | |
| தேயு | தேயு | — | தேயு |
| அழல் | அழல் | அழல் | அழல் |
| சுடர் | சுடர் | — | சுடர் |
| ஞெகிழி | ஞெகிழி | ஞெகிழி | ஞெகிழி |

மிகை பிங்: (1) மந்தாநிலம்

(2) உதகவன், தழலி, அனலி, அழலி, கனல் ஒளி, சோதி, தூமகேது, சுவலன்.

கயா: (1) மந்தாநிலம்.

(2) சோதி, கரியோன், அர்ச்சிதன், தூமகேது, சுவலன்.

நாம: (1) மென்கால்

(2) சோதி, தூமகேது, சுவாலன், தபனன், அக்கினி

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 57, 58ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

தென்றல்—பரி 8-27; நெருப்பு—மதுரை 682; அரி—முருகு 76; அங்கி—பட் 54; தீ—முருகு 171; ஆரல்—குறு 25-4; கனலி—பெரும்பாண் 17; தழல்—குறி 43; முளரி—நெடு 55; வன்னி—பதி 44-23; அழல்—முருகு 149; சுடர்—முருகு 43; ஞெகிழி—பெரும்பாண் 178.

## செய்யுள் 57—58

**பிற தமிழ்ச் சொற்கள் :**

தென்கால், சிறுகால், தென்றி, மலயக்கால், அரி, அனல், எரி, கருநெறி, தென்கீழ்த்திசையிறை, சேர்ந்தார்க்கொல்லி, தேயு.

**க. சொ. ஆக்கத்திற்குயவை :**

தென்றி, அனல், ஆரல், கனலி, மூளரி, ஞெகிழி.

**வட சொற்கள் :**

வசந்தன், வசு, தகனன், அங்கி, அயவாகனன், சுசி, சிகி, அங்காரகன், சித்திரபானு, உதாசனன், தனஞ்செயன், சாதவேதா, பாவகன்.

**மணிப்பவளச் சொற்கள் :**

காற்றின் சகாயன், எழுவிதநா.

## தீயின் சிறப்புப் பெயர்கள்

வடவைத்தீத்திரண்மடங்கல்வருவடவாமுகஞ்சூழ்
கடையனலூழித்தீயாங்கனலொழுங்கதுசுவாலை
அடைவில்விண்வீழுங்கொள்ளியுற்கையென்றறையலாமே
வெடிநறைகுய்யிம்மூன்றுமிகுநறும்புகையினாமம்

59 வடவைத்தீத் திரள்,மடங்கல்,
வருவட வாமு கம்,சூழ்
கடையனல். ஊழித் தீயாம்;
கனல்ஒழுங் கதுசு வாலை;
அடைவில்விண் வீழும் கொள்ளி
உற்கையென் றறைய லாமே;
வெடி,நறை, குய்இம் மூன்றும்
மிகுநறும் புகையின் நாமம்

**சொ. பொ. விளக்கம் :**

ஊழித் தீ—ஓர் ஊழியாக முடிப்பது
வடவை—வடக்கில் தொடங்கி அழிவைத் தருவது
தீத்திரள்—தீயின் திரட்சி

## செய்யுள்—59

மடங்கல்—அழிவைத்தரும் வல்லமை கொண்டது
வடவாமுகம்—வடவையின் பொருளே
கடை அனல்—உலக இறுதித் தீ
**கனல் ஒழுங்கு**—தீப்பிழம்பின் நெடிய நெறி
சுவாலை—பிழம்பு
**விண் வீழும் கொள்ளி**—வானத்திலிருந்து விழும் நெருப்புத் திரட்சி
உற்கை—வெந்தெரியச் செய்வது
வெடி—குப்பென்று மணம் தருவது
நறை—நன்மணம்
குய்—குய் என்ற ஒலிதரும் தாளிப்புப் புகை
அடைவில்—தொகுப்பாக
அறையலாம்—அறுதியிட்டுச் சொல்லலாம்
சூழ் கடையனல்—வினைத்தொகை
அது—தொடுப்புச் சுட்டாகக் கொள்க

## ஒப்பீடு

| சூடாமணி—59 | பிங்கலம்—45, 48, 52 | கயாதரம் 36 | நாமதீபம்—76 |
|---|---|---|---|
| **ஊழித்தீ** 1—5 | ஊழித்தீ 7 | ஊழியனல் | ஊழியனல் 3 |
| வடவை | வடவை | வடவை | வடவை |
| தீத்திறள் | தீத்திறள் | — | — |
| மடங்கல் | மடங்கல் | மடங்கல் | மடங்கல் |
| வடவாமுகம் | வடவாக்கினி | வாடவம் | ... |
| கடையனல் | கடையனல் | கடையனல் | ... |
| **கனலொழுங்கு** 1—1 | — | — | அனல்நடை 2 |
| சுவாலை | — | ... | சுவாலை |
| **விண்வீழ் கொள்ளி** 1—1 | — 2 | ... | விண்கொள்ளி 2 |
| உற்கை | உற்கம் | ... | உற்கை |
| **நறும்புகை** 1—3 | நறும்புகை 4 | ... | ... |
| வெடி | வெடி | ... | ... |
| நறை | நறை | ... | ... |
| குய் | குய் | ... | ... |

## செய்யுள்—59

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மிகை: பிங்: | 1) | உத்தரம் | 2) | அனற்றிரள் | |
| | 3) | ... | 4) | ... | |
| கயா: | 1) | வெகுளி | 2) | ... | |
| | 3) | ... | 4) | ... | |
| நாம: | 1) | ... | 2) | ... | |
| | 3) | ... | 4) | ... | |

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 59ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள்:**

மடங்கல்—குறி 165; வெடி—மதுரை 233; நறை—முருகு 190; துய்—மதுரை 757.

**பிற தமிழ்ச் சொற்கள் :**

ஊழித்தீ, வடவை, தீத்திறள், வடவாமுகம், கடையனல், விண்வீழ் கொள்ளி, உற்கை, நறும்புகை, கனலொழுங்கு.

**க. சொ. ஆக்கத்திற்குரியவை :**

வடவை, தீத்திறள், கடையனல், உற்கை, துய், நறை.

**வடசொற்கள்:** சுவாகை

**மணிப்பவளச் சொற்கள் :**

## காட்டுத்தீ, புகை, தீப்பொறி, தீயின் மனைவி

தாவங்காட்டழலத்தீயைத்தருகோலேகுலிகோலென்ப
தீவிகைதீபமற்றைத்திகழ்சுடரொளிவிளக்கே
ஆவிதூபந்தூமத்தோடரிபுகைபொறிபுலிங்கம்
பாவகனத்தீத்தெய்வம்பாரியேசுவாகாதேவி

### செய்யுள்—60

60. தாவங்காட் டழலத் தீயைத்
தருகோலே ஞெலிகோ லென்ப;
தீவிகை, தீபம் மற்றைத்
திகழ்சுடர், ஒளி, விளக்கே;
ஆவிதூ பம்,தூ மத்தோ
டரி,புகை; பொறிபு, லிங்கம்,
பாவக னம்,தீத் தெய்வம்,
பாரியே சுவாகா தேவி*

**பெ. பொ. விளக்கம் :**

தாவம்—தாவி எரிவது
ஞெலிகோல்—தீயை உண்டாக்கக் கடையும் கோல்
தீவிகை—தீ செலுத்தும் ஒளியை உடையது

தீபம்—தீ தரும் விளக்கம்
சுடர்—ஒளி
விளக்கு—விளக்கத்தைத் தருவது
ஆவி—கொதிநீரினின்றும் மேலெழுவது
தூபம்—புகை
தூமம்—புகையொழுங்கு;
அரி—வெப்பத்தின் குறி;
புகை—எங்கும் புகுவதைக் கொண்டது;

தீப்பொறி—நெருப்பினின்றும் பிசிராய்ப் பொறிவது;
புலிங்கம்—பூற்காரத்தால் செல்வது;
பாவகன்—தூய்மையாக்குபவன்;

பாட வேறுபாடு:

*'பாரியை சுதை சுவாகா'—'சுதை' முன் உரிப்பனுவல்களில் இல்லை. பின்வந்த நாமதீபம் ஆசிரிய நிகண்டில் உண்டு. சில அகரமுதலிகளில் இப்பொருளுடனும் பலவற்றில் மகள் என்னும் பொருளிலும் உண்டு. சூடா. 60இலும் மகள் பெயர். அதன் (சூடா. 181) என்பதன் பெண்பால். மனைவி என்ற பொருள் காணப்படவில்லை. எனவே பின்படி எடுத்தோர் இப்பெயரைச் செருகியிருப்பர். எனவே, 'சுதை' இல்லாத பாடம் கொள்ளப்பெற்றது.

## செய்யுள்—60

பாரி—மனைவி;

சுவாகாதேவி—அழிக்கும் தேவி;

## ஒப்பீடு

| சூடாமணி—60 | பிங்கலம்—49-51, 54 | கயாதரம்—542, 411 | நாமதீபம்—76 |
|---|---|---|---|
| **காட்டழல்** *1—1* | காட்டழல் *3* | — | காட்டுத்தீ *2* |
| தாவம் | தாவம் | — | தாவகம் |
| **தீதருகோல்** *1—1* | தீக்கடைகோல் *1—3* | — | — |
| ஞெலிகோல் | ஞெலிகோல் | — | — |
| **விளக்கு** *1—4* | விளக்கு *4* | *விளக்கு *2* | விளக்கு *4* |
| தீவிகை | — | ... | தீபிகை |
| தீபம் | தீபம் | தீபம் | தீபம் |
| சுடர் | சுடர் | ... | — |
| ஒளி | ஒளி | ... | — |
| **புகை** *1—4* | புகை *1—4* | *புகை *3* | புகை *6* |
| ஆவி | ஆவி | ஆவி | ஆவி |
| தூமம் | தூமம் | — | தூமம் |
| தூபம் | தூபம் | — | தூபம் |
| அரி | அரி | அரி | அரி |
| **தீப்பொறி** *1—1* | பொறியனல் | — | பொறி *3* |
| புலிங்கம் | புலிங்கம் | — | புலிங்கம் |
| **தீத்தெய்வம்** *1—1* | ... | — | — |
| பாவகன் | ... | — | — |

**பாடவேறுபாடு:**

* இவ்விரு பெயர்களும் ஒரு சொற்பல்பொருள் இயலில் உள்ளன. (செய்யுள்—542)

## செய்யுள்—60

**தீத்தெய்வப்பாரி** *1—1*

| | | | |
|---|---|---|---|
| | அக்கினிபாரி *1—1* | — | (தீ)பெண் *1—2* |
| சுவாகாதேவி | சுவாகாதேவி | — | சுவாகா |

**மிகை பிங்:** 1) வரையனல், 2) அரணி, ஞெகிழி, 3) — 4) — 5) — 6) — 7) —

**கயா:** 1) — 2) — 3) — 4) — 5) — 6) — 7) —

**நாம:** 1) — 2) — 3) தீபகம், 4) குய், 5) சுடர் 6) — 7) சுதை.

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 60ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

ஞெலிகோல்—பெரும்பாண் *178;* விளக்கு—பொருந *5;* சுடர்—முருகு *43;* ஒளி—முருகு *3;* புகை—முருகு *138;* ஆவி—பெரும்பாண் *469;* தூமம்—கலி *104-43;* அரி—முருகு *76;*

**பிற தமிழ்ச் சொற்கள்:**

காட்டழல், தாவம், தீதருகோல், தீப்பொறி, தீத்தெய்வம், தீவிகை, தூமம்.

**க. சொ. ஆக்கத்திற்குரியவை :**

ஞெலிகோல், ஆவி.

**வடசொற்கள் :**

தீபம், தூபம், புலிங்கம், பாவகன்

**மணிப்பவளச் சொற்கள்:**

தீத்தெய்வப்பாரி, சுவாகாதேவி.

---

**பாட வேறுபாடு:**

* **இவ்விரு பெயர்களும் ஒருசொல் பல்பொருள் பொருளியலில் (செய்யுள் 404, 411) உள்ளவை,**

## செய்யுள்—61

### நீர்

வாரியாலங்கிலாலமழையலர்கமலங்காண்டம்
நீரம்புட்கரமேசிந்துநெடும்புனல்சடிலம்பாணி
காரறல்புவனநாரங்கனவிரதம்கவந்தம்
மாரியம்புதமேயப்புவருணம்சீவனம்வனம்வார்

61 வாரி,ஆ லம்கீ, லாலம்,
மழையலர், கமலம், காண்டம்,
நீரம்,புட் கரமே, சிந்து,
நெடும்புனல், சடிலம், பாணி,
கார்,அறல், புவனம், நாரம்,
கனவிர தம்,கவ ந்தம்
மாரி,அம் புதமே அப்பு
வருணம்,சீ வனம்,வ னம்,வார்.

### பெ. பொ. விளக்கம்:

வாரி— நீட்சியாக ஓடுவது;
ஆலம்— தீக்கும் பகை
கிலாலம்—நெருப்பினைத் தணித்தல் உடையது
மழையலர்—முகில் உதிர்க்கும் மலர் போன்றது
கமலம்—வேட்கை கொண்டவரால் விரும்பப்படுவது
காண்டம்—காட்சிக்கினியது
நீரம்— பள்ளத்தில் பாய்வது
புட்கரம்—வழிபாட்டிற்குக் கரணியமாவது
சிந்து—ஒழுகுதலை உடையது
புனல்— அனலுக்குப் பகை
சடிலம்—உயிர்களால் அடையப்படுவது
பன்—பண் —பாணி—பள்ளத்தில் தேங்குவது
கார்—கருமுகிலிலிருந்து தோன்றியது
அறல்—முரிதலை உடையது
புவனம்—உலகப் பொருள்கள் முளைத்தற்குக் கரணியமா
நாரம்— இயற்கைத் தோற்றமுடையது
கனவிரதம்—முகிலின் சாறாக உள்ளது

## செய்யுள் — 62

கவந்தம்—விரும்பப்படுவது
மாரி—கருமுகிலிலிருந்து தோன்றியது
அம்பு—வெள்ளமாகும்போது ஒலிப்பது
உதம்—நெகிழ்வது
அப்பு—பரந்துபடுவது
வருணம்—கொள்ளப்படுவது
சீவனம்—உயிர்கள் வாழ்வதற்குக் காரணியமாவது
வனம்—காட்டை உண்டாக்குவது
வார்—நீண்டு ஒழுகுவது

### நீரின் தொடர்ச்சி

## நீர்த்தெய்வம்

பயமழையுதகந்தோயம்பயசுசம்பரம்பாணியம்
வயமொடுசீவனீயம்வருதீர்த்தங்கீரஞ்சிதம்
அயமளகத்தோடாமமமுதங்கஞ்சலநீராகும்
நயனுறுவருணனிந்தநற்புனல்வேந்தனாமம்

62 பயம்,மழை, உதகம், தோயம்,
பயசு,சம் பரம்,பா ணீயம்,
வயமொடு சீவ னீயம்,
வருதீர்த்தம், கீரம், சிதம்
அயம்,அள கத்தோ டாம்அம்,
அமுதம்,கம், சலம், **நீர்** ஆகும்;
நயனுறு **வருணன்** இந்த
நற்புனல் வேந்தன் நாமம்.

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

பயம்—பருகப் பயன்படுவது
மழை—இளமைக்குரிய குணம் செய்தல் உடையது
உதகம்—நெகிழ்ச்சி உடையது
தோயம்—உயிர்களை நிலைபெறுத்துவது
பயசு—பருகப்படுவது
சம்பரம்—சம்பரனால் கொடுக்கப்பட்டது

### செய்யுள் — 62

பாணியம்—பருகப்படுவது
வயம்—வலிமையுடையது
சீவனியம்—உயிர்கள் உயிர்வாழச் செய்வது
தீர்த்தம்—கடத்தற்குரியது
கீரம்—பருகப்படுவது
சீதம்—குளிர்ச்சி உடையது
அயம்—செல்லுதலை உடையது
அளகம்—பரவலாகச் செல்லுதலை உடையது
ஆம்—'அம்' என்னும் வேர்ச்சொல்லிலிருந்து உயிரினங்களின் வளர்ச்சிக்குக் கரணியமானது என்னும் பொருள் பொதிந்தது
அம்—ஆம் என்பதன் அடிவேர்ச்சொல்லாக அதன் பொதிபொருள் கொண்டது
அமுதம்—உணவானது
கம்—புகழப்படுவது
சலம்—சல சல என்றொலி எழுப்பி ஓடுவது
புனல்வேந்தன்—நீரின் தலைவன்
வருணன்—மழை பொழிய (வர) வைப்பவன்

நயன்உறு—நற்பயன்மிக்க
நற்புனல்—பண்புத்தொகை

## ஒப்பீடு

| சூடாமணி 61,62 | பிங்கலம் 57,73 | கயாதரம் 20,37,38 | நாமதீபம் 77,78,82 |
|---|---|---|---|
| *நீர் 1—45* | *நீர் 1—50* | *நீர் 41* | *நீர் 40* |
| வாரி | வாரி | வாரி | வாரி |
| ஆலம் | ஆலம் | | ஆலம் |
| கீலாலம் | கீலாலம் | கீலாலம் | கீலாலம் |
| மழையவர் | அலர் | கனமலர் | முகிற்பூ |
| கமலம் | கமலம் | கமலம் | கமலம் |
| காண்டம் | காண்டம் | காண்டம் | காண்டம் |
| நீரம் | நீரம் | நீரம் | நீரம் |
| புட்கரம் | புட்கரம் | புட்கரம் | புட்கரம் |
| சிந்து | சிந்து | | சிந்து |

## செய்யுள் — 62

| | | | |
|---|---|---|---|
| புனல் | புனல் | புனல் | புனல் |
| சலிலம் | சலிலம் | சலிலம் | சலிலம் |
| பாணி | பாணி | பாணி | பாணி |
| கார் | கார் | — | கார் |
| அறல் | அறல் | அறல் | அறல் |
| புவனம் | புவனம் | புவனம் | புவனம் |
| நாரம் | நாரம் | நாரம் | நாரம் |
| கனவிரதம் | கனவிரதம் | கனவிரதம் | கனவிரதம் |
| கவந்தம் | கவந்தம் | கவந்தம் | கவந்தம் |
| மாரி | மாரி | — | — |
| அம்பு | அம்பு | அம்பு | அம்பு |
| உதம் | — | உதம் | — |
| அப்பு | அப்பு | அப்பு | அப்பு |
| வருணம் | வருணம் | வருணம் | வருணம் |
| சீவனம் | சீவனம் | சீவனம் | சீவனம் |
| வனம் | — | வனம் | வனம் |
| வார் | வார் | வார் | வார் |
| பயம் | பயம் | பயம் | பயம் |
| மழை | மழை | முகில் | — |
| உதகம் | உதகம் | உதகம் | உதகம் |
| தோயம் | தோயம் | தோயம் | தோயம் |
| பயசு | பயசு | — | — |
| சம்பரம் | சம்பரம் | சம்பரம் | சம்பரம் |
| பாணீயம் | பாணீயம் | பானியம் | பாணீயம் |
| வயம் | வயம் | — | — |
| சீவனீயம் | சீவனீயம் | சீவனீயம் | — |
| தீர்த்தம் | — | தீர்த்தம் | — |
| கீரம் | — | — | — |
| சிதம் | சிதம் | — | — |
| அயம் | அயம் | அயம் | அயம் |
| அளகம் | அளகம் | அளகம் | அளகம் |
| ஆம் | ஆம் | ஆம் | — |
| அம் | அம் | அம் | அம் |

## செய்யுள்—62

| | | | |
|---|---|---|---|
| அமுதம் | அமுதம் | அமுதம் | அமுதம் |
| கம் | கம் | கம் | கம் |
| சலம் | சலம் | சலம் | சலம் |
| வருணன் 1—1 | வருணன் 1—4 | வருணன் | வருணன் 1—4 |
| புனல்வேந்தன் | புனற்செல்வன் | புனற்கரசன் | — |

மிருக: பிங்: 1) விகடி, குசம், மேகம், அகிலம், இதடி, பதம், கயம், வசி, கோ.
2) சலபதி, பாதசரன், நதிகேள்வன்.

கயா: 1) கிலமம், குசம், கோ.
2) சலபதி, சிந்துபதி, கொண்டலூர் பாசதரன், உருமுப்பகைக் கொற்றவன், வருணேசன்.

நாமட: 1) கோ, அங்குசம், அம்புயம், அவதாரம்.
2) பாசன், மீனூர்தி, நதிகேள்வன், நீரிறைவன்.

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 61, 62ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள்:**

நீர்—முருகு 29, வாரி—பொருந 22, ஆலம்—ஐங் 303-1 கமலம்—பரி 2-24, புனல்—பொருந 240, பாணி—பொருந 48, கார்—பெரும்பாணர் 210, அறல்—பொருந 25, மாரி—பெரும்பாண 49, அம்பு—மதுரை 67 அப்பு—அகம் 9-3, வார்—பெரும்பாண் 335, பயம்—பொருந 92, மழை—முருகு 7, வயம்—பரி 6-7-8, அயம்—நற் 257-8, அளகம்—நற் 377-8, ஆம்—நற் 133-11, அம்—முருகு 76, அமுதம்—மதுரை 601, கம்—நற் 154—1, சலம்—மதுரை 112.

**பிற தமிழ்ச் சொற்கள்:**

மழையவர், காண்டம், நீரம், வருணம், உதகம், தோயம், உதம், வயம், புனல்வேந்தன், வருணன், அம்பு, அப்பு.

## செய்யுள்—62

**க. சொ. ஆக்கத்திற்குரியவை :**

மழையவர், நீரம், அறல், வார், ஆம், அம், கம், சிந்து, அம்பு, அப்பு.

**வடசொற்கள்:**

புவனம், நாரம், சுனவிரதம், கவந்தம், சீவனம், வனம், பயசு, சம்பரம், பானியம், சீவனீயம், தீர்த்தம், கீரம், சீதம்,

**மணிப்பவளச் சொற்கள் :**

அயம், அளகம், சலம்.

## ஞாயிறு

பரிதிபாற்கரனாதித்தன்பனிப்பகைசுடர்பதங்கன்
இருள்வலிசவிதாச்சூரனெல்லுமார்த்தாண்டனென்றாழ்
அருணனாதவனேமித்திரனாயிரஞ்சோதியுள்ளோன்
தரணிசெங்கதிரோன்சண்டன்தபனனேயொளியேசான்றோன்

63 பரிதி,பாற் கரன்,ஆ தித்தன்,
பனிப்பகை, சுடர்,ப தங்கன்
இருள்வலி, சவிதா,ச் சூரன்,
எல்லு,மார்த் தாண்டன், என்றாழ்,
அருணன்;ஆ தவனே மித்திரன்,
ஆயிரஞ் சோதி யுள்ளோன்,
தரணி,செங் கதிரோன், சண்டன்,
தபனனே ஒளியே சான்றோன்.

**பெ. பொ. விளக்கம் :**

**சூரியன்** — (சுள்—வேர்ச்சொல்) சுள்ளென்று வெப்பத்தை முதலில் தந்தவன்
பரிதி—வட்ட வடிவமுள்ளவன்
பாற்கரன்—ஒளிக்கதிருடையவன்
ஆதித்தன்—முதலில் தோன்றியவன்
பனிப்பகை—பனியைப்போக்கும் பகைவன்

**செய்யுள்—63**

சுடர்—சுடுதலைச் செய்பவன்
பதங்கன்—செலவை உடையவன்
இருள்வலி—இருளைப்போக்கும் வலிமையன்
சவிதா—மக்களைச் செயற்படுத்துவோன்
சூரன்—கடும் வெப்பத்தால் அஞ்சச் செய்பவன்
எல்—ஒளி உடையவன்
மார்த்தாண்டன்—மாபெரும் அண்டத்தை வாழச்செய்பவன்
என்றூழ்—(என்று...ஊழ்)—பகல் நாளை முறையே தருபவன்
அருணன்—இயக்கமுடையவன்
ஆதவன்—முதலி
மித்திரன்—உயிர்களுக்கு நண்பன்
ஆயிரம் சோதி—ஆயிரம் கதிர்
தரணி—மண்ணுலகைத் தந்தவன்
சண்டன்—சினமுடையவன்
தபனன்—வெம்மை செய்வோன்
சான்றோன்—அனைத்திற்கும் சான்றானவன்

## ஞாயிறு தொடர்ச்சி

அனலியேஅரியேபானுவலரியேயண்டயோனி
கனலியேவிகர்த்தனன்வெங்கதிரவன்பகலோன்வெய்யோன்
தினகரன்பகலேசோதிதிவாகரனரியமாலே
இனனுடனுதயன்ஞாயிறெல்லையேகிரணமாலி.

**64** அனலியே அரியே பானு,
அலரியே அண்ட யோனி,
கனலியே விகர்த்தனன்,வெங்
கதிரவன், பகலோன், வெய்யோன்
தினகரன் பகலே சோதி,
திவாகரன், அரிய மாலே
இனன்,உடன் உதயன், ஞாயி
றெல்லையே கிரண மாலி.

செய்யுள் —64

பெயர்ப் பொருள் விளக்கம்:

அனலி—அனலை உடையவன்
அரி—இருளை அழிப்பவன்
பானு—ஒளிர்பவன்
அலரி—கதிர்களை அலர்த்துபவன்
அண்டயோனி—அண்டங்களுக்கெல்லாம் தாய்
கனலி—கனற்றுபவன்
விகர்த்தனன்—இருளைப் போக்குபவன்
கதிரவன்—ஒளிக்கதிர்களை உடையவன்
பகலோன்—பகலை உண்டாக்குபவன்
வெய்யோன்—வெப்பங் கொண்டவன்
தினகரன்—ஒவ்வொரு நாளையும் தன் கதிர்களால் வரச்செய்பவன்
பகல்—நாளைப் பகலாகப் பகுப்பவன்
திவாகரன்—பொன் போன்ற கதிர்களைக் கொண்டவன்
அரியமா—விரைவாகச்செல்லும் குதிரை போன்றவன்
இனன்—திரிதலை உடையவன்
உதயன்—தோன்றுபவன்
ஞாயிறு—(நாயிறு என்பதன் மரூஉ) தலைமையான கோள் அல்லது தாய்க்கோள்
எல்லை—ஒளியைக் கொண்டவன்
கிரணமாலி—கதிர்த்தொகுதி கொண்டவன்
வெங்கதிரவன்—பண்புத்தொகை

ஞாயிறு தொடர்ச்சி

ஞாயிற்று வட்டம், ஞாயிற்றுக் கதிர்

விரவுமேழ்பரியோன்வேந்தன்விரிச்சிகன்விரோசனன்பேர்
இரவிவிண் மணியருக்கனேழுஞ்சூரியன்பேர்
பரிதியின்வட்டந்தானேவிசயமாம்பரிதிவிசும்
கிரணமேகரமுமற்றைக்கிளர்ந்ததீவிரமுமாகும்

65 விரவும்ஏழ் பரியோன், வேந்தன்
விரிச்சிகன், விரோசனன்,பேர்,
இரவி,விண் மணி,அருக்கன்,
ஏழேழும் சூரியன்பேர்;

### செய்யுள் — 65

பரிதியின் வட்டந் தானே
விசயமாம்; பரிதி வீசும்
கிரணமே கரமும் மற்றைக்
கிளர்ந்ததீ விரமும் ஆகும்.

**பெ. பொ. விளக்கம் :**

ஏழ் பரியோன் — ஏழு குதிரைகளை உடையவன்
வேந்தன் — உயிர்களுக்கெல்லாம் மன்னவன்
விரிச்சிகன் — கொடுமையான வெப்பக் கதிர்களை உடையவன்
விரோசனன் — பேரொளியுடையவன்
பேர் இரவி — பெயர்த்து இரவைக் கொள்பவன்
விண்மணி — விண்ணில் தோன்றும் மாணிக்க மணி
அருக்கன் — யாவராலும் தொழப்படுபவன்

பரிதியின் வட்டம் — ஞாயிற்றின் வெளி வட்டம்
விசயம் — நிகரற்ற வெற்றிக்குறி
கிரணம் — ஒளிக்கதிர்
கரம் — இருளை நீக்கும் கதிர்க்கை
திவிரம் — பேரொளி உடையது

ஏழேழும் — நாற்பத்தொன்பதும்

### ஒப்பீடு

| சூடாமணி — 63-65 | பிங்கலம் — 210-212 | கயாதரம் 17 | நாமதீபம் — 92-95 |
|---|---|---|---|
| சூரியன் 1—49 | சூரியன் 1—64 | சூரியன் 19 | சூரியன் 65 |
| பரிதி | பரிதி | — | பரிதி |
| பாற்கரன் | பாற்கரன் | பாற்கரன் | பாற்கரன் |
| ஆதித்தன் | ஆதித்தன் | ஆதித்தன் | ஆதித்தன் |
| பனிப்பகை | பனிப்பகை | — | பனிப்பகை |
| சுடர் | சுடரோன் | — | சுடரோன் |
| பதங்கன் | பதங்கன் | பதங்கன் | பதங்கன் |
| இருள்வலி | இருள்வலி | | இருள்வலி |

## செய்யுள் —65

| | | | |
|---|---|---|---|
| சவிதா | சவிதா | — | சவிதா |
| சூரன் | சூரன் | — | சூரன் |
| எல் | எல்லி | — | எல்லி |
| மார்த்தாண்டன் | மார்த்தாண்டன் | மார்த்தாண்டன் | மார்த்தாண்டன் |
| என்றூழ் | என்றூழ் | — | என்றூழ் |
| அருணன் | அருணன் | அருணன் | அருணன் |
| ஆதவன் | ஆதவன் | — | ஆதவன் |
| மித்திரன் | மித்திரன் | — | மித்திரன் |
| ஆயிரஞ்சோதி யுள்ளோன் | ஆயிரங்கதிரோன் | — | ஆயிரங்கரன் |
| தரணி | தரணி | தரணி | தரணி |
| செங்கதிரோன் | செங்கதிர் | செங்கதிர் | செங்கதிரவன் |
| சண்டன் | சண்டன் | — | சண்டன் |
| தபனன் | தபனன் | தபனன் | தபனன் |
| ஒளி | ஒளியோன் | — | ஒளி |
| சான்றோன் | சான்றோன் | — | சான்றோன் |
| அனலி | அனலி | — | — |
| அரி | அரி | அரி | அரி |
| பானு | பானு | பானு | பானு |
| அலரி | அலரி | அலரி | அலரி |
| அண்டயோனி | அண்டயோனி | — | அண்டயோனி |
| கனலி | கனலி | — | கனலி |
| விகர்த்தனன் | விகர்த்தனன் | — | — |
| கதிரவன் | கதிரவன் | — | கதிரவன் |
| வெய்யோன் | வெய்யோன் | — | வெய்யோன் |
| பகலோன் | பகலோன் | — | — |
| தினகரன் | தினகரன் | — | தினகரன் |
| பகல் | பகல் | — | பகல் |
| சோதி | சோதி | — | சோதி |
| திவாகரன் | திவாகரன் | திவாகரன் | திவாகரன் |
| அரியமா | — | — | அரியமா |
| இனன் | இனன் | — | இனன் |
| உதயன் | உதயன் | உதையன் | உதையன் |
| ஞாயிறு | ஞாயிறு | | ஞாயிறு |

### செய்யுள் — 65

| | | | |
|---|---|---|---|
| எல்லை | எல்லை | — | எல்லை |
| கிரணமாலி | — | — | கிரணமாலி |
| ஏழ்பரியோன் | — | — | ஏழ்பரியோன் |
| வேந்தன் | வேந்தன் | — | வேந்தன் |
| விரிச்சிகன் | விரிச்சிகன் | — | — |
| விரோசனன் | விரோசனன் | — | விரோசனன் |
| இரவி | இரவி | இரவி | இரவி |
| விண்மணி | விண்மணி | — | விண்மணி |
| அருக்கன் | அருக்கன் | அருக்கன் | அருக்கன் |
| **பரிதியின் வட்டம் 1—1** | **வெங்கதிர் மண்டிலம் 2** | — | **கதிர்வட்டம் 2** |
| விசயம் | விசயம் | — | விசையம் |
| **பரிதிவீசும் கிரணம் 1—2** | **கிரணம் 4** | — | — |
| கரம் | கரம் | — | — |
| தீவிரம் | தீவிரம் | — | — |

**மிகை :** **பிங் :** 1) மணி, தேரோன், செஞ்சுடர், எல்லோன், கனலோன், திமிராரி, பர்க்கன், வெயிலோன், கதிரோன், வெஞ்சுடர், பகலவன், ஆதபன், அழலவன், பொழுது, பகவன், தாபநன், சாயாபதி, மாலி. (2) — (3) கோ.

**கயா :** 1) பங்கயநாதன், சாயாபதி, போது. (2) —, (3) —.

**நாம :** 1) பிதிர்க்கோன், ஓராழித்தேரான், வீக்தன், சிங்கன், மறியுச்சன், வான்விளக்கம், மந்தி, கிரகேசன், கிரிவலஞ்செய்கின்றோன், சனிதாதை, மதியளப்போன், நாளளப்போன், வியாழசிநேகன், கமலபாந்தி, என்று, சாயைதலைவன், உடாதேவி தலைவன், காசிபநேயன், அதிதிநேயன். (2) —, (3) —.

செய்யுள்—65

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 63—65ல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள் :**

பரிதி—முருகு 299, சுடர்—முருகு 43, எல்—முருகு 74
என்றூழ்—நற் 43-2, ஒளி—முருகு 3, சான்றோன்—நற் 233-9
அரி—முருகு 76, அலரி—முல்லைப்பாட்டு 10, கனலி—பெரும்பாண் 17
வெய்யோன்—பரி 8-67, பகலோன்—அகம் 201-8, பகல்-முருகு 166
இனன்—பட் 61, ஞாயிறு—முருகு 2, எல்லை—பொருந 118
வேந்தன்—நெடு 187, விசயம்—பெரும்பாண் 261, சரம்—புறம் 152-30

**பிற தமிழ்ச் சொற்கள்:**

சூரியன், ஆதித்தன், பனிப்பகை, இருள்வலி, சூரன்
ஆதவன், தரணி, செங்கதிரோன், அனலி, கதிரவன், அரியமா
ஏழ்பரியோன், இரவி, விண்மணி, பரிதியின் வட்டம்

**க. சொ. ஆக்கத்திற்குயவை :**

பரிதி, பனிப்பகை, இருள்வலி, எல், என்றூழ், அனலி
அலரி, கனலி, வெய்யோன், அரியமா, இனன், ஞாயிறு
எல்லை, சண்டன், இரவி, விண்மணி.

**வடசொற்கள் :**

பாற்கரன், பதங்கன், சவிதா, மார்த்தாண்டன், அருணன்
மித்திரன், தபனன், பானு, விகர்த்தன், தினகரன், சோதி
திவாகரன், உதயன், கிரணமாலி, விரிச்சிகன், விரோசனன்
அருக்கன், விசயம், கரம், தீவிரம்.

**மணிப்பவளச் சொற்கள்:**

ஆயிரஞ்சோதியுள்ளோன், அண்டயோனி, பரிதிவீசும்கிரணம்.

## செய்யுள்—66

### நிலவு

நிலவுசோமன்களங்கனிசாபதிபிறைகுளிர்ந்த
கலையினனுடுவின்வேந்தன்கலாநிதியொடுகுபேரன்
அலவனேசசியேதிங்களம்புலிநிசாகரன்வான்
உலவிமகிரணன்சாந்தமுற்றதண்ணவன்குரங்கி

66 நிலவு,சோமன்,களங்கன்,
நிசாபதி பிறை,குளிர்ந்த
கலையினன், உடுவின் வேந்தன்,
கலாநிதி யொடுகு பேரன்.
அலவனே சசியே திங்கள்,
அம்புலி. நிசாகரன்,வான்
உலவிம கிரணன், சாந்தம்
உற்றதண் ணவன்.குரங்கி,

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

**நிலவு**—ஒளிகொண்டு நிலவுபவன்
**சோமன்**—ஒளியைத் தோற்றுவிப்போன்
**களங்கன்**—கருப்பு நிழலாம் களங்கம் உடையவன்
**நிசாபதி**—இரவின் தலைவன்
**பிறை**—இளந்திங்கள்
**கலையினன்**—ஒளி வளரும் கலைகளை உடையவன்
**உடுவின் வேந்தன்**—மினுக்காது கோளுக்கும் விண்மீனுக்கும் இடைப்பட்டு வானத்தில் உள்ள உடுக்களின் தலைவன்
**கலாநிதி**—கலைகளின் செல்வம் போன்றவன்
**குபேரன்**—கரும்புள்ளிகளால் அருவெறுப்பானவன்
**அலவன்**—இரவுப் பொழுதை உடையவன்
**சசி**—முயல் உருவக் களங்கம் உடையவன்
**திங்கள்**—ஒளி வளர்ந்து தேய்பவன்
**அம்புலி**—ஒளித்திங்கள்
**நிசாகரன்**—இரவுப் பொழுதைக் காட்டுபவன்
**இமகிரணன்**—பனிபோலும் குளிர்ந்த கதிர்களை உடையவன்

**செய்யுள் — 67**

தண்ணவன் — குளிர்ந்த ஒளியினன்
குரங்கி — குரங்கு உருப்போலும் களங்கம் உடையவன்
உலவு — இமகிரணன் — வினைத்தொகை
சாந்தம் உற்ற — அமைதி பொருந்திய

## நிலவு தொடர்ச்சி

மதியிராக்கதிரேயிந்துமருவுதானவனேயல்லோன்
விதுவொடுகுமுதநண்பன்சுதாகரன்வேந்தனாலோன்
சிதைவிலாமுயலின்கூடுபசுங்கதிர்த்தேவென்றெல்லாம்
புதியசந்திரன்மூவேழுமெட்டுமேபுகன்றநாமம்

67 மதி,இராக் கதிரே இந்து,
மருவுதா னவனே அல்லோன்,
விதுவொடு குமுத நண்பன்,
சுதாகரன், வேந்தன் ஆலோன்,
சிதைவிலா முயலின் கூடு,
பசுங்கதிர்த் தேவன் றெல்லாம்
புதியசந் திரன்மூ வேழும்
எட்டுமே புகன்ற நாமம்.

**பெ. பொ. விளக்கம்:**

சந்திரன் — இரவை ஒளியால் ஆளுபவன்
மதி (அளப்பது) — காலத்தை வரையறுப்பது
இராக்கதிர் — இரவிற்குரிய ஒளிக்கதிர்களை உடையவன்
இந்து — குளிர்ந்த கதிர்களால் நண்ணப்பவன்
தானவன் — ஒளியைத் தானமாகத் தருபவன்
அல்லோன் — இரவுப் பொழுதிற்கு உரியவன்
விது — தேவர்களால் நீராகப் பருகப்படுபவன்
குமுத நண்பன் — மலர்த்துவதால் குமுதத்திற்கு நண்பன்
சுதாகரன் — அமுதக் கதிர்களை உடையவன்
வேந்தன் — வான உலகில் இரவு இரசன்

## செய்யுள் —67

ஆலோன்—மலர்ந்த பூப்போன்றவன்
முயலின் கூடு—களங்கமாகிய முயலுருவம் அடைபட்டிருப்பதால் அதன் கூடு போன்றவன்
பசுங்கதிர் தே—கண்ணிற்குப் பசுமையான கதிர்களை உடைய ஒளியன்

## ஒப்பீடு

| சூடாமணி — 66-67 | பிங்கலம்—225 | கயாதரம் 18 | நாமதீபம்—96-97 |
|---|---|---|---|
| சந்திரன் 1—29 | சந்திரன் 37 | சந்திரன் 19 | சந்திரன் |
| நிலவு | நிலவு | — | நிலா |
| சோமன் | சோமன் | சோமன் | சோமன் |
| களங்கள் | களங்கன் | — | களங்கன் |
| நிசாபதி | நிசாபதி | — | — |
| பிறை | பிறை | — | — |
| கலையினன் | கலையோன் | எண்ணெண் கலையோன் | கலையோன் |
| உடுவின்வேந்தன் | உடுபதி | உடுபதி | உடுக்காந்தன் |
| கலாநிதி | கலாநிதி | — | — |
| குபேரன் | குபேரன் | குபேரன் | குபேரன் |
| அலவன் | அலவன் | — | அலவன் |
| சசிதிங்கள் | சசி | சசி | சசி |
| திங்கள் | திங்கள் | திங்கள் | திங்கள் |
| அம்புலி | அம்புலி | அம்புலி | அம்புலி |
| நிசாகரன் | நிசாகரன் | — | — |
| இமகிரணன் | இமகிரணன் | இமகரன் | இமகரன் |
| தண்ணவன் | தண்ணவன் | தண்ணெண்சுடர் | தண்கதிர் |
| குரங்கி | குரங்கி | — | — |
| மதி | மதி | நாண்மதி | — |
| இராக்கதிர் | இராக்கதிர் | இரவோன் | — |
| இந்து | இந்து | இந்து | இந்து |
| தானவன் | தானவன் | — | தானவன் |
| அல்லோன் | அல்லோன் | — | அல்லோன் |

### செய்யுள்—67

| | | | |
|---|---|---|---|
| விது | விது | விது | விது |
| குமுதநண்பன் | குமுதசகாயன் | — | குமுதபாந்தி |
| சுதாகரன் | சுதாகரன் | — | சுதாகரன் |
| வேந்தன் | வேந்தன் | — | வேந்து |
| ஆலோன் | ஆலோன் | ஆலோன் | — |
| முயலின்கூடு | முயற்கூடு | — | முயற்கூடு |
| பசுங்கதிர்த்தே | பசுங்கதிர் | — | பைங்கதிர் |

**மிகை: பிங்:** தண்சுடர், தாராபதி, அமுதககிரோன், சீதன் பனிக்கதிர், இரவோன், உடுவேந்தன்

**கயா:** வண்ணம்புதியோன், நாண்மலர், மால்மனத்தன் அமுதாகரன்,

**நாம:** மானன், இறை, கடகக்கோன், அரி, புதன்தந்தை மூன்றாழித்தேரான், பதின்பரியான்: அன்சூயைமகன் அத்திரிசேய், தாய்க்கோள், விடையுச்சன்.

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 66, 67ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள்:**

நிலவு—பொருந 213, பிறை—பொருந 25, அல்வன்—பொருந் 9 திங்கள்—முருகு 98, அம்புலி—கலி 80-19, மதி—முருகு 87 வேந்தன்—நெடு 1874.

**பிற தமிழ்ச் சொற்கள்:**

களங்கன், கலையினன், உடுவின்வேந்தன், தண்ணவன் குரங்கி, இராக்கதிர், தானவன், அல்லோன், குமுதநண்பன் ஆலோன், முயலின்கூடு, பசுங்கதிர்த்தே.

**க. சொ. ஆக்கத்திற்குரியவை:**

களங்கன், கலையினன், தண்ணவன், குரங்கி, அல்லோன் ஆலோன்.

செய்யுள் — 68

**வடசொற்கள்:**

இந்து, சந்திரன், சுதாகரன், சந்திரன், சோமன் நிசாபதி, குபேரன், நிசாகரன்.

**மணிப்பவளச் சொற்கள் :**

கலாநிதி, சசி திங்கள், இமகிரணன்.

## செவ்வாய்

கருதியசெந்தீவண்ணன்காட்டுமங்காரகன்சேய்
குருதிவக்கிரனேபெளமன்குசனிலமகனரத்தன்
மருவியவழலோன்மற்றைமங்கலனுடனேஆரல்
விரவியஉதிரனின்னமேவுசெவ்வாயின் நாமம்

68 கருதிய செந்தீ வண்ணன்,
காட்டும்அங் காரக கன், சேய்
குருதி, வக் கிரனே பெளமன்,
குசன், நில மகன், அரத்தன்,
மருவிய அழலோன், மற்றை
மங்கல னுடனே ஆரல்,
விரவிய உதிரன் இன்ன
மேவுசெவ் வாயின் நாமம்.

**பெ. பொ. விளக்கம் :**

**செவ்வாய்**—செம்மையன்
**அங்காரகன்**—செந்நிறம் உடையவன்
**சேய்**—செம்மையானவன்
**குருதி**—குருதியின் செம்மையன்
**வக்கிரன்**—முரண் பட்டவன்
**பெளமன்**—பூமியினின்று பிரிந்தவன்
**குசன்**—பூமிமகன்
**அரத்தன்**—சிவந்த நிறத்தன்

### செய்யுள்—68

அழலோன்—பிரிந்தோர்க்கு அழல் ஆகுபவன்
மங்கலன்—மங்கலமாகுபவன்
ஆரல்—நெருப்பின் நிறத்தவன்
உதிரன்—குருதி நிறம் உடையவன்

இன்ன—இவை

### ஒப்பீடு

| சூடாமணி 68 | பிங்கலம் 230 | *கயாதரம் — | நாமதீபம் 98 |
|---|---|---|---|
| செவ்வாய் 1—13 | செவ்வாய் 1—15 | | செவ்வாய் 17 |
| செந்தீவண்ணன் | செந்தீவண்ணன் | | தீ |
| அங்காரகன் | அங்காரகன் | | அங்காரகன் |
| சேய் | சேய் | | சேய் |
| குருதி | குருதி | | குருதி |
| வக்கிரன் | வக்கிரன் | | வக்கிரன் |
| பௌமன் | பௌமன் | | பவுமன் |
| குசன் | குசன் | | குசன் |
| நிலமகன் | — | | மண்சேய் |
| அரத்தன் | அரத்தன் | | — |
| அழலோன் | அழலவன் | | — |
| மங்கலன் | மங்கலன் | | மங்கலன் |
| ஆரல் | ஆரல் | | ஆரல் |
| உதிரன் | உதிரன் | | — |

மிகை: பிங்: அறிவன், அழல், உலோகிதன்.

கயா: — —

நாம: வளவன், மகரவுச்சன், மேடன், எண்பரித்தேரான் விருச்சிகன், துணைக்கோள்.

---

பாட வேறுபாடு:

* கிழமை, ஓரை, விண்மீன்கள் பெயர்கள் இல்லை.

செய்யுள்—68

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 68ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

சேய்—சிறுபாண் 3, குருதி—முருகு 52, ஆரல்—குறு 25-4.

**பிற தமிழ்ச்சொற்கள் :**

செவ்வாய், செந்தீவண்ணன், நிலமகன், அரத்தன் அழலோன், மங்கலன்.

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை :**

வண்ணன், குருதி, அரத்தன், அழலோன், ஆரல்

**வட சொற்கள்:**

அங்காரகன், வக்கிரன், பௌமன், குசன், உதிரன்

## அறிவன் (புதன்)

சிந்தைதகூரியன்கணக்கன்றேர்ப்பாகனருணன்சாமன்
வந்ததூதுவனேமாலேமதிமகனறிஞன்பாகன்
அந்தமாம்புலவன்மற்றையனுவழிமேதைபச்சை
புந்திபண்டிதனீரெட்டும்புதன்பெயராகுமன்றே

69 சிந்தைதகூரியன் கணக்கன்,
தேர்ப்பாகன், அருணன். சாமன்
வந்ததூ துவனே மாலே
மதிமகன், அறிஞன், பாகன்
அந்தமாம் புலவன் மற்றை
அனுவழி, மேதை, பச்சை,
புந்திபண் டிதன்ஈ ரெட்டும்
புதன் பெயர் ஆகும் அன்றே.

## செய்யுள் —69

புதன் — அறிவுள்ளவன்
 சிந்தைசூரியன் — எண்ணத்தால் கூர்மையானவன்
கணக்கன் — கணக்குத் தலைவன்
தேர்ப்பாகன் — தேர் ஓட்டுநன்
அருணன் — பச்சை நிறத்தவன்
சாமன் — பச்சை நிறத்தவன்
தூதுவன் — அறிவிப்போன்
மால் — பெருமைக்குரியவன்
மதிமகன் — திங்களின் மகன்
அறிஞன் — அறிவுடையவன்
பாகன் — ஓட்டுநன்
புலவன் — அறிஞன்
அனுவழி — கற்பிழந்தவள் வழியினன்
மேதை — பேரறிஞன்
பச்சை — பசிய நிலத்திற்கு உரியவன்
புந்தி — புத்தி
பண்டிதன் — புலவன்

அந்தம் ஆம் — முடிவு எதையும்
ஈரெட்டும் — பதினாறும்
அன்று, ஏ — அசைகள்

## ஒப்பீடு

| சூடாமணி 60 | பிங்கலம் 231 | கயாதரம் — | நாமதீபம் 99 |
|---|---|---|---|
| புதன் 1—16 | புதன் 12 | | புதன் 19 |
| சிந்தை சூரியன் | — | | சூரியன் |
| கணக்கன் | கணக்கன் | | கணக்கன் |
| தேர்ப்பாகன் | தேர்ப்பாகன் | | தேர்ப்பாகன் |
| அருணன் | அருணன் | | அருணன் |
| சாமன் | சாமன் | | சவுமன் |
| தூதுவன் | தூதன் | | தூதன் |
| மால் | மால் | | மால் |
| மதிமகன் | மதிமகன் | | மதிசேய் |

## செய்யுள் —69

| | | |
|---|---|---|
| அறிஞன் | அறிஞன் | அறிஞன் |
| பாகன் | — | — |
| புலவன் | — | புலவன் |
| அனுவழி | — | — |
| மேதை | மேதை | மேதை |
| பச்சை | பச்சை | பச்சை |
| புந்தி | புந்தி | புந்தி |
| பண்டிதன் | — | — |

**மிகை: பிங்:** — —

**கயா:** — —

**நாம:** விந்தைக்கோன், எண்பரியான், கன்னியான் கன்னிபுச்சன், மிதுனன்

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 69ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள்:**

மால்—முருகு 12 பாகன்—நற் 19-6 புலவன்—அகம் 345-6 மேதை—அகம் 7-6, பச்சை—பொருந 5, புந்தி—பரி 11-6.

**பிற தமிழ்ச் சொற்கள் :**

சிந்தை கூரியன், கணக்கன், தேர்ப்பாகன், தூதுவன், மதிமகன், அறிஞன், பண்டிதன்.

**க. சொ. ஆக்கத்திற்குரியவை :**

கணக்கன், பாகன், அறிஞன், மேதை,

**வட சொற்கள்:**

புதன் அருணன், சாமன்

**மணிப் பவளச் சொற்கள்:**

அனுவழி

## செய்யுள்—70

## வியாழன், வெள்ளி

தீதிலாத்தெய்வமந்திரிசிகண்டிசனமைச்சன்சீவன்
வேதனாண்டளப்பானாசான்வேந்தன்பொன்வியாழன்பேராம்
ஓதியவசுரமந்திரியுசனன்பார்க்கவனேசுங்கன்
கோதில்சுக்கிரன்பளிங்குபுகர்கவிமழைக்கோள்வெள்ளி

70 தீதிலாத் தெய்வ, மந்திரி,
சிகண்டிசன், அமைச்ச்ன், சீவன்,
வேதன்,ஆண் டளப்பான், ஆசான்,
வேந்தன்,பொன், **வியாழன்** பேராம்
ஓதிய அசுர மந்திரி
உசனன்,பார்க் கவனே, சுங்கன்,
கோதில்சுக் கிரன்,ப ளிங்கு,
புகர்,கவி, மழைக்கோள், **வெள்ளி.**

**பெ. பொ. விளக்கம்:**

**வியாழன்**—மஞ்சள் நிறம் உடையவன்
தெய்வமந்திரி—தேவர்களுக்கு அமைச்சன்
சீவன்—உயிரன்
ஆண்டளப்பான்—ஆண்டுகளை அளப்பவன்
பொன்—பொன்னிறம் உடையவன்
வெள்ளி—(மற்றைகளினும் சற்று) வெண்மையானது.
உசனன்—அசுரர் மேன்மையை வளர்ப்பவன்
பார்க்கவன்—பிருகு வயிற்றில் பிறந்தவன்
சுங்கன்—தேவரைக் கீழறுப்போன்
சுக்கிரன்—வெண்ணிறம் உடையவன்
பளிங்கு—பளிங்கு நிறத்தவன்
புகர்—புள்ளியாய்த் தோன்றுபவன்
கவி—கவியின் மகன்
மழைக்கோள்—மழைக்குரிய கோள்.
**கோது+இல்=குற்றம் இல்லாத**

செய்யுள்—70

## ஒப்பீடு

| சூடாமணி—70 | பிங்கலம்—232, 233 | கயாதரம்— | நாமதீபம்—100, 101 |
|---|---|---|---|
| **வியாழன் 1—9** | வியாழன் 1+13 | | வியாழன் 16 |
| தெய்வ மந்திரி | தேவமந்திரி | | தேவமந்திரி |
| சிகண்டிசன் | சிகண்டிசன் | | சிகண்டிசன் |
| அமைச்சன் | — | | — |
| சீவன் | சீவன் | | சீவன் |
| வேதன் | — | | — |
| ஆண்டளப்பான் | ஆண்டளப்பான் | | ஆண்டளப்போன் |
| ஆசான் | ஆசான் | | — |
| வேந்தன் | அரசன் | | அரசன் |
| பொன் | பொன் | | பொன் |
| வெள்ளி 1—9 | வெள்ளி 1—15 | | வெள்ளி 20 |
| அசுரமந்திரி | தைத்திய மந்திரி | | — |
| உசனன் | உசனன் | | உசனன் |
| பார்க்கவன் | பார்க்கவன் | | பார்க்கவன் |
| சுங்கன் | சுங்கன் | | சுங்கன் |
| சுக்கிரன் | சுக்கிரன் | | சுக்கிரன் |
| பளிங்கு | பளிங்கு | | பளிங்கு |
| புகர் | புகர் | | புகர் |
| கவி | கவி | | கவி |
| மழைக்கோள் | மழைக்கோள் | | கார்க்கோள் |

**மிகை: பிங்:** 1. மந்திரி, பீதகன், சுரகுரு, பிரகற்பதி. சித்தன், அந்தணன்,

2. சல்லியன், சைத்தியன், பிரசுரன், ஒள்ளியோன், காப்பியன், சிதன்.

**கயா:** 1. —— 2.

### செய்யுள்—70

நாம: 1. அந்தணன், ஆங்கிரசன், மகவின்கோள், தனுவன், குரு, நண்டுச்சன். எண்மாவான், பிருகற்பதி, மீனன்.

2. கோல், விடையன், பெண்கோள், காப்பியன், பிருகு, மாக்கள்பத்தோன், தானவர்குரு, கரணன், சல்லியன், போகி, மீனவுச்சன்.

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 70ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

ஆசான்—பரி 2-61, வேந்தன்—நெடு 187 பொன்—முருகு 145, வெள்ளி—பொருந 72, பளிங்கு—குறி 57, புகர்—முருகு-210, கவி—பொருந 158.

**பிற தமிழ்ச் சொற்கள் :**

வியாழன், அமைச்சன், ஆண்டளப்பான், மழைக்கோள்.

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை :**

அமைச்சன், ஆசான், புகர், மழைக்கோள்.

**வடசொற்கள்:**

சிகண்டிகன், சீவன், வேதன், அசுர மந்திரி, உசனன், பார்க்கவன், அங்கன், சுக்கிரன்.

**மணிப்பவளச் சொற்கள் :**

தெய்வமந்திரி.

### காரி (சனி), கறுப்பு (இராகு), கதிர்ப்பகை (கேது)

கதிர்மகன்மந்தன்காரிகரியவன்சௌரிமேற்கோள்
முதுமகன்பங்குநீலன்முடவனோய்முகஞ்சனிப்பேர்
மதியுணுமிராகுநாமமற்றதுதமங்கறுப்பாம்
அதிகமாங்கேதுச்செம்மைசிகிகதிர்ப்பகையுமாமே

## செய்யுள் — 71

71 கதிர்மகன். மந்தன், காரி,
கரியவன். சௌரி, மேற்கோள்,
முதுமகன், பங்கு, நீலன்,
முடவன், நோய், முகன்,ச னிப்பேர்
மதியுணும் இராகு நாமம்
மற்றது தமம்,க றுப்பாம்;
அதிகமாம் கேதுச் செம்மை,
சிகி,கதிர்ப் பகையும் ஆமே.

**பெ. பொ. விளக்கம் :**

**சனி**—மெல்லச் செல்வோன்
கதிர்மகன்—ஞாயிற்றின் மகன்
மந்தன்—மெல்லச் செல்வோன்
காரி—கருமை நிறத்தவன்
சௌரி—சூரியன் மகன்
மேல்கோள்—மேல் உள்ள கோள்
பங்கு—முடமானவன்
நீலன்—கருமை நிறத்தவன்
முடவன்—முடக்காலன்
நோய்முகன்—நோய் கொண்ட முகத்தை உடையவன்

**இராகு**—நிலவை மறைத்து மீள்பவன்
தமம்—வருந்தும் குணத்தவன்
கறுப்பு—கரும்பாம்பு போன்றவன்

**கேது**—தன்னை அறிவிக்கும் தன்மை உடையது
செம்மை—சிவப்பு நிறத்தது
சிகி—நெருப்பு நிறத்தது
கதிர்ப்பகை—கதிரவன் பகை

மதி உண்ணும்—திங்களை மறைக்கும்

செய்யுள்—71

## ஒப்பீடு

| சூடாமணி—71 | பிங்கலம்—234—236 | கயாதரம்— | நாமதீபம்—102, 103 |
|---|---|---|---|
| சனி 1—11 | சனி 1—11 | | சனி 18 |
| கதிர்மகன் | கதிர்மகன் | | கதிர்சேய் |
| மந்தன் | மந்தன் | | மந்தன் |
| காரி | காரி | | காரி |
| கரியவன் | — | | — |
| சௌரி | சௌரி | | சவுரி |
| மேற்கோள் | மேற்கோள் | | மேற்கோள் |
| முதுமகன் | முதுமகன் | | முதுவோன் |
| பங்கு | பங்கு | | — |
| நீலன் | நீலன் | | — |
| முடவன் | முடவன் | | முடன் |
| நோய்முகன் | — | | நோயன் |
| இராகு 1—2 | இராகு 3 | | இராகு 5 |
| தமம் | தமம் | | தமம் |
| கறுப்பு | கரும்பாம்பு | | காரரவு |
| கேது 1+3 | கேது 4 | | கேது 5 |
| செம்மை | செம்பாம்பு | | செம்பாம்பு |
| சிகி | சிகி | | சிகி |
| கதிர்ப்பகை | — | | — |

**மிகை:** பிங். 1. சாவகன், சந்தில்.
2. —
3. கொடி

கயா: —

நாம: 1. மகரன், சுன், ஆயுக்கோள், கொடியூர்ந்தோன், சந்திரசாவகன், கோலச்சன், அயத்தோன், எண்மாவான், கும்பன்.
2. ஆறுபரியான், ஞானக்கோள்,
3, பரியாறுடையான், துட்டக்கோள்.

செய்யுள்—71

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 71ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

*காரி—சிறுபாணா 95, முடவன்—குறு 60-2, பங்கு—பரி 11-7, செம்மை—மதுரை 499.*

**பிற தமிழ்ச் சொற்கள்:**

*கதிர்மகன், கரியவன், மேற்கோள், பங்கு, முதுமகன், நீலன், நோய்முகன்; கறுப்பு, கதிர்ப்பகை.*

**க. சொ. ஆக்கத்திற்குரியவை :**

*கதிர்மகன், காரி, மேற்கோள், கதிர்ப்பகை.*

**வடசொற்கள் :**

*சனி, மந்தன், சௌரி, இராகு, தமம், கேது, சிகி,*

## யாடு (மேடம்) விடை (இடபம்)
## இரட்டை (மிதுனம்) நண்டு (கர்க்கடகம்)

கொண்டமைவருடையாடுகொறிமறிமேடமென்ப
குண்டைசேமூரிபுல்லங்கோவிடையிடபமாகும்
தண்டியாழ்விழவிரட்டைசவைமகன்மிதுனந்தானே
நண்டுஞெண்டலவன்சேக்கைநள்ளிகர்க்கடகமாமே

72 கொண்டமை வருடை, யாடு,
கொறி,மறி, **மேடம்** என்ப;
குண்டை,சே, மூரி. புல்லம்,
கோ,விடை, **இடபம்** ஆகும்;
தண்டு,யாழ் விழவி ரட்டை
சவைமகன், **மிதுனம்** தானே;
நண்டு,ஞெண் டலவன், சேக்கை,
நள்ளி,**கர்க் கடகம்** ஆமே.

## செய்யுள்—72

**மேடம்**—ஆட்டு வடிவம் உடையது
மை—கருநிறமுடையது
வருடை—மலையாடு போன்ற உருவம் உடையது
கொறி—விட்டு விட்டுக் கொறித்துத் தின்னும் ஆடு போன்றது
மறி—இளம் ஆடு போன்றது
குண்டை—குட்டையாகத் தடித்த எருது வடிவம் உடையது
சே—காளை வடிவங் கொண்டது
மூரி—புல்லம், கோ, விடை
**இடபம்**—காளை மாட்டைக் குறிக்கும் சொற்களாக அதன் வடிவம் உடையது என்றாகும்
தண்டு—யாழின் தண்டு வடிவினது
யாழ்—யாழ்த்தண்டு வடிவினது
விழவு—விழாவிற்குரியது
இரட்டை—இரட்டை வடிவானது
**மிதுனம்**—இரட்டையானது
சவைமகள்—சவையின் மகள்
நண்டு, ஞெண்டு, அலவன்—நண்டைக்குறிக்கும் சொற்களாக நண்டின் வடிவமுடையது
சேக்கை—சிவந்த கைக்கொடுக்கைஉடைய நண்டு போன்றது
நள்ளி—நடுவில் உடலைச்சுற்றிக் கால்களைக்கொண்ட நண்டு போன்றது.
**கர்க்கடகம்**—நண்டு

## ஒப்பீடு

| **சூடாமணி—72** | **பிங்கலம்—270** | **கயாதரம்—** | **நாமதீபம்—112** |
|---|---|---|---|
| **மேடம் 1—5** | மேடம் 1 | | மேடம் 2 |
| மை | — | | — |
| வருடை | — | | — |
| யாடு | — | | ஆடு |
| கொறி | — | | — |
| மறி | — | | — |
| **இடபம் 1—6** | இடபம் 1 | | இடபம் 2 |
| குண்டை | — | | — |
| சே | — | | — |
| மூரி | — | | — |

செய்யுள்—72

| | | |
|---|---|---|
| புல்லம் | — | — |
| கோ | — | — |
| விடை | — | — |
| **மிதுனம் 1—5** | மிதுனம் 1—6 | மிதுனம் 5 |
| தண்டு | தண்டு | — |
| யாழ் | யாழ் | வீணை |
| விழவு | விழவு | விழா |
| இரட்டை | இரட்டை | இரட்டை |
| சவைமகள் | — | — |
| **கர்க்கடகம் 1—5** | கர்க்கடகம் 1 | கர்க்கடகம் 2 |
| நண்டு | — | நண்டு |
| ஞெண்டு | — | — |
| அலவன் | — | — |
| சேக்கை | — | — |
| நள்ளி | — | — |

**மிகை: பிங்.** 1 — 2 — 3 பாடவை 4 —

**கயா:** 1, 2, 3, 4 —

**நாம:** 1 — 2 காளை 3 சயமகள் 4 —

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 72ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள்:**

மை—பெரும்பாண் 271 வருடை—பட்டி 139 யாடு—மலை 416
மறி—முருகு 218 குண்டை—அகம் 184-8 சே—முருகு 62
மூரி—நற் 15-1 கோ—மதுரை 105 விடை—முருகு 232
மிதுனம்—பரி 11-6 தண்டு—பெரும்பாண் 170 யாழ்—முருகு 141
விழவு—முருகு 220 ஞெண்டு—பெரும்பாண் 167 அலவன்—பொருந 9
சேக்கை—மதுரை 487 நள்ளி—சிறுபாண் 107

செய்யுள் —72

**பிற தமிழ்ச் சொற்கள் :**

மேடம், கொறி, புல்லம், இரட்டை, குண்டை இடபம், நண்டு

**த. சொ. ஆக்கத்திற்குரியவை :**

கொறி, குண்டை, சே, மூரி, புல்லம், நள்ளி

**வட சொற்கள்:**

மிதுனம், கர்க்கடகம்

**மணிப் பவளச் சொற்கள்:**

சவைமகள்

## அரிநாள் (சிங்கம்) கன்னி
## துலாம், தேள்நாள் (விருச்சிகம்)

கொலயரியாளிமாவேகொடும்புலிசிங்கமென்ப
மூலைமட ந்தையர்பேரெல்லாமொழி ந்திடுங்கன்னி தானே
துலைநிறை நிறுப்பான்சீர்கோ றூக்குவாணிகன் துலாப்பேர்
உலைவுறுதெறுக்காறேளேயோதியவிருச்சிகப்பேர்

73 கொலைஅரி, யாளி, மாவே
கொடும்புலி, **சிங்கம்** என்ப;
மூலைமட ந் தையர்பேர் எல்லாம்
மொழிந்திடும் **கன்னி** தானே;
துலை, நிறை, நிறுப்பான், சீர், கோல்,
தூக்கு, வா ணிகன், **து லாப்**பேர்;
உலைவுறு தெறுக்கால், தேளே
ஓதிய **விருச்சி க**ப்பேர்.

**பெ. பொ. விளக்கம்:**

**சிங்கம்**—ஸிம்ஹம் என்னும் வடசொல்லின் தமிழ் உருவம்
அரி, யாளி, மா, கொடும்புலி—சிங்கம் என்னும் பொருள் கொண்டதாக அவ்வுருவுடையதாகும்.

## செய்யுள்—73

**கன்னி**—கன்னிப்பெண் போன்றது

**துலை,** *நிறை, நிறுப்பான், சீர்,* கோல், தூக்கு—துலாக்கோல் என்னும் பொருள் கொண்டவையாக அவ்வுரு உடையதாகும்.

தெறுக்கால், தேள்—தேள் வடிவம் உடையது
**விருச்சிகப்**—தேள் வடிவு கொண்டது.

## ஒப்பீடு

| சூடாமணி 73 | பிங்கலம் 270 | கயாதரம் — | நாமதீபம் 112, 113 |
|---|---|---|---|
| சிங்கம் 1—4 | சிங்கம் 1 | | சிங்கம் 2 |
| அரி | — | | அரி |
| யாளி | — | | |
| மா | — | | |
| கொடும்புலி | — | | |
| கன்னி 1 | கன்னி 1 | | கன்னி 2 |
| மடந்தையர் பேர் எல்லாம் | | | பெண் |
| துலாம் 1—7 | துலாம் 1 | | துலாம் 2 |
| துலை | | | |
| நிறை | | | |
| நிறுப்பான் | | | |
| சீர் | | | |
| கோல் | | | |
| தூக்கு | | | |
| வாணிகன் | | | செட்டி |
| விருச்சிகம் 1—2 | — 1 | | விருச்சிகம் 2 |
| தெறுக்கால் | — | | — |
| தேள் | தேள் | | தேள் |

செய்யுள்—73

மிகை: பிங்: 1 — 2 — 3 — 4 —

கயா: 1, 2, 3, 4

நாம: 1, 2, 3, 4

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 73ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

*அரி—முருகு 76 துலாம்—புறம் 39-3 யாளி—பெரும்பாண் 258*
*மா—முருகு 7 கன்னி—ஐங் 68-1 நிறை—பெரும்பாண் 197*
*சீர்—முருகு 40 கோல்—பொருந 166 தூக்கு—கலி 1-10*
*தேள்—கலி 110-3*

**பிற தமிழ்ச் சொற்கள் :**

*கொடும்புலி, துலை, நிறுப்பான், வணிகன், தெறுக்கால்*

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை :**

*நிறுப்பான், தூக்கு, தெறுக்கால்*

**வடசொற்கள்:**

*சிங்கம், விருச்சிகம்*

### வில்நாள் (தனு), மீன்நாள் (மகரம்)
### குடநாள் (கும்பம்) மீனம்

கொடுமரத்துரோணஞ்சாபங்கொடுசிலைதனுநாற்பேரே
வடிவின்மான்கலைசுறாவேமகரராசிக்குப்பேர்
குடமொடுகரீரஞ்சாடிகுடங்கரேகும்பமென்ப
நெடியமீன்மயிலைமற்சஞ்சலசரநேருமீனம்

## செய்யுள்—74

74 கொடுமரம், துரோணம், சாபம்,
கொடுசிலை, **தனு** நாற் பேரே:
வடிவின்மான், கலை,சு றாவே
**மகர**ரா சிக்கு முப்பேர்;
குடமொடு கரீரம், சாடி,
குடங்கரே **கும்பம்** என்ப;
நெடியமீன், மயிலை, மற்சம்,
சலசரம் நேரும் **மீனம்**.

கொடுமரம்—வளைந்த மரவில் வடிவம் உடையது
துரோணம்—வளைந்த வடிவம் உடையது

சாபம், கொடுசிலை, **தனு**—வில் என்னும் பொருள் கொண்டவையாக அவ்வுரு உடையதாகும்.

**கும்பம்**—குடவடிவம் உடையது
குடம், கரீரம், சாடி, குடங்கர்—குடம் என்னும் பொருளில் அவ்வடிவினது

**மீனம்**—மீன் வடிவுடையது
மீன், மயிலை—மீன் என்னும் பொருளில் அவ்வடிவினது
மற்சம்—செருக்குடையது
சலசரம்—நீரில் திரியும் மீன் வடிவம் உடையது

## ஒப்பீடு

| சூடாமணி—74 | பிங்கலம்— 270 | கயாதரம்— | நாமதீபம்—113 |
|---|---|---|---|
| **தனு 1—4** | தனு | | தனு |
| கொடுமரம் | — | | — |
| துரோணம் | — | | — |
| சாபம் | — | | — |
| கொடுசிலை | — | | — |
| **மகரம் 1+3** | மகரம் 1 | | மகரம் 3 |
| மான் | — | | மான் |
| கலை | — | | — |
| சுறா | — | | சுறா |

### செய்யுள்—74

| கும்பம் 1—4 | கும்பம் 1 | | கும்பம் 2 |
|---|---|---|---|
| குடம் | — | | — |
| கரீரம் | — | | — |
| சாடி | — | | — |
| குடங்கர் | — | | — |

| மீனம் 1 —4 | மீனம் 1 | — | மீனம் 2 |
|---|---|---|---|
| மீன் | — | — | மீன் |
| மயிலை | — | — | — |
| மற்சம் | — | — | — |
| சலசரம் | — | — | — |

மிகை பிங்; (1, 2, 3, 4)
கயா: (1, 2, 3, 4)
நாம: 1 வில் 2 — 3 மட்பாண்டம் 4 —

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 74ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

கொடுமரம்—கலி 12-2 சாபம்—பெரும்பாண்—121 மகரம்—பரி 11-9 மான்—முருகு 128 கலை—பெரும்பாண் 496 சுறா—நற் 45-6 குடம்—பெரும்பாண் 382 சாடி—பெரும்பாண் 280 மீன்—முருகு 88 மயிலை—புறம் 342-2

**பிற தமிழ்ச் சொற்கள்:**

கொடுசிலை, குடங்கர் கும்பம்

**க. சொ. ஆக்கத்திற்குரியவை :**

கொடுமரம், குடங்கர், மயிலை

**வடசொற்கள் :**

தனு, துரோணம், சாபம், மகரம், கரீரம், மற்சம்

**மணிப்பவளச் சொற்கள் :**

சலசரம்

செய்யுள்—74

## விண்மீன்களின் பெயர்கள்
## குதிரைநாள் (அச்சுவினி) அடுப்புநாள் (பரணி)

பரிமருத்துவநாள்வாசிபரவுமைப்பசியாழேறோ
டிரலையேமுதனாள்சென்னியென்பதச்சுவினியின்பேர்
பரணியேகிழவன்சோறுபகலவன்றராசுதாழி
தருமனாளடுப்புபூதந்தாசிமுக்கூட்டுத்தானே

75 பரி, மருத் துவநாள், வாசி,
பரவும்ஐப் பசி, யாழ், ஏறோ
டிரலையே முதனாள், சென்னி
என்பதச் சுவினி யின்பேர்;
பரணியே கிழவன், சோறு,
பகலவன், தராசு, தாழி,
தருமனாள், அடுப்பு, பூதம்,
தாசி, முக் கூட்டுத் தானே.

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

அசுவினி—குதிரை முகம் போன்றது
பரி—குதிரை முக வடிவம் உடையது
மருத்துவ நாள்— மருத்துவத்திற்குரிய விண்மீன்
வாசி—குதிரை முக வடிவு உடையது
ஐப்பசி—ஐப்பசிக்குரிய நாள்
யாழ்—யாழ் போன்றது
ஏறு—ஆண் குதிரை முக வடிவினது
முதல்நாள்—27 நாள்களுள் முதலில் எண்ணப்படுவது
இரலை—ஊது கொம்பு போன்றது
சென்னி—தலை என்னும் முதன்மை குறிக்கும் முதள் நாள்
பரணி—(அடுப்பு) அடுப்பு போன்றமைந்தது
கிழவன்—தலைவனாக்கும் நாள்
சோறு—தன்னில் பிறந்தார்க்கு ஊட்டமாகும் நாள்
பகலவன்—பகலவன் விருப்பு நாள்
தராசு—நடுநிலை நாள்

## செய்யுள்—76

தாழி—தாழிபோல் வடிவத்தது
தருமன் நாள்—தருமனுக்குரிய நாள்
அடுப்பு—அடுப்பு போன்ற அமைப்புடையது
பூதம்—பருத்தது
தாசி—நிலவின் பணிவிடைக்குரியது
முக்கூட்டு—மூன்று கூடியது
பரவும்—பசுமை காரணமாக மக்களால் போற்றப்படும்

## ஒப்பீடு

| சூடாமணி—75 | பிங்கலம்— 239, 240 | கயாதரம்— | நாமதீபம்—104 |
|---|---|---|---|
| அச்சுவினி *1—9* | அச்சுவினி *1—7* | | அச்சுவதி 9 |
| பரி | புரவி | | பரி |
| மருத்துவநாள் | மருத்துவநாள் | | மருத்வாநாள் |
| வாசி | — | | — |
| ஐப்பசி | ஐப்பசி | | ஐப்பசி |
| யாழ் | யாழ் | | யாழ் |
| ஏறு | ஏறு | | ஏறு |
| இரலை | இரலை | | இரலை |
| முதனாள் | தலைநாள் | | முன்னாள் |
| சென்னி | — | | சென்னி |
| **பரணி** *1—10* | பரணி *1—10* | | பரணி 7 |
| கிழவன் | கிழவோன் | | கிழம் |
| சோறு | சோறு | | சோறு |
| பகலவன் | — | | — |
| தராசு | — | | தராசு |
| தாழி | தாழி | | — |
| தருமனாள் | தருமனாள் | | — |
| அடுப்பு | அடுப்பு | | அடுப்பு |
| பூதம் | பூதம் | | பூதம் |
| தாசி | தாசி | | தரசி |
| முக்கூட்டு | முக்கூட்டு | | — |

## செய்யுள்—75

மிகை: பிங். 1 —
2 காடு, போதம்

கயா: 1— 2—

நாம: 1 —
2 —

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 75ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள்:**

*பரி—பெரும்பாண் 7 யாழ்—முருகு 141 ஏறு—முருகு 151 இரலை—முல் 99 சென்னி—முருகு 85 கிழவன்—மதுரை 365-8 சோறு—பொருந 2 தாழி— நற் 49-9 அடுப்பு—பெரும்பாண் 99 பூதம்—பெரும்பாண் 235*

**பிற தமிழ்ச் சொற்கள் :**

*மருத்துவ நாள், ஐப்பசி, முதனாள், பகலவன், முக்கூட்டு தாசி, பூதம்*

**க. சொ. ஆக்கத்திற்குரியவை :**

*மருத்துவநாள், இரலை, தாழி, முக்கூட்டு*

**வட சொற்கள்:**

*அச்சுவினி, வாசி, தராசு*

**மணிப் பவளச் சொற்கள்:**

*தருமனாள்*

## கார்த்திகை
## உருள்நாள் (உரோகிணி)

**எரிபிறந்திடு நாளாரலிறாள றுவாயளக்கர்**
**கருதுநாவி தனேயங்கிகார்த்திகையளகுமேற்கும்**
**பிரமனாள்சகடுபண்டிபேசியசதியேவையம்**
**உருள்விமான ந்தேருற்றாலுரோணியேயுரோகிணிப்பேர்**

## செய்யுள்—76

76 எரிபிறந் திடுநாள், ஆரல்,
இறால்,அறு வாய்,அ ளக்கர்,
கருதுநா விதனே அங்கி
**கார்த்திகை,** அளகும் ஏற்கும்!
பிரமன்நாள், சகடு, பண்டி,
பேசிய சதியே வையம்,
உருள்,விமா னம்,தேர், ஊற்றால்,
உரோணியே **உரோகி** ணிப்பேர்.

**பெ. பொ. விளக்கம்:**

**கார்த்திகை**—கார்கால ஒளி
எரிநாள்—நெருப்பிற்குரிய நாள்
ஆரல்—(ஆர்—நெருப்பு) தீக்கு உரியது
இறால்—இறால் மீன் வடிவினது
அறுவாய்—ஆறு மீன் கொண்டது
நாவிதன்—அம்பட்டன் கத்தி போன்றது
அங்கி—தீக்கு உரியது
அளகு—கோழிக்கொண்டை போன்றது

**உரோகிணி**—உருளை போன்றது
பிரமனாள்—நான்முகனுக்குரிய நாள்
சகடு—தேர்ச்சில்லு போன்றது
பண்டி, வையம்— (உருளை கொண்ட வண்டி) ஊர்தியின் உருளை போன்றது
சதி—நிலவைப் பிரியா மனைவி போன்றது
விமானம்—மேல் வளைந்த வடிவினது
தேர்—தேர் உருளை போன்றது
ஊற்றால்—கவித்து மீன்பிடிக்கும் ஊற்றால் போன்றது
உரோணி—உரோகிணி

## ஒப்பீடு

| **சூடாமணி 76** | **பிங்கலம் 241, 242** | **கயாதரம் —** | **நாமதீபம் 104, 105** |
|---|---|---|---|
| **கார்த்திகை** *1—8* | கார்த்திகை *1—10* | | கார்த்திகை *5* |
| எரிவாய் | எரிநாள் | | தீ |
| ஆரல் | ஆரல் | | |

## செய்யுள் —76

| | | |
|---|---|---|
| இறால் | இறால் | இறால் |
| அறுவாய் | அறுமீன் | அறுவாய் |
| அளக்கர் | அளக்கர் | — |
| நாவிதன் | நாவிதன் | - |
| அங்கி | அங்கிநாள் | — |
| அளகு | அளகு | — |
| உரோகிணீ 1—10 | உரோகிணி 1—6 | உரோகிணி 8 |
| பிரமனாள் | அயனாள் | அயனாள் |
| சகடு | சகடு | — |
| பண்டி | — | — |
| சதி | சதி | சதி |
| வையம் | வையம் | — |
| உருள் | — | உருள் |
| விமானம் | விமானம் | விமானம் |
| தேர் | — | தேர் |
| ஊற்றால் | ஊற்றால் | ஊற்றால் |
| உரோணி | — | உரோணி |

**மிகை பிங்;** 1 வாணன், தழல்
2 —

**கயா:** 1 — 2 —

**நாம:** 1 அழகு
2 —

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 76ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

ஆரல்—குறு 25-4 இறால்—முருகு 300 அளக்கர்—புறம் 229-10
அங்கி—பட்டி 54 அளகு—பெரும்பாண் 256 உரோகிணி—நெடு 163
வையம்—சிறுபாண் 38 உருள்—முருகு 11 தேர்—பொருந 163
ஊற்றால்—பரி-தி-11-1

செய்யுள்—76

**பிற தமிழ்ச் சொற்கள்:**

*கார்த்திகை, எரிவாய், அறுவாய், சகடு, பண்டி*

**க. சொ. ஆக்கத்திற்குரியவை :**

*எரிவாய், ஆரல், அளக்கர், அளகு, ஊற்றால்*

**வடசொற்கள் :**

*நாவிதன், அங்கி, உரோகிணி, சதி, விமானம், உரோணி*

**மணிப்பவளச் சொற்கள் :**

*பிரமனாள்*

**மும்மீன்நாள் (மிருகசீரிடம்)**
**மூதிரைநாள் (திருவாதிரை)**

*திங்கணாள்மதிபேராளன்சேர்ந்தமான்றலையேமாழ்கு*
*பொங்குமார்கழியேமும்மீன்புகழ்நரிப்புறமேபாலை*
*இங்கிவையொன்பதென்பமிருகச்சீரிடத்தினாமம்*
*செங்கைமூதிரையாழீசன்தினமிவையாதிரைப்பேர்*

77 திங்கள்நாள், மதி,பே ராளன்
சேர்ந்தமான் தலையே மாழ்கு,
பொங்குமார் கழியே மும்மீன்,
புகழ்நரிப் புறமே பாலை
இங்கிவை ஒன்ப தென்ப
**மிருகசீ ரிடத்தின்** நாமம்;
செங்கை,மூ திரை,யாழ், ஈசன்
தினம்இவை **ஆதி ரைப்**பேர்

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

**மிருகசீரிடம்**—*மான் தலை போன்றது*
*திங்கணாள்—திங்களுக்குரிய நாள்*
*மதி—நிலவுக்குரிய நாள்*

### செய்யுள்—77

பேராளன்—பெருமையை ஆளக்கூடியவன்
மான்றலை—மான்தலை போன்ற வடிவினது
மாழ்கு — பாலை நிலத்தொடர்புடைமையால் மாழ்கவைக்கும் வெப்பத் தொடர்புடையது
மார்கழி—மார்கழிக்குரியது
மும்மீன்—மூன்று விண்மீன்கள் கூடியது
நரிப்புறம்—நரியின் முதுகு போன்றது
பாலை—பாலை நிலத் தொடர்புடையது

ஆதிரை—(ஆ+திரி+ஐ) சுட்டத்தக்க மூன்று மீன்களைக்கொண்டது
செங்கை—சிவந்த கை போன்றது
மூதிரை - (மூ+திரி+ஐ) முதிய மீன் மூன்றை உடையது
ஈசன்தினம் - சிவனுக்குரிய நாள்
மூன்று+மீன்—மும்மீன்

### ஒப்பீடு

| சூடாமணி—77 | பிங்கலம்—243, 244 | கயாதரம்— | நாமதீபம் – 105, 06 |
|---|---|---|---|
| மிருகசீரிடம் 1–9 | மிருகசீரிடம் 1–9 | | மிருகசீரிடம்–9 |
| திங்கணாள் | மதிநாள் | | – |
| மதி | – | | மதி |
| பேராளன் | – | | – |
| மான்றலை | மான்றலை | | மான்றலை |
| மாழ்கு | மாழ்கு | | மாழ்கு |
| மார்கழி | மார்கழி | | மார்கழி |
| மும்மீன் | மும்மீன் | | மும்மீன் |
| நரிப்புறம் | நரிப்புறம் | | நரிப்புறம் |
| பாலை | பாலை | | பாலை |
| ஆதிரை 1–4 | ஆதிரை 1–3 | | ஆதிரை 5 |
| செங்கை | செங்கை | | செங்கை |
| மூதிரை | மூதிரை | | மூதிரை |
| யாழ் | – | | யாழ் |
| ஈசன்தினம் | அரனாள் | | ஈசன்றினம் |

செய்யுள்—77

மிகை: பிங்: *1* ஐந்தானம்
*2* —

கயா: *1* — *2* —

நாம: *1* மகயிரம்
*2* —

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 77ல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள் :**

மதி—முருகு 87 பாலை—பொருந 22 ஆதிரை—பரி 11-77
யாழ்—முருகு 141

**பிற தமிழ்ச் சொற்கள் :**

திங்கணாள், பேராளன், மான்றலை, மாழ்கு, மார்கழி
மும்மீன், நரிப்புறம், செங்கை, மூதிரை

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை :**

பேராளன், மாழ்கு, மும்மீன், நரிப்புறம், மூதிரை

**வடசொற்கள்:**

மிருகசீரிடம், ஈசன்தினம்

## ஆவணநாள் (புனர்பூசம்)
## வண்டுநாள் (பூசம்) பாம்புநாள் (ஆயிலியம்)

கருதியவதிதிநாளேகழைபுனர்தங்கரும்பு
பொருவிலாப்புனிதம்பிண்டியாவணம்புனர்பூசப்பேர்
குருவினாள்கொடிறுவண்டுகுறித்தகாற்குளமேபூசம்
அரவினாள்கவ்வைபாம்பேயாயிலாயிலியம்நாற்பேர்

செய்யுள் — 78

78 கருதிய அதிதி நாளே
கழை,புனர்தம், கரும்பு,
பொருவிலாப் புனிதம், பிண்டி,
ஆவணம், **புனர்பூ** சப்பேர்:
குருவின்நாள், கொடிறு, வண்டு,
குறித்த காற்குளமே **பூசம்**
அரவின்நாள், கவ்வை, பாம்பே
ஆயில்**ஆயிலியம்** நாற்பேர்.

**பெ. பொ. விளக்கம் :**

**புனர்பூசம்**-மறு பூசம்
அதிதி நாள்-அதிதிக்குரிய நாள்
கழை, கரும்பு-கரும்புத்தோகை போன்றது
புனர்தம்-புனர்பூசம் என்பதன் மரூஉ
புனிதம்-தூய்மைக்குரிய நாள்
பிண்டி-அசோகந்தழை போன்றது
ஆவணம்-வீதி போன்ற அமைப்பில் நீண்டது

**பூசம்**—மேற்பூச்சு போன்று மங்கிய ஒளியுடைய விண்மீன் கூட்டம்
குருவின் நாள்—வியாழனுக்குரிய நாள்
கொடிறு—வளைந்து முடியும் வடிவுடையது
வண்டு—வண்டுருவத்தது
காற்குளம்—பூசம், பூராடம், உத்தராடம் எனும் மூன்று கூட்டமான விண்மீன்களின் தொகுதி குளம் போன்றதில் பூசம் கால் பகுதியளவே கொண்டதால் கால்குளம்

**ஆயிலியம்**—குயவன் திகிரி போன்றுள்ளது
அரவின் நாள்—பலதலைப் பாம்பிற்குரிய நாள்
கவ்வை—பாம்பு போன்று துன்பம் தருவது
ஆயில்—ஆயிலியம் என்பதன் மரூஉ

## ஒப்பீடு

| **சூடாமணி— 78** | **பிங்கலம்—245-247** | **கயாதரம் —** | **நாமதீபம்—106-107** |
|---|---|---|---|
| **புனர்பூசம்** *1—7* | புனர்பூசம் *1—6* | | புனர்பூசம் +8 |
| **அதிதிநாள்** | அதிதிநாள் | | அதிதிநாள் |

## செய்யுள்—78

| | | |
|---|---|---|
| கழை | கழை | கழை |
| புனர்தம் | புனர்தம் | புனர்தம் |
| கரும்பு | கரும்பு | கரும்பு |
| புனிதம் | — | புனிதம் |
| பிண்டி | — | பிண்டி |
| ஆவணம் | ஆவணம் | ஆவணம் |
| **பூசம் 1—4** | பூசம் 1—5 | **பூசம் 5** |
| குருவின் நாள் | குருநாள் | குருநாள் |
| கொடிறு | கொடிறு | கொடிறு |
| வண்டு | வண்டு | வண்டு |
| காற்குளம் | காற்குளம் | காற்குளம் |
| **ஆயிலியம் 1—4** | ஆயிலியம் 1—3 | **ஆயிலியம் 4** |
| அரவின் நாள் | அரவின் நாள் | — |
| கௌவை | கௌவை | கவ்வை |
| பாம்பு | — | பாம்பு |
| ஆயில் | ஆயில் | ஆயில் |

**மிகை பிங்;** 1 புனர்தம்
2 புனர்த்த

**கயா:** 1, 2 3

**நாம:** 1 — 2 — 3 —

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 78ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

கழை—சிறுபாண் 265 கரும்பு—பொருந 193 பிண்டி—முருகு 31
ஆவணம்—நெடு 44 வண்டு—முருகு 76 பாம்பு—முருகு 49
கௌவை—மலை 105 கொடிறு—பெரும்பாண் 307

**பிற தமிழ்ச் சொற்கள்:**

காற்குளம் அரவின் நாள் குருவின் நாள் ஆயில்

செய்யுள் —76

**க, சொ. ஆக்கத்திற்குரியவை :**

ஆவணம் கொடிறு காற்குளம் புனிதம் ஆயிலியம் ஆயில்

**வடசொற்கள் :**

புனர்பூசம் புனர்தம் புனிதம் பூசம் ஆயிலியம் ஆயில்

**மணிப்பவளச் சொற்கள் :**

அதிதிநாள்

**கொடுநுகநாள் (மகம்)**
**எலிநாள் (பூரம்)**

கொடுநுகம்வேள்விவாய்க்கால்குறித்தவேட்டுவனேமாசி
வடுவறமுதலிற்றோன்றிவருஞ்சனிமகநாளென்ப
இடையெழுஞ்சனியேதுர்க்கையெலிபகவதிநாளோடு
கடியநாவிதனேயெய்யுங்கணையிருமுப்பேர்பூரம்

79 கொடுநுகம், வேள்வி, வாய்க்கால்,
குறித்தவேட் டுவனே மாசி,
வடுவற முதலில் தோன்றி,
வருஞ்சனி, மக நாள் என்ப
இடையெழும் சனியே துர்க்கை
எலி,பக வதிநா ளோடு
கடியநா விதனே எய்யும்
கணை,இரு முப்பேர் **பூரம்**

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

**மகம்**—வேள்விக்குரிய நாள்
கொடுநுகம்—கொடிய நுகத்தடி போன்றது

---

**பாட வேறுபாடு:**

* சிலப்பதிகாரம் 3—123 வரை.

## செய்யுள்—79

வேள்வி—வேள்விக்குரியது
வேட்டுவன்—வேள்விக்குரிய நாள்
வேட்டல்—வேள்வி செய்தல்
மாசி—மாசு நீக்கி நலந்தரு நாள்
முதலில் வரும் சனி—முதல் கோணத்திசையில் வரும் காரி
பூரம்—தொன்மைப் பைங்குனி
இடையெழும் சனி—இடைக்கோணத்தில் வரும் காரி
துர்க்கை—துர்க்கைக்கு உரிய நாள்
எலி—எலி உருவ நாள்
பகவதி—துர்க்கை
நாவிதன்—மயிர்நீத்தற்குரிய நாள்
கணை—அம்பு போன்றது

## ஒப்பீடு

| சூடாமணி 79 | பிங்கலம் 248, 249 | கயாதரம் — | நாமதீபம் 107 |
|---|---|---|---|
| மகம் *1—6* | மகம் *1—9* | | மகம்—*6* |
| கொடுநுகம் | கொடுநுகம் | | கொடுநுகம் |
| வேள்வி | வேள்வி | | வேள்வி |
| வாய்க்கால் | வாய்க்கால் | | வாய்க்கால் |
| வேட்டுவன் | வேட்டுவன் | | வேட்டுவன் |
| மாசி | மாசி | | — |
| முதலில்வருஞ்சனி | ஆதியெழுஞ்சனி | | முற்சனி |
| பூரம் *1—6* | பூரம் *1—6* | | பூரம் *5* |
| இடையெழுஞ்சனி | இடையெழுஞ்சனி | | இடைச்சனி |
| துர்க்கை | துர்க்கை | | துர்க்கை |
| எலி | எலி | | எலி |
| பகவதிநாள் | பகவதிநாள் | | — |
| நாவிதன் | நாவிதன் | | — |
| கணை | கணை | | கணை |

**மிகை:** பிங்: *1* பிதிர்நாள், மகம், ஏழுவாய்எழுஞ்சனி
*2* —
கயா: *1* — *2* —
நாம: *1* — *2* —

செய்யுள் — 79

**சொற்பாகுபாடு**

**சூடாமணிச் செய்யுள் 79ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

கொடுநுகம்—பெரும்பாண் 62 வேள்வி—முருகு 96
வேட்டுவன்—நற் 59-3 மாசி—பதி 59-2 எலி—நற் 83-6
கணை—முருகு 14

**பிற தமிழ்ச் சொற்கள் :**

கொடுநுகம் வாய்க்கால் நாவிதன் மாசி

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை :**

கொடுநுகம்

**வடசொற்கள்:**

மகம், துர்க்கை, பூரம்

**மணிப் பவளச் சொற்கள்:**

முதலில் வரும் சனி இடையெழுஞ்சனி பகவுதிநாள்

**செங்கதிர்நாள் (உத்தரம்)**
**ஐவிரல்நாள் (அத்தம்)**

பங்குனிகடையில்வந்துபற்றியசனியினோடு
செங்கதிர்பிறந்தநாளுஞ்சிறந்தவுத்தரமென்றாகும்
தங்குகாமரமேயங்கிசார்ந்தநாள்கௌத்துவத்தோ
டங்கைமீன்களிறுநவ்வியைவிரலத்தமேழ்பேர்

80 பங்குனி, கடையின் வந்து
பற்றிய சனியி னோடு
செங்கதிர் பிறந்த நாளும்—
சிறந்தஉத் தரம்என் றாகும்

## செய்யுள்—80

தங்குகா மரமே அங்கி
சார்ந்தநாள் கௌத்து வத்தோ
டங்கைமீன், களிறு, நவ்வி
ஐவிரல், **அத்தப்** ஏழ்பேர்.

**பெ. பொ. விளக்கம்:**

**உத்தரம்**—வளைந்த விட்டம் போன்றது
பங்குனி—பைங்குனித் திங்களுக்குரியது
கடையெழுஞ் சனி—கடைக்கோணத்தில் வரும் காரி
செங்கதிர் பிறந்த நாள்—கதிரவன் தோன்றிய நாள்

**அத்தம்**—கை போன்றது
காமரம்—அடுப்பின் நெருப்பிற்குரியது
அங்கி நாள்—நெருப்பிற்குரிய நாள்
கௌத்துவம்—கை போன்றது
கைம் மீன்—கை போன்ற விண்மீன்
களிறு—யானை கை போன்ற வடிவுடைய களிற்று மீன் போன்றது
நவ்வி—பெண் மான் போன்றது
ஐவிரல்—கையில் ஐந்து விரல் அமைப்புடையது

## ஒப்பீடு

| சூடாமணி—80 | பிங்கலம்— 250, 251 | கயாதரம்— | நாமதீபம்—107, 108 |
|---|---|---|---|
| **உத்தரம் *1—3*** | உத்தரம் *1—6* | | உத்தரம் *4* |
| பங்குனி | பங்குனி | | பங்குனி |
| கடையெழுஞ்சனி | கடையெழுஞ்சனி | | பிற்சனி |
| செங்கதிர்நாள் | கதிர்நாள் | | சுடர்நாள் |
| **அத்தம் *1—7*** | அத்தம் *1—6* | | அத்தம் *8* |
| காமரம் | சாமரம் | | காமரம் |
| அங்கிநாள் | கனலிநாள் | | |

செய்யுள்—80

| | | |
|---|---|---|
| கௌத்துவம் | — | கவுத்துவம் |
| கைம்மீன் | கைம்மீன் | — |
| களிறு | களிறு | களிறு |
| நவ்வி | — | நவ்வி |
| ஐவிரல் | — | ஐவிரல் |

**மிகை: பிங்.** 1 பாற்குனி, மானேறு, மாரிநாள்
2 கைனி, ஐம்மீன்

**கயா:** 1, 2 —

**நாம:** 1 —
2 மீன், கை

**சொற்பாகுபாடு**

**சூடாமணிச் செய்யுள் 80ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள்:**

பங்குனி — நற் 234-8 அத்தம்—பெரும்பாண் 39 காமரம்—சிறுபாண் 77 களிறு—முருகு 304 நவ்வி — நற் 124-6

**பிற தமிழ்ச் சொற்கள்:**

செங்கதிர் நாள் கைம்மீன் ஐவிரல்

**க. சொ. ஆக்கத்திற்குரியவை:**

காமரம், கைம்மீன்

**வட சொற்கள்:**

கௌத்துவம்

**மணிப்பவளச் சொற்கள்:**

கடையெழுஞ்சனி: அங்கிநாள்

செய்யுள்—81

## நடுநாள் (சித்திரை)
## விளக்குநாள் (சோதி)

அளக்குநெய்பயறுமீனேயறுவையேயாடை தூசு
துளக்கிலாநடுநாடச்சன்றுவட்டாநாள்சித்திரைப்பேர்
விளக்கொடுமரக்கால்வீழ்க்கைவெறுநுகங்காற்றினாளே
கிளத்தியகாற்றுத்தீபங்கேடிலாச்சோதியேழ்பேர்

81 அளக்குநெய், பயிறு மீனே
அறுவையே ஆடை, தூசு
துளக்கிலா நடுநாள், தச்சன்
துவட்டாநாள் **சித்திரை** ரைப்பேர்
விளக்கொடு மரக்கால், வீழ்க்கை
வெறுநுகம், காற்றின் நாளே
கிளத்திய காற்றுத் தீபம்,
கேடிலாச் சோதி ஏழ்பேர்,

**பெ. பொ. விளக்கம்:**

சித்திரை—சித்திரம் போன்று சண்கவர் வடிவம் கொண்டது
அறுவை—அறுத்தெடுக்கப்பெற்ற அழகிய ஆடை போன்றது
தூசு—ஆடை
நடுநாள்—விண்மீன்கள் இருபத்தேழில் 14-ஆவதாக நடுவில் அமைந்தது
தச்சன்—சிற்பி நாள்
துவட்டா நாள்—சிற்பி நாள்
சோதி—ஒளி மிக்கது

விளக்கு—விளக்கமானது
மரக்கால்—மரக்கால் வடிவம் உடையது
வீழ்க்கை — மிகு ஒளியால் (வீழ்தல் — விரும்புதல்) விருப்பத்தில் ஆழ்த்துவது

---

**பாடவேறுபாடு:**

* **துவட்டா சிற்பி சூடா, 129**

## செய்யுள் — 81

வெறுநுகம்—வெற்று நுகத்தடி போன்றது
காற்றின் நாள், காற்றுத் தீபம்—காற்றுக்குரிய விண்மீன்

## ஒப்பீடு

| சூடாமணி— 81 | பிங்கலம்—252-253 | கயாதரம் — | நாமதீபம்—108 |
|---|---|---|---|
| சித்திரை 1—9 | சித்திரை 1—8 | | சித்திரை 7 |
| நெய் | நெய் | | நெய் |
| பயறு | பயறு | | பயறு |
| மீன் | மீன் | | — |
| அறுவை | அறுவை | | — |
| ஆடை | — | | — |
| தூசு | — | | உடை |
| நடுநாள் | நடுநாள் | | — |
| தச்சன் | தச்சன் | | நடுநாள் |
| துவட்டாநாள் | துவட்டாநாள் | | தச்சன் |
| சோதி 1—7 | சோதி 1—6 | | சோதி 6 |
| விளக்கு | விளக்கு | | விளக்கு |
| மரக்கால் | மரக்கால் | | மரக்கால் |
| வீழ்க்கை | வீழ்க்கை | | வீழ்க்கை |
| வெறுநுகம் | வெறுநுகம் | | நுகம் |
| காற்றின் நாள் | காற்றின் நாள் | | — |
| காற்று | — | | காற்று |
| தீபம் | — | | — |

**மிகை பிங்:** 1 நேர்வான்
2 துளக்கம்

**கயா:** 1, 2

**நாம:** 1 அளக்கு
2

செய்யுள்—81

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 81ல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள்:**

*நெய்—முருகு 228* *பயறு—குறு 10-2* *மீன்—முருகு 88*
*அறுவை—பொருந 83* *ஆடை—நற் 33-6* *தூசு—பட் 148*
*நடுநாள்—முல் 50* *தச்சன்—குறு 61-1* *விளக்கு—பொருந 5*
*வீழ்க்கை—கலி 65-29* *காற்று—பெரும்பாண் 240*

**பிற தமிழ்ச் சொற்கள் :**

*சித்திரை* *துவட்டாநாள்* *மரக்கால்* *வெறுநுகம்*
*காற்றின் நாள்*

**க. சொ. ஆக்கத்திற்குரியவை :**

*அறுவை,* *நடுநாள்,* *வீழ்க்கை* *வெறுநுகம்*

**வட சொற்கள்:**

*சோதி,* *தீபம்*

### காற்றுநாள் (விசாகம்)
### பனைநாள் (அனுடம்)

*முற்றில்வைகாசிகாற்றுமுந்துநாண்முறத்தினோடு*
*வெற்றிசேர்சுளகுசேட்டைவிசாகநாளிருமுப்பேரே*
*பற்றாளிபெண்ணைதேளேபோந்தைமித்திரநாளாறும்*
*சொற்றனரனுடமென்றுசோர்விலாநூலோர்தாமே*

**82** முற்றில்,வை காசி, காற்று
முந்துநாள், முறத்தி னோடு
வெற்றிசேர் சுளகு, சேட்டை,
**விசாகநாள் இருமுப் பேரே;**

### செய்யுள்—82

பற்றாளி பெண்ணை, தேளே
போந்தை,மித் திரநாள் ஆறும்
சொற்றனர் **அநுடம்** என்று
சோர்விலா நூலோர் தாமே,

**பெ. பொ. விளக்கம்:**

**விசாகம்**—ஒளியுடையது
முற்றில்—சுளகு போன்றது
வைகாசி—வைகாசித் திங்களுக்குரியது
காற்று நாள்—காற்றிற்கு உரிய நாள்
முறம், சுளகு முறம் போன்றது
சேட்டை—இடையூறு தருவது

அனுடம் (அனுராதா)—வெற்றி நலத்தைத் தருவது
புல், தாளி, பெண்ணை, போந்தை—(நான்கும் பனையைக் குறிக்கும்) முடப்பனை போன்றது
தேள்—தேள் கொடுக்கு போன்றது
மித்திர நாள்—நட்பு நாள்

### ஒப்பீடு

| சூடாமணி 82 | பிங்கலம் 254, 255 | கயாதரம் — | நாமதீபம் 109 |
|---|---|---|---|
| விசாகம் 1—6 | விசாகம் 1—5 | | விசாகம் 2 |
| முற்றில் | முற்றில் | | — |
| வைகாசி | வைகாசி | | — |
| காற்றுநாள் | அநிலநாள் | | — |
| முறம் | முறம் | | — |
| சுளகு | சுளகு | | சுளகு |
| சேட்டை | — | | — |
| அநுடம் 1—6 | அநுடம் 1—7 | | அநுடம் 4 |
| புல் | புல் | | — |
| தாளி | தாளி | | — |
| பெண்ணை | பெண்ணை | | — |

## செய்யுள்—82

| | | |
|---|---|---|
| தேள் | தேள் | தேள் |
| போந்தை | போந்தை | — |
| மித்திரநாள் | மித்திரநாள் | மித்திரநாள் |

**மிகை பிங்;** 1 —
2 பனை

**கயா:** 1, 2 —

**நாம:** 1 —
2 பனை

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 82ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

*முறம்—நற் 376-1* *சுளகு—கலி 41-2* *புல்—சிறுபாண் 132* *தாளி—குறு 104-3* *பெண்ணை—பொருந 207* *தேள்—கலி 110-3* *போந்தை—பொருந 143*

**பிற தமிழ்ச் சொற்கள்:**

*காற்றுநாள், முற்றில். வைகாசி*

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை:**

*முற்றில், தாளி*

**வட சொற்கள்:**

*விசாகம், கேட்டை அனுடம்*

**மணிப்பவளச் சொற்கள்:**

*மித்திரநாள்*

### செய்யுள் — 81

## எரி நாள் (கேட்டை)
## கொக்கு நாள் (மூலம்)

சேட்டையிந்திரனாள்வேதிசெந்தழலெரியிவ்வைந்தும்
கேட்டைவல்லாரையென்றுங்கிளத்துபவளத்துநூலார்
தேட்கடைகுருகுகொக்குச்சிலையுடனன்றிலானி
ஈட்டியவசுரநாளிவ்வேழ்பெயர்மூலமென்ப

83 சேட்டை, இந் திரன் நாள், வேதி,
செந்தழல், எரிஇவ் வைந்தும்
**கேட்டை**, வல் லாரை என்று
கிளத்துப வளத்து நூலார்;
தேட்கடை, குருகு, கொக்கு
சிலையுடன் அன்றில், ஆனி
ஈட்டிய அசுர நாள்இவ்
ஏழ்பெயர் மூலம் என்ப

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

**கேட்டை**—கேடு தருவது
சேட்டை—மூதேவி போன்றது
இந்திரன் நாள்—இந்திரனுக்கு உரிய நாள்
வேதி, தழல், எரி—நெருப்பு என்னும் பொருளில் வெப்பமுடையது
வல்லாரை—வலுவான துன்பத்திற்குரியது

தேட்கடை—தேள்கொடுக்கின் அடிப்புறம் போன்றது
குருகு, கொக்கு, அன்றில்—இப்பறவைகள் போன்றது
சிலை—வில்போன்று வளைவானது
ஆனி—ஆனித்திங்களுக்கு உரியது
அசுர நாள்—அசுரர் போன்று கொடுமை தருவது

### ஒப்பீடு

| சூடாமணி—83 | பிங்கலம்—256-257 | கயாதரம் | நாமதீபம்—109 |
| --- | --- | --- | --- |
| கேட்டை 1—6 | கேட்டை 1—7 | | கேட்டை |
| சேட்டை | சேட்டை | | கேட்டை |

## செய்யுள்—83

| | | |
|---|---|---|
| இந்திரன்நாள் | இந்திரன்நாள் | இந்திரன்நாள் |
| வேதி | வேதி | வேதி |
| தழல் | அழல் | — |
| எரி | எரி | — |
| வல்லாரை | வல்லாரை | வல்லாரை |
| மூலம் 1—7 | மூலம் 1—7 | மூலம் 7 |
| தேட்கடை | தேட்கடை | தேட்கடை |
| குருகு | குருகு | — |
| கொக்கு | கொக்கு | கொக்கு |
| சிலை | வில் | வில் |
| அன்றில் | அன்றில் | அன்றில் |
| ஆனி | ஆனி | ஆனி |
| அசுரநாள் | அசுரநாள் | அசுரநாள் |

**மிகை பிங்:** 1 துளங்கொளி
2 —

**கயா:** 1, 2 —

**நாம:** 1 1
2

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 83ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

தழல்—குறி 43 எரி—பொருந 159 குருகு—பெரும்பாண் 376 கொக்கு—பெரும்பாண் 309 அன்றில்—குறி 219 சிலை—பெரும்பாண் 269

**பிற தமிழ்ச் சொற்கள் :**

வல்லாரை மூலம் தேட்கடை

செய்யுள்—83

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை:**

*தழல் எரி வல்லாரை தேட்கடை குருகு*

**வடசொற்கள்:**

*சேட்டை வேதி ஆனி*

**மணிப் பவளச் சொற்கள்:**

*இந்திரன் நாள் அசுர நாள்*

## நீர்நாள் (பூராடம்) கடைக்குளநாள் (உத்தராடம்) உலக்கைநாள் (ஓணம்)

*உடைகுளமுற்குளநீருதித்தநாள்பூராடப்பேர்*
*கடையினிற்குளமேயானிகருதுவிச்சுவநாளாடி*
*மிடையிலுத்தராடமென்பமேவியவோணமாயோன்*
*அடையுநாளுலக்கைமுக்கோல்சிரவணஞ்சோணையாமே*

84 உடைகுளம், முற்குளம், நீர்
உதித்தநாள் **பூராடப்**பேர்
கடையினில் குளமே ஆனி
கருதுவிச் சுவநாள், ஆடி
மிடையில்**உத்தராடம்** என்ப
மேவிய **ஓணம்** மாயோன்
அடையுநாள், உலக்கை, முக்கோல்
சிரவணம், சோணை ஆமே.

**பெ. போ. விளக்கம்:**

**பூராடம்** (பூர்வ-ஆடம்)—தொன்மை ஆடித் திங்கள்
**உடைகுளம்**—சூடா. செய்யுள் 78—(பூசம்) 'காற்குளம்' விளக்கத்தில் குறித்த கால்குளம் விட்டுப்பார்த்தால் மூளியாகத் தோற்றமளிப்பதால் உடைந்த-மூளியான குளம் போன்றது

## செய்யுள்—84

முற்குளம்—மேற்கண்ட விளக்கத்தின்படி உத்தராடத்தொகுதி பிற்பகுதியாகத் தோற்றுவதால் இது முற்குளம் (உத்தராடம் கடைக்குளம் எனப் பெறும்)
நீர்நாள்—நீருக்கு உரிய நாள்

**உத்தராடம்**—(உத்தர-ஆடம்) உத்தர வகையில் ஆடிக்குரியது
கடைக்குளம்—முன்விளக்கப்பெற்றபடி
பின்னாக—கடையாகத் தோற்றமளிப்பது
ஆனி—ஆனித்திங்களுக்கும் உரியது
விச்சுவநாள் (விச்சுவம்-சிற்பம்)—சிற்பத்திற்குரிய விண்மீன்

**ஓணம்**—*ஒளி சிறந்த வயிரம்
மாயோன்நாள்—திருமால் பிறந்த நாள்
உலக்கை, முக்கோல்—துறவிகள் கைக்கொள்ளும் முக்கிளைக் கோல் போன்றது
சிரவணம் (காது) சோணை (காதின் அடி)—காதில் அடிப்புறம் போன்று வளைவானது

## ஒப்பீடு

| சூடாமணி—84 | பிங்கலம்—258, 260 | கயாதரம்— | நாமதீபம்—110 |
|---|---|---|---|
| பூராடம் 1—3 | பூராடம்—6 | | பூராடம் 3 |
| உடைகுளம் | உடைகுளம் | | — |
| முற்குளம் | முற்குளம் | | முற்குளம் |
| நீர்நாள் | நீர்நாள் | | நீர்நாள் |
| உத்தராடம் 1—4 | உத்திராடம் 1—4 | | உத்திராடம் 4 |
| கடைக்குளம் | கடைக்குளம் | | பிற்குளம் |
| ஆனி | ஆனி | | — |
| விச்சுவநாள் | விச்சுவநாள் | | விச்சுவநாள் |
| ஆடி | ஆடி | | ஆடி |
| திருவோணம் 1-5 | திருவோணம் 1-5 | | ஓணம் 5 |
| மாயோன்நாள் | மாயோன்நாள் | | மால்நாள் |
| உலக்கை | உலக்கை | | உலக்கை |

செய்யுள் — 84

| | | |
|---|---|---|
| முக்கோல் | முக்கோல் | முக்கோல் |
| சிரவணம் | சிரவணம் | சிரவணம் |
| சோணை | சோணை | |

**மிகை:** பிங். 1 மாரி நீர்
2 —
3 —

கயா: 1 2 3

நாம: 1 2 3

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 84ல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள்:**

ஆடி—பெரும்பாண் 93 உலக்கை—சிறுபாண் 193 முக்கோல்—முல் 38 சோணை—குறு 75-3

**பிற தமிழ்ச்சொற்கள் :**

உடைகுளம் முற்குளம் நீர்நாள் கடைக்குளம் திருவோணம் மாயோன்நாள் உத்தராடம் சோணை

**க, சொ. ஆக்கத்திற்குரியவை :**

உடைக்குளம் முற்முளம் கடைக்குளம் நீர்நாள் முக்கோல் சோணை

**வடசொற்கள் :**

பூராடம் சிரவணம்

**மணிப்பவளச் சொற்கள் :**

விச்சுவநாள்

---

**பாடவேறுபாடு:**

சேந்தன் திவாகரம் இணத்தை 'நலத்தகு வயிரம்' என்கின்றது

செய்யுள்—85

## காக்கை நாள் (அவிட்டம்)
## சுக்கு நாள் (சதயம்)

மருவியகாகப்புள்ளுவசுக்கள்நாள்பறவைபுள்ளு
விரவும்ஆவணியவிட்டம்விளம்பியநாமமைந்தாம்
பெருகியசுக்குச்சுண்டன்பேசியபோரேகுன்று
வருணனாள்சதயமைந்தும்வகுத்தபேர்தொகுத்ததாமே

85 மருவிய காகப் புள்ளு
வசுக்கள்நாள், பறவை, புள்ளு
விரவுஆ வணி,அ விட்டம்
விளம்பிய நாமம் ஐந்தாம்
பெருகிய சுக்குச் சுண்டன்
பேசிய போரே, குன்று
வருணன்நாள், சதயம் ஐந்தும்
வகுத்தபேர் தொகுத்த தாமே

**பெ. பொ. விளக்கம் :**

அவிட்டம்—உடல் அற்றது
காகப்புள்—காக்கை போன்றது
புள், பறவை—காக்கை போன்ற பறவைகள் போன்றது
வசுக்கள் நாள்—எட்டு வசுக்களின் நாள்
ஆவணி—ஆவணித்திங்களுக்குரிய நாள்
சதயம்—நூறுவிண்மீன்களின் தொகுதி
செக்கு—செக்கு போன்றது
சுண்டன்—100 கொண்டதால் முரடாகப் பருத்துத் தோற்றமளிப்பது
போர்—போர் செய்தற்குரிய நாள்
குன்று—குன்று உருவ நாள்
வருணன் நாள்—வருணனுக்குரிய நாள்

**ஒப்பீடு**

| சூடாமணி 85 | பிங்கலம் 261, 262 | கயாதரம் — | நாமதீபம் 110, 111 |
|---|---|---|---|
| அவிட்டம் 1=5 | அவிட்டம் 1—4 | | அவிட்டம் 5 |
| காகப்புள் | காகப்புள் | | தாகம் |

## செய்யுள்—85

| | | |
|---|---|---|
| வசுக்கள் நாள் | வசுக்கள் நாள் | வசு நாள் |
| பறவை | பறவை | — |
| புள் | — | புள் |
| ஆவணி | ஆவணி | ஆவணி |
| சதயம் *1—5* | சதயம் *1—5* | சதையம் *6* |
| செக்கு | செக்கு | செக்கு |
| சுண்டன் | சுண்டன் | சுண்டன் |
| போர் | போர் | போர் |
| குன்று | குன்று | குன்று |
| வருணன் நாள் | வருணன் நாள் | வருணம் |

**மிகை பிங்;** *1* — *2* —

**கயா:** (*1, 2*)

**நாம:** *1* — *2* —

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 85ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள்:**

பறவை—பொருந *64* புள்—முருகு *151* போர்—முருகு *59* குன்று—முருகு *77*

**பிற தமிழ்ச்சொற்கள் :**

ஆவணி, வருணன் நாள், செக்கு, சுண்டன்

**வட சொற்கள்:**

அவிட்டம், சதயம்

**மணிப்பவளச் சொற்கள்:**

வசுக்கள் நாள்

செய்யுள்—86

## நாழிநாள் (பூரட்டாதி) முரசுநாள் (உத்தரட்டாதி) தோணிநாள் (இரேவதி)

பொருவின்முற்கொழுங்கானாழிபுரட்டையேபூரட்டாதி
முரசுபிற்கொழுங்கான்மன்னனுத்தரட்டாதிமுப்பேர்
இரவிநாள்கலமேதோணியேற்றமாந்தொழுவேநாவாய்
பெருகியகடைநாள்சூலம்பெருநாளெட்டிரேவதிப்பேர்

86 பொருவில்முற் கொழுங்கால் நாழி
புரட்டையே **பூரட் டாதி**
முரசு, பிற் கொழுங்கால் மன்னன்
**உத்தரட் டாதி** முப்பேர்
இரவிநாள், கலமே தோணி
ஏற்றமாம் தொழுவே நாவாய்
பெருகிய கடைநாள், சூலம்
பெருநாள் எட்டிரே **வதிப்பேர்**

**பெ. பொ. விளக்கம்:**

**பூரட்டாதி**—பழமையில் ஆறாவது மாதமாகிய புரட்டாதி (சி)
முற்கொழுங்கால்—பூரட்டாதி விண்மீன் இரண்டும் உத்தரட்டாதி விண்மீன் இரண்டும் நீள் செவ்வகமாகத் தோற்றுவதைக் கட்டில் தோற்றமாகக்கொண்டு இது முன்னே தோன்றும் கொழுத்த கட்டில் கால் என்பர்
நாழி—(நாழ்—குற்றம்) குற்றமுடையது
புரட்டை—பூரட்டாதியின் மரூஉ

**உத்தரட்டாதி**—புரட்டாதிக்குரிய பருத்த விண்மீன்களின் தொகுதி
முரசு, மன்னன்—ஆண்பால் விண்மீன்களில் மன்னன் போன்றது
பிற்கொழுங்கால்—பூரட்டாதிக்குக் கூறிய விளக்கப்படி பின்னே தோற்றமளிக்கும் கொழுத்த கட்டிற்கால்

**இரேவதி**—இரவி வதியும் நாள்
இரவி நாள்—திங்களுக்குரிய நாள்
கலம், தோணி, நாவாய்—சிறு கப்பல், படகு போன்றது

## செய்யுள்—86

தொழு—தொழுவிற்குச் சிறந்த நாள்
கடைநாள்—27 விண்மீன்களில் இறுதியில் எண்ணப்பெறுவது
சூலம்—சூலத்திற்குரியது
பெருநாள்—மற்றவற்றினும் சற்றுப் பெரிய விண்மீன்

## ஒப்பீடு

| சூடாமணி— 86 | பிங்கலம்—263-265 | கயாதரம் — | நாமதீபம்—111 |
|---|---|---|---|
| பூரட்டாதி 1—3 | பூரட்டாதி | | பூரட்டாதி 4 |
| முற்கொழுங்கால் | முற்கொழுங்கால் | | முற்கொழுங்கோல் |
| நாழி | நாழி | | நாழி |
| புரட்டை | புரட்டாதி | | புரட்டை |
| உத்தரட்டாதி 1-3 | உத்தரட்டாதி 1-5 | | உத்தரட்டாதி 4 |
| முரசு | முரசு | | முரசு |
| பிற்கொழுங்கால் | பிற்கொழுங்கால் | | பிற்கொழுங்கோல் |
| மன்னன் | மன்னன் | | மன்னன் |
| இரேவதி 1—8 | இராவதி 1—7 | | ரேவதி 4 |
| இரவிநாள் | புருடநாள் | | — |
| கலம் | — | | — |
| தோணி | தோணி | | தோணி |
| தொழு | தொழு | | தொழு |
| நாவாய் | நாவாய் | | — |
| கடைநாள் | கடைமீன் | | கடைநாள் |
| சூலம் | சூலம் | | — |
| பெருநாள் | — | | — |

மிகை: பிங். 1 —
2 நீபம், அறிவன்நாள்
3 பஃறி

கயா: 1, 2, 3

நாம: 1 — 2 — 3 —

செய்யுள்—86

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 86ல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள்:**

நாழி—முல் 9 முரசு—பொருந 54 மன்னன்—நற் 43-11
கலம்—பொருந 86 தோணி—அகம் 50-1 தொழு—பெரும்பாண் 185
நாவாய் —பெரும்பாண் 321 சூலம்—பதி க. வா.-11

**பிற தமிழ்ச் சொற்கள்:**

முற்கொழுங்கால், பிற்கொழுங்கால், இரவிநாள், கடைநாள் பெருநாள்

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை:**

நாழி, தொழு, நாவாய், கடைநாள், கொழுங்கால்

**வடசொற்கள்:**

பூரட்டாதி, புரட்டை, உத்தரட்டாதி, இரேவதி

**மணிப் பவளச் சொற்கள்:**

— — —

### அருந்ததி, விண்மீன்
### நாழிகை, காலநுட்பம்

வடமீனேசாலியென்பமற்றருந்ததியின்பேரே
உடுவேதாரகையேபம்மேயுற்கையேசுக்கைவிண்மீன்
கடிகைநாழிகையாங்கன்னலிரித்தையுமதுவேகாட்டுந்
துடிகலைவிகலைமுப்பேர்சொல்லியகாலநுட்பம்

87 வடமீனே சாலி என்ப,
மற்றருந் ததியின் பேரே
உடுவேதா ரகையே பம்மே
உற்கையே சுக்கை, விண்மீன்

## செய்யுள்—87

கடிகை, நாழிகையாம் கன்னல்
இரித்தையும் அதுவே காட்டும்
துடி, கலை, விகலை முப்பேர்
சொல்லிய கால நுட்பம்

### பெ. பொ. விளக்கம்

**அருந்ததி**—கணவன் விருப்பத்திற்கு இயைய ஒழுகுபவள்
வடமீன்—வடக்கில் உள்ள விண்மீன்
சாலி—கற்புப் புகழ் உடையவள்

**உடு**—விண்ணில் இயங்கும் நிலை ஒளி
தாரகை—வானில் விளங்குவது
பம்—ஒளியுடையது
உற்கை—தழல் போன்று காட்சி தருவது
சுக்கை—பூப்போல்வது
நாழிகை—கழிந்து போவதை உடையது
கடிகை—விதிக்கப்பெற்றதைச் செய்தற்குரியதாக விளங்குவது
கன்னல்—நேரம் கன்னலாகிக் கழிவதைக் கொண்டது

இரித்தை—நேரம் இரிவதை-சிதறுவதை உடையது
துடி—துடித்துக் கடக்கும் நேரம்
கலை—மதியின் கலை ஒன்றின் அறுபதில் ஒரு பங்கு
விகலை—மதிக்கலையின் கூறுபாடு

### ஒப்பீடு

| | | | |
|---|---|---|---|
| **சூடாமணி—87** | **பிங்கலம்— 26[illegible], 268 269, 280, 282** | **கயாதரம் 39** | **நாமதீபம்—112, 114 554—556** |
| **அருந்ததி** *1—2*<br>**வடமீன்**<br>**சாலி** | *அருந்ததி 1—2*<br>வடமீன்<br>சாலி | | *அருந்ததி 4*<br>வடமீன்<br>சாலி |
| **விண்மீன்** *1—5*<br>**உடு**<br>**தாரகை** | வான்மீன் *9*<br>உடு<br>தாரகை | நாள்மீன் *8*<br>உடு<br>தாரகை | விண்மீன் *8*<br>உடு<br>தாரகை |

செய்யுள்—87

| | | | |
|---|---|---|---|
| பம் | பம் | பம் | பம்பு |
| உற்கை | — | — | உற்கை |
| சுக்கை | சுக்கை | — | சுக்கை |
| நாழிகை 1—3 | நாழிகை 1—6 | நாழிகை 6 | *நாழிகை 5 |
| கடிகை | கடிகை | கடிகை | கடிகை |
| கன்னல் | கன்னல் | கன்னல் | கன்னல் |
| இரித்தை | இருத்தை | இருத்தை | இருத்தை |
| காலநுட்பம் 1-3 | காலநுட்பம் 1—9 | காலநுட்பம் 7 | காலநுட்பம் 3 |
| துடி | துடி | துடி | — |
| கலை | கலை | கலை | கலை |
| விகலை | — | — | விகலை |

**மிகை பிங்:** 1 —
2 புச்சம் (வான்மீனின் சிறப்புப் பெயராக உள்ளது) சிதம் கணம், ஒளி
3 பதம், நாழி
4 கணம், மாத்திரை, நொடி, பிதிர், நுட்பம் திட்பம், நிமிடம்

**கயா:** 1 —
2 பொலம், தாராகணம், சோதி, ஒளி
3 விகலை, பதம்
4 நுட்பம், நிமிடம், கணம், மாத்திரை

**நாம:** 1 வசிட்டன்றாரம்
2 தாரை, நாள்
3 நாடி
4 —

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 87ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

அருந்ததி—ஐங் 442-4 வடமீன்—கலி 2-21 சாலி—பொருந 246
உடு—குறி 170 தாரகை—பரி 19-19 நாழிகை—மதுரை 671

**செய்யுள் — 88**

கடிகை—மதுரை 532 கன்னல்—முல் 58 துடி—பொருந 125
கலை—பெரும்பாண் 496

**பிற தமிழ்ச் சொற்கள் :**

சாலி, விண்மீன், பம், உற்கை, சுக்கை, இரித்தை காலநுட்பம்.

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை :**

உடு, உற்கை, சுக்கை, கடிகை, கன்னல், இரித்தை

**வடசொற்கள் :**

பூரட்டாதி, தாரகை, விகலை, இரேவதி

## காலம், நெடும்போழ்து

வேலையேயமயஞ்செவ்வியேழ்வையேபொழுதுபாணி
காலைகொன்பதமேபோழ்துகாலப்பேரீரைந்தாகும்
சாலநீட்டித்தலோடுசார்ந்தபாணித்தறானும்
நீலஉண்கண்ணாய்மற்றுநெடித்தலுநெடும்போழ்தென்ப

88 வேலையே அமயம், செவ்வி
ஏழ்வையே பொழுது, பாணி
காலைகொன், பதமே, போழ்து
காலப்பேர் ஈரைந் தாகும்
சாலநீட் டித்த லோடு
சார்ந்தபா ணித்தல் தானும்
நீலஉண் கண்ணாய்! மற்று
நெடித்தலுந் நெடும்போழ் தென்பர்

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

**காலம்**—ஊன்றும் நேரம்
**வேலை**—வெல்லும் நேரம்
**செவ்வி**—பக்குவமானபொழுது

## செய்யுள்—88

ஏழ்வை—ஏற்பதற்கான பொழுது
பொழுது—போது (மலர்ப்பருவத்தால் பெயர்பெற்ற நேரம்)
செயல் மலர்வதற்கு முன் நேரம்
பாணி—தொடங்குதற்கு உரிய நேரம்
போழ்து—ஒரு நாள் பகுக்கப்பட்டது

**நீட்டித்தல்**—நேரத்தை விரித்தல்
பாணித்தல் —நேரம் கடத்தல்
நெடித்தல்—நீட்டித்தல்

## ஒப்பீடு

| சூடாமணி 88 | பிங்கலம் 279 | கயாதரம் —40 | நாமதீபம் 552, 555 |
|---|---|---|---|
| காலம் 1—10 | காலம் 1—10 | காலம் 8 | காலம் 1—8 |
| வேலை | வேலை | வேலை | வேலை |
| அமையம் | அமையம் | அமையம் | அமையம் |
| செவ்வி | செவ்வி | — | செவ்வி |
| ஏழ்வை | ஏழ்வை | ஏழ்வை | ஏழ்வை |
| பொழுது | பொழுது | பொழுது | பொழுது |
| பாணி | — | — | பாணி |
| காலை | காலை | காலை | காலை |
| கொன் | கொன் | — | கொன் |
| பதம் | பதம் | பதம் | பதம் |
| போழ்து | போழ்து | போது | போழ்து |
| நெடும் போழ்து 1—3 | — | — | நெடும் போது 4 |
| நீட்டித்தல் | — | — | நீட்டித்தல் |
| பாணித்தல் | — | — | பாணித்தல் |
| நெடித்தல் | — | — | நெட்டித்தல் |

**மிகை பிங்:** 1 கால்
2 —

**கயா:** 1 1 — 1 —

**நாம:** 1 கால், ஞான்று, தருணம், சமயம் வேளை
நேரம் அன்னம்

செய்யுள்—88

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 88ல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள் :**

காலம்—மதுரை 477 வேலை—பரி 19-18 அமையம்—பெரும்பாண் 296 செவ்வி—சிறுபாண் 171 பொழுது—முருகு 182 பாணி—பொருந 48 சாலை—பொருந 89 கொன்—மதுரை 207 பதம்—பொருந 111 போழ்து—நற் 37-11

**பிற தமிழ்ச் சொற்கள் :**

ஏழ்வை, நெடும்போழ்து, நீட்டிநந்தல், பாணித்தல் நெடித்தல்

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை :**

அமையம், செவ்வி, ஏழ்வை, கொன், போழ்து நெடித்தல், பாணித்தல்

### காலவிரைவு, நண்பகல், ஓரை (இராசி)

ஒல்லையேயிறையேயுற்றசிறுவரையுடனிலேசம்
வல்லைமாத்திரைகள்காலவிரைவின்பேர்வகுக்கிலாறாம்
நல்லநண்பகலேயுச்சிநல்ப்பகடுமத்தியானம்
இல்லுடன்பவனமோரையிராசியின்பெயராமென்ப

89 ஒல்லையே இறையே உற்ற
சிறுவரை உடன் இலேசம்
வல்லை மாத் திரைகள், கால
விரைவின்பேர் வகுக்கில் ஆறாம்
நல்லநண் பகலே உச்சி
நடுப்பகல் மத்தி யானம்
இல்லுடன் பவனம், ஓரை
இராசியின் பெயராம் என்ப

## செய்யுள்—89

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

ஒல்லை—ஒல் என்னும் ஓதை எழும் நேர விரைவு
இறை—தொடக்கமும் முடிவும் வேறுபாடு சொல்லமுடியாது இறும் விரைந்த நேரம்
சிறுவரை—சிறிதளவு நேரமாக எல்லைகொண்டு விரைந்து முடிவது.
இலேசம்—பாரமின்மை என்னும் அளவு நேர விரைவு
வல்லை—விரைந்தது
மாத்திரை—அளவு
நண்பகல்—பகலின் நடுப்பகுதி நேரம்
உச்சி—கதிரவன் தலை உச்சியில் உள்ள நேரம்
மத்தியானம்—மையப் பகல் நேரம்

இராசி—கதிரவன் இயங்கும் பாதை வகுக்கப்பெற்ற 12இல் ஒன்று
இல்—கோள்களுக்கு இல்லமாக இருப்பது
பவனம்—கோள்கள் தங்கும் இடம்
ஓரை—செல்லுதல் உடையது

## ஒப்பீடு

| சூடாமணி-89 | பிங்கலம்-281, 218, 219, 272 | கயாதரம்-539, 40 | நாமதீபம்-554,114 |
|---|---|---|---|
| காலவிரைவு 1—6 | காலவிரைவு 1—2 | (கால)விரைவு 3 | — |
| ஒல்லை | — | ஒல்லை | — |
| இறை | — | — | இறை |
| சிறுவரை | — | சிறுபொழுது | — |
| இலேசம் | — | — | — |
| வல்லை | — | — | — |
| மாத்திரை | மாத்திரை | — | மாத்திரை |
| நண்பகல் 1—3 | நண்பகல் 5 | நண்பகல் 2 | *நண்பகல் 3 |
| உச்சி | உச்சி | உச்சி | உச்சி |

**பாட வேறுபாடு:**

* காலவர்க்கம் பெயரில் உள்ளன

செய்யுள்— 89

| | | | |
|---|---|---|---|
| நடுப்பகல் | நடுப்பகல் | — | — |
| மத்தியானம் | மத்தியானம் | — | மத்தியானம் |
| இராசி 1—3 | இராசி 1—3 | — | இராசி 4 |
| இல் | இல் | — | இல் |
| பவனம் | பவனம் | — | பவனம் |
| ஓரை | ஓரை | — | ஓரை |

மிகை பிங்: 1 கணம்
2 உருமம் 3 —

கயா: 1, 2, 3

நாம: 1 நெர்டி இமைப்பு 2 — 3 —

சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 89ல் உள்ள சொற்களுள்

சங்க இலக்கியச் சொற்கள்:

ஒல்லை—பரி 6-72 வல்லை—நற் 162-12 மாத்திரை—பொருந 141 நண்பகல்—கலி 121-18 உச்சி—முருகு 185 ஓரை—நற் 68-1

பிற தமிழ்ச்சொற்கள் :

காலவிரைவு, இறை, சிறுவரை, நடுப்பகல், இலேசம்

க. சொ. ஆக்கத்திற்குரியவை :

ஒல்லை, சிறுவரை, வல்லை, மாத்திரை, ஓரை

வட சொற்கள்:

மத்தியானம், இராசி, பவனம்

## செய்யுள்—90

### இரவு, பகல்

அல்விபாவரியேகங்குல்அல்கல்யாமினியேநத்தம்
எல்லியோடியாமமாலைஇரசனிநிசியிராவாம்
எல்லோடுதிவாப்பகற்பேரேல்வையேதிவசம்வைகல்
அல்கலேதினமேயெல்லைபானியம்பகலேநாளாம்

90 அல், விபா வரியே கங்குல்
அல்கல், யா மினியே நத்தம்
எல்லியோ டியாமம், மாலை
இரசனி, நிசி, இ ராவாம்
எல்லோடு திவாப்ப கற்பேர்
ஏல்வையே திவசம், வைகல்
அல்கலே தினமே எல்லை
ஆனியம், பகலே நாளாம்

**பெ. பொ. விளக்கம்:**

இரா—இன்பம் கொடுப்பது
அல்—ஒளியற்றது
விபாவரி- திங்கள் உடு முதலியன ஒளிர்தலை உடையது
கங்குல்—இரவின் எல்லைப் பரப்பு
அல்கல்—மக்கள் இயங்காமல் தங்குதற்கு உரியது
யாமினி—யாமங்களை உடையது
நத்தம்—ஒடுங்குதற்குக் கரணியமானது
எல்லி—ஒளியுடைய கதிரவனைத் தன்னுள் கொள்வது
யாமம்—இரவுப்பொழுதுகளை உடையது
மாலை—பொழுது மயங்கிய இருளைத்தருவது
இரநிசி—பாலுணர்வுச் சுவையை உண்டாக்குவது
நிசி மக்களது இயக்கத்தைக் குறைப்பது

பகல்—நாள் பகுக்கப்பட்டது
எல்—ஒளி உடையது
திவா—பகல் ஒளி உடையது
தினசம்—ஒளியுடையது
வைகல்—மக்கள் தங்கி வாழ்தற்குக் கரணியமானது

செய்யுள்—90

அல்கல்—இருள் அற்றது
தினம்—நாளை உண்டாக்குவது
எல்லை—ஒளியையுடையது
ஆனியம்—திரும்ப வருதலை உடையது

## ஒப்பீடு

| சூடாமணி—90 | பிங்கலம்—229, 221, 283 | கயாதரம்—41, 42 | நாமதீபம் 553 |
|---|---|---|---|
| இரா 1—11 | இரவு 1—11 | இரவு 13 | இரவு 10 |
| அல் | அல் | அல் | அல் |
| விபாவரி | — | விபாவரி | விபாவரி |
| கங்குல் | கங்குல் | கங்குல் | கங்குல் |
| அல்கல் | — | அல்கல் | — |
| யாமினி | யாமினி | யாமினி | யாமினி |
| நத்தம் | நத்தம் | நத்தம் | நத்தம் |
| எல்லி | எல்லி | எல்லி | எல்லி |
| யாமம் | யாமம் | யாமம் | — |
| மாலை | — | மாலை | — |
| இரசனி | — | இரசனி | — |
| நிசி | நிசி | நிசி | நிசி |
| பகல் 1—2 | பகல் 1—4 | பகல் 4 | பகல் 2 |
| எல் | எல் | — | — |
| திவா | திவா | திவா | திவா |
| நாள் 1—8 | நாள் 1—9 | நாள் 3 | நாள் 9 |
| ஏல்வை | ஏல்வை | — | — |
| திவசம் | திவசம் | — | திவசம் |
| வைகல் | வைகல் | வைகல் | வைகல் |
| அல்கல் | அல்கல் | — | அல்கல் |
| தினம் | தினம் | — | தினம் |

செய்யுள்—90

| | | | |
|---|---|---|---|
| எல்லை | எல் | — | எல்லை |
| ஆனியம் | ஆனியம் | ஆனியம் | ஆனியம் |
| பகல் | பகல் | — | பகல் |

மிகை: பிங். 1 வஞ்சகம், சாமம், நிசா, திமிரம்
2 திவசம், தினம்
3 திவா, அல்கல், பகல் ஆனியம் தினம்

கயா: 1 நிசா
2 திவசம், தினம்
3 —

நாம: 1 ரா. ராத்திரி
2 —
3 ஞான்று

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 90ல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள்:**

இரா—குறு 145-5 அல்—மலை 158 கங்குல்—மதுரை 631 அல்கல்—மலை 443 எல்லி—நற் 41-6 யாமம்—மதுரை 620 மாலை—முருகு 79 பகல்—முருகு 166 எல்—முருகு 74 நாள்—முருகு 175 எல்லை—பொருந 118 வைகல்—பொருந 158

**பிற தமிழ்ச் சொற்கள்:**

நத்தம்

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை:**

அல். அல்கல், நத்தம், எல்லி, எல், வைகல்

**வடசொற்கள்:**

விபாவரி, இரசனி, நிசி, திவா, திவசம், தினம் ஆனியம்

செய்யுள் — 91

## இருள், முன்னைநாள், பின்னைநாள்

சருவரியந்தகாரங்கச்சளந்தமந்துவாந்தம்
இருளென்பதிமிரமோடுதுணங்கறலென்றுமேற்கும்
நெருநலுந்நென்னலுந்தானிகழ்த்துபமுன்னைநாளைப்
பெருகியபின்றைபிற்றைபின்னையென்றியம்பலாமே

91 சருவரி, அந்த காரம்
கச்சளம், தமம், து வாந்தம்,
இருள்என்ப திமிர மோடு
துணங்கறல் என்றும் ஏற்கும்
நெருநலும் நென்ன லுந்தான்
நிகழ்த்துப முன்னை நாளைப்
பெருகிய பின்றை பிற்றை
பின்னைஎன் றியம்பல் ஆமே

பெ. பொ. விளக்கம்

இருள் — கருமையைக் கொண்டது
சருவரி — தொழிலைக் கெடுப்பது
அந்தகாரம் — மக்களது கண்களைப் பார்வையில்லாமல் குருடுபோல் ஆக்குவது
கச்சளம் — மாசுபட்டுக் கலங்கிய நீர் போன்றிருப்பது
தமம் — மக்களை ஒடுங்கியிருக்கச் செய்வது
துவாந்தம் — பாதைகளை மறைப்பது
திமிரம் — நிலத்திற்கு ஈரம் உண்டாக்குவது
துணங்கு அறல் — மயங்கவைக்கும் கருமணல் போன்றது
நெருநல் — கழிந்த நாள்களில் நெருங்கிய நாள்
நென்னல் — நெருநலின் மரூஉ
பின்றை, பிற்றை — பின்னர் வரும் நாள்

## ஒப்பீடு

| சூடாமணி — 91 | பிங்கலம் — 91, 284, 285 | கயாதரம் 42, 40 | நாமதீபம்-115, 554 |
|---|---|---|---|
| இருள் 1—7 சருவரி | இருள் 1—10 சருவரி | இருள் 8 | இருள் 10 |

## செய்யுள்—91

| | | | |
|---|---|---|---|
| அநதகாரம் | அந்தகாரம் | அந்தகாரம் | அந்தகாரம் |
| கச்சளம் | கச்சளம் | — | கச்சளம் |
| தமம் | தமம் | தமம் | தமம் |
| துவாந்தம் | துவாந்தம் | துவாந்தம் | திவாந்தம் |
| திமிரம் | திமிரம் | திமிரம் | திமிரம் |
| துணங்கறல் | துணங்கறல் | — | துணங்கறல் |
| முன்னை நாள் 1-2 | முன்னை நாள் 1—2 | முன்னை நாள் 3 | [1] நேற்று 5 |
| நெருநல் | நெருநல் | நெருநல் | நெருநல் |
| நென்னல் | நென்னல் | நென்னல் | நென்னல் |
| பின்னை நாள் 1-2 | பின்னை நாள் 1—2 | பின்னை நாள் 3 | [2] நாளை 3 |
| பின்றை | பின்றை | பின்றை | பிந்தை |
| பிற்றை | பிற்றை | பிற்றை | பிற்றை |

மிகை பிங்: 1 அல், கருள், நத்தம்
2 — 3 —

கயா: 1 நத்தம், நிசி, நீலம்
2 — 3 —

நாம: 1 அரி, மங்குல், கரு
2 முந்தை, முன்
3 —

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 91ல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள் :**

இருள்—முருகு 10 நெருநல்—நற் 25-5 நென்னல்—ஐங் 113-1
பின்றை—நற் 229-10 பிற்றை—நற் 374-5

---

**பாட வேறுபாடு:**

1, 2 காலவர்க்கத்தில் உள்ளவை

## செய்யுள்—91

**பிற தமிழ்ச்சொற்கள் :**

கச்சளம், துணங்கறல், முன்னைநாள், பின்னைநாள்

**க. சொ. ஆக்கத்திற்குரியவை :**

துணங்கறல், நெருநல், நென்னல் பின்றை, பிற்றை

**வட சொற்கள்:**

சருவரி, அந்தகாரம், தமம், துவாந்தம், திமிரம்

## வைகறை, நிலவு, மாலை
## வெய்யில், யாமம், பருவம்

புலரிவைகறையினாமம்விடியலும்போற்றுமப்பேர்
நிலவுசந்திரிகைவெய்யினிகழ்ந்தவாதபமேயென்றூழ்
இலகியமாலைசாயஞ்சந்தியாம்யாமஞ்சாமம்
அலைவருபருவந்தானேயானியமிருதுவாகும்

92 புலரி,வை கறையின் நாமம்
விடியலும் போற்றும் அப்பேர்
நிலவு,சந் திரிகை, வெய்யில்
நிகழ்ந்தஆ தபமே என்றூழ்
இலகிய மாலை, சாயம்
சந்தியாம் யாமம் சாமம்
அலைவரு பருவந் தானே
ஆனியம் இருது ஆகும்

**பெ. பொ. விளக்கம்:**

**புலரி**—இருள் புலர்வதை உடையது
**வைகறை**—நாளின் அறுதியாக உள்ளது
**விடியல்**—இருள் விடுவிப்பது
**நிலவு**—குளிர்ந்த ஒளி நிலவுவது
**சந்திரிகை**—(சந்திரனில்) திங்களில் இருத்தல் உடையது
**வெய்யில்**—வெப்பம் உடையது

செய்யுள்—92

ஆதவம்—அனல் உண்டாக்குவது
மாலை—மயக்கந் தருவது
என்றூழ்—கதிரவனால் உடுக்கப்படுவது
சாயம்—பகலை உடையது
சந்தி—பகலும் இரவும் சந்திக்கும் நேரம்
சாமம், யாமம்—மக்கள் இயங்காது தடுப்பது
இருது—செல்லுதலை உடையது

## ஒப்பீடு

| சூடாமணி 92 | பிங்கலம் 215, 226, 213 214, 217, 220, 300 | கயாதரம்-470, 40 41, 46 | நாமதீபம் 553, 115 554, 557 |
|---|---|---|---|
| வைகறை 1—2 | வைகறை | வைகறை 2 | *வைகறை |
| புலரி | புலரி | புலரி | புலரி |
| விடியல் | விடியல் | = | விடியல் |
| நிலவு 1—1 | நிலவு 1—1 | — | நிலவு 2 |
| சந்திரிகை | சந்திரிகை | — | சந்திரிகை |
| வெய்யில் 1—2 | வெயில் 1—5 | வெய்யில் 3 | வெய்யில் 4 |
| ஆதபம் | ஆதபம் | ஆதபம் | ஆதவம் |
| என்றூழ் | என்றூழ் | என்றூழ் | என்றூழ் |
| மாலை 1—2 | மாலை 1—4 | மாலை | மாலை 4 |
| சாயம் | சாயம் | — | சாயம் |
| சந்தி | சந்தி | சந்தி | சந்தி |
| சாமம் 1—1 | சாமம் 1—1 | சாமம் 2 | சாமம் 2 |
| யாமம் | யாமம் | யாமம் | யாமம் |

---

பாடவேறுபாடு:

* இவ்விரு பெயர்களும் ஒருசொற்பல்பொருணிலையில் உள்ளன

## செய்யுள்—92

| பருவம் 1—2 | பருவம் 2 | பருவம் 3 | பருவம் 4 |
|---|---|---|---|
| ஆனியம் | — | ஆனியம் | ஆனியம் |
| இருது | இருது | இருது | இருது |

**மிகை: பிங்.** 1 உதயம் 2 — 3 கோடை, எல், ஒளி
4 கோதூழி, அந்தி 5 — 6 —

**கயா:** 1 — 2 — 3 — 4 அந்தி, இரசனி
5 — 6 —

**நாம:** 1 வைகல், உசல் 2 — 3 வெய்யோன்கதிர்
4 அந்தி 5 — 6 பெரும்போது

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 92ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள்:**

வைகறை—முருகு 73 புலரி—மலை 448 விடியல்—பொருந 72
நிலவு—பொருந 213 என்றூழ்—நற் 43-2 யாமம்—மதுரை 620
பருவம்—பட் 128 மாலை—முருகு 79 சந்தி—முருகு 225

**பிற தமிழ்ச் சொற்கள்:**

மாலை, சாயம், வெய்யில், சாமம், ஆனியம்

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை:**

புலரி, விடியல், என்றூழ், பருவம், சாயம், ஆனியம்

**வடசொற்கள்:**

சந்திரிகை, இருது

செய்யுள்—93

ஒரு கலை. மாதம்
மதிதெரிகலைஇரவு, மதிமறைகலைஇரவு

திதியொடுபக்கந்தானேயொருகலைதெரிக்குமென்ப
மதியொடுதிங்கள்சொல்லின்மாதமேபேதமில்லை
மதிதெரிகலையிராப்பேர்வருஞ்சினீவாலியாகும்
மதிமறைகலையிராவின்வரும்பெயர்குகுவென்றாமே

93 திதியொடு பக்கந் தானே
ஒருகலை தெரிக்கும் என்ப
மதியொடு திங்கள் சொல்லின்
மாதமே பேதம் இல்லை
மதிதெரி கலைஇ ராப்பேர்
வரும்சினீ வாலி ஆகும்
மதிமறை கலைஇ ராவின்
வரும்பெயர் குகுஎன் றாமே

பெ. பொ. விளக்கம்

ஒருகலை—திங்களின் 16 கலைகளில் ஒரு கூறுபாடு
திதி—திங்கள் கலையின் ஓர் அமைப்புக் கூறுபாடு
பக்கம்—திங்கள் கலையில் ஒரு பகுதி

மாதம்— மதியின் முழு மறைவு-முழு நிலவு எல்லைக்காலம் கொண்டது
மதி, திங்கள்—திங்கள் தோற்றம் மறைவுகளால் பெயர்கொண்ட கால அளவு

மதிதெரிகலை இரா—திங்கள் தோற்றமளிக்கும் வளர்பிறை இரவு
சினீவாலி—வளர்பிறைத் தோற்ற இரவு

மதிமறைகலை இரா—திங்கள் பூமியின் நிழலால் மறையும் தேய்பிறை இரவு
குகு—இருளால் மறைத்தல் உடையது

செய்யுள் — 93

## ஒப்பீடு

| **சூடாமணி—93** | **பிங்கலம்— 286, 289** | **கயாதரம் 465, 46** | **நாமதீபம்-558, 556 555** |
|---|---|---|---|
| **ஒருகலை** *1—2* | *2* | *3* | *2* |
| *திதி* | *திதி* | *திதி* | *திதி* |
| பக்கம் | பக்கம் | பக்கம் | பக்கம் |
| **மாதம்** *1—2* | *மாதம் 1—2* | *மாதம் 3* | *மாதம் 3* |
| **மதி** | *மதி* | *மதி* | *மதி* |
| *திங்கள்* | *திங்கள்* | *திங்கள்* | *திங்கள்* |
| **மதிதெரி கலையிரா** *1—1* | ஒருகலை வருநாள் *1—1* | | *இந்துஉளரா 2* |
| *சினீவாலி* | *சினீவாலி* | | வாலிசினி |
| **மதிமறை கலையிரா** *1—1* | — | | *இந்துஇலிரா 2* |
| குகு | — | | குகு |

**மிகை பிங்;** *1* — *2* — *3* — *4* —

**கயா:** *1* *நிலைபேறு*
*2* — *3* — *4* —

**நாம:** *1* — *2* — *3* — *4* —

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 93ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள்:**

பக்கம்—*நற் 98-5* *மதி—முருகு 87* *திங்கள்—முருகு 98*

**பிற தமிழ்ச் சொற்கள்:**

**ஒருகலை,** *மாதம்,* *மதிதெரிகலையிரா,* *மதிமறைக்கலையிரா*

## செய்யுள்—93

**வடசொற்கள் :**

திதி, குரு

**மணிப்பவளச் சொற்கள் :**

சினீவாலி

## உவா (பூரணன்), அமை (அமாவாசை) பூரணையாம் பக்கம்

அந்தமாமுவாவேபவ்வம்பூரணையிருபேராகும்
இந்துவோடிரவிகூட்டமமாவாசையமையுமென்ப
நந்தைபத்திரையினோடுநாட்டியசயையிருத்தை
முந்துபூரணையாம்பக்கமுதற்றொட்டுமூன்றுவட்டம்

94 அந்தமாம் உவாவே பவ்வம்,
 **பூரணை** இருபேர் ஆகும்
இந்துவோ டிரவி கூட்டம்,
 **அமாவாசை** அமையும் என்ப
நந்தைபத் திரையி னோடு
 நாட்டிய சயை,இ ருத்தை
முந்துபூ **ரணையாம் பக்கம்**
 முதல்தொட்டு மூன்று வட்டம்

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

**பூரணை**—திங்களின் கலை நிறைதலை உடையது
உவா (அந்தம்)—ஒளி நிறைவாய் உவக்கத்தக்க முழு நிலவு
பவ்வம்—திங்களின் கலை நிறைவு

**அமாவாசை**—கதிரவனும் திங்களும் (வசித்தல்) தங்குதல் உடையது
 இந்துவோடு இரவி கூட்டமும் அது
அமை—கதிரவனும் திங்களும் அண்மையில் அமைவது
மூன்றுவட்ட ஐந்து பக்கம்—முதல் பக்கம் தொடங்கி மூன்று வட்டமாக
 வரும் **ஐந்து பக்கம்**
நந்தை—திங்களின் கலைகள் 1, 6, 11

செய்யுள்—94

பத்திரை—திங்கள் கலை 2, 7, 12
சயை—திங்கள் கலை 3, 7, 12
இரித்தை—திங்கள் கலை 4, 9, 14
பூரணை—திங்கள் கலை 5, 10, 15

## ஒப்பீடு

| சூடாமணி—94 | பிங்கலம்—295, 289 290, 294 | கயாதரம் — | நாமதீபம்—557 |
|---|---|---|---|
| பூரணை 1—2 | பூரணை 1—4 | | பூரணை 3 |
| உவா | உவா | | உவா |
| பவ்வம் | பவ்வம் | | பவ்வம் |
| அமாவாசை | அமாவாசை 2 | | அமாவாசி 3 |
| இந்துவோடிரவி கூட்டம் | — | | கதிர்க்கூட்டு |
| அமை | — | | அமை |
| ஐந்து பக்கம் | (பக்கம் ஐந்து) | | மூன்றுவட்டம் கூட்டு |
| நந்தை | நந்தை | | நந்தை |
| பத்திரை | பத்திரை | | பத்திரை |
| சயை | சயை | | சயை |
| இரித்தை | இருத்தை | | இருத்தை |
| பூரணை | பூரணை | | பூரணை |

மிகை: பிங்: 1 அனுமதி, இடை
2 குகு
3 —

கயா: 1, 2, 3

நாம: 1, 3, 3

செய்யுள்—94

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 94ல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள்:**

உவா—இல்லை பவ்வம்—புறம் 380-1 அமை—முருகு 86

**பிற தமிழ்ச் சொற்கள்;**

நந்தை, இரித்தை

**க. சொ. ஆக்கத்திற்குரியவை:**

உவா, பவ்வம், அமை, நந்தை, இரிந்தை

**வட சொற்கள்:**

பூரணன், அமாவாசை, பத்திரை, சயை

**மணிப்பவளச் சொற்கள்:**

இந்துவோடிரவிசுட்டம்

## அறுவகைப் பருவம்

பரவியகாரேகூதிர் முன்பினிற்பனிகளோடு
விரவியவிளையவேனில்விரைந்திடுமுதிர்ந்தவேனில்
மருவுமாவணியேயாதிமற்றிரண் டிரண்டுமாதம்
பருவமூவிரண்டுமாய்ந்துபார்த்திடின்வாய்த்தபேராம்

95 பரவிய காரே கூதிர்
முன்,பினில் பனிக ளோடு
விரவிய இளைய வேனில்,
விரைந்திடும் முதிர்ந்த வேனில்
மருவும்ஆ வணியே ஆதி
மற்றிரண் டிரண்டு மாதம்
பருவம்மூ விரண்டும் ஆய்ந்து
பார்த்திடின் வாய்த்த பேராம்

## செய்யுள்— 95

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

*கார்—கருத்த முகிலால் மழை பெய்தலை உடையது*
*கூதிர்—நடுங்கவைக்கும் குளிர்காற்றை உடையது*
*முன்பனி—இரவிற்குமுன் விழும் பனியை உடையது*
*பின்னில் பனி—இரவின் பின்விழும் பனியை உடையது*
*இளவேனில்—இளவெயில் உடையது*
*முதுவேனில்—பெருகிய வெப்ப வெய்யிலை உடையது*

ஆவணியே ஆதி—ஆவணித்திங்கள் முதலாக
மற்று—மேல்
இரண்டு இரண்டு மாதம்—ஆவணி, புரட்டாசி - ஐப்பசி, கார்த்திகை மார்கழி, தை - மாசி, பங்குனி - சித்திரை, வைகாசி - ஆனி, ஆடி என இரண்டிரண்டு திங்கள்
பருவம் மூவிரண்டு—முறையே முன் சொல்லப்பட்ட கார், கூதிர், முன்பனி பின்பனி, இளவேனில், முதுவேனில் எனும் ஆறு பருவங்களையும்
ஆய்ந்து பார்த்திடின்—கால வெப்ப, தட்பங்களை ஆய்ந்து பார்த்தால்
வாய்த்த பேர் ஆம்—பொருத்தமாக அமைக்கப்பெற்ற பெயர்கள் ஆகும்.

### ஒப்பீடு

| சூடாமணி—95 | பிங்கலம்—301 | கயாதரம் — | நாமதீபம்—560 |
|---|---|---|---|
| பருவம் மூவிரண்டு 1—6 | அறுவகைப்பருவம் | | பெரும்பொழுது ஆவ |
| கார்—ஆவணி புரட்டாதி | கார் ஆவணி புரட்டாதி | | கார் ஆவணி புரட்டாதி |
| கூதிர்—ஐப்பசி கார்த்திகை | கூதிர் ஐப்பசி கார்த்திகை | | கூதிர் அற்பசி கார்த்திகை |
| முன்பனி—மார்கழி தை | முன்பனி மார்கழி தை | | முன்பனி மார்கழி தை |
| பின்பனி—மாசி பங்குனி | பின்பனி மாசி பங்குனி | | பின்பனி மாசி பங்குனி |

செய்யுள்—95

| | | |
|---|---|---|
| இளவேனில் | இளவேனில் | இளவேனில் |
| சித்திரை | சித்திரை | சித்திரை |
| வைகாசி | வைகாசி | வைகாசி |
| முதுவேனில்—ஆனி | முதுவேனில் ஆனி | முதுவேனில் ஆனி |
| ஆடி | ஆடி | ஆடி |

மிகை; — —

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 95ல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள்:**

கார்—பெரும்பாண் 210 கூதிர்—நெடு 12 முன்பனி—நற் 224-2 பின்பனி—நற் 224—4 இளவேனில்—பரி 6—77

**பிற தமிழ்ச் சொற்கள் :**

பருவம், மூவிரண்டு, முதுவேனில்

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை :**

கார், கூதிர், முதுவேனில், இளவேனில் முன்பனி, பின்பனி

## ஆண்டு, ஆண்டிற்பாதி, ஊழி வாழ்நாள், அயன் வாழ்நாள்

இகழ்வில்வற்சரமேயாண்டே சமைமுப்பேர்வருடமென்ப
பகரிலாயனமுமப்பேரயனமேயாண்டிற்பாதி
உகமுடிவுடன்மடங்கலூழியாமாயுள்வாழ்நாள்
மகிழ்வுறுகற்பந்தானே மலரயன்வாழ்நாளென்ப

## செய்யுள் —96

96 இகழ்வில்வற் சரமே யாண்டே
 சமைமுப்பேர் வருடம் என்ப,
பகரில்ஆ யனமும் அப்பேர்
 அயனமே ஆண்டில் பாதி
உகம்மு டிவுடன்ம டங்கல்
 ஊழியாம் ஆயுள் வாழ்நாள்
மகிழ்வுறு கற்பந் தானே
 மலர்அயன் வாழ்நாள் என்ப

**பெ. பொ. விளக்கம்**

**வருடம்**—படியெடுத்தற்குரியது
வற்சரம்—பருவங்கள் தங்குதற்கு உரியது
ஆண்டு—காலத்தைக்குறித்து ஆள்வது
சமை—மக்கட்குத் துன்பம் செய்தலை உடையது
அயனம்—கதிரவன் வடக்கு, தெற்கு செலவிற்குரிய காலம்

**உகம் முடிவு**—உலகம் அழியும் ஓர் எல்லைக் காலம்
மடங்கல்—அழிவால் இறுதி செய்வது

**ஆயுள்**—கடத்தலை உடையது

**அயன்வாழ்நாள்**—நான்முகனின் வாழ்நாள்
கற்பம்—உலகத்தை அழிக்கும் வல்லமை கொண்டது

## ஒப்பீடு

| சூடாமணி—96 | பிங்கலம்—305-307 | கயாதரம்—43 | நாமதீபம்-557, 560, 556 |
|---|---|---|---|
| வருடம் 1—4 | வருடம் 7 | — | வருடம் 5 |
| வற்சரம் | வற்சரம் | — | வற்சரம் |
| ஆண்டு | ஆண்டு | — | ஆண்டு |
| சமை | சமை | — | சமை |
| ஆயனம் | ஆயனம் | — | ஆயனம் |

## செய்யுள்—96

| | | | |
|---|---|---|---|
| ஆண்டில்பாதி 1-1 | — | — | ஆண்டில் அரை 2 |
| அயனம் | — | — | அயனம் |
| உகம் முடிவு 1—2 | உகமுடிவு 1—2 | உகம் 3 | உகம் 3 |
| மடங்கல் | மடங்கல் | மடங்கல் | மடங்கல் |
| ஊழி | ஊழி | ஊழி | ஊழி |
| வாழ்நாள் 1—1 | வாழ்நாள் 1—2 | வாழ்தருவரு நாள் 1—2 | — |
| ஆயுள் | ஆயுள் | ஆயுள் | — |
| அயன் வாழ்நாள் 1—1 | — | நான்முகன்நாள் 2 | அயன்வாழு நாள் 2 |
| கற்பம் | — | கற்பம் | கற்பம் |

மிகை: பிங். 1 அயனம், தெய்வதம்
2 — 3 — 4 ஆயுகம் 5 —

கயா: 1 — 2 —
3 — 4 ஆயுகம் 5 —

நாம: 1 — 2 — 3 — 4 — 5 —

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 96ல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள் :**

ஆண்டு—முருகு 249 ஊழி—முருகு 164 மடங்கல்—குறி 165 ஆயுள்—அகம் 184-4

**பிற தமிழ்ச்சொற்கள் :**

சமை, ஆண்டில்பாதி, உகம்முடிவு, மடங்கல், ஊழி வாழ்நாள், அயன்வாழ்நாள்

**க. சொ. ஆக்கத்திற்குரியவை :**

ஆண்டு, சமை, ஊழி

செய்யுள்—96

**வட சொற்கள்:**

வருடம், வற்சரம், ஆயனம், அயனம், ஆயுள்
கற்பம்

## மழை, பெருமழை, விடாமழை

சொரிதுளிதிவலைதூவல்சீகரந்தூறன்மாரி
வருடமோடுறையேயாலிவானமுமழைப்பேர்பத்தாம்
பெருமழையென்பதானேபேசிலாசாரமாகும்
விரவியபனித்தல்சோனைவிடாமழையிருபேராமே

97 சொரி, துளி, திவலை, தூவல்
சீகரம், தூறல், மாரி
வருடமோ டுறையே ஆலி
வானமும் மழைப்பேர் பத்தாம்
பெருமழை என்ப தானே
பேசில்ஆ சாரம் ஆகும்
விரவிய பனித்தல், சோனை
விடாமழை இருபேர் ஆமே

**பெ. பொ. விளக்கம்:**

மழை—இளமை அடையச்செய்வது
துளி—துளிப்பது
திவலை—தூற்றும் நீர்த்துளி
தூவல்—தூவுவதுபோல் விழுவது
சீகரம்—குளிரச்செய்வது
தூறல்—தூறுவது
மாரி—மிகப்பெய்துஅழிப்பது
வருடம்—நிலத்தை நனைப்பது
உறை—சொரிவது
ஆலி—பெருந்துளிதருவது
வானம்—வானம் தந்தது

## செய்யுள்—97

ஆசாரம் - பரவுதலை உடையது
பனித்தல்—நடுக்கம் தருவது
சோனை—தொடர்ச்சி உடையது
பேசில்—எடுத்துச் சொன்னால்

## ஒப்பீடு

| சூடாமணி—97 | பிங்கலம்—62 | கயாதரம்—45 | நாமதீபம்—84 |
|---|---|---|---|
| மழை 1—10 | மழை 4 | — 7 | மழை 7 |
| துளி | — | — | — |
| திவலை | — | திவலை | — |
| தூவல் | — | — | — |
| சீகரம் | — | சீகரம் | — |
| தூறல் | — | — | தூறல் |
| மாரி | மாரி | மாரி | மாரி |
| வருடம் | வருடம் | — | வருடம் |
| உறை | — | உறை | — |
| ஆலி | — | ஆலி | — |
| வானம் | வானம் | - | வானம் |
| பெருமழை 1—1 | பெருமழை 2 | — | பெருமழை 1 |
| ஆசாரம் | ஆசாரம் | — | ஆசாரம் |
| விடாமழை 1—2 | விடாமழை 3 | விடாதுசொரிதல் 3 | விடாமழை 2 |
| பனித்தல் | பனித்தல் | பனித்தல் | — |
| சோனை | சோனை | சோனை | சோனை |

மிகை: பிங்: 1 — 2 — 3 —

கயா: 1 பெயல், துளி
2 — 3 —

நாம: 1 விருட்டி, பெயல்
2 — 3 —

செய்யுள் — 97

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 97ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

மழை—முருகு 7 துளி—முருகு 116 திவலை—நற் 127-2
தூவல்—மதுரை 115 மாரி—பெரும்பாண் 49 உறை—முருகு 8
ஆலி—ஐங் 213-3 வானம்—பொருந 236 பனித்தல்—மலை 191

**பிற தமிழ்ச் சொற்கள் :**

தூறல், பெருமழை, விடாமழை, சோணை

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை:**

திவலை, தூவல், தூறல், உறை, ஆலி, பனித்தல்
சோணை

**வடசொற்கள்:**

சிரகம், வருடம், ஆசாரம்

### துளி, ஆலங்கட்டி
### மேல், கீழ்

வாலிய திவலை தூவல்வண்சிதர்சீகரத்தோ
டாலியேதளியேமிக்கவுறைதுளியாகவேழ்பேர்
ஆலியேகரகமற்றைக்கனோபலமாலங்கட்டி
மேலினாமந்தானும்பர்மேக்குமாம்கிழக்குக்கீழே

98 வாலிய திவலை, தூவல்
வண்சிதர், சீகரத்தோ
டாலியே தளியே மிக்க
உறை, துளி ஆக ஏழ்பேர்
ஆலியே கரகம் மற்றைக்
கனோபலம், ஆலங் கட்டி
மேலின் நாமந்தான் உம்பர்
மேக்குமாம் கிழக்குக் கீழே

## செய்யுள்—98

**துளி**—துளிப்பது
சிதர்—பிசிராக விழுவது
தளி—குளிர்ந்த துளி
உறை—உறைந்திருந்து சொரிவது

**ஆலங்கட்டி**—மழைக்கட்டி
கரகம்—பயிரைக்கெடுப்பது
கனோபலம்—கார் மூகிலின் கல் போன்றது

**மேல்**—மேல் இடம்
உம்பர்—கீழிடத்திற்குமேல் இடைப்பட்ட இடம்

**கீழ்**—கீழ் இடம்
கிழக்கு—கீழ்

## ஒப்பீடு

| **சூடாமணி—98** | **பிங்கலம்—69, 68, 67** | **கயாதரம்—45** | **நாமதீபம்—81, 84** |
|---|---|---|---|
| துளி 1—7 | மழைத்துவலை 1-7 | துளி 9 | துளி 7 |
| திவலை | திவலை | துவலை | திவலை |
| தூவல் | தூவல் | — | தூவல் |
| சிதர் | சிதர் | சிதர் | — |
| சீகரம் | சீகரம் | — | சீகரம் |
| ஆலி | — | ஆலி | ஆலி |
| தளி | — | — | — |
| உறை | — | — | — |
| **ஆலங்கட்டி 1—3** | ஆலங்கட்டி 1—3 | — | ஆலாங்கட்டி 2 |
| ஆலி | ஆலி | — | — |
| கரகம் | கரகம் | — | — |
| கனோபலம் | கனோபலம் | — | கனோபலம் |
| **மேல் 1—2** | — | — | — |
| உம்பர் | — | — | — |
| மேக்கு | — | — | — |

## செய்யுள் — 98

| | | | |
|---|---|---|---|
| கீழ் 1—1 | — | — | — |
| கிழக்கு | — | — | — |

மிகை: பிங்: 1 சிதரம், பிதிர், துமிரம்
2 — 3 — 4 —

கயா: 1 தூறல், சீதாரி, சிதறி, கரகம், சீரம்
2 — 3 — 4 —

நாம: 1 உறை, துமி
2 — 3 — 4 —

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 98ல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள் :**

துளி—முருகு 116, திவலை—நற் 127-2 தூவல்—மதுரை 115
சிதர்—சிறுபாண் 254 ஆலி—ஐங் 213-3 தளி—மதுரை 263
உறை—முருகு 8 கரகம்—கலி 9-2 மேல்—முருகு 82
உம்பர்—நற் 119-6 மேக்கு—மதுரை 486 கீழ்—முருகு 29
கிழக்கு—நற் 297-1

**பிற தமிழ்ச் சொற்கள்**

ஆலங்கட்டி

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை :**

திவலை, தூவல் சிதர், தளி, ஆலி
உம்பர், மேக்கு

**வட சொற்கள்:**

சீகரம், கரகம், கனோபலம்

செய்யுள்—99

## முகில் (மேகம்)

பயனுறுமங்குல்சீதம்பயோதரந்தாராதாரம்
குயின்மழையெழிலிமஞ்சுகொண்டல்சீமூதங்கொண்மூ
வியன்முகில்விண்விசும்புவிளையுமால்சலதரஞ்செல்
புயல்கனங்கந்தரங்கார்போற்றுமைமாரிமேகம்

99 பயனுறு மங்குல், சீதம்
பயோதரம், தாராதாரம்
குயின், மழை, எழிலி, மஞ்சு
கொண்டல், சீமூதம், கொண்மூ
வியன்முகில், விண், விசும்பு
விளையும்மால், சலதரம், செல்
புயல், கனம் கந்தரம், கார்
போற்றுமை, மாரி, மேகம்

பொ. பொ. விளக்கம்

மேகம்—நீரால் நிலத்தை நனைப்பது
மங்குல்—தன் கருமையால் ஒளி மங்க வைப்பது
சீதம்—குளிர்ச்சி உடையது
பயோதரம்—நீரைத் தரித்திருப்பது
தாராதாரம்—தாரைகளைத் தரித்திருப்பது
குயின்—கருநிறமுடையது
மழை—மழையைத் தருவது
எழிலி—எழுச்சியுடையது
மஞ்சு—கருத்த தொகுதியானது
கொண்டல்—நீரைக்கொண்டு கிழக்கே தோன்றுவது
சீமூதம்—கட்டப்பட்டிருப்பது
கொண்மூ—நீரைக்கொண்டு முதிர்ந்தது
முகில்— நீரைப்பெய்ய முகிழ்த்துள்ளது
விசும்பு—வானத்தில் உள்ளது
மால்—கருத்து மயங்கவைப்பது
சலதரம்—நீரைத்தரித்திருப்பது
செல்—வானச்செலவை உடையது, துன்பந்தருவது

### செய்யுள் —99

புயல்—கடிய காற்றைத்தருவது
கனம்— நீரால் வெப்பத்தை நீக்குவது
கந்தரம்—நீரைததரித்திருப்பது
கார்—கருநிறம் உடையது
மை—கருமையானது
மாரி—பெருமழையாவது

### ஒப்பீடு

| சூடாமணி—99 | பிங்கலம்—58, 59 | கயாதரம்—44 | நாமதீபம்—83 |
|---|---|---|---|
| மேகம் 1—23 | மேகம் 1—35 | மேகம் 26 | மேகம் 25 |
| மங்குல் | மங்குல் | மங்குல் | மங்குல் |
| சீதம் | சீதம் | சீதம் | சீதம் |
| பயோதரம் | பயோதரம் | பயோதரம் | பயோதரம் |
| தாராதாரம் | தாராதாரம் | — | தாராதாரம் |
| குயின் | குயின் | குயின் | குயின் |
| மழை | மழை | மழை | — |
| எழிலி | எழிலி | எழிலி | எழிலி |
| மஞ்சு | மஞ்சு | மஞ்சு | மஞ்சு |
| கொண்டல் | கொண்டல் | கொண்டல் | கொண்டல் |
| சீமூதம் | சீமூதம் | சீமூதம் | சீமூதம் |
| கொண்மூ | கொண்மூ | கொண்மூ | கொண்மூ |
| முகில் | முகில் | முகில் | முகில் |
| விண் | விண் | விண் | விண் |
| விசும்பு | விசும்பு | விசும்பு | விசும்பு |
| மால் | மால் | மால் | மால் |
| சலதரம் | சலதரம் | — | — |
| செல் | செல் | செல் | செல் |
| புயல் | புயல் | புயல் | புயல் |
| கனம் | கனம் | கனம் | கனம் |
| கந்தரம் | கந்தரம் | கந்தரம் | கந்தரம் |
| கார் | கார் | கார் | கார் |
| மை | மை | — | மை |
| மாரி | மாரி | மாரி | — |

## செய்யுள்—99

மிகை: பிங். மாசு, வான், சீவதம், விளைவு, இளை அம்புதம், விண்டு, மாதிரம், கதம்பம் மெய்ப்பிரம், அப்பிரம், ஆயம்

கயா: சோனை, வான், விண்டு, தண்கனம் அம்புதம்

நாம: அப்பிரம், விண்டு, அம்புதம், வான்

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 99ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள்:**

மேகம் பரிதி 1·51 மங்குல்—பெரும்பாண் 480 மழை—முருகு 7 எழிலி—முல் 5 மஞ்சு—சிறுபாண் 264 கொண்டல்—மதுரை 530 கொண்மூ—குறி 50 மூகில்—பதி 84-11 விண் —முருகு 107 விசும்பு—முருகு 8 மால்—முருகு 12 செல்—முருகு 5 புயல்—பட்டி 4 கனம்—பட்டி 23 சுந்தரம்—பரி 4-22 கார்—பெரும்பாண் 210 மை—பெரும்பாண் 271 மாரி—பெரும்பாண் 49

**பிற தமிழ்ச் சொற்கள்:**

குயின், சலதரம்

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை:**

மங்குல், குயின், எழிலி, மஞ்சு, கொண்டல், கொண்மூ முகில், செல், புயல், கார், மை, மாரி

**வடசொற்கள்:**

சீதம், பயோதரம், தாராதரம், கந்தரம்

## செய்யுள்—100

## இடி, மின்னல்

வெடியொலிஅசனிசெல்லுவிண்ணேறுமடங்கலாறே
இடியின்பேருருமு மற்றையனலேறுமிதன்பேரென்ப
நெடுவித்துத்துத்தடித்துநீள்சம்பைசபலையோடு
கடியசஞ்சலையேமின்னல்கனருசிமின்னினேழ்பேர்

100 வெடியொலி, அசனி, செல்லு
விண்ணேறு, மடங்கல் ஆறே
இடியின்பேர், உருமு மற்றை
அனலேறும் இதன்பேர் என்ப
நெடுவித்துத் துத்த டித்து
நீள்சம்பை, சபலை யோடு
கடியசஞ் சலையே மின்னல்
கனருசி, மின்னின் ஏழ்பேர்

**பெ. பொ. விளக்கம் :**

இடி—இடிப்பது போன்று ஒலி முழங்குவது
வெடி—வெடிக்கச்செய்யும் முழக்கம் உடையது
ஒலி—ஒலித்தலை உடையது
அசனி—அழித்தலைச் செய்வது
செல்—துன்பந்தருவது
விண்ணேறு—வானத்தில் அரிமா போல் முழங்குவது
மடங்கல்—இறுதி செய்வது
உரும்—பேரொலி
அனலேறு—நெருப்பின் வலிமை உடையது

மின்—பளிச்சிட்டு ஒளிர்வது
வித்தித்து—பேரொளி உடையது
தடித்து—இருளைக் கண்டித்தல் உடையது
சம்பை—மழையை அறிவிக்கும் முன்னோடியதாகி உழவர்க்குத் துயரில்லா மற் செய்வது
சபலை—மெல்லச் செல்வது
சஞ்சலை—அசைவுடையது
மின்னல்—பளிச்சிட்டு ஒளியைச் செய்வது
கனருசி—மேகத்தின் கவர்ச்சி ஒளி

செய்யுள்—100

## ஒப்பீடு

| சூடாமணி— 100 | பிங்கலம்—60, 61 | கயாதரம்—45, 46 | நாமதீபம்—85 |
|---|---|---|---|
| இடி 1—8 | இடி 1—9 | இடி 6 | இடி 9 |
| வெடி | வெடி | — | வெடி |
| ஒலி | ஒலி | — | ஒலி |
| அசனி | அசனி | அசனி | அசனி |
| செல் | செல் | செல் | செல் |
| விண்ணேறு | விண்ணேறு | வானேறு | விண்ணேறு |
| மடங்கல் | மடங்கல் | — | மடங்கல் |
| உரும் | உரும் | உருமு. | உருமு |
| அனலேறு | — | — | அனலேறு |
| மின் 1—7 | — | மின் 5 | மின் 8 |
| வித்தித்து | வித்துரு | — | வித்துரு |
| தடித்து | தடித்து | தடித்து | தடித்து |
| சம்பை | சம்பை | — | சம்பை |
| சபலை | சபலை | சபலை | சவலை |
| சஞ்சலை | சஞ்சலை | சஞ்சலை | சஞ்சலை |
| மின்னல் | மின்னல் | — | மின்னல் |
| கனருசி | கனருசி | = | கனருசி |

**மிகை பிங்:** 1 கோ, இருளி
2 தடி, ஒளி

**கயா:** 1 இருள்
2 தடிந்து

**நாம:** 1 —
2 —

செய்யுள் — 100

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 100ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள்:**

இடி—முருகு 121 வெடி—மதுரை 233 ஒலி—பொருந 206
செல்—முருகு—5 மடங்கல்—குறி 165 உரும்—முருகு 121
மின்—முருகு 85

**பிற தமிழ்ச் சொற்கள்:**

விண்ணேறு, அனலேறு வித்தித்து தடித்து மின்னல்

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை:**

விண்ணேறு, மடங்கல், உரும், அனலேறு வித்தித்து
தடித்து

**வட சொற்கள்:**

அசனி, சம்பை, சபலை, சஞ்சலை, கனருசி

### பனி, ஊர்கோள் (பரிவேடம்)
### வானவில்

**தெய்வப் பெயர்க் கடைகாப்பு**

பனியிமந்துகினமும்பேர்பரிவேடமூர்கோள்வட்டம்
தனியிடுவானவில்லேயிந்திர தனுவென்றாகும்
இனையவைதேவரீட்டச்செய்யுணூற்றொன்றிசைத்தான்
புனைகுணபத்திரன்தாள்போற்றுமண்டலவன்றானே

**101** பனி,இமம், துகினம் முப்பேர்
 **பரிவேடம்** ஊர்கோள், வட்டம்
தனியிடு **வான வில்லே**
 இநதிர தனுஎன் றாகும்

## செய்யுள் — 101

இனையபவை தேவர் ஈட்டச்
　　செய்யுள் நூற் றொன் றி சைத்தான்
புனைகுண பத்தி ரன்தாள்
　　போற்றுமண் டலவன் தானே

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

**பனி** — நடுக்கத்தைச் செய்வது
இமம் — துன்பத்தைக்கொடுப்பது
துகினம் — தாமரையைக் கருகச்செய்து வருத்துவது

**பரிவேடம்** — சூழ்ந்து வளைப்பது
ஊர்கோள் — சுற்றுமண்டலமாக ஒளியைப் பரப்புவது
வட்டம் — ஒளியால் வட்டவடிவம் தருவது

**வானவில்** — வானத்தில் வில் வளைவாகத் தோன்றுவது
இந்திர தனு — இந்திரன் வில்

இனையன — இவையாவும்
தேவர் ஈட்டச் செய்யுள் — தேவப் பெயர்களின் தொகையாகச் செய்யுள்
நூற்று ஒன்று இசைத்தான் ... நூற்றொரு எண்ணிக்கையில் பாடினான்
புனை குணபத்திரன் தாள் — அழகிய குணபத்திரன் திருவடிகளை
போற்றும் — வாயால் போற்றித் தலையால் வணங்கும்
**மண்டலவன்** — மண்டலவன் என்னும் பெயர் உடையவன்
தான் — கட்டுரைச் சுவைபட வந்தது

## ஒப்பீடு

| சூடாமணி—101 | பிங்கலம்—76, 88, 89 | கயாதரம்—45 | நாமதீபம்—84 |
|---|---|---|---|
| பனி 1—2 | பனி 6 | — | பனி 3 |
| இமம் | இமம் | — | இமம் |
| துகினம் | துகினம் | — | துகினம் |
| பரிவேடம் 1—2 | பரிவேடம் 6 | பரிவேடம் 3 | பரிவேடம் 2 |
| ஊர்கோள் | ஊர்கோள் | ஊர்கோள் | ஊர்கோள் |
| வட்டம் | வட்டம் | வட்டம் | — |
| வான்வில் 1—1 | வான்வில் 2 | — | வான்வில் 3 |
| இந்திரதனு | இந்திரவில் | — | இந்திரவில் |

செய்யுள்— 101

**மிகை பிங்:** 1 மஞ்சு, நீகாரம், ஏமந்தம்
2 மண்டிலம், பரிதி, விசயம்
3 —

**கயா:** 1 1 — 2 — 3 —

**நாம:** 1 — 2 — 3 பச்சை வில்

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 101ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள்:**

பனி—முருகு 45 வட்டம்—முருகு 111

**பிற தமிழ்ச் சொற்கள் :**

இமம், துகினம், ஊர்கோள்: வானவில்

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை:**

இமம், துகினம், ஊர்கோள்

**வட சொற்கள்:**

இந்திரதனு

**மணிப்பவளச் சொற்கள்:**

பரிவேடம்

| | | |
|---|---|---|
| சூடாமணி | | |
| தெய்வப் பெயர்த்தொகுதிச் செய்யுட்கள் | : | 93 |
| பாயிரம் | : | 8 |
| ஆக | : | 101 |

| | | |
|---|---|---|
| தெய்வப் பொருட் பெயர்கள் | : | 157 |
| தெய்வப் பெயர்கள் | : | 1338 |
| ஆக பெயர்ச் சொற்கள் | : | 1495 |

**தெய்வப் பெயர்த் தொகுதி நிறைவு**

# இரண்டாவது மக்கட்பெயர்த் தொகுதி

(முனிவர் முதல் உயிர் நிறைவாக 285 பொருள்களின் பெயர்கள்)

## இரண்டாவது மக்கட்பெயர்த் தொகுதியில்

| | | |
|---|---|---|
| முனிவர் முதல் திரண்டோர் வரை | 23 | மேம்படு மக்கட்பெயர்கள் |
| அரசர் முதல் கடை வள்ளல் வரை | 20 | ஆளுகை மக்கட்பெயர்கள் |
| வைசியர் முதல் தேவராட்டி வரை | 46 | தொழில் மக்கட் பெயர்கள் |
| அயலவர் முதல் தம்பதி வரை | 79 | இயைபு நிலை மக்கட் பெயர்கள் |
| குறிஞ்சிநில மாக்கள் முதல் உப்பமைப்போர் வரை | 17 | ஐந்திணை மக்கட் பெயர்கள் |
| பாட்டன் முதல் பிள்ளைப் பன்மை வரை | 17 | உறவுமுறை மக்கட் பெயர்கள் |
| படை முதல் படையறல் வரை | 6 | மக்கள் படைநிலைப் பெயர்கள் |
| மனிதர் முதல் உயிர் வரை | 77 | மக்களின் உடலுறுப்புப் பெயர்கள் |

அடங்கியுள்ளன

# மக்கட் பெயர்த் தொகுதி பொருட் பெயர்கள்

## அகர நிரல்

# இரண்டாவது மக்கட் பெயர்த் தொகுதி

## வாழ்த்து

தேனவிழ்த்தளிகளெல்லாஞ்செவ்வழிபாடர்நின்ற
பூநகைத்திலங்குகஞ்சப்பொகுட்டின்மீதேபொதுங்கு
நான்முகக்கடவுள்பாதநாவினானவிற்றியேத்தி
மானவர்க்கியன்றபேரைவகுத்திடுந்தொகுதிசொல்வாம்

102 [1]தேனவிழ்த் தளிகள் எல்லாஞ்
செவ்வழி பாடா நின்ற
பூநகைத் திலங்கு கஞ்சப்
பொகுட்டின்மீ தேஒ துங்கு
நான்முகக் கடவுள் பாதம்
நாவினால் நவிற்றி ஏத்தி
மானவர்க் கியன்ற பேரை
வகுத்திடும் தொகுதி சொல்வாம்

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

அளிகள் எல்லாம்—சுரும்புகள் எல்லாம்
தேன் அவிழ்த்து—தேனுக்காக இதழ்களை விரித்து
செவ்வழி—செவ்வழிப் பண்ணை
பாடா நின்ற—பாடுகின்ற
பூ நகைத்து இலங்கும்—பிற பூக்களை எல்லாம் தன் பெருமையால் எள்ளி நகையாடி விளங்குகின்ற

---

**பாட வேறுபாடு:**

1 இரண்டு சுவடிகளில் இப்பாடல் இல்லை இப்பாடல் ஒன்றைக் கூட்டியே கடைக்காப்பின் சொல்லப்பெறும். நூற்றாறு என்னும் செய்யுள் கூட்டுடன் நிறைவுபெறும்.

## செய்யுள்—102

கஞ்சப் பொகுட்டின் மீது—தாமரை மலரின் நடுவிலுள்ள கொட்டை என்னும் மேடை மீது
ஒதுங்கும்—நடக்கும்
நான் முகக் கடவுள் பாதம்—அருகக் கடவுளின் திருவடிகளை
நாவினால் நவிற்றி ஏத்தி—வாய்ச் சொற்களால் போற்றி
மானவர்க்கு இயன்ற பேரை—மக்களுக்குப் பொருந்திய பெயர்களை
வகுத்திடும்—வகைப்படுத்தும்
தொகுதி சொல்வாம்—சொல் தொகுதியைச் சொல்வோம்

**சிறப்புக் குறிப்புகள்:**

அளிகள்—வண்டுகளின் பொதுப்பெயர்
சுரும்பு—ஆண் வண்டு, ஆண் வண்டு இறகுகளை அடிப்பதால் எழும் ஒலியே வண்டிசை எனப்பெறும். ஆண் வண்டின் இறகடிப்பே இவ்விசைப்பைத் தரும், எனவே சுரும்பு பொருளாயிற்று.
செவ்வழி—தமிழ்ப் பண், மாலைப் பொழுதிற்கு உரியது, தேன் உண்டு மயங்கித் தடுமாறிய நிலையில் காலைப் பொழுதில் இசைத்ததாகக் கொள்ளவேண்டும். (புறம். 149 காண்க)
நா—சினை ஆகுபெயராக வாயை உணர்த்திற்று.

## முனிவர் பெயர்கள்

துறவர்சார்பில்லோர்நீத்தோர்தூயவர்முனைவர்மெய்யர்
அறவர்மாதவர்கடிந்தோரந்தணரடிகளையர்
உறுவர்தாபதர்விளங்குமிருடிகளுயர்ந்தோர்யோகர்
அறிஞர்பண்ணவர்சிறந்தவருந்தவர்முனிவராமே

103 துறவர், சார்பில்லோர், நீத்தோர்
தூயவர், முனைவர், மெய்யர்
அறவர், மா தவர், கடிந்தோர்
அந்தணர் அடிகள், ஐயர்

---

பாடவேறுபாடு

1 துய்த்தவர்—மாதவர் என்று பெயர் உள்ளமையாலும், தூய்மைப்பொருள் தருவதாலும் 'தூயவர்' என்னும் இடம் கொள்ளப்பெற்றது.

## செய்யுள் —103

உறுவர், தாபதர், விளங்கும
இருடிகள், உயர்ந்தோர், யோகர்
அறிஞர், பண்ணவர், சிறந்த
அருந்தவர் முனிவர் ஆமே

### பொ. பொ. விளக்கம்

முனிவர்—அவாக்களை வெறுத்தவர்
துறவர்—பொருள்களின்மேல் பற்றை விடுத்தவர்
சார்பில்லோர்—பொருள்களை அவாவால் சாராதவர்
நீத்தோர்—எவ்வகைப் பற்றுகளையும் விடுத்தவர்
தவர்—தவத்தை மேற்கொண்டவர்
முனைவர்—முதன்மையான அறிஞர்
மெய்யர்—உண்மை உணர்ச்சியுடையவர்
அறவர்—அறத்தை மேற்கொள்பவர்
மாதவர்—பெருமைக்குரிய தவம் உடையவர்
கடிந்தோர் — ஐம்புலன்களின்மேல் செல்லும் அவாக்களை வெறுத்து ஒதுக்கியவர்
அந்தணர்—அழகிய தண்ணிய அருளுடையவர்
அடிகள்—இறைவன் திருவடிகளைப் பற்றியவர்
ஐயர்—தந்தை போன்ற தலைவர்
உறுவர்—மேம்பட்டவர்
தாபதர்—தவத்துறவு உடையவர்
இருடிகள்—அறிவால் மிக்கவர்
யோகர்—யோகம் செய்பவர்
பண்ணவர்—இனிமையும் பெருமையும் உடையவர்
அருந்தவர்—செய்தற்கரிய தவம் செய்பவர்

### ஒப்பீடு

| சூடாமணி—103 | பிங்கலம்—313 | கயாதரம்—85 | நாமதீபம்—120 |
|---|---|---|---|
| முனிவர் 1—20 | முனிவர் 1—20 | முனிவர் 15 | முனிவர் 18 |
| துறவர் | துறவோர் | — | துறவர் |
| சார்பில்லோர் | | — | — |

## செய்யுள்—103

| | | | |
|---|---|---|---|
| நீத்தோர் | நீத்தோர் | — | நீத்தார் |
| தூயவர் | — | — | — |
| முனைவர் | முனைவர் | முனைவர் | முனைவோர் |
| மெய்யர் | மெய்யர் | மெய்வாய்ந்தவர் | மெய்யர் |
| அறவர் | அறவோர் | அறவோர் | அறவர் |
| மாதவர் | மாதவர் | — | — |
| கடிந்தோர் | கடிந்தோர் | கடிந்தவர் | — |
| அந்தணர் | அந்தணர் | அந்தணர் | — |
| அடிகள் | — | — | அடிகள் |
| ஐயர் | ஐயர் | ஐயர் | ஐயர் |
| உறுவர் | உறுவர் | உறுவர் | உறுவோர் |
| தாபதர் | தாபதர் | தாபதர் | தாபதர் |
| இருடிகள் | இருடிகள் | — | இருடிமார் |
| உயர்ந்தோர் | — | உயர்ந்தவர் | — |
| யோகர் | யோகியர் | — | யோகர் |
| அறிஞர் | அறிஞர் | அறிஞர் | — |
| பண்ணவர் | பண்ணவர் | — | பண்ணவர் |
| அருந்தவர் | — | — | — |

**மிகை: பிங்:** இலிங்கிகள், படிவர், தபோதனர், மோனியர் கோபங்காய்ந்தோர்

**கயா:** காய்ந்தவர், கோபந்துறந்தவர், தபோதனர் மெய்க்குற்றமற்றோர்

**நாம:** பற்றிலர், தூயோர் தபோதனர் மாலற்றோர்

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 103ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள்**

முனிவர்—முருகு 137 நீத்தோர்—குறு 211-2 முனைவர்—பரி 1-33
மெய்யர்—புறம் 359.5 அறவர்—நற் 86-1 மாதவர்—பரி 5-38
அந்தணர்—முருகு 96 ஐயர்—முருகு 107 உறுவர்—பதி 43-19
உயர்ந்தோர்—மதுரை 23 அறிஞர்—மதுரை 481

செய்யுள்—103

பிற தமிழ்ச் சொற்கள்:

துறவர், சார்பில்லோர் தூயவர், கடிந்தோர், அடிகள் தாபதர், பண்ணவர், அருந்தவர்

கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை:

பண்ணவர்

வடசொற்கள்:

இருடிகள், யோகர்

சமணநீத்தோர், சைவர்
மால்சமயத்தோர், புத்தர்

தாவில்சௌமியரேயோகர்திகம்பரர்சமணநீத்தோர்
மாவிரதியரேபாசுபதர்காளாமுகர்சைவத்தோர்
மேவுமால்சமயத்தோர்பேர்மிக்கபாகவதராகும்
சீவகர்பௌத்தரோடுதேரர்சாக்கியரேபுத்தர்

104 தாவில்சௌ மியரே யோகர்,
திகம்பரர் **சமண நீத்தோர்**
மாவிர தியரே பாசு
பதர், காளா முகர், **சை வத்தோர்**
மேவு**மால் சமயத் தோர்**பேர்
மிக்கபா கவதர் ஆகும்
சீவகர், பௌத்த ரோடு
தேரர், சாக் கியரே **புத்தர்**

பெ. பொ. விளக்கம்:

**நீத்தோர்**—பற்றுக்களை நீத்தவர்
சௌமியர்—அமைதியான குணமுடையவர்
யோகர்—யோகம் செய்பவர்
திகம்பரர்—ஆடை அணியாது திக்குகளையே ஆடையாகக் கொண்டவர்

## செய்யுள் — 104

**சைவத்தோர்** — சிவனைக் கடவுளாகக் கொண்டவர்
மாவிரதியர் — பெரும் நோன்புகளை உடையவர் (சைவ உட்சமயி)
பாசுபதர் — பாசுபத சமயத்தவர்
காளாமுகர் — காளாமுகம் என்னும் சைவ உட்சமயி
மால் சமயத்தோர் — திருமாலைக் கடவுளாகக் கொண்ட வைணவ சமயத்தவர்
பாகவதர் — திருமாலுக்கு பாடல், ஆடல் செய்பவர்

புத்தர் — அறிவுக் கோட்பாட்டுப் (புத்தி தத்துவம்) புத்தனை வழிபடு தலைவனாகக் கொண்டவர்
சீவகர் — உயிர் வாழ்தலை மட்டும் மேற்கொள்பவர்
பௌத்தர் — புத்தர்
தேரர் — ஐயம் (பிச்சை) ஏற்று வாழ்வோர்
சாக்கியர் — (சாகம் — தேக்க மரம்) தேக்க மரச்சோலையில் வாழ்வோர்

## ஒப்பீடு

| சூடாமணி — 104 | பிங்கலம் — 316-321 | கயாதரம் — 86 | நாமதீபம் — 125-128 |
|---|---|---|---|
| சமண நீத்லோர் 1—3 | சமணர் 6 | சமணர் 5 | சமணன் 9 |
| சௌமியர் | — | — | — |
| யோகர் | — | — | — |
| திகம்பரர் | — | — | — |
| சைவத்தோர் 1—3 | சைவதவப் பாவோர் 4 | சைவசமயத்தவர் 4 | *சைவர் 6 |
| மாவிரதியர் | மாவிரதியர் | மாவிரதியர் | மாவிரதர் |
| பாசுபதர் | பாசுபதர் | பாசுபதர் | பாசுபதர் |
| காளாமுகர் | காளாமுகர் | காளாமுகர் | காளாமுகர் |

பாடவேறுபாடு

---

* இங்குள்ள நான்கும் நாபதீபத்தில் (1) குணத்தைப் பொருளென்போன் 2 உட்சமயிகள் 3 மாலைப்பொருளென்போன் 4 இந்திரியத்தைப் பொருளென்போன் என்னும் பொருட்பெயர்களாக உள்ளன.

செய்யுள்—104

| | | | |
|---|---|---|---|
| **மால்சமயத் தோர் 1—1** | நாராயண சமயத்தோர் 3 | — | *வயிட்டுணுவன் 4 |
| பாகவதர் | பாகவதர் | | பாகவதன் |
| **புத்தர் 1—4** | புத்தர் 5 | | — |
| சீவகர் | சீவகர் | | சீவரன் |
| பெளத்தர் | பெளத்தர் | பெளத்தர் | பெளத்தன் |
| தேரர் | தேரர் | தேரர் | தேரன் |
| சாக்கியர் | சாக்கியர் | சாக்கியர் | சாக்கியன் |

**மிகை:** பிங்: 1 சாவகர், அருகர், அமணர், ஆசிவகர் தாபதர்
2 —
3 வைணவர்

கயா: 1 ஆதிசீவகர், சாரணர், ஆருகதர், சமணமுனிவர்
2 — 3 — 4 —

நாம: 1 ஆருகதன், குண்டன், அமணன், குணமுத்தன் முனிவன், கொல்லாவிரதன். பாயுடுப்போன் சாரணன்
2 வாமர், வயிரவர்
3 பாஞ்சராத்திரி, வைகானசன்
4 கந்தமுத்தன்

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 104ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

தேரர்—புரி 19-13

**பிற தமிழ்ச் சொற்கள் :**

சைவத்தோர், காளாமுகர் மால்சமயத்தார், தேரர் சாக்கியர்

செய்யுள்—104

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை :**

தேரர்

**வடசொற்கள்:**

சௌமியர், யோகர், திகம்பரர், பாசுபதர், பாகவதர் புத்தர், சீவகர், பௌத்தர்

**மணிப்பவளச் சொற்கள்:**

சமணநீத்தோர், மாவிரதியர்

**சமணச்சித்தியர். சடைப்படிவர்**
**அகத்தியன்**

நீரினிற்பூவில்வானினினைத்துழியொதுங்குகின்ற
சாரணரெண்மராவார்சமணரிலிருத்திபெற்றோர்
பாரியசடைமுடித்தபடிவர்தாபதரேயென்ப
கூரியகும்பயோனிகுறுமுனியகத்தியன்பேர்

105 நீரினில் பூவில் வானில்
நினைத்துழி ஒதுங்கு கின்ற
சாரணர் எண்மர் ஆவார்
**சமணரில் இருத்தி பெற்றோர்**
பாரிய **சடைமு டித்த**
**படிவர்**தா பதரே என்ப
கூரிய கும்ப யோனி
குறுமுனி, அக**த்தி** யன்பேர்

**பெ. பொ. விளக்கம்:**

**இருத்தி பெற்றோர்**—எட்டுவகைப் பெரும் சித்திகளைப் பெற்றவர்
**சாரணர்**—வானத்தில் திரிவோர்
**படிவர்**—துறவி வடிவத்தை மேற்கொண்டவர்
**தாபதர்**—தவம் உடையவர்

செய்யுள்— 105

அகத்தியன்—இன்றியமையாதவன்
கும்பயோனி—குடத்தைப் பிறப்பிடமாக உடையவன்
குறுமுனி—குட்டையான உருவமுடைய முனிவன்
நினைத்துழி—நினைத்த இடமெல்லாம்
பாரிய—பரவியுள்ள
கூரிய—மேற்புறம் குவிந்த

## ஒப்பீடு

| சூடாமணி—105 | பிங்கலம்—315 | கயாதரம்— | நாமதீபம்—121 |
|---|---|---|---|
| சமணரி விருத்தி 1—1 | — | — | — |
| பெற்றோர் | — | — | — |
| சாரணர் | — | — | — |
| சடைமுடித்த படிவர் 1—1 | சடை முடியோர் 1—2 | — | — |
| தாபதர் | தாபதர் | — | — |
| அகத்தியன் 1—2 | அகத்தியன் 1 2 | — | அகத்தியன் 12 |
| கும்பயோனி | கும்பயோனி | — | கும்பன் |
| குறுமுனி | குறுமுனி | — | குறுமுனி |

மிகை: பிங்: 1
2 முனிவர் 3 —

கயா: 1 — 2 —
3 — 4 —

நாம: 1 — 2 —
3 தமிழ்நன், கடற்குடித்தோன், பொதிகைமோனி
சிவசமனன், வில்வலனட்டோன், வாதாவியட்டோன்
அன்றில்வெற்பட்டோன், விந்தமட்டோன்
மால்சமயத்தட்டோன்

செய்யுள்—105

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 105ல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள் :**

—

**பிற தமிழ்ச் சொற்கள் :**

*சடைமுடித்தபடிவர், அகத்தியன், குறுமுனி*

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை:**

—

**வட சொற்கள்:**

*சாரணர், தாபதர்*

**மணிப்பவளச் சொற்கள் :**

*சமணரில்இருத்திபெற்றோர், குமபயோனி*

### பார்ப்பார்

*ஐயர்வேதியரேநூலோரறுதொழிலாளராய்ந்தோர்*
*மையில்பூசுரரேசெந்தீவளர்ப்பவர்தொழுகுலத்தோர்*
*பொய்யிலந்தணரேயாதிவருணர்முப்புரிநூன்மார்பர்*
*மெய்யர்விப்பிரரேவேதபாரகர்வேள்வியாளர்*

106 *ஐயர் வே தியரே நூலோர்*
*அறுதொழி லாளர், ஆய்ந்தோர்*
*மையில்பூ சுரரே செந்தீ*
*வளர்ப்பவர், தொழுகு லத்தோர*
*பொய்யில்அந் தணரே ஆதி*
*வருணர்,முப் புரிநூல் மார்பர்*
*மெய்யர்,விப் பிரரே வேத*
*பாரகர், வேள்வி யாளர்*

## செய்யுள்—106

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

**மறையவர்**—நான்கு மறைகளையும் அறிந்தவர்
ஐயர்—தந்தை போன்றவர்
வேதியர்—வேதம் ஓதுபவர்
நூலோர்—பூநூல் அணிந்தவர்
அறுதொழிலாளர்—அறுவகைத் தொழில் செய்வோர்
ஆய்ந்தோர்—மறைகளை ஆராய்வோர்
பூசுரர்—பூமியில் தோன்றிய தேவர்
அந்தணர்—அழகிய குளிர்ந்த அருள் உடையவர்
ஆதி வருணர்—முதல் குலத்தவர்
முப்புரிநூல் மார்பர்—மூன்றாய்த் திரித்த பூணூல் அணிந்த மார்பை உடையவர்
மெய்யர்—உண்மை அறிந்தவர்
விப்பிரர்—எதையும் நிறைவாக்குவோர்
வேத பாரகர்—வேதம் என்னும் கடலின் கரையறிந்து செல்பவர்
வேள்வியாளர்—வேள்வி செய்பவர்

### பிரமசாரி
### பார்ப்பார் தொடர்ச்சி துரோணர்

இருபிறப்பாளர்பார்ப்பாரேற்றமேற்குலருயர்ந்தோர்
வருமறையவர்தம்பேராம்வன்னியேபிரமசாரி
அருமறைக்கொடியோன்வின்னூலாளன்பாரத்துவாசன்
தருநெறிவழாத்துரோணாசாரியன்பேர்மூன்றாமே

107 இருபிறப் பாளர், பார்ப்பார்
ஏற்றமேற் குலர்,உயர்ந்தோர்
வரு**மறை யவர்**தம் பேராம்,
வன்னியே **பிரம சாரி**
அருமறைக் கொடியோன், வின்னூ
லாளன்,பா ரத்து வாசன்
தருநெறி வழாத்து **ரோணாச்**
**சாரியன்** பேர்மூன் றாமே.

## செய்யுள்—107

**பெ. பொ. விளக்கம் :**

இருபிறப்பாளர்—பூநூல் அணிவதற்கு முன் ஒன்றும் பின் ஒன்றுமாகிய இரண்டு பிறப்பு உடையவர்
பார்ப்பார்—மறைகளைப் பார்ப்பவர்

பிரமசாரி—இளைஞனாய் மறைப்படி ஒழுகுவன்
வன்னி—நெருப்பை வளர்த்துப் போற்றுபவன்

மறைக்கொடியோன்—வேதங்களைக் கொடியாக உடையவன்
வின்னூலாளன்—வில் பயிற்சி நூல்களில் சிறந்தவன்
பாரத்துவாசன்—பரத்துவாசன் பகன்
**துரோணாச்சாரியன்**=துரோணம் என்னும் குடத்தில் பிறந்த ஒழுக்கமுள்ளவன்

## ஒப்பீடு

| சூடாமணி—106-107 | பிங்கலம்—726-727, 732 | கயாதரம்—87 | நாமதீபம்—133 |
|---|---|---|---|
| மறையவர் 1—19 | மறையவர் 19 | நான்மறையோர் 16 | — |
| ஐயர் | ஐயர் | ஐயர் | ஐயர் |
| வேதியர் | வேதியர் | வேதியர் | வேதர் |
| நூலோர் | — | புரிநூலர் | நூலோர் |
| அறுதொழிலாளர் | அறுதொழிலாளர் | அறுதொழிலாளர் | தொழிலாளர் |
| ஆய்ந்தோர் | — | — | — |
| பூசுரர் | பூசுரர் | பூசுரர் | பூசுரர் |
| செந்தீவளர்ப்பவர் | எரிவளர்ப்போர் | முத்தீவளர்ப்போர் | — |
| தொழுகுலத்தோர் | தொழுகுலர் | — | — |
| அந்தணர் | அந்தணர் | அந்தணர் | அந்தணர் |
| ஆதிவருணர் | ஆதிவருணர் | — | — |
| முப்புரிநூல்மார்பர் | முப்புரிநூலோர் | — | — |
| மெய்யர் | — | — | — |
| விப்பிரர் | விப்பிரர் | விப்பிரர் | விப்பிரர் |
| வேதபாரகர் | வேதபாரகர் | வேதபாரகர் | — |
| வேள்வியாளர் | வேள்வியாளர் | | — |

## செய்யுள்—107

| | | | |
|---|---|---|---|
| இருபிறப்பாளர் | இருபிறப்பாளர் | இருபிறப்போர் | இருபிறப்போர் |
| பார்ப்பார் | பார்ப்பார் | — | பார்ப்பார் |
| மேற்குலர் | மேற்குலத்தோர் | மேற்குலத்தோர் | — |
| உயர்ந்தோர் | — | — | — |
| **பிரமசாரி** *1—1* | பிரமசாரி | | பிரமசாரி 2 |
| வன்னி | வன்னி | — | வன்னி |
| **துரோணா சாரியன்** *1—3* | துரோணா சாரி *1—4* | — | — |
| மறைக் கொடியோன் | வேதக் கொடியோன் | — | — |
| வின்னூலாளன் | வின்னூலாளன் | — | — |
| பாரத்துவாசன் | பாரத்துவாசன் | — | |

**மிகை பிங்:** *1* அறவோர், மூற்குலத்தோர், மூத்தமரபினர்
*2* —
*3* கும்பகன்

**கயா:** *1* முனிவர், முதறிவோர், தினகரஞாதர் பனவர்
*2* — *3* —

**நாம:** *1* பிராமணர், ஆதிகுலர் அனற்கொடியோர் கஞ்சம்பூண்போர்
*2* — *3* —

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் ல்106, 107 உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள்:**

ஐயர்—முருகு *107* வேதியர்—பரி *11-84* அந்தணர்—முருகு *96* மெய்யர்—புறம் *359-5* இருபிறப்பாளர்—புறம் *367-12* பார்ப்பார்—ஐங் *4-2* உயர்ந்தோர்—மதுரை *23* வன்னி—பதி *44-23*

செய்யுள் — 107

**பிற தமிழ்ச் சொற்கள்**

மறையவர், நூலோர், அறுதொழிலான் ஆய்ந்தோர்
செந்தீவளர்ப்பவர், தொழுகுலத்தோர், முப்புரிநூல்மார்பர்
வேள்வியாளர், மேற்குலர், மறைக்கொடியோன் விண்ணூலாளன்

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை :**

நூலோர், ஆய்ந்தோர்

**வட சொற்கள்:**

வேதியர், விப்பிரர், வேதபாரகர், பிரமசாரி,
துரோணாசாரியன் பாரத்துவாசன்

**மணிப் பவளச் சொற்கள்:**

பூசுரர், ஆதிவருணர்

## அறிஞர், ஆசிரியர், மாணாக்கன்

சான்றவர்மிக்கோர்நல்லோர்தகுதியோர்மேலோராய்ந்தோர்
ஆன்றவருலகமேதாவியரறிஞர்கள்பேராசான்
ஊன்றுதேசிகனேயோசனுபாத்தியாயன்பணிக்கன்
ஏன்றவாசாரியன்பேரேற்றமாணாக்கன்கற்போன்

108 சான்றவர், மிக்கோர், நல்லோர்
தகுதியோர், மேலோர், ஆய்ந்தோர்
ஆன்றவர், உலகமே தாவியர்
அறிஞர் கள்பே ராசான்
ஊன் றுதே சிகனே யோசன்
உபாத்தியா யன்ப ணிக்கன்
ஏன்றஆ சாரி யன்பேர்
ஏற்றமா ணாக்கன் கற்போன்

**பெ. பொ. விளக்கம்**

**அறிஞர்** — அறிவை உடையவர்
**சான்றவர்** — நற்பண்புகளுக்குச் சான்று ஆகுபவர்

## செய்யுள்—108

மிக்கோர்—மேம்பட்டவர்
தகுதியோர்—நடுநிலைமை உடையவர்
ஆய்ந்தோர்—நூலை ஆய்ந்தவர்
உலகம்—உலகிற்கு எடுத்துக்காட்டானவர்
மேதாவியர்—மேம்பட்ட அறிஞர்

**ஆசாரியன்**—ஒழுக்கம் உடையவன்
ஆசான்—அறிவற்றோர்க்குப் பற்றுக்கோடு ஆகுபவன்
தேசிகன்—அறிவு ஒளி உடையவன்
ஓசன்—உட்பொருளை வெளிப்படுத்துபவன்
உபாத்தியாயன்—அத்தியயணம் செய்வதில் அடுத்த நிலையினன்
பணிக்கன்—கல்வி கற்கப் பயிற்றுவிப்பவன்

**கற்போன்**—கல்வி கொள்பவன்
மாணாக்கன்—மாண்பை ஆக்குபவன்

## ஒப்பீடு

| சூடாமணி—108 | பிங்கலம்—749, 782 | கயாதரம்—88 | நாமதீபம்—123, 122 |
|---|---|---|---|
| **அறிஞர்** *1—9* | அறிஞர் *3* | அறிஞர் *20* | அறிஞன் *22* |
| சான்றவர் | சான்றோர் | சான்றோர் | சான்றோன் |
| மிக்கோர் | — | — | மிக்கோன் |
| நல்லோர் | — | நல்லோர் | நல்லோன் |
| தகுதியோர் | — | — | தக்கோன் |
| மேலோர் | — | உயர்ந்தவர் | — |
| ஆய்ந்தோர் | — | — | — |
| ஆன்றவர் | ஆன்றோர் | ஆன்றோர் | ஆன்றோன் |
| உலகம் | — | உலகம் | உலகு |
| மேதாவியர் | — | — | மேதாவி |
| **ஆசாரியன்** *1—5* | ஆசாரியன் *5* | — | ஆசாரியன் *15* |
| ஆசான் | — | — | ஆசான் |
| தேசிகன் | தேசிகன் | — | தேசிகன் |
| ஓசன் | ஓசன் | — | — |
| உபாத்தியாயன் | உபாத்தி | — | உபாத்தி |
| பணிக்கன் | பணிக்கன் | — | பணிக்கன் |

செய்யுள் — 108

| | | | |
|---|---|---|---|
| **கற்போன் 1—1** | — | — | கற்பான் 3 |
| மாணாக்கன் | — | — | மாணாக்கன் |

**மிகை: பிங்:** 1— 2—

**கயா:** 1 கற்றவர், கரி, உற்றவர், பெரியோர் ஆரியர், உரவோர், முற்றுமுணர்ந்தவர், பேரவை கற்றோர், முதுவர், சங்கம், கலைஞர் புலவர், நூல்வல்லவர்
2— 3—

**நாம:** 1 விற்பன்னன், சாரதி, சாடு, ஆரியன் சூர், புதன், மேதை, சுதீ, கலைஞன் சங்கம். அவை, பண்டிதன், கற்றோன் புலவன்

2 ஆசிரியன், போதன், அண்ணன், அத்தன் சாமி, அய்யன், குறவன், அடிகள் உரவோன், குரு

3 சீடன்

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 108ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

அறிஞர்—மதுரை 481 சான்றவர்—கலி 39-47 நல்லோர்—முல் 18
மேலோர்—மதுரை 381 ஆன்றவர்—பரி 19-3 உலகம்—முருகு 1
ஆசான்—பரி 2-61 மாணாக்கன் குறு 33-1

**பிற தமிழ்ச் சொற்கள் :**

மிக்கோர், தகுதியோர், ஆய்ந்தோர், மேதாவியர் தேசிகன், ஓசன், பணிக்கன், கற்போன்

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை :**

அறிஞர், சான்றவர், ஆன்றவர், ஆசான், மாணாக்கன் தகுதியோர், ஆய்ந்தோர், மேதாவியர், பணிக்கன், கற்போன்

செய்யுள் — 108

வட சொற்கள்:

ஆசாரியன், உபாத்தியாயன்

மணிப்பவளச் சொற்கள் :

— —

## புலவர், கலைஞர், கணக்காயர்

கலைஞர்மேதையரேமூத்தோர்கற்றவரவைவிற்பன்னர்
தலைமையாங்கவிஞர்சங்கஞ்சாரதிசூரிசாடு
புலவர்பண்டிதர்பேர்போற்றிலறிஞரும்புதருமாகும்
கலைஞரேகவிவல்லோராங்கணக்காயரோத்துரைப்போர்

109 கலைஞர்,மே தையரே, மூத்தோர்
கற்றவர், அவை,விற் பன்னர்
தலைமையாம் கவிஞர், சங்கம்
சாரதி, சூரி, சாடு
புலவர்,பண் டிதர்பேர் போற்றில்
அறிஞரும் புதரும் ஆகும்
கலைஞரே கவிவல் லோராம்
கணக்காயர் ஓத்து ரைப்போர்

பெயர்ப் பொருள் விளக்கம்:

**பண்டிதர்**—புலமை உடையவர்
கலைஞர்—கலைகளை அறிந்தவர்
மேதையர்—மேம்பட்ட அறிவு உடையவர்
மூத்தோர்—அறிவால் முதிர்ந்தவர்
அவை—அவைக்கு உரியவர்
விற்பன்னர்—கல்வித்திறமை உடையவர்
கவிஞர்—நயம்பட செய்யுள் இயற்றுபவர்
சங்கம்—சங்கத்திற்கு உரியவர்
சாரதி—வழி நடத்துபவன்
சூரி—நற்செயலில் செலுத்தும் வல்லமை உடையவன்

## செய்யுள்—109

சாடு—சொற்களைப் பிளந்து பொருள் உணர்பவர்
புலவர்—அறிவு உடையவர்
புதர்—(புத்தி) அறிவுடையவர்

**கவிவல்லோர்**—நயமான செய்யுள் இயற்றுவதில் வல்லவர்

**கணக்காயர்**—நூல்களை ஆராய்பவர்
ஒத்துரைப்போர்—ஓதப்படுபவற்றை உணர்ந்து உரைப்பவர்

## ஒப்பீடு

| சூடாமணி—109 | பிங்கலம்—848-850 | கயாதரம்— | நாமதீபம்—124 |
|---|---|---|---|
| **பண்டிதர்** *1—14* | பண்டிதர் 9 | — | புலவன் என்னும் |
| சலைஞர் | — | — | பொருட்பெயரில் |
| மேதையர் | மேதையர் | — | குறியிடப் |
| மூத்தோர் | — | — | பெற்றவை உள்ளன |
| கற்றவர் | கற்றோர் | — | அவை அறிஞன் |
| அவை | — | — | பொருட்பெயர் |
| விற்பன்னர் | விற்பனர் | — | மிகையில் காட்டப் பெற்று உள்ளன. |
| கவிஞர் | — | | |
| சங்கம் | — | | |
| சாரதி | — | | |
| சூரி | — | | |
| சாடு | — | | |
| புலவர் | புலவர் | | |
| அறிஞர் | — | | |
| புதர் | — | | |
| **கவிவல்லோர்** 1—1 | கவிகள் 4 | | கவிஞன் 6 |
| கலைஞர் | கலைஞர் | | — |
| **ஒத்துரைப்போர்** *1—1* | ஒத்துரைப்போர் | | — |
| **கணக்காயர்** | கணக்காயர் | | — |

செய்யுள் — 109

மிகை: பிங்: 1 மேலோர், ஆசிரியர், புத்தியர், புலமையோர்
2 பாவலர் 3 கவிஞர்

கயா: 1— 2— 3—

நாம: 1 —
2 நாவலன், பாவேந்தன், வித்துவான்
கணக்காயன், பாவலன்
3 —

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 109ல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள்:**

முத்தோர்—அகம் 90-1 அவை—பொருந 107 சங்கம்—பரி 2-18
சாடு—பெரும்பாண் 188 புலவர்—முருகு 268 அறிஞர்—மதுரை 481

**பிற தமிழ்ச் சொற்கள்**

பண்டிதர், கற்றவர், கலைஞர் மேதையர், விற்பன்னர்
கவிஞர், சூரி, புலவர், கவிவல்லோர், ஓத்துரைப்போர்
கணக்காயர்

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை:**

மேதையர், விற்பன்னர், கணக்காயர்

**வடசொற்கள்:**

சாரதி, புதர்

**மணிப்பவளச் சொற்கள்:**

— —

## செய்யுள்—110

## முத்தோன், சிறந்தோன்

குரவனையன்சுவாமிகோமானேயடிகளத்தன்
பரவிபவுரவோனீசன்பதியிறைமூத்தோன்பேராம்
குரிசிலோடண்ணலேந்தல்கூறியதோன்றல்செம்மல்
பெருமையிற்சிறந்தோனென்றுபேசினர்மாசினூலோர்

110 குரவன், ஐயன், சுவாமி
கோமானே அடிகள், அத்தன்
பரவிய உரவோன், ஈசன்
பதி, இறை மூத்தோன் பேராம்
குரிசிலோ டண்ணல், ஏந்தல்
கூறிய தோன்றல், செம்மல்
பெருமையில் **சிறந்தோன்** என்று
பேசினர் மாசில் நூலோர்

### சொ. பொ. விளக்கம்:

**மூத்தோன்**—அறிவு முதலியவற்றால் முதிர்ந்தவன்
குரவன்—தந்தை போன்றவன்
ஐயன் — தலைவன்
சுவாமி—செல்வம் உடையவன்
கோமான்—மன்னன் போன்றவன்
அடிகள்—வணங்கத்தகும் திருவடிகளை உடையவன்
அத்தன்—தந்தை போன்றவன்
உரவோன்—அறிவு வலிமை உடையவன்
ஈசன்—கடவுள் போன்றவன்
பதி—காப்பாற்றுபவன்
இறை—மன்னன் போன்றவன்
குரிசில்—பற்றுக்கோடானவன்
அண்ணல்—எவராலும் அடையப்படுபவன்
ஏந்தல்—தலைமையில் மிக்கவன்
தோன்றல்—புகழில் தோன்றியவன்
செம்மல்—நடுநிலைமை உடையவன்

செய்யுள்—110

## ஒப்பீடு

| சூடாமணி—110 | பிங்கலம்—837 | கயாதரம்—89, 90 | நாமதீபம்— |
|---|---|---|---|
| முத்தோன் 1—10 | — | —16 | — |
| குரவன் | — | குரவன் | — |
| ஐயன் | — | ஐயன் | — |
| சுவாமி | — | சுவாமி | — |
| கோமான் | — | கோமான் | — |
| அடிகள் | — | அடிகள் | — |
| அத்தன் | — | அத்தன் | — |
| உரவோன் | — | — | — |
| ஈசன் | — | — | — |
| பதி | — | பதி | — |
| இறை | — | இறை | — |
| சிறந்தோன் 1—5 | —16 | —5 | — |
| குரிசில் | குரிசில் | குரிசில் | — |
| அண்ணல் | அண்ணல் | அண்ணல் | — |
| ஏந்தல் | ஏந்தல் | ஏந்தல் | — |
| தோன்றல் | — | தோன்றல் | — |
| செம்மல் | செம்மல் | செம்மல் | — |

மிகை பிங்: 1 —

2 பெருமகன், மல்லன், தலைவன், பெருமான் கோமான், கோ, ஆண்டகை, பொருநன் ஓங்கல், மீளி, விடலை, பெருந்தகை

கயா: 1 பெருமான், முதல்வன், கோ நாதன் அச்சன் பெரியோன், ஆசான், சாமி

2 —

நாம: 1 — 2 —

செய்யுள்—110

**சொற்பாகுபாடு**

**சூடாமணிச் செய்யுள் 110ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

மூத்தோன்—புறம் 183-6 ஐயன்—கலி 43-5 கோமான்—சிறுபாண் 62 அத்தன்—குறு 93-3 உரவோன்—பெரும்பாண் 31 பதி—பொருந 121 இறை—பெரும்பாண் 265 சிறந்தோன்—நற் 40-12 குரிசில்—முருகு 276 அண்ணல்—சிறுபாண் 200 ஏந்தல்—குறு 180-2 தோன்றல்—பெரும்பாண் 420 செம்மல்—முருகு 62

**பிற தமிழ்ச் சொற்கள் :**

குரவன், அடிகள்

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை:**

குரவன், உரவோன், குரிசில், ஏந்தல்

**வட சொற்கள்:**

சுவாமி, ஈசன், பதி

**மணிப் பவளச் சொற்கள்:**

—

## எப்பொருட்கும் இறை, உயர்ந்தவன்

நாதனேகொழுநன்காந்தனாட்டியபதிகோனீசன்
ஆதிபனதிபன்செம்மலரன்பிரானாதிமன்னன்
ஏதிலெப்பொருட்குந்தானேயிறைபெயரிவைபன்மூன்றாம்
ஓதுசீருலகமென்பதுயர்ந்தவர்க்கியம்புநாமம்

111 நாதனே கொழுநன், காந்தன்
நாட்டிய பதி,கோன், ஈசன்
ஆதிபன், அதிபன், செம்மல்
அரன்,பிரான், ஆதி, மன்னன்

## செய்யுள்—111

ஏதில்எப் பொருட்குந் தானே
இறைபெயர் இவைபன் மூன்றாம்
ஓதுசீர் உலகம் என்ப
துயர்ந்தவர்க் கியம்பு நாமம்

**பெ. பொ. விளக்கம் :**

நாதன்—எவரையும் புசாபுபவன்
கொழுநன்—படரும் கொழுத்த கொடிக்கொம்பு போன்றவன்
காந்தன்—கவர்ச்சி உள்ளவன்
பதி—காக்கும் தலைவன்
கோன்—செலுத்துபவன்
ஈசன்—ஆள்பவன்
ஆதிபன், அதிபன்—மேலான ஆட்சி உடையவன்
செம்மல்—நடுநிலைமை உடையவன்
அரன்—தீமைகளை அழிப்பவன்
பிரான்—எவராலும் அடையப்படுபவன்
ஆதி—முதன்மை உடையவன்
மன்னன்—நிலைத்த தலைமை உடையவன்
உலகம்—உலக உண்மைகளைக் கண்டு உணரும் அறிஞர்

## ஒப்பீடு

| சூடாமணி—111 | பிங்கலம்—836 | கயாதரம்—8 90 | நாமதீபம்— |
|---|---|---|---|
| எப்பொருட்கும் இறை 1—13 | — | —15 | — |
| நாதன் | — | நாதன் | — |
| கொழுநன் | — | — | — |
| காந்தன் | — | காந்தன் | — |
| பதி | — | பதி | — |
| கோன் | — | கோன் | — |
| ஈசன் | — | ஈசன் | — |
| ஆதிபன் | — | — | — |
| அதிபன் | — | அதிபன் | — |

## செய்யுள்—111

| | | | |
|---|---|---|---|
| செம்மல் | — | செம்மல் | — |
| அரன் | — | — | — |
| பிரான் | — | பிரான் | — |
| ஆதி | — | ஆதி | — |
| மன்னன் | — | மன்னன் | — |
| **உயர்ந்தவர்** | உயர்ந்தோர் *1—1* | — | — |
| உலகம் | உலகம் | — | — |

**மிகை:** பிங்: *1* —
*2* —

**கயா:** *1* காவலன், தலைவன், வேந்தன், இறை நாயகன்
*2* —

**நாம:** *1* —
*2* —

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 111ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

கொழுநன்-நற்-*110-10* பதி-பொருந-*121* கோன்-மதுரை-*74*
செம்மல்-முருகு-*62* ஆதி-மதுரை-*390* மன்னன்-நற்-*43-11*
உயர்ந்தவர்-பரி-*9-3* உலகம்-முருகு *1*

**பிற தமிழ்ச் சொற்கள் :**

எப்பொருட்குமிறை, அரன்

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை :**

**கோன்,** செம்மல்

செய்யுள்— 111

**வட சொற்கள்:**

நாதன், காந்தன், பதி, ஈசன், ஆதிபன், அதிபன் பிரான்

**மணிப்பவளச் சொற்கள் :**

— —

## திரண்டோர், பெண்கள் கூட்டம்

சவைசமவாயஞ்சங்கஞ்சமுதாயஞ்சமூகங்கோட்டி
அவைகுழாங்குழுவேகூட்டமடர்திரள்கணங்களீரா
றிவைதிரண்டோர்பேர்பண்ணையெய்தியவோரைபொய்தல்
அவைபெண்கள்கூட்டமாயங்கெடவரலதுவுமாமே.

112 சவை,சம வாயம், சங்கம்
சமுதாயம், சமூகம் கோட்டி
அவை,குழாம், குழுவே கூட்டம்
அடர்திரள், கணங்கள் ஈரா
றிவைதிரண் டோர்பேர் பண்ணை
எய்திய ஓரை, பொய்தல்
அவைபெண்கள் கூட்டம் ஆயம்
கெடவரல் அதுவும் ஆமே

**பெ. பொ. விளக்கம்:**

சவை-அறிஞர் கூடுதலால் ஒளியை உடையது
சமவாயம்-கூடிவருதலை உடையது
சங்கம்-பெரும் எண்ணிக்கையில் கூடுவது
சமுதாயம்-எவராலும் நன்கு அடையப்படுவது
சமூகம்-அறமுறை உடையது
கோட்டி-கொள்ளத்தகும் கருத்துக்களை உடையது
குழாம்-குழுக் குழுவாக கூடுதலை உடையது
திரள்-திரண்டு கூடுதலை உடையது
கணம்-கூட்டத்தொகுதி

செய்யுள் — 112

பண்ணை-விளையாட்டை உடையது
ஓரை-புல்லால் பின்னிய பாவை விளையாட்டை உடையது
பொய்தல்-பொய்யாக விளையாடுதலை உடையது
ஆயம்-தோழியர் கூட்டம் கொண்டது
கெடவரல் (சமணப் பொருளில்)-துறவைக் கெடுக்க வருதலை உடையது

## ஒப்பீடு

| சூடாமணி—112 | பிங்கலம்—721, 949 | கயாதரம்— | நாமதீபம்— |
|---|---|---|---|
| திரண்டோர் 1-12 | -10 | ... | ... |
| சவை | சபை | ... | ... |
| சமவாயம் | சமவாயம் | ... | ... |
| சங்கம் | சங்கம் | ... | ... |
| சமுதாயம் | ... | ... | ... |
| சமூகம் | சமூகம் | ... | ... |
| கோட்டி | கோட்டி | ... | ... |
| அவை | அவை | ... | ... |
| குழாம் | ... | ... | ... |
| குழு | குழு | ... | ... |
| கூட்டம் | கூட்டம் | ... | ... |
| திரள் | ... | ... | ... |
| கணம் | கணம் | ... | ... |
| பெண்கள் கூட்டம் 1-5 | தெரிவையர் கூட்டம் 4 | ... | ... |
| பண்ணை | பண்ணை | ... | ... |
| ஓரை | ஓரை | ... | ... |
| பொய்தல் | ... | ... | ... |
| ஆயம் | ஆயம் | ... | ... |
| கெடவரல் | ... | ... | ... |

மிகை பிங்; 1 தொகுதி
2 குழு

செய்யுள்—112

கயா: 1 —
2 —

நாம: 1 —
2 —

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 112ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள்:**

கோட்டி-நற்-342-6 அவை-பொருந 107 குழாம்-மலை 265 குழு-மதுரை 64 கூட்டம்-நற்-41-10 திரள்-பொருந 40 பண்ணை-ஐங்-73-2 கணம்-முருகு 76 ஓரை-நற்-68-1 பொய்தல்-மதுரை 589 ஆயம்-பொருந 123

**பிற தமிழ்ச் சொற்கள்:**

திரண்டோர், சவை, சமவாயம், சங்கம், பெண்கள் கூட்டம், கெடவரல்

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை:**

கோட்டி, கணம், பண்ணை, ஓரை, பொய்தல் ஆயம்

**வட சொற்கள்:**

சமுவாயம், சமுகம்

**மணிப் பவளச் சொற்கள்:**

## செய்யுள்—113

### அரசன்

புரவலன்பெருமானேந்தல்பூபாலன்வேந்தன்மன்னன்
நரபதிபொருநன்சக்கிரிநகைமுடிநிருபனோடு
குரிசில்பார்த்திவனேகோவேகொற்றவனிறைவனண்ணல்
அரசன்பேரிவையிரெட்டாந்தலைவன்காவலனுமாமே

113 புரவலன், பெருமான், ஏந்தல்
பூபாலன் வேந்தன், ஏந்தல்
நரபதி, பொருநன், சக்கிரி[1]
நகைமுடி, நிருப னோடு
குரிசில்,பார்த் திவனே கோவே
கொற்றவன், இறைவன், அண்ணல்
அரசன்பேர் இவைஈ ரெட்டாம்
தலைவன்,கா வலனும் ஆமே

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

அரசன்-அரையன் என்பதன் மரூஉச்சொல்
புரவலன்-நாட்டைக்காப்பவன்
பெருமான்-பெருமை உடையவன்
ஏந்தல்-யாவராலும் போற்றப்படுபவன்
பூபாலன்-பூமியை ஆண்டு காப்பவன்
வேந்தன்-ஆணையை விதிப்பவன்
மன்னன்-நிலைத்த பெருமை உடையவன்
நரபதி-மாந்தரைக் காப்பவன்

---

**பாட வேறுபாடு:**

1 'பொருநன் மற்றை' இப்பாடத்தால் 'சக்கிரி' என்னும் பெயர் விடுபட்டு பெயர்க் கூட்டெண் 16 நிறையவில்லை. மன்னன் பெயர் 'சக்கிரி' என்று திவாகரம், பிங்கலம் ஆகியவற்றில் இல்லாமை கண்டு, 'மற்றை' எனும் சொல் செருகப்பெற்றுள்ளது. சக்கரத்தை உடைமை என்னும் பொருளில் இந்நூலாசிரியர் பலவிடங்களில் (சூடா, 128, 136, 254) சக்கிரி என்னும் பெயரை ஆண்டுள்ளார்.

## செய்யுள்—113

பொருநன்-போர் செய்பவன்
சக்கிரி-ஆணைச் சக்கரத்தை உடையவன்
நிருபன்-வல்லமையால் மக்களைக் காப்பவன்
குரிசில்-தலைமைத் தன்மை உடையவன்
பார்த்திபன்-பாரை ஆள்பவன்
கோ-தலைமைத்தன்மை உடையவன்
கொற்றவன்-வெற்றி உடையவன்
இறைவன்-(இறை-வரி) வரி பெறுபவன்
அண்ணல்-எவராலும் அடையப்படுபவன்
தலைவன்-தலைமைத் தன்மை உடையவன்
காவலன்-நாட்டைக் காப்பவன்

## ஒப்பீடு

| சூடாமணி—113 | பிங்கலம்—733 | கயாதரம்—91 | நாமதீபம்—136, 137 |
|---|---|---|---|
| அரசன் 1-18 | அரசர் 1-17 | அரசன் 18 | அரசன் 37 |
| புரவலன் | புரவலர் | புரவலன் | புரவலன் |
| பெருமான் | ... | ... | பெருமான் |
| ஏந்தல் | ஏந்தல் | ... | ஏந்தல் |
| பூபாலன் | பூபாலர் | பூபாலன் | பூபன் |
| வேந்தன் | வேந்தர் | வேந்தன் | வேந்து |
| மன்னன் | மன்னர் | மன் | மன்னன் |
| நரபதி | .. | நரபதி | பதி |
| பொருநன் | பொருநர் | ... | ... |
| சக்கிரி | — | ... | ... |
| நிருபன் | நிருபர் | நிருபன் | நிருபன் |
| குரிசில் | குரிசில் | குரிசில் | குரிசில் |
| பார்த்திவன் | பார்த்திபர் | பார்த்திபன் | பார்த்திபன் |
| கோ | கோக்கள் | கோ | கோ |
| கொற்றவன் | கொற்றவர் | கொற்றவன் | கொற்றவன் |
| இறைவன் | இறைவர் | ... | இறை |
| அண்ணல் | ... | அண்ணல் | அண்ணல் |
| தலைவன் | தலைவர் | ... | தலைவன் |
| காவலன் | காவலர் | காவலன் | காவலன் |

## செய்யுள்—113

**மிகை பிங்:** பதிகள், முதல்வர், மகிபாலர்

**கயா:** கோன், பூபன், இராசன், மகிபன், மகிபதி

**நாம:** அதிபன், ஆதிபன், கோன், சுவாமி, நாதன்
கொழுநன், காந்தன், அரன், பெம்மான்
செம்மல், ஓங்கல், ஈசன், பிரான், பிரபு
மகிபன், தோன்றல், இயமான், கோமான்
துரை, இராசன்

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 113ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

அரசன்-குறு-276-5 புரவலன்-சிறுபாண் 125 பெருமான்-பதி-85-3 ஏந்தல்-குறு-180-2 வேந்தன்-நெடு 187 மன்னன்-நற்-43-11 பொருநன்-நற்-18-4 குரிசில்-முருகு 276 கோ-மதுரை 105 இறைவன்-பதி 120 அண்ணல்-சிறுபாண் 200 தலைவன்-மதுரை 455 காவலன்-ஐங்-230-2

**பிற தமிழ்ச் சொற்கள்**

சக்கிரி, கொற்றவன்

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை :**

ஏந்தல், பொருநன், அண்ணல், கொற்றவன்

**வடசொற்கள்:**

நரபதி, நிருபன், பார்த்திவன்

**மணிப்பவளச் சொற்கள்:**

பூபாலன்

## செய்யுள் — 114

### வீட்டுமன், குருகுலவேந்தர்

தருதெய்வவிரதன்கங்கைதனயன்சந்தனுமுன்பெற்றோன்
கருதியபிரமசாரிகாங்கேயன்வீட்டுமன்பேர்
பரவுபாரதரேமற்றைப்பௌரவரென்னுநாமங்
குருகுலவேந்தர்க்காகுங்கௌரவரென்றுங்கூறும்

114 தருதெய்வ விரதன்,[1] கங்கை
தனயன்,சந் தனுமுன் பெற்றோன்
கருதிய பிரம சாரி
காங்கேயன், வீட்டு மன்பேர்[2]
பரவுபா ரதரே மற்றைப்
பௌரவர் என்னும் நாமம்
குருகுல வேந்தர்க் காகும்
கௌரவர் என்றும் கூறும்

**பெ. பொ. விளக்கம் :**

**வீட்டுமன்**-கடுமையான நோன்பு உடையவன்
தெய்வ விரதன்-கட்டிளமை நோன்பு உடையவன்
கங்கை தனயன்-கங்கை ஆற்றின் மகன்
சந்தனுமுன் பெற்றோன்-சந்தனுவால் முதலில் பெறப் பெற்றவன்
பிரமசாரி-மாணி என்னும் கட்டிளமை நோன்பு உடையவன்
காங்கேயன்—கங்கை மகன்

**குருகுலவேந்தர்**-குரு என்னும் அரசன் குலத்தில் பிறந்த அரசர்
பாரதர்-பரதன் என்னும் அரசன் மரபில் வந்தவர்
பௌரவர்-பூரு என்னும் அரசன் மரபில் வந்தவர்
கௌரவர்-குரு என்னும் அரசன் மரபில் வந்தவர்

---

பாட வேறுபாடு:

1 'பெருகிய கங்கை மைந்தன்'

2 'காங்கயன் நாமம் மூன்றாம்' இவ்விரு பாடங்களாலும் 'தெய்வ விரதன்' 'வீட்டு மன்' என்னும் பெயர்கள் விடுபடுகின்றன. இவ்விரு பெயர்களும் பிற உரிப்பனுவல்களிலும், இலக்கியங்களிலும் இடம்பெற்ற பெயர்கள் எனவே இப்பெயர்கள் விடுபட்ட பாடங்கள் விடுபட்டன.

செய்யுள்—114

## ஒப்பீடு

| சூடாமணி—114 | பிங்கலம்—737-738 | கயாதரம்—95 | நாமதீபம்—142 |
|---|---|---|---|
| வீட்டுமன் *1-5* | வீட்டுமன் *1—5* | ... | வீட்டுமன் *5* |
| தெய்வவிரதன் | தெய்வவிரதன் | ... | விரதன் |
| கங்கைதனயன் | கங்கைதனையன் | ... | ... |
| சந்தனுமுன் பெற்றோன் | சந்தனுமுன் மைந்தன் | ... | சந்தனுச்சேய் |
| பிரமசாரி | பிரமசாரி | ... | ... |
| காங்கேயன் | காங்கேயன் | ... | காங்கேயன் |
| குருகுல வேந்தர் *1-3* | குருகுல மன்னர் *1-3* | *-2* | ... |
| பாரதர் | பரதர் | பரதர் | ... |
| பௌரவர் | பௌரவர் | ... | ... |
| கௌரவர் | கௌரவர் | கவுரவர் | ... |

**மிகை: பிங்:** *1* — *2* —

**கயா:** *1* — *2* —

**நாம:** *1* வன்னி *2* —

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 114ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

— —

**பிற தமிழ்ச் சொற்கள்**

செய்யுள்—114

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை :**

— —

**வடசொற்கள்:**

வீட்டுமன் பிரமசாரி, காங்கேயன், பாரதர், பௌரவர் கௌரவர்

**மணிப்பவளச் சொற்கள்:**

தெய்வவிரதன், கங்கைதனயன், கந்தனுமுன்பெற்றோன் குருகுலவேந்தன்

## தருமன்

தரமிகுகுவளைத்தாரான்யுதிட்டிரன்பொறையன்சாற்றும்
முரசுயர்கொடியோனீதிமொழியுநல்லறத்தின்சேயே
குருகுலப்பாண்டுமைந்தன்குந்திதன்புதல்வன்மெய்ம்மை
விரதமாக்கொள்வோன்மேன்மைத்தருமன்பேரெட்டுமாமே

115 [1]தரமிகு குவளைத் தாரான்
யுதிட்டிரன், பொறையன், சாற்றும்
முரசுயர் கொடியோன், நீதி
மொழியுநல் லறத்தின் சேயே
குருகுலப் பாண்டு மைந்தன்
குந்திதன் புதல்வன், மெய்ம்மை
விரதமாக் கொள்வோன் மேன்மைத்
தருமன்பேர் எட்டும் ஆமே

---

பாடவேறுபாடு

**1, 2** தருமன் (115), துரியோதனன் (116) இருவர்க்குத் தனித்தனிப் பாடல்களாக உள்ளவை ஒரே பாடலாக ஒரு சுவடியில் செய்யுள் வேறுபாடு உள்ளது அதனால் ஒரு பாடல் குறைந்து ஆசிரியர் இத்தொகுதிக் கடைக்காப்பில் குறிப்பிட்டுள்ள 'நூற்றாறு' என்னும் பாடல் கூட்டெண் நிறைவாகாது. எனவே இவ்விரு பாடல்களே உரியவை

## செய்யுள்—115

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

**தருமன்**-அறவழி வாழ்பவன்
**குவளைத்தாரான்**-குவளை மாலையை அணிந்தவன்
**யுதிட்டிரன்**-போரில் உறுதியாய் நிற்பவன்
**பொறையன்**-பொறுமை உடையவன்
**முரசக் கொடியோன்**-முரசு எழுதிய கொடியை உடையவன்
**அறத்தின் சேய்**-அறத்தின் மகன்
**பாண்டுமைந்தன்**-பாண்டுவின் மகன்
**விரதம்**—நோன்பு
**குந்தி புதல்வன்**-குந்தி மகன்

### ஒப்பீடு

| சூடாமணி—115 | பிங்கலம்—739 | கயாதரம்— | நாமதீபம்— 143 |
|---|---|---|---|
| தருமன் 1-8 | தருமன் 1-4 | — | தருமன் 8 |
| குவளைத்தாரான் | — | — | குவளை பூண்டோன் |
| யுதிட்டிரன் | உதிட்டிரன் | — | உதிட்டிரன் |
| பொறையன் | பொறையாளன் | — | பொறையன் |
| முரசக் கொடியோன் | முரசக் சொடியோன் | — | முரசுயர்த்தோன் |
| அறத்தின்சேய் | தருமமைந்தன் | — | — |
| பாண்டுமைந்தன் | — | — | பாண்டுசேய் |
| குந்திபுதல்வன் | — | — | குந்திசேய் |
| மெய்ம்மை விரதமாக் சொல்வோன் | — | — | பொய்சொல்லான் |

மிகை பிங்: —

கயா: —

நாம: —

செய்யுள்— 115

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 115ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

தருமன்-பரி 3-8 பொறையன்-நற் 8-9

**பிற தமிழ்ச் சொற்கள் :**

குவளைத்தாரான், முரசக்கொடியோன், அறத்தின்சேய்

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை :**

பொறையன்

**வட சொற்கள்:**

தருமன், யுதிட்டிரன்

**மணிப்பவளச் சொற்கள் :**

பாண்டுமைந்தன், குந்திபுதல்வன், மெய்ம்மைவிரதமாக் கொண்டோன்

## துரியோதனன்

மருவுகாந்தாரிமைந்தனந்தியாவர்த்தத்தாமன்
அரவுயர்த்தவன்வணங்காமுடியினனரசர்மன்னன்
உரைகெழுசுயோதனன்கண்ணொன்றுமில்லாதோனான்
திருதராட்டிரன்றன்செல்வன்சீர்த்துரியோதனன்பேர்

116 [1] மருவுகாந் தாரி மைந்தன்
நந்தியா வர்த்தத் தாமன்
அரவுயர்த் தவன்,வணங்கா
முடியினன், அரசர் மன்னன்

## செய்யுள்—116

உரைகெழு சுயோதனன், கண்
ஒன்றுமில் லாதோன் ஆன
திருதராட் டிரன்தன் செல்வன்
சீர்த்துரி யோதனன் பேர்

**பெ. பொ. விளக்கம்:**

**துரியோதனன்** -துக்கத்தோடு தாக்கப்படுவோன்
காந்தாரிமைந்தன்-காந்தாரி மகன்
நந்தியாவர்த்தத்தாமன்-நந்தியாவட்டை மாலையை அணிந்தவன்
அரவுயர்த்தவன்-பாம்பு எழுதிய கொடியை உயர்த்தியவன்
வணங்காமுடியினன்-எவரையும் வணங்காத தலைமுடியை உடையவன்
அரசர்மன்னன்-அரசர்க்கெல்லாம் அரசன்
சுயோதனன்-இன்பத்தோடு பொருபவன்
திருதராட்டிரன் தன்செல்வன்-திருதராட்டிரன் மகன்
உரைகெழு-புகழ் மிகுந்த

## ஒப்பீடு

| சூடாமணி—116 | பிங்கலம்—740 | கயாதரம்— | நாமதீபம்—142 |
|---|---|---|---|
| துரியோதனன் 1-7 | துரியோதனன் 1-4 | — | துரியோதனன் 7 |
| காந்தாரிமைந்தன் | காந்தாரிசெம்மல் | — | காந்தாரிமகன் |
| நந்தியாவர்த்தத் தாமன் | — | — | வளம்புரித்தார்சூடி |
| அரவுயர்த்தவன் | பன்னக முயர்த்தோன் | — | நாகக்கொடியோன் |
| வணங்கா முடியினன் | வணங்கா முடியோன் | — | வணங்கா முடியான் |
| அரசர்மன்னன் | மன்னர்மன்னவன் | — | — |
| சுயோதனன் | — | — | சுயோதனன் |
| திருதராட்டிரன் தன்செல்வன் | — | — | கண்ணில் கோமகன் |

மிகை பிங்: —
கயா: —
நாம: —

செய்யுள் — 116

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 116இல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள்:**

— —

**பிற தமிழ்ச் சொற்கள்:**

அரவுயர்த்தவன், வணங்காமுடியினன், அரசர்மன்னன்

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை:**

— —

**வட சொற்கள்:**

துரியோதனன், சுயோதனன்

**மணிப் பவளச் சொற்கள்:**

காந்தாரிமைந்தன், நந்தியாவர்த்தத்தாமன், திருதராட்டிரன் தன்செல்வன்

### கன்னன், வீமன்

கடுங்கதிர்மதலைவீசுங்கவசகுண்டலனேகச்சை
நெடுங்கொடியினன்கானீனனீனங்கர்கோமான்கன்னன்
மடங்கலின்கொடியோன்வெய்யமாருதிவாயுமைந்தன்
இடிம்பைதன்கொழுநன்வீமன்கதாயுதனென்றுமேற்கும்

117 கடுங்கதிர் மதலை, வீசும்
கவசகுண் டலனே கச்சை
நெடுங்கொடி யினன்,கா னீனன்
நீள்அங்கர் கோமான் **கன்னன்**

## செய்யுள் — 117

மடங்கலின் கொடியோன், வெய்ய
மாருதி, வாயு மைந்தன்
இடிம்பைதன் கொழுநன், வீமன்
கதாயுதன் என்றும் ஏற்கும்

**பெ. பொ. விளக்கம்:**

**கன்னன்**-குண்டலம் பொருந்திய காது உடையவன்
கதிர்மதலை-கதிரவன் மகன்
கவசகுண்டலன்-கவசமும் குண்டலமும் உடையவன்
கச்சைக் கொடியினன்-யானைக்குக் கட்டும் கச்சைத்தோல் எழுதிய கொடியை உடையவன்
கானீனன்-கன்னிப்பெண் பெற்ற பிள்ளை
அங்கர் கோமான்-அங்க நாட்டுக்கு அரசன்

**வீமன்**-அச்சம் தரும் உருவத்தை உடையவன்
மடங்கல் கொடியோன்-அரிமா எழுதிய கொடியை உடையவன்
மாருதி-காற்றின் மகன்
இடிம்பை கொழுநன்-இடிம்பைக்குக் கணவன்
கதாயுதன்-கதை என்னும் போர் ஆயுதத்தை உடையவன்

## ஒப்பீடு

| சூடாமணி — 117 | பிங்கலம் — 741-742 | கயாதரம் — | நாமதீபம் — 143-144 |
|---|---|---|---|
| **கன்னன் 1—5** | கன்னன் 7 | — | கன்னன் 6 |
| கதிர்மதலை | கதிர்மதலை | — | பானுமகன் |
| கவசகுண்டலன் | கவசகுண்டலன் | — | கவசகுண்டலன் |
| கச்சைக் கொடியினன் | கச்சைக் கொடியோன் | — | கச்சை யுயர்ப்பான் |
| கானீனன் | கானீனன் | — | கானீனன் |
| அங்கர்கோமான் | அங்கர்கோமான் | — | அங்கர்வேந்து |
| **வீமன் 1—5** | வீமன் 7 | — | வீமன் 15 |
| மடங்கற் கொடியோன் | கோளரிக் கொடியோன் | — | சீயக் கொடியோன் |

## செய்யுள் —117

| | | | |
|---|---|---|---|
| மாருதி | மாருதி | — | மாருதி |
| வாயுமைந்தன் | வாயுமைந்தன் | — | — |
| இடிம்பைதன் கொழுநன் | இடுமபி கொழுநன் | — | இடும்பிமன் |
| கதாயுதன் | கதாயுதன் | — | கதயன் |

மிகை: பிங்: 1 மிகுகொடையாளன்

2 விருகோதரன்

கயா: 1 — 2 —

நாம: 1 —

2 காரி, பிரகோதரன், கடற்கயனப்பன் பார் பிளந்தோன், சல்லியனைக்கொன்றோன் சுயதோனனைக்கொன்றோன் சந்தனைக் கொன்றோன் கீசகனைக்கொன்றோன் இடும்பனைக்கொன்றோன் பகனைக் கொன்றோன்

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 117ல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள் :**

— —

**பிற தமிழ்ச் சொற்கள் :**

கன்னன், கதிர்மதலை, கவசகுண்டலன், கச்சைக் கொடியினன், அங்கர்கோமான், மடங்கற்கொடியோன், இடிம்பைதன் கொழுநன்

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை :**

— —

செய்யுள்—117

**வட சொற்கள்:**

*கானீனன், வீமன், மாருதி*

**மணிப் பவளச் சொற்கள்:**

*வாயுமைந்தன், கதாயுதன்*

## அருச்சுனன்

*குற்றமில்கிருட்டிணன்பற்குனன்றனஞ்சயன்காண்டீவன்*
*வெற்றிசேர்சவ்வியசாசிவீபற்சுவிசயன்பார்த்தன்*
*சொற்றகேசவர்க்குத்தோழன்சுவேதவாகனன்கிரீடி*
*அற்றமிலருச்சுனற்கேயமைந்தபேர்பன்னொன்றாமே*

118 குற்றமில் கிருட்டி ணன்,பற்
குனன்,தனஞ் சயன்,காண் டீவன்
வெற்றிசேர் சவ்விய சாசி
வீபற்சு, விசயன், பார்த்தன்
சொற்றகே சவர்க்குத் தோழன்
சுவேதவா கனன்,கி ரீடி
அற்றமில் அருச்சு னற்கே
அமைந்தபேர் பன்னொன் றாமே[1]

**பெ. பொ. விளக்கம்:**

அருச்சுனன்-தூய செயல் உடையவன்
கிருட்டிணன்-கரிய நிறம் உடையவன்

---

பாடவேறுபாடு

1. **'அபிதானம் ஆகும் என்ப'** — இயன்ற இடங்களில் ஆசிரியர் பெயர்களின் கூட்டெண்ணிக்கை கூறுவர். 'பன்னொன்று' என்னும் கூட்டெண் அறிவிக்கும் பாடம் தள்ளுதற்குரியது அன்று.

## செய்யுள் — 118

பற்குனன்-உத்திர நாளில் பிறந்தவன்
தனஞ்சயன்-வெற்றியையே செல்வமாக உடையவன்
காண்டீவன்-காண்டீவம் என்னும் வில்லை உடையவன்
சவ்வியசாசி-இடக்கையாலும் அம்பு எய்யும் ஆற்றல் உடையவன்
வீபற்சு-வெற்றி பெறும் எண்ணத்தின் மேலிட்டவன்
விசயன்-வெற்றியில் சிறப்பானவன்
பார்த்தன்-பிருதையின் மகன்
கேசவர்க்குத் தோழன்-கண்ணனுக்கு நண்பன்
சுவேதவாகனன்-வெள்ளைக் குதிரையை ஊர்தியாக உடையவன்
கிரீடி-சிறப்பான அரசமுடி அணிந்தவன்

அற்றம் இல்-குறை இல்லாத
பன்னொன்று-பதினொன்று

### ஒப்பீடு

| சூடாமணி—118 | பிங்கலம்—743 | கயாதரம்— | நாமதீபம்— 145 |
|---|---|---|---|
| அருச்சுனன் 1-11 | அருச்சுனன் 1-15 | ... | அருச்சுனன் 14 |
| கிருட்டிணன் | கிருட்டிணன் | ... | கிருட்டிணன் |
| பற்குனன் | பற்குனன் | ... | பற்குணன் |
| தனஞ்சயன் | தனஞ்சயன் | ... | தனஞ்செயன் |
| காண்டீவன் | காண்டீபன் | ... | — |
| சவ்வியசாசி | சவ்வியசாசி | ... | ... |
| வீபற்சு | வீபற்சு | ... | — |
| விசயன் | விசயன் | .. | விசயன் |
| பார்த்தன் | பார்த்தன் | — | பார்த்தன் |
| கேசவர்க்குத் தோழன் | கிருட்டிண சகாயன் | ... | கண்ணன் மைத்துனன் |
| சுவேதவாகனன் | சுவேதவாகனன் | — | சுவேதன் |
| கிரீடி | கிரீடி | ... | கிரீடி |

**மிகை பிங்:** சுரேந்திரன்மைந்தன், மாதவிகொழுநன் வானரக்கொடியோன், ஆண்தொழில்மைந்தன்

**கயா:** —

**நாம:** காவெரித்தோன், அனுமதுவசன், விண்நிறைசேய், ஈசன்முடிமேல்அடித்தோன், சைவன்

## செய்யுள்—118

### சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 118ல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள்:**

— —

**பிற தமிழ்ச் சொற்கள் :**

— —

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை:**

— —

**வடசொற்கள்:**

*அருச்சுனன், கிருட்டிணன், பற்குனன, தனஞ்சயன் காண்டீவன், சவ்வியசாசி, வீபற்சு, விசயன், பார்த்தன் சுவேதவாகனன், கிரீடி*

**மணிப்பவளச் சொற்கள்:**

கேசவர்க்குத்தோழன்

### சேரன்

வில்லவன்கொங்கன்வஞ்சிவேந்தனேபோந்தின்றாரோன்
கொல்லிவெற்பன்குடக்கோக்குட்டுவன்குடகன்கோதை
மல்லல்சேருதியன்வானவரம்பனேமலயமானே
செல்லநீர்பொருநையாற்றோன்சேரலன்சேரன்பேரே

**119** வில்லவன், கொங்கன், வஞ்சி
வேந்தனே போந்தின் தாரோன்
கொல்லிவெற் பன்,கு டக்கோக்
குட்டுவன், குடகன், கோதை

## செய்யுள் — 119

மல்லல்சேர் உதியன், வான
வரம்பனே மலய மானே
செல்லல்தீர் பொருனை ஆற்றோன்
சேரலன் சேரன் பேரே

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

சேரன்-சேரர் குலத்தவன்
வில்லவன்-வில்கொடியை உடையவன்
கொங்கன்-கொங்க நாட்டைக் கொண்டவன்
வஞ்சி வேந்தன்-வஞ்சி நகரத்தைத் தலைநகராகக் கொண்ட மன்னன்
போந்தின் தாரோன்-பனம்பூ மாலையை அணிந்தவன்
கொல்லிவெற்பன்-கொல்லி மலையை உடையவன்
குடக்கோ-மேற்கு நாட்டுத்தலைவன்
குட்டுவன்-குட்ட நாடு உடையவன்
குடகன்-குடக நாடு உடையவன்
கோதை-குற்றமற்ற சிறப்புடையவன்
உதியன்-உயர்ந்தெழுந்த தோற்றத்தவன்
வானவரம்பன்-வான் உயர்ந்த மலை வரை தன் நாட்டு எல்லையை விரித்தவன்
மலயமான்-மலயமா நாட்டை உடையவன்
பொருனை ஆற்றோன்-ஆன் பொருனை ஆற்றை உடையவன்
சேரலன்-எவராலும் சேரப்படுபவன்
மல்லல்சேர்-வலிமை பொருந்திய
செல்லல்தீர்-துன்பத்தைத்தீர்க்கும்

## ஒப்பீடு

| சூடாமணி—119 | பிங்கலம்—745 | கயாதரம்—92 | நாமதீபம்—148 |
|---|---|---|---|
| சேரன் *1—14* | சேரன் *1—17* | சேரன் *16* | சேரன் *13* |
| வில்லவன் | வில்லவன் | வில்லவன் | வில்லவன் |
| கொங்கன் | கொங்கன் | கொங்கன் | கொங்கன் |
| வஞ்சிவேந்தன் | வஞ்சிவேந்தன் | வஞ்சிவாய்ந்தபதி | வஞ்சிவேந்து |
| போந்தின் தாரோன் | போந்தின் கண்ணியன் | போந்தடர்க் கண்ணியன் | பனம் போதன் |

## செய்யுள் — 119

| | | | |
|---|---|---|---|
| கொல்லி வெற்பன் | கொல்லிச் சிலம்பன் | கொல்லிப் பொருனை மன்னன் | — |
| குடக்கோ | குடநாடன் | — | — |
| குட்டுவன் | குட்டுவன் | குட்டுவன் | குட்டுவன் |
| குடகன் | — | — | குடகன் |
| கோதை | கோதை | கோதை | கோதை |
| உதியன் | உதியன் | உதியன் | உதியன் |
| வானவரம்பன் | வானவரம்பன் | வானவரம்பன் | வானவரம்பன் |
| மலயமான் | மலையமான் | — | மலையமான் |
| பொருனை ஆற்றோன் | பொருனைத் துறைவன் | — | பொருனைத்தென் குன்றாற்றாதி பதி |
| சேரலன் | — | சேரலன் | சேரலன் |

**மிகை பிங்:** பூழியன், பொறையன், வானவன், கேரளன் மலையன்

**கயா:** கேரளன், பூழியன், குருநாடன் பொன் வானவன்

**நாம:** —

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 119ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

*வில்லவன்-கலி-35-14,* குட்டுவன்-சிறுபாண் 49 கோதை-முருகு 200 உதியன்-நற்-113-9 வானவரம்பன்-பதி-58-12

**பிற தமிழ்ச் சொற்கள்**

***சேரன், கொங்கன், வஞ்சிவேந்தன், போந்தின் தாரோன் கொல்லிவெற்பன், குடக்கோ, குடகன், மலயமான் பொருனையாற்றோன், சேரலன்***

செய்யுள்—119

கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை:

குடக்கோ, குடகன்

வட சொற்கள்:

— —

மணிப்பவளச் சொற்கள்:

— —

## சோழன்

நேரியன்சென்னிபொன்னித்துறைவனேநேரிவெற்பன்
ஆரின்மாலையனேகிள்ளியபயனேகோழிவேந்தன்
சீரியவளவன்மிக்கசெம்பியன்புலியுயர்த்தோன்
சூரியன்புனனாடன்கோச்சோழன்மாலென்றுஞ்சொல்லும்

120 நேரியன், சென்னி, பொன்னித்
துறைவனே நேரி வெற்பன்
ஆரின்மா லையனே கிள்ளி
அபயனே கோழி வேந்தன்
சீரிய வளவன் மிக்க
செம்பியன் புலிஉ யர்த்தோன்
சூரியன், புனல்நா டன்,கோச்
**சோழன்**,மால் என்றும் சொல்லும்

பெ. பொ. விளக்கம்:

**சோழன்**-சோழர் குடியினன்
நேரியன்-நேரிமலையை உடையவன்
சென்னி-தலைமைச்சிறப்பு உடையவன்
பொன்னித்துறைவன்-பொன்னி ஆற்றுத்துறையை உடையவன்
ஆரின் மாலையன்-ஆத்தி மாலையை அணிந்தவன்
கிள்ளி-உழவுத்தொழில் குடித்தலைவன்

## செய்யுள் —120

அபயன்-அச்சம் இல்லாதவன்
கோழிவேந்தன்-உறையூரைத் தலைநகராகக் கொண்ட மன்னன்
வளவன்-வயல், வளப்பமான நாட்டை உடையவன்
செம்பியன்-செம்பு போன்ற கோட்டையை உடையவன்
புலிஉயர்த்தோன்-புலிக்கொடியை உயர்த்தினவன்
சூரியன்-கதிரவன் போன்ற சிறந்த குடியிற் பிறந்தவன்
புனல் நாடன்-நீர்வளம் பொருந்திய நாட்டை உடையவன்
மால்-பெருமை உடையவன்

## ஒப்பீடு

| சூடாமணி—120 | பிங்கலம்—747-748 | கயாதரம்—93 | நாமதீபம்—147 |
|---|---|---|---|
| சோழன் 1—14 | சோழன் 1—15 | சோழன் 15 | சோழன் 14 |
| நேரியன் | நேரியன் | — | — |
| சென்னி | சென்னி | சென்னி | சென்னி |
| பொன்னித் துறைவன் | பொன்னித் துறைவன் | பொன்னித் துறைவன் | பொன்னித் துறைவன் |
| நேரிவெற்பன் | நேர்வெற்பன் | நேரிச்சிலம்பன் | நேரிவெற்பன் |
| ஆரின் மாலையன் | ஆரின்கண்ணியன் | ... | ஆர்த்தாமன் |
| கிள்ளி | கிள்ளி | — | கிள்ளி |
| அபயன் | அபயன் | அபையன் | அபயன் |
| கோழிவேந்தன் | கோழிவேந்தன் | கோழிப்பதியோன் | கோழிக்கோன் |
| வளவன் | வளவன் | வளவன் | வளவன் |
| செம்பியன் | செம்பியன் | செம்பியன் | செம்பியன் |
| புலிஉயர்த்தோன் | புலிக்கொடியோன் | புலிக்கொடியோன் | புலிக்கொடியோன் |
| சூரியன் | சூரியன் | இரவிகுலத்தவன் | சூரியன் |
| புனல்நாடன் | புனல்நாடன் | புனல்நாடன் | புனல்நாடன் |
| மால் | மால் | — | மால் |

**மிகை: பிங்:** — —

**கயா:** அனகன், ஆரியன், கன்னி, நரபதி

**நாம:** — —

செய்யுள் — 120

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 120ல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள் :**

சோழன்-அகம்-141-23 சென்னி-முருகு 85 கிள்ளி-முருகு 22
வளவன்-புறம்-34-16 செம்பியன்-சிறுபாண் 82 மால்-முருகு 12

**பிற தமிழ்ச் சொற்கள்**

நேரியன், பொன்னித்துறைவன், நேரிவெற்பன் ஆரின் மாலையன், கோழிவேந்தன், புலிஉயர்த்தோன், சூரியன் புனல்நாடன்

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை :**

வளவன்

**வட சொற்கள்:**

அபயன்

**மணிப்பவளச் சொற்கள் :**

— —

### பாண்டியன்

செழியனேகூடற்கோமான்றென்னவன்வேம்பின்றாரோன்
வழுதியேகுமரிச்சேர்ப்பன்வைகையந்துறைவன்மாறன்
விழைவுறுபொதியவெற்பன்மீனவன்கைதவன்சொற்
பழையபஞ்சவனேவெய்யகௌரியன்பாண்டியன்பேர்

121 செழியனே கூடற் கோமான்
தென்னவன், வேம்பின் தாரோன்
வழுதியே குமரிச் சேர்ப்பன்
வைகைஅம் துறைவன், மாறன்

## செய்யுள்—121

விழைவுறு பொதிய வெற்பன்
　　மீனவன், கைத வன்,சொல்
பழையபஞ் சவனே வெய்ய
　　கௌரியன் பாண்டி யன்பேர்

**பெ. பொ. விளக்கம் :**

**பாண்டியன்**-பண்டைக் குடியாகிய பாண்டிய குடியில் பிறந்தவன்
செழியன்-செழிப்பான நாட்டை உடையவன்
கூடல் கோமான்-மதுரைக்கு அரசன்
தென்னவன்-தென் நாடு உடையவன்
வேம்பின் தாரோன்-வேப்ப மாலையை அணிந்தவன்
வழுதி-குற்றமற்ற சிறப்பு உடையவன்
குமரிச் சேர்ப்பன்-கன்னியாகுமரிக் கடல் கரைவரை ஆள்பவன்
வைகையம் துறைவன்-வைகை ஆற்றுத் துறையினன்
மாறன்-பகைஞர் மாறுபாட்டில் வல்லவன்
பொதிய வெற்பன்-பொதிய மலையை உடையவன்
மீனவன்-மீன் கொடியை உடையவன்
கைதவன்-ஒழுக்கத்தை மிகுதியாகக் கொண்டவன்
பஞ்சவன்-புகழ் பரவப் பெற்றவன்
கௌரியன்-பகைவர்க்குக் கேடு செய்பவன்

விழைவு உறு-விரும்பத்தக்க
வெய்ய-கடுமையான

## ஒப்பீடு

| சூடாமணி—121 | பிங்கலம்—750 | கயாதரம்—94 | நாமதீபம்—146 |
|---|---|---|---|
| பாண்டியன் 1—13 | பாண்டியன் 1—13 | பாண்டியன் 16 | பாண்டியன் 16 |
| செழியன் | செழியன் | செழியன் | செழியன் |
| கூடற்கோமான் | கூடற்கோமான் | கூடற்கொருகோன் | மதுரைமன் |
| தென்னவன் | தென்னவன் | தென்னவன் | தென்னன் |
| வேம்பின் தாரோன் | வேம்பின் கண்ணியன் | நிம்பத்தாரன் | வேம்பன் |

## செய்யுள்—143

| | | | |
|---|---|---|---|
| **கூன் 1—1** | கூனன் 1—1 | கூன் 2 | கூன் 2 |
| கோணல் | கோணன் | கோணல் | கோணல் |
| **குறள் 1—3** | குறளன் 1—3 | குறள் 3 | குறள் 4 |
| சிந்து | சிந்தன் | சிந்து | சிந்து |
| வாமனம் | வாமனன் | வாமனம் | வாமனம் |
| குஞ்சம் | குஞ்சன் | ... | குஞ்சம் |
| **செவிடு 1—1** | செவிடன் 1—1 | செவிடு 2 | செவிடன் 2 |
| வதிர் | வதிரன் | வெதிர் | வெதிர் |
| **முடம் 1—2** | முடவன் 1—2 | முடம் 2 | முடம் 4 |
| பங்கு | பங்கு | பங்கு | பங்கு |
| குணி | — | ... | குணில் |
| **ஊமை 1—2** | ஊமை 1 2 | மூமை 3 | ஊமை 3 |
| மூகை | மூகை | மூகை | மூகை |
| மூங்கை | மூங்கை | மூங்கை | மூங்கை |
| **அலி 1—4** | அலி 1—5 | அலி 7 | அலி 7 |
| பெண்டகன் | பெண்டகன் | பெண்டகர் | பெண்டகம் |
| பேடி | பேடன் | பேடியர் | ... |
| நபுஞ்சகன் | நபுஞ்சகன் | ... | நபுஞ்சகம் |
| சண்டன் | சண்டன் | சண்டன் | சண்டம் |

**மிகை:** **பிங்:** 1 — 2 — 3 —
4 — 5 சூனியன் 6 —
7 பேதை

**கயா:** 1 ... 2 குஞ்சம் 3 ...
4 ... 5 ... 6 ...
7 பேடுகள், பேடர்கள். கிலிபம்

**நாம:** 1 அந்தன் 2 ... 3 ...
4 5 மொண்டி 6 ...
7 பேடு, நஞ்சகம், கிலீபம்

செய்யுள்—144

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 144ல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள் :**

சிதடன்—புறம் 73-7 கூன்—குறு 51-1 குறள்—பெரும்பாண் 193 செவிடு-பரி 2-38 முடம்—ஐங் 31-3 பங்கு—பரி 11-7 ஊமை—மலை 501 பேடி—அகம் 206-2

**பிற தமிழ்ச் சொற்கள் :**

குருடன், கோணல், சிந்து, குஞ்சம், வதிர், குணி மூகை, மூங்கை, அலி, பெண்டகன், சணடன்

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை :**

குஞ்சம், வதிர், குணி, மூகை, மூங்கை, பெண்டகன்

**வட சொற்கள்:**

அந்தகன், வாமனம், நபுஞ்சகன்

**மணிப்பவளச் சொற்கள் :**

— —

## கொலையாளி, துன்பம் செய்பவன்
## அச்சம் கொண்டவன், வேகி, வஞ்சகன்

காதகன்சாருகன்றான்கடுங்கொலையாளிநாமம்
வேதனைசெய்வோன்பேரேயருந்துதன்விளம்பலாகும்
பீதனேசகிதனோடுபீருவுமச்சமுள்ளோன்
ஓதியசவனன்வேகியுற்றவஞ்சகனிசாதன்

145 காதகன், சாருகன்தான்
கடுங்கொலையாளி நாமம்
வேதனை செய்வோன் பேரே
அருந்துதன் விளம்பல் ஆகும்

## செய்யுள் — 145

பீதனே சகித னோடு
பீருவும் அச்சம் உள்ளோன்
ஓதிய சவனன் வேகி
உற்றவஞ் சகன், நி சாதன்

**பெ. பொ. விளக்கம்:**

காதகன்-கொல்லும் தொழிலுடையவன்
சாருகன்-பிழை செய்பவன்

**வேதனை செய்வோன்**-பிறருக்குத் துன்பம் செய்பவன்
அருந்துதன்-புண்படுமாறு குடைபவன்
பீதன், பீரு-அச்சம் உள்ளவன்
சகிதன்-பொறுத்துக்கொள்பவன்

**வேகி**-வினாவு உடையவன்
சவனன்-மிக்க கதி உடையவன்

**வஞ்சகன்** -கவடு கொண்டவன்
நிசாதன்-தீய செயல் உடையவன்

## ஒப்பீடு

| சூடாமணி—145 | பிங்கலம்—831, 832, 877 878, 879 | கயாதரம்— | நாமதீபம்—169, 171 170 |
|---|---|---|---|
| கொலையாளி 1-2 | கொலையாளன் 1-2 | ... | கொலையன் 3 |
| காதகன் | காதகன் | ... | காதகன் |
| சாருகன் | சாருகள் | ... | சாருகன் |
| வேதனை செய்வோன் 1-1 | வேதனை செய்வோன் 1-1 | ... | ... |
| அருந்துதன் | அருந்துதன் | ... | ... |
| அச்ச முள்ளோன் 1-3 | அச்ச முடையோன் 1-5 | ... | அச்ச முற்றோன் 4 |
| பீதன் | பீதன் | ... | பீதன் |

## செய்யுள்—145

| | | | |
|---|---|---|---|
| சகிதன் | சிதன் | ... | சகிதன் |
| பீரு | பீரு | ... | பீரு |
| வேகி 1—1 | வேக முடையோன் 1-2 | ... | ... |
| சவனன் | சவனன் | ... | ... |
| வஞ்சகன் 1—1 | வஞ்சனை யாளன் 1-2 | ... | வஞ்சகன் 4 |
| நிசாதன் | நிகாதன் | ... | நிசாதன் |

மிகை பிங்; 1 — 2 — 3 கரிதன், காதரன்
4 — கவனன் 5 மாயன்

கயா: 1 — 2 — 3 —
4 — 5 —

நாம: 1 — 2 — 3 —
4 — 5 சவனன், வேகி

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 145ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

— —

**பிற தமிழ்ச் சொற்கள்:**

கொலையாளி, அருந்துதன், அச்சமுள்ளோன், வஞ்சகன்

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை:**

அருந்துதன்

**வடசொற்கள்:**

காதகன், சர்ருகன், பீதன், சகிதன், பீரு, வேகி
சவனன், நிசாதன்

செய்யுள்—145

**மணிப்பவளச் சொற்கள்:**

வேதனை செய்வோன்

**காமுகர், நாகரிகர்**
**சிற்றூர்க்காரன்**

படிறர்பல்லவர்பரத்தர்பகரிடங்கழியரோடு
விடருங்காமுகருந்தூர்த்தர்மிக்கநாகரிகரென்ப
கடிநகர்ப்பதிவாழ்கின்றசதுரர்காமுகரென் றும்பேர்
அடைவுளகிராமமுற்றோன்கிராமியனாகுமன்றே

146 படிறர், பல்லவர், பரத்தர்
பகர்இடங் கழிய ரோடு
விடரும்கா முகரும் **தூர்த்தர்**
மிக்கநா **கரிகர்** என்ப
கடிநகர்ப் பதிவாழ் கின்ற
சதுரர்கா முகர்என் றும்பேர்
அடைவுள கிராமம் உற்றோன்
**கிராமியன்** ஆகும் அன்றே

**பெ. பொ. விளக்கம்:**

தூர்த்தர்-பிறர் மனைவியை வஞ்சித்துக் கவர்பவர்
படிறர்-வஞ்சகமுடையவர்
பல்லவர்-உறுதியில்லாதவர்
பரத்தர்-பிறர் மனைவியைப் புணர்வோர்
இடங்கழியர்-நல்லிடத்தினின்று கழிக்கப்படுபவர்
விடர்-ஏமாற்றுபவர்
காமுகர்-காமவெறி உள்ளவர்

**நாகரிகர்**-பாங்கான தன்மை உடையவர்
சதுரர்-திறமை உள்ளவர்
காமுகர்-பிறரால் விரும்பப்படுபவர்
**கிராமியன்**-அளவறிந்து வாழும் சிற்றூரினன்

செய்யுள் —146

## ஒப்பீடு

| சூடாமணி-146 | பிங்கலம்—867, 896 | கயாதரம்-108 | நாமதீபம்—173, 171, 177 |
|---|---|---|---|
| தூர்த்தர் 1—6 | தூர்த்தர் | தூர்த்தர் 4 | தூர்த்தர் 6 |
| படிறர் | ... | ... | படிறர் |
| பல்லவர் | ... | ... | பல்லவர் |
| பரத்தர் | ... | ... | ... |
| இடங்கழியர் | ... | ... | இடங்கழியர் |
| விடர் | விடர் | விடர் | விடர் |
| காமுகர் | காமுகர் | காமம் மிக்கவர் | ... |
| நாகரிகர் 1—2 | நாகரிகர் 1-2 | நாகரிகர் 4 | நாகரிகர் 3 |
| சதுரர் | சதுரர் | சதுரர் | சதுரர் |
| காமுகர் | காமுகர் | காமுகர் | காமுகர் |
| கிராம முற்றோன் - | ... | ... | கிராம முற்றோர் |
| கிராமியன் | ... | ... | கிராமியர் |

மிகை பிங்: 1 — 2 — 3 —

கயா: 1 ஒழுக்கம் இல்லோர் 2 நல்லோர் 3 —

நாம: 1 பரத்தர் 2 ... 3 ...

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 146ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள்:**

பல்லவர்—கலி 104-29 விடர்—முருகு 314 நாகரிகர்-நற் 355-7

**பிற தமிழ்ச் சொற்கள்**

படிறர், பரத்தர், இடங்கழியர், சதுரர், காமுகர்

செய்யுள்—146

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை :**

படிறர், இடங்கழியர்

**வட சொற்கள்:**

தூர்த்தர், கிராமியன்

**மணிப்பவளச் சொற்கள்:**

கிராமமுற்றோன்

## வல்லவன், வலிமையற்றவர், குலமுளோன், கள்வன், நோயுற்று ஒழிந்தோன், காலாள், ஆயத்தமானோன்

வலவைவல்லுநனேவல்லோன்மாட்டார்பேர்வல்லாரென்ப
குலமுளோன்குலீனனாகுங்கரியவன்குறித்தகள்வன்
வலவுநோயுற்றொழிந்தோனுல்லாகன்பதாதிகாலாள்
அலைவில்சந்நத்தனென்பதாயத்தமானோன்பேரே

147 வலவை,வல் லுநனே வல்லோன்;
மாட்டார்பேர் வல்லார் என்ப
குலம்உளோன் குலீனன் ஆகும்
கரியவன் குறித்த கள்வன்
வலவுநோய் உற்றொ ழிந்தோன்
உல்லாகன்; பதாதி காலாள்
அலைவில்சந் நத்தன் என்ப
தாயத்த மானோன் பேரே

**பெ. பொ. விளக்கம்**

**வலவை**-வன்மை உடையவன்
வல்லுநன்-வல்லமை உடையவன்

**மாட்டார்**-ஆற்றமாட்டாதவர்
வல்லார்-வன்மை உடையவர் ஆகார்

## செய்யுள்—147

குலம் உளோன்-நல்ல குலத்தவன்
குலீனன்-குலம் + ஈனன் குலச்சிறப்பை ஈனுகின்றவன் (தருபவன்)

கரியவன்-கரிய உடலினன்
கள்வன்-கருமையன்

நோய் உற்று ஒழிந்தோன்-நோய்பெற்று அது நீங்கினவன்
உல்லாகன்-நோய் நீங்கி வன்மை பெற்றவன்

காலாள், பதாதி-காலால் செல்லும் ஆள்

ஆயத்தமானோன்-போருக்கு முன் வந்தவன்
சந்நந்தன்-சட்டை அணிந்து நிற்போன்

## ஒப்பீடு

| சூடாமணி—147 | பிங்கலம்—860, 861, 954 889, | கயாதரம்—113 | நாமதீபம்—168, 169 |
|---|---|---|---|
| வல்லோன் 1—2<br>வலவை<br>வல்லுநன் | வல்லவன் 3<br>வலவை<br>வல்லுநன் | வல்லவன்<br>வலவை<br>வல்லுநர் | வல்லோன் 3<br>வலவை<br>வல்லுநன் |
| மாட்டார் 1—1<br>வல்லார் | மாட்டார் 1—1<br>வல்லார் | மாட்டாதார் 3<br>வல்லார் | மாட்டார் 2<br>வல்லார் |
| குலமுளோன்<br>குலீனன் | குலமுளோன் 1-1<br>குலீனன் | *— | ... 2<br>குலீனன் |
| கரியவன் 1—1<br>கள்வன் | ...<br>... | ...<br>... | கரியோன் 2<br>கள்வன் |

பாடவேறுபாடு :

* கயாதரம் 113 'குலீனன்' எனும் பெயரை குலம் இல்லவனுக்குத் தந்துள்ளது. குலம்—ஹீனன் எனக் கொள்ளப்பட்டது போலும், வடமொழி சந்தி குலம் ஹீனன் குலீனன் என்றாகாது



சூ - 45

## செய்யுள்—147

| | | | |
|---|---|---|---|
| நோயுற்றொழிந் தோன் *1—1* | நோயுற்றொழிந் தோன் | ... | நோய் தீர்ந்தான் 2 |
| உல்லாகன் | உல்லாபன் | ... | உல்லாபன் |
| காலாள் *1—1* | ... | காலாள் 2 | ... |
| பதாதி | ... | பதாதி | ... |
| ஆயத்த மானோன் 1-*1* | ... | ... | ஆயத்த மானோர் 2 |
| சந்நத்தன் | ... | ... | சன்னத்தர் |

| | | | | |
|---|---|---|---|---|
| மிகை: | பிங்: | *1* — | *2* — | *3* — |
| | | 4 — | 5 — | *6* — |
| | | *7* — | | |
| | கயா: | *1* ... | *2* வல்லுநர் அல்லார் | *3* — |
| | | 4 ... | 5 ... | *6* ... |
| | | 7 ... | | |
| | நாம: | 1 ... | *2* ... | *3* ... குலக்கேடன் |
| | | 4 ... | 5 ... | *6* ... |
| | | 7 ... | | |

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 147ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள்:**

வல்லோன்-பெரும்பாண் 472 வல்லார்-மலை 78 கள்வன்-நற் 40-10

**பிற தமிழ்ச் சொற்கள்**

வலவை, வல்லுநன், மாட்டார், குலமுளோன், குலீனன் கரியவன், நோயுற்றொழிந்தோன், உல்லாகன், காலாள் பதாதி

செய்யுள்—147

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை:**

வலவை, வல்லுநன்

**வட சொற்கள்:**

சந்நத்தன்

**மணிப்பவளச் சொற்கள் :**

ஆயத்தமானோன்

## நுண்ணறிவு இல்லாதவன்
## உடை உடுத்தாதவன், மிக்க புகழாளன்
## அருளாளன், மங்கலப் பாடகர்

மந்தனேகூர்மையில்லோனக்கனிர்வாணிநாமம்
வெந்திறலியவுளென்பமிகுபுகழாளன்பேரே
உந்தியவருளோனேகாருண்ணியனென்பரெட்டர்
வந்திகள்கவிகள்கற்றோர்வண்டரேகடிகைமாககள்

148 மந்தனே கூர்மை இல்லோன்
நக்கன், நிர் வாணி நாமம்
வெந்திறல் இயவுள் என்ப
மிகுபுக ழாளன் பேரே
உந்திய அருளோ னேகா
ருண்ணியன் என்பர் எட்டர்
வந்திகள், கவிகள், கற்றோர்
வண்டரே கடிகை மாக்கள்

**பெ. பொ. விளக்கம்:**

**கூர்மை இல்லோன்**—அறிவு நுணுக்கம் இல்லாதவன்
மந்தன்—அறிவுக் குறைவானவன்

**நிர்வாணி**—ஆடை கட்டாதவன்
நக்கன்—நகுதற்கு உரியவன்

## செய்யுள்—148

**இயவுள்**—செல்வாக்குள்ளவன்
காருண்ணியன்—(கருணை) அருள் உடையவன்

**கடிகை மாக்கள்**—நாழிகை அறிவிப்போர்
எட்டர்—விருப்பம் கொடுப்பவர்
வந்திகள்—போற்றி சொல்வோர்
கவிகள்—புகழ்ந்து நயம்படச் செய்யுள் புனைவோர்
வண்டர்—இனிய ஓசை எழுப்புவோர்

## ஒப்பீடு

| சூடாமணி-148 | பிங்கலம்-895, 894, 891 897: 787 | கயாதரம்-109 | நாமதீபம்-165, 168, 169 |
|---|---|---|---|
| கூர்மையில் லோன் *1—1* | கூர்மையில் லோன் *1—1* | — | கூர்ப்பிலி 2 |
| மந்தன் | மந்தன் | — | மந்தன் |
| நிர்வாணி | நிருவாணி *1—1* | — | நிருவாணி 2 |
| நக்கன் | நக்கன் | — | நக்கன் |
| மிகுபுக ழாளன் *1—1* | புகழாளன் *1—1* | — | புகழோன் 2 |
| இயவுள் | இயவுள் | — | இயவுள் |
| அருளோன் *1—1* | கருணையுள் ளோன் *1—1* | — | அருளுள்ளோன் 2 |
| காருண்ணியன் | காருண்ணியன் | — | காருண்ணியன் |
| கடிகை மாக்கள் *1—5* | கடிகை மாக்கள் *1—3* | கடிகையர் 7 | கடிகையர் 2 |
| எட்டர் | எட்டர் | எட்டர் | — |
| வந்திகள் | — | — | — |
| கவிகள் | — | கவிகள் | — |
| கற்றோர் | — | மெய்கற்றோர் | — |
| வண்டர் | — | — | வண்டர் |

செய்யுள் — 148

| | | | |
|---|---|---|---|
| மிகை பிங்: | 1 — | 2 — | 3 — |
| | 4 — | 5 மங்கலப்பாடகர். பெருநம்பிகள் | |
| கயா: | 1 — | 2 — | 3 — |
| | 4 — | 5 நாவலர், மங்கலப் பாடகர் | |
| | பாவலர், பல்கலை வல்லோர் | | |
| நாம: | 1 ... | 2 ... | 3 ... |
| | 4 ... | 5 ... | |

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 148ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

கற்றோர்-முருகு 133

**பிற தமிழ்ச் சொற்கள் :**

கூர்மையில்லோன், மிகுபுகழோன், இயவுள், அருளோன் கடிகைமாக்கள், எட்டர், கவிகள், வண்டர்

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை :**

இயவுள், எட்டர், வண்டர்

**வட சொற்கள்:**

மந்தன், நிர்வாணி, நக்கன், காருண்ணியன் வந்திகன்

**மணிப் பவளச் சொற்கள்:**

— —

## செய்யுள் — 149

## கொடையாளன்
## எல்லையின்றிக் கொடுப்பவன்
## ஏற்போன்

*புரவலனீகையாளன்போற்றும்வேளாளன்றியாகி*
*உரைகெழுவேள்வியாளனுபகாரிகொடையுளோனாம்*
*வரைவறக்கொடுத்தளிப்போன்வள்ளியோனென்றுங்கூறும்*
*இரவலன்பரிசிலாளன்யாசகன்றீனனேற்போன்*

149 *புரவலன் ஈகை யாளன்*
போற்றும்வே ளாளன். *தியாகி*
உரைகெழு வேள்வி யாளன்
உபகாரி கொடையு ளோனாம்
வரைவறக் கொடுத்த ளிப்போன்
வள்ளியோன் என்றும் கூறும்
இரவலன் பரிசி லாளன்
யாசகன், தீனன் ஏற்போன்

**பெ. பொ. விளக்கம்:**

**கொடை உளோன்**-கொடுக்கும் மனம் உள்ளவன்
புரவலன்-புரத்துயில் வல்லவன் (நச்சர்)
ஈகையாளன்–இல்லார்க்கு ஈயும் ஆண்மையுடையவன்
வேளாளன்-உழைத்து வழங்குபவன்
தியாகி-(பொருளைப் பிறரிடம்) விடுதல் உடையவன்
வேள்வியாளன்-கொடையை விருப்பமாகக் கொண்டவன்
உபகாரி-பிறர்க்குத் துணை நிற்பவன்

**வரைவறக்கொடுத்தளிப்போன்**-எல்லையின்றிக் கொடுத்துக் காப்பவன்
வள்ளியோன்–வள்ளல்

**ஏற்போன்**-கொடுப்பவரிடமிருந்து ஏற்றுக்கொள்வதில் வல்லவன்
இரவலன்-தாழ்நது பெறுவதில் வல்லவன் (நச்சர்)
பரிசிலாளன்-பெற்ற பரியப்பொருளைக் கையாள்பவன்
யாசகன்-பணிந்து நின்று பொருள் கேட்பவன்
தீனன்-பொருள் கேட்பதில் தாழ்ந்து நிற்பவன்

செய்யுள்—149

## ஒப்பீடு

| சூடாமணி-149 | பிங்கலம்—863, 865 | கயாதரம்-108 | நாமதீபம்—173, 173, 172 |
|---|---|---|---|
| கொடை யுளோன் 1—6 | கொடை யுளோன் 1—5 | ... | ... 8 |
| புரவலன் | புரவலன் | ... | புரவலன் |
| ஈகையாளன் | ஈகையாளன் | ... | ஈவோன் |
| வேளாளன் | வேளாளன் | ... | வேளாளன் |
| தியாகி | தியாகி | ... | தியாகி |
| வேள்வியாளன் | ... | ... | ... |
| உபகாரி | உபகாரி | ... | உபகாரி |
| வரைவறக் கொடுத்தளிப் போன் 1—1 | ... 3 | ... | ... |
| வள்ளியோன் | வள்ளியோன் | ... | ... |
| ஏற்போன் 1—4 | ... 3 | ... | ஏற்போன் 5 |
| இரவலன் | இரவலர் | ... | இரப்போன் |
| பரிசிலாளன் | பரிசிலாளர் | ... | பரிசிலாளன் |
| யாசகன் | யாசகர் | ... | யாசகன் |
| தீனன் | ... | ... | தீனன் |

மிகை பிங்; 1 — 2 வள்ளல்- கொடையோன்
3 —

கயா: 1 — 2 — 3 —

நாம: 1 வள்ளியோன், தாதா, வள்ளல்
2 — 3 —

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 149ல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள் :**

புரவலன்—சிறுபாண் 125 வள்ளியோன்—புறம் 119-7
இரவலன்—முருகு 284

## செய்யுள்—149

**பிற தமிழ்ச் சொற்கள்:**

கொடையுளோன், ஈகையாளன், வேளாளன் வேள்வியாளன் வரைவறக்கொடுத்தளிப்போன், ஏற்போன், பரிசிலாளன்

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை:**

புரவலன், இரவலன்

**வடசொற்கள்:**

தியாகி, உபகாரி, யாசகன், தீனன்

**மணிப்பவளச் சொற்கள்:**

— —

## திருடர்
## வறுமையாளன்

கரவடர்சோரர்தேனர்பட்டிகர்புரையோர்கள்வர்
திருடராந்தரித்திரன்பேரகிஞ்சனன்றீனன்பேதை
மருவுநல்கூர்ந்தோனில்லோன்வறியனாதுலனேயேழை
விரவியவுறுகணாளனிலம்பாட்டோன்மிடியனாமே

150 கரவடர், சோரர், தேனர்
பட்டிகர், புரையோர், கள்வர்
**திருடராம் தரித்திரன்பேர்**
அகிஞ்சகன், தீனன், பேதை
**மருவுநல் கூர்ந்தோன், இல்லோன்**
வறியன் ஆதுலனே ஏழை
விரவிய உறுகணாளன்
இலம்பாட்டோன், மிடியன், ஆமே

**பெ. பொ. விளக்கம்**

**திருடர்**—பிறர் பொருளைத் தம்பால் திரித்துக்கொள்பவர்
**கரவடர்**-மனக்கவருள்ளவர்

## செய்யுள்—150

சோரர்-பிறரைச் சோர்வடையச் செய்பவர்
தேனர்-பிறர் பொருளை எடுப்பதில் வண்டு போல்பவர்
பட்டிகர்-ஊரில் திரிவோர்
புரையோர்-குற்றம் உடையவர்
கள்வர்-களவு செய்பவர்

**தரித்திரன்**-நன்மையில் தரிக்காமல் கேடுடையவன்
அகிஞ்சனன்-சிறிதும் பொருள் இல்லாதவன்
பேதை-பொருளின்றிப் பேதுறுபவன்
நல்கூர்ந்தோன்-நல்குரவு உடையவன்
வறியன்-செல்வம் வற்றியவன்
ஆதுலன்-நோய் உடையவன்
உறுகணாளன்-உற்றதுன்பத்தவன்
இலம்பாட்டோன்-பொருள் இல்லாத நிலைகொண்டவன்
மிடியன்-வறுமை உடையவன்

## ஒப்பீடு

| சூடாமணி-150 | பிங்கலம்—876, 885, 886 | கயாதரம்-107 | நாமதீபம்—167, 170 |
|---|---|---|---|
| **திருடர்** *1—6* | திருடர் 7 | ... 3 | திருடர் 3 |
| கரவடர் | கரவடர் | கரவடர் | ... |
| சோரர் | சோரர் | சோரர் | சோரர் |
| தேனர் | ... | ... | ... |
| பட்டிகர் | பட்டிகர் | ... | ... |
| புரையோர் | புரையோர் | ... | ... |
| கள்வர் | ... | கள்ளர் | கள்வர் |
| **தரித்திரன்** 1—*11* | தரித்திரர் *1—26* | ... | தரித்திரன் 3 |
| அகிஞ்சனன் | அகிஞ்சனர் | ... | ... |
| தீனன் | ... | ... | ... |
| பேதை | பேதையர் | ... | ... |
| நல்கூர்ந்தோன் | நல்கூர்ந்தோர் | ... | ... |
| இல்லோன் | இல்லோர் | ... | ... |
| வறியன் | வறியோர் | ... | ... |
| ஆதுலன் | ஆதுலர் | ... | ஆதுலன் |

## செய்யுள்—150

| | | | |
|---|---|---|---|
| ஏழை | ஏழையர் | ... | ஏழை |
| உறுகணாளன் | ... | ... | ... |
| இலம்பாட்டோன் | ... | ... | ... |
| மிடியன் | ... | ... | ... |

**மிகை பிங்;** 1 கட்டோர், கரவர்
2 —

**கயா:** 1 — 2 —

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 150ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

புரையோர்—மதுரை 737 பேதை—நற் 51-10 கள்வர்-நற் 28-4 இல்லோன்—குறு 120-1 ஏழை—கலி 55-22

**பிற தமிழ்ச் சொற்கள்**

திருடர், கரவடர், சோரர், தேனர், பட்டிகர் தரித்திரன் நல்கூர்ந்தோன், வறியன், உறுகணாளன், இலம்பாட்டோன் மிடியன்

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை:**

கரவலர், பட்டிகர், மிடியன்

**வடசொற்கள்:**

அகிஞ்சனன், தீனன், ஆதுலன்

**மணிப்பவளச் சொற்கள்:**

— —

## செய்யுள் —151

### திண்ணியன்
### தானைத்தலைவர்

வயவனே திறலோன்மற்றைவண்டனேமிண்டன்மள்ளன்
வியவனேவிறலோன்மீளிவீரனே திண்ணியன்பேர்
நயமில்கூளியரேறாளர்நாட்டும்வாளுழவர்மள்ளர்
சயமிகுமறவர்தானைத்தலைவராம்படருமாமே

151 வயவனே திறலோன் மற்றை
லண்டனே மிண்டன், மள்ளன்
வியவனே விறலோன், மீளி
வீரனே **திண்ணியன்**பேர்
நயம்இல்கூளியர் ஏறாளர்
நாட்டும்வாள் உழவர், மள்ளர்
சயமிகு மறவர் **தானைத்**
**தலைவராம்** படரும் ஆமே

**பெ. பொ. விளக்கம்:**

**திண்ணியன்**-உறுதி உடையவன்
வயவன்-வலிமை உடையவன்
வண்டன்-உடலால் திறமையுள்ளவன்
மிண்டன்-மிண்டுதல் உடையவன்
மள்ளன்-மண்டும் வலியவன்
வியவன்-ஏவல் உடையவன்
விறலோன்-வெற்றிபெறும் வலிமையன்
மீளி-எந்த இடரினின்றும் மீளும் வல்லமை உடையவன்

**தானைத்தலைவர்**-தார் தாங்கிச் செல்வோரின் தலைவர்
கூளியர்-அஞ்சாது தாக்குபவர்
ஏறாளர்-காளை போன்ற வலிமையை ஆள்பவர்
வாள் உழவர்-வாட்படையை ஏராகக்கொண்டு களப்போரில் உழுபவர்
மறவர்-போர் வலிமை உடையவர்
படர்-போரில் கொல்லும் தொழிலினர்

செய்யுள்—151

## ஒப்பீடு

| சூடாமணி—151 | பிங்கலம்—870, 871, | கயாதரம்—113 | நாமதீபம்—139 |
|---|---|---|---|
| திண்ணியன் 1-9 | திண்ணியோன் 1—10 | ... | ... 12 |
| வயவன் | ... | ... | வயவர் |
| திறலோன் | திறலோன் | ... | திறலோர் |
| வண்டன் | வண்டன் | ... | வண்டர் |
| மிண்டன் | மிண்டன் | ... | மிண்டர் |
| மள்ளன் | மள்ளன் | ... | மள்ளர் |
| வியவன் | வியவன் | ... | வியவர் |
| விறலோன் | விறலோன் | ... | ... |
| மீளி | ... | ... | ... |
| வீரன் | வீரன் | ... | வீரர் |
| தானைத் தலைவர் 1—6 | படையாளர் 1—10 | ... | சேனைத் தலைவர் 6 |
| கூளியர் | கூளியர் | ... | கூளியர் |
| ஏறாளர் | ... | ... | ஏறாளர் |
| வாளுழவர் | வாளுழவர் | ... | ... |
| மள்ளர் | மள்ளர் | ... | ... |
| மறவர் | மறவர் | ... | ... |
| படர் | படர் | ... | ... |

**மிகை பிங்:** 1 பொருநன், விடலை, பண்ணவன்
2 பொருநர், இகலர், செருநர் வாளாளர் வீரர்

**கயா:** 1 — 2 —

**நாம:** 1 மறவர், பேடர், வாளுழ்வர் தெவ்வர் சூரர்
2 பொருநர், துணைணியர், மீளியர்

செய்யுள்—151

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 151ல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள் :**

*வயவன்—நற்றிணை 260-6 வண்டன்—பதி 31-22 மள்ளன்—ஐங் 283-4 விறலோன்—நற் 304-10 மீளி—பொருந 140 கூளியர்—முருகு 282 மள்ளர்—பெரும்பாண் 455 மறவர்—பெரும்பாண் 455 மறவர்—பெரும்பாண் 455 படர்—மதுரை 431*

**பிற தமிழ்ச் சொற்கள்:**

*திண்ணியன், திறலோன், மிண்டன், வியவன், ஏறாளர் வாளுழவர், தானைத்தலைவர்*

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை:**

*வயவர், திறலோன், வியவன்*

**வட சொற்கள்:**

*வீரன்*

**மணிப் பவளச் சொற்கள்:**

— —

### பகைவர்

அரிகளேசெறுநர்சேராரமராருள்ளாரேநள்ளார்
மருவலர்தெவ்வர்மாணார்மாற்றலர்மன்னாரொன்னார்
தரியலரொட்டார்வட்கார்சார்பிலார்பற்றார்செற்றார்
பரரொடுகேளாரெல்லார்பகைவர்பேரெழுமூன்றாமே

152 அரிகளே செறுநர், சேரார்
அமரர் உள் ளாரே நள்ளார்
மருவலர், தெவ்வர், மாணார்
மாற்றலர், மன்னார், ஒன்னார்

## செய்யுள்—152

தரியலர், ஒட்டார், வட்கார்
சார்பிலர், பற்றார், செற்றார்
பரரொடு கேளார், ஒல்லார்
பகைவர்பேர் எழுமூன் றாமே

**பெ. பொ. விளக்கம்:**

பகைவர்-தொடர்பு பிளந்து பிரிவுடையவர்
அரிகள்-போருக்கு வருவோர்
செறுநர்-செறுதல் உடையவர்
சேரார்-ஒன்றுபடாதவர்
அமரர்-விருப்பம் இல்லாது நீங்கியவர்
உள்ளார்-நினையாதவர்
நள்ளார்-நட்பு கொள்ளாதவர்
மருவலர்-பொருந்தாதவர்
தெவ்வர்-பகை உடையவர்
மாணார்-மாண்புகொள்ளாதவர்
மாற்றலர்-மாறுபாடு கொண்டவர்
மன்னார்-பொருந்தாதவர்
ஒன்னார்-ஒன்றாதவர்
தரியலர்-அன்பு தரிக்காதவர்
ஒட்டார்-ஒட்டிச் சேராதவர்
வட்கார்-சினம் குறையாதவர்
சார்பிலார்-சாராமல் நீங்கியவர்
பற்றார்-அன்புகொண்டு பற்றாதவர்
செற்றார்-செறுதல் கொண்டவர்
பரர்-கொல்லத் திரிவோர்
கேளார்-உடன்பாட்டைக் கேளாதவர்
ஒல்லார்-பொருந்தாதவர்
எழுமூன்று-இருபத்தொன்று

## ஒப்பீடு

| சூடாமணி—152 | பிங்கலம்—947, | கயாதரம்—114 | நாமதீபம்—187 |
|---|---|---|---|
| பகைவர் 1—21 | பகைஞர் 24 | பகை 23 | பகைவோர் 21 |
| அரிகள் | அரிகள் | அரி | அரிகள் |

## செய்யுள்—152

| | | | |
|---|---|---|---|
| செறுநர் | செறுநர் | செறுநர் | செறுநர் |
| சேரார் | சேரார் | ... | ... |
| அமரர் | ... | அமரர் | அமரர் |
| உள்ளார் | ... | ... | உள்ளார் |
| நள்ளார் | நள்ளார் | நள்ளார் | நள்ளார் |
| மருவலர் | புல்லார் | ... | மருவார் |
| தெவ்வர் | தெவ்வர் | தெவ்வர் | தெவ்வர் |
| மாணார் | ... | ... | மாணார் |
| மாற்றலர் | மாற்றலர் | ... | மாற்றார் |
| மன்னார் | பொருந்தலர் | ... | மன்னார் |
| ஒன்னார் | ஒன்றலர் | ஒன்னார் | ஒன்னார் |
| தரியலர் | தரியலர் | தரியலர் | தரியார் |
| ஒட்டார் | ஒட்டார் | ஒட்டார் | ... |
| வட்கார் | ... | ... | ... |
| சார்பிலார் | ... | சாரலர் | ... |
| பற்றார் | பற்றலர் | ... | பற்றார் |
| செற்றார் | செற்றார் | — | செற்றார் |
| பரர் | ... | பரர் | பரர் |
| கேளார் | .. | ... | ... |
| ஒல்லார் | ஒல்லார் | ஒல்லார் | ... |

**மிகை:** **பிங்:** 1 நோனார், நண்ணலர், திருந்தலர், மேவலர் இன்னார், கருதலர், எண்ணலர், அடையலர் தெறுநர்

**சூயா:** மடங்கார், அமித்திரர், கருதலர் நவ்வார் மறுவார், கறுத்தார், அடர்வோர், நோவார் நிகரார், முனைந்தார், எதிர்ந்தவர்

**நாம:** இகலார், இன்னார், வேண்டார், சேயர் சத்துரு

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 152ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள்:**

பகைவர்—பெரும்பாண் 450 செறுநர்—முருகு 5 சேரார்—பரி 2-48 உள்ளார்—நற் 92-1 தெவ்வர்—பொருந 120 மாற்றலர்—பரி 1-43 ஒன்னார்—சிறுபாண் 47 வட்கார் (வட்கர்)—புறம் 100-3 செற்றார்—ஐங் 429-2 கேளார்—நற் 214-9 ஒல்லார்—பதி 54-16

**பிற தமிழ்ச் சொற்கள்:**

அரிகள், அமரர், நள்ளார், மருவலர் மாணார் மன்னார், தரியலர், வெட்கார், சார்பிலார் பற்றார் பரர்

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை:**

செறுநர், நள்ளார், மருவலர், மாணார் மன்னார் தரியலர், ஒட்டார், வட்கார், ஒல்லார்

**வட சொற்கள்:**

— —

**மணிப்பவளச் சொற்கள்:**

— —

## மேவினவர்

ஒல்லுநர்தொடர்ந்தார்சேர்ந்தாரொட்டுநர்பெட்டார்வேட்டார்
புல்லுநர்பசைந்தார்மித்திரர்புரிந்தாரார்வலர்விழைந்தார்
நல்லவர்காதலித்தார் நள்ளுநர் நயந்தார்கூட்டம்
மெல்லவொன் றுநர்மூவா றுமேவினர் நாமமாமே

153 ஒல்லுநர், தொடர்ந்தார், சேர்ந்தார்
ஒட்டுநர், பெட்டார், வேட்டார்
புல்லுநர், பசைந்தார், மித்திரர்
புரிந்தார், ஆர் வலர், வி ழைந்தார்

செய்யுள்—153

நல்லவர், காத லித்தார்
நள்ளுநர், நயந்தார், கூட்டம்
மெல்லஒன் றுநர்மு வாறு
மேவினர் நாமம் ஆமே

**பெ. பொ. விளக்கம்:**

**மேவினர்**-விரும்பினவர்
ஒல்லுநர்-பொருந்துதல் உடையவர்
தொடர்ந்தார்-தொடர்தல் உடையவர்
சேர்ந்தார்-அன்பால் சேர்ந்தவர்
ஒட்டுநர்-கூடி ஒட்டியவர்
பெட்டார்-விருப்பம் உடையவர்
வேட்டார்-வேட்கை உடையவர்
புல்லுநர்-பொருந்தித் தழுவியவர்
பசைந்தார்-அன்பு கொண்டவர்
மித்திரர்-நட்பு கொண்டவர்
புரிந்தார் ஆர்வலர்-விருப்பம் கொண்டவர்
விழைந்தார்-விரும்பிச் சேர்ந்தவர்
நள்ளுநர்-நட்புக் கொண்டவர்
காதலித்தார்-அன்பு காட்டியவர்
நயந்தார்-அன்புகொண்டு விரும்பியவர்
கூட்டம்-கூடியவர்
ஒன்றுநர்-பொருந்துதல் உடையவர்

மூவாறு-பதினெட்டு

## ஒப்பீடு

| சூடாமணி—153 | பிங்கலம்—946, | கயாதரம்—115 | நாமதீபம்— |
|---|---|---|---|
| மேவினர் *1—18* | மேவினர் *10* | மேவினர் *1—9* | ... |
| ஒல்லுநர் | ஒல்லுநர் | ஒல்லுநர் | ... |
| தொடர்ந்தார் | ... | தொடர்ந்தோர் | ... |
| சேர்ந்தார் | சேர்ந்தோர் | ... | ... |
| ஒட்டுநர் | ... | ... | ... |

## செய்யுள்—153

| | | | |
|---|---|---|---|
| பெட்டார் | ... | ... | ... |
| வேட்டார் | ... | ... | ... |
| புல்லுநர் | ... | ... | ... |
| பசைந்தார் | ... | ... | ... |
| மித்திரர் | ... | ... | ... |
| புரிந்தார் | ... | ... | ... |
| ஆர்வலர் | ... | ... | ... |
| விழைந்தார் | ... | ... | ... |
| நல்லவர் | ... | ... | ... |
| காதலித்தார் | ... | ... | ... |
| நள்ளுநர் | நள்ளுநர் | நள்ளுநர் | ... |
| நயந்தார் | நயந்தோர் | ... | ... |
| கூட்டம் | ... | கூடினர் | ... |
| ஒன்றுநர் | ஒன்றுநர் | ஒன்றினர் | ... |

**மிகை பிங்:** துன்னுநர், நேர்ந்தார், நண்ணுநர், மித்திரர்

**கயா:** தக்கவர், துன்னிநர், அன்பு தொக்கவர்

**நாம:** — —

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 153ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

ஆர்வலர்—முருகு 93 சேர்ந்தார்—கலி 10-2 வேட்டார்—கலி 62-10 நல்லவர்—பரி 7-1 நயந்தார்—கலி 32-13 கூட்டம் 41-10

**பிற தமிழ்ச் சொற்கள்**

மேவினர், ஒல்லுநர், தொடர்ந்தார், ஒட்டுநர், பெட்டார் புல்லுநர், பசைந்தார், ... புரிந்தார், விழைந்தார், காதலித்தார் நள்ளுநர், ஒன்றுநர் ... ...

செய்யுள்—153

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை:**

ஒல்லுநர், வேட்டார், பசைந்தார், நள்ளுநர், ஒன்றுநர்

**வடசொற்கள்:**

மித்திரர்

**மணிப்பவளச் சொற்கள்:**

— —

## சுற்றம்

உற்றவரிருளைநட்டோருறவொக்கல்கிளையேசார்ந்தோர்
பற்றினர்சிறந்தோர்நட்புப்பந்தமேபரிசனங்கேள்
குற்றமினன்புகூளிகுடும்பமேகடும்புநள்ளி
சுற்றமூவாறுபேருஞ்சூழ்ந்தபாசனமுஞ்சொல்லும்

154 உற்றவர், இருளை, நட்டோர்
உறவி, ஒக்கல், கிளையே சார்ந்தோர்
பற்றினர், சிறந்தோர், நட்புப்
பந்தமே பரிசனம், கேள்
குற்றம்இல் நண்பு, கூளி
குடும்பமே கடும்பு, நள்ளி
சுற்றம்மூ வாறு பேரும்
சூழ்ந்தபா சனமும் சொல்லும்

**பெ. பொ. விளக்கம்:**

**சுற்றம்**—சுற்றி வாழ்வோர்
உற்றவர்—உறவு சேர்ந்தவர்
இருளை—நெருங்கியவர், நட்டோர், நட்பு
நண்பு—நட்பு உடையவர்
ஒக்கல்—ஒத்து நடப்பவர்
கிளை—கிளை போல்பவர்
சார்ந்தோர்—சார்ந்தவர்

## செய்யுள்—154

பற்றினர் —பற்றி அன்புடையவர்
சிறந்தோர்—மிக்கவர்
பந்தம்—சுற்றிச் சுற்றி அன்பு காட்டுபவர்
பரிசனம்—சூழ இருக்கும் மக்கள்
கேள்—உரிமை உடையவர்
கூளி, குடும்பம்—தாங்குவோர்
கடும்பு—காப்பாற்றப்படுபவர்
நள்ளி—(நள்—நட்பு) நட்புடையவர்
பாசனம்—உறவு என்னும் பசுமையான உணர்வுடையவர்

## ஒப்பீடு

| சூடாமணி—154 | பிங்கலம்—900 | கயாதரம்—115 | நாமதீபம்—188 |
|---|---|---|---|
| சுற்றம் 1—19 | சுற்றம் 15 | சுற்றம் 13 | சுற்றம் 20 |
| உற்றவர் | ... | ... | உற்றவர் |
| இ்குளை | ... | ... | ... |
| நட்டோர் | நட்டோர் | ... | நட்டோர் |
| உறவு | உறவு | உறவு | ... |
| ஒக்கல் | ஒக்கல் | ஒக்கல் | ஒக்கல் |
| கிளை | கிளை | கிளை | கிளை |
| சார்ந்தோர் | ... | ... | ... |
| பற்றினர் | பற்றினர் | ... | பற்றர் |
| சிறந்தோர் | — | ... | ... |
| நட்பு | நட்பு | நட்பு | ... |
| பந்தம் | பந்தம் | பந்தம் | பந்தம் |
| பரிசனம் | ... | ... | பரிசனம் |
| கேள் | கேள் | கேள் | கேள் |
| நண்பு | நண்பு | ... | ... |
| கூளி | கூளி | கூளி | கூளி |
| குடும்பம் | குடும்பம் | குடும்பு | குடும்பம் |
| கடும்பு | கடும்பு | கடும்பு | கடும்பு |
| நள்ளி | ... | ... | நள்ளி |
| பாசனம் | ... | ... | பாசனம் |

## செய்யுள் —154

**மிகை: பிங்:** தமர், உரியர்

**கயா:** துணை, தமர், விருந்தம்

**நாம:** விருந்தம், தொடர், தமர், மித்திரர்
பெந்து, உறவின் முறை

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 154ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

சுற்றம்—பெரும்பாண் 21 உற்றவர்—பரி-தி 2-22 இருளை—நற் 64-9 நட்டோர்—சிறுபாண் 104 உறவு—புறம் 395-24 ஒக்கல்—பொருந 61 கிளை—முருகு 29 சிறந்தோர்—பரி 14-26 நட்பு—பெரும்பாண் 425 கேள்—பொருந 74 நண்பு—நற் 160-1 கூளி—பட் 259 கடும்பு—பெரும்பாண் 105 நள்ளி—சிறுபாண் 107

**பிற தமிழ்ச் சொற்கள் :**

சார்ந்தோர், பற்றினர், பந்தம், குடும்பம், பாசனம்

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை :**

இருளை, ஒக்கல், கடும்பு, நள்ளி, பாசனம்

**வட சொற்கள்:**

— —

**மணிப் பவளச் சொற்கள்:**

பரிசனம்

### கீழோர்

பொறியிலார்கயவர் நீசர்புள்ளுவர்புல்லர்தீயோர்
சிறியசிந்தையர்கனிட்டர்தீக்குணர்தீம்பர்தோரர்
முறையிலார்முசுண்டர்மூர்க்கர்முசுடர்பல்லவரேகையர்
மறைவிலாக்கலர்மூவாறுமன்னுபூரியருங்கீழோர்

## செய்யுள் — 155

155 பொறியிலார், கயவர், நீசர்
புள்ளுவர், புல்லர், தீயோர்
சிறியசிந் தையர்,க னிட்டர்
தீக்குணர், தீம்பர், தேரார்
முறையிலார், முசுண்டர், மூர்க்கர்
முசுடர்,பல் லவரே கையர்
மறைவிலாக் கலர் மூவாறு
மன்னுபூ ரியரும் கீழோர்

### பெ. பொ. விளக்கம்

கீழோர் — கீழான தன்மை உள்ளவர்
பொறியிலார் — அறிவிற்குரிய குறி இல்லாதவர்
கயவர் — ஒழுக்கம் தவறியவர்
நீசர் — இழிந்த ஒழுக்கமுள்ளவர்
புள்ளுவர் — கவடு உடையவர்
புல்லர் — புன்மைத் தன்மை உடையவர்
சிறிய சிந்தையர் — தாழ்வான எண்ணம் உடையவர்
கனிட்டர் — சிறுமை உடையவர்
தீக்குணர் — தீய குணம் உடையவர்
தீம்பர் — குற்றம் உடையவர்
தேரார் — எதையும் தேர்ந்துகொள்ள இயலாதவர்
முறையிலார் — ஒழுங்கு இல்லாதவர்
முசுண்டர், மூர்க்கர், முசுடர் — முரட்டுக் குணத்துடன் வெறுப்புள்ளவர்
பல்லவர் — நிலையற்றவர்
கையர் — ஒழுக்கமில்லாதவர்
கலர் — அறவழியிலிருந்து விலகியவர்
பூரியர் — தாழ்ந்தவ

## செய்யுள் — 155

### ஒப்பீடு

| சூடாமணி—155 | பிங்கலம்—872 | கயாதரம்—105 | நாமதீபம்—178 |
|---|---|---|---|
| கீழோர் 1—19 | கீழோர் 19 | கீழ்மக்கள் | கீழ் 21 |
| பொறியிலார் | ... | பொறியற்றவர் | பொறியில்லார் |
| கயவர் | கயவர் | கயவர் | கயவோர் |
| நீசர் | நீசர் | நீசர் | ... |
| புள்ளுவர் | புள்ளுவர் | ... | புள்ளுவர் |
| புல்லர் | புல்லர் | ... | புல்லர் |
| தீயோர் | தீயோர் | தீயோர் | தீயோர் |
| சிறியசிந்தையர் | ... | சிறுமை | ... |
| கனிட்டர் | — | ... | கனிட்டர் |
| தீக்குணர் | ... | ... | ... |
| தீம்பர் | ... | தீம்பர் | தீம்பர் |
| தேரார் | ... | ... | தேரார் |
| முறையிலார் | ... | ... | முறையிலார் |
| முசுண்டர் | முசுண்டர் | முசுண்டர் | முசுண்டர் |
| மூர்க்கர் | ... | மூர்க்கர் | மூர்க்கர் |
| முசுடர் | ... | முசுடர் | ... |
| பல்லவர் | பல்லவர் | ... | ... |
| கையர் | கையர் | கையர் | கையர் |
| கலர் | கலர் | கலர் | கலர் |
| பூரியர் | பூரியர் | பூரியர் | ... |

**மிகை:** **பிங்:** பதகர், கண்டகர், மூடர், அசடர், அதன்மர்
சுமடர், வெளிறர், அற்பர்

**கயா:** புல்லார், பேதையர், திருகியவாக்கர் பொல்லார்
சீத்தை, கல்லார், அருளிலர், சுமடர்

**நாம:** கிஞ்சகர், பதிதர், வல்லுவர், மூடர்
பயல்கள், அற்பர், சிறியோர்

செய்யுள்— 155

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 155ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள்:**

*கீழோர்—பரி 17-40 கயவர்—பரி-தி 2-24 பல்லவர்—கலி 104-29 கையர்—முல் 56*

**பிற தமிழ்ச் சொற்கள்:**

*பொறியிலார், புள்ளுவர், புல்லர், தீயோர், தீக்குணர் தீம்பர், தேரார், முறையிலார், முசுண்டர், மூர்க்கர், முசுடர் கலர், பூரியர்*

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை :**

*பொறியிலார், புள்ளுவர், தீம்பர், கையர்*

**வட சொற்கள்:**

*நீசர், கனிட்டர்*

**மணிப்பவளச் சொற்கள் :**

*சிறிய சிந்தையர்*

## அறிவில்லாதவன்
## தொழில் செய்வோர், வாயில் காவலர்

முழுமகன்சிதடன்பேதைமூடனேமண்ணையஞ்ஞை
இழுதையேமடனேயாதனேழையேயறிவிலான்பேர்
தொழுவர்கம்மியரேமற்றைத்தொழில்செய்வோர்நாமமாகும்
வழுவிலாவாயிலாளர்வாயில்காப்போர்தம்பேரே

156 முழுமகன், சிதடன், பேதை
மூடனே, மண்ணை. அஞ்ஞை
இழுதையே மடனே ஆதன்
ஏழையே அறிவி லான்பேர்

செய்யுள்—156

தொழுவர்,கம் மியரே மற்றைத்
தொழில்செய்வோர் நாமம் ஆகும்
வழுஇலா வாயி லாளர்
வாயில்காப் போர்தம் பேரே

பெ. பொ. விளக்கம் :

அறிவிலான் — நன்மை தீமை அறிய முடியாதவன்
முழு மகன் — அறிவு நுழைதற்கு ஏற்ற புரை இல்லாத மகன்
சிதடன் — அறிவுக்குருடன்
பேதை — அறிவுத் தெளிவில்லாமல் மயங்குகின்றவன்
மூடன் — தடுமாறுபவன்
மண்ணை — பேய் போன்றவன்
அஞ்ஞை — அறிவு இழந்தவன்
இழுதை — இழுக்கு உடையவன்
மடன் — பெற்றதுகொண்டு கொண்டதை விடாதவன்
ஆதன் — முன்சினம் உள்ளவன்

ஏழை — இகழப்படுபவன்

தொழுவர் — உழைப்பவர்
கம்மியர் — கம்மத் தொழிலினர்

## ஒப்பீடு

| சூடாமணி—156 | பிங்கலம்—873, 884, 887 | கயாதரம்—106 | நாமதீபம்—170, 185 |
|---|---|---|---|
| அறிவிலான் 1-10 | அறிவிலான் 1-10 | அற்றவன் 13 | அறிவிலான் 11 |
| முழுமகன் | முழுமகன் | முழுமகன் | முழுமகன் |
| சிதடன் | சிதடன் | சிதடன் | சிதடன் |
| பேதை | பேதை | பேதை | பேதை |
| மூடன் | மூடன் | மூடன் | மூடன் |
| மண்ணை | ... | அண்ணை | அண்ணை |
| அஞ்ஞை | அஞ்ஞை | அஞ்ஞை | அஞ்ஞை |
| இழுதை | இழுதை | இழுதை | இழுதை |

## செய்யுள்—156

| | | | |
|---|---|---|---|
| மடன் | ... | ... | மடன் |
| ஆதன் | ஆதன் | ஆதன் | ஆதன் |
| ஏழை | ஏழை | ... | ஏழை |
| தொழில் செய்வோர் 1-2 | தொழில் செய்வோர் 1-2 | .. | கைத்தொழில் செய்வோன் 1-2 |
| தொழுவர் | தொழுவர் | ... | தொழுவர் |
| கம்மியர் | கம்மியர் | ... | கம்மியர் |
| வாயில் காப்போர் 1-1 | வாயில் காப்போர் 2 | ... | ... |
| வாயிலாளர் | ... | ... | ... |

**மிகை: பிங்:** 1 மடமகன், குதலை
2 — 3 கடைகாவலர்

**கயா:** 1 போதம், சளன், மடங்குதலை, அஞ்சி
2 — 3 —

**நாம:** 1 — 2 —
3 —

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 156ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

சிதடன்—புறம் 73-7 பேதை—நற் 51-10 மண்ணை—அகம் 24-12 அஞ்ஞை—அகம் 15-19 ஆதன்—ஐங் 1-1 ஏழை—கலி 55-22 தொழுவர்—மதுரை 89 கம்மியர்—மதுரை 521 மடன்—குறி 19

**பிற தமிழ்ச் சொற்கள்**

அறிவிலான், முழுமகன், மூடன், இழுதை, தொழில் செய்வோர், வாயிற் காப்போர், வாயிலோர்

செய்யுள்—156

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை:**

முழுமகன், அஞ்ஞை, இழுதை, தொழுவர், வாயிலாளர்

**வடசொற்கள்:**

— —

**மணிப்பவளச் சொற்கள்:**

— —

## பெண்

அரிவையங்கனைமடந்தையாடவளாட்டிமாயோள்
சுரிகுழன்மகடுஉக்காந்தைசுந்தரிவனிதைமாது
தெரிவைமானினியேநல்லாள்சிறுமியேதையனாரி
பிரியைகாரிகையணங்குபிணாப்பெண்டுபேதைபெண்பேர்

157 அரிவை, அங் கனை, ம டந்தை
ஆடவள், ஆட்டி, மாயோள்
சுரிகுழல், மகடுஉக் காந்தை
சுந்தரி, வனிதை, மாது
தெரிவை, மா னினியே நல்லாள்
சிறுமியே தையல், நாரி
பிரியை, கா ரிகை, அ ணங்கு
பிணா, பெண்டு, பேதை, பெண் பேர்

**பெ. பொ. விளக்கம்:**

பெண்...பெட்பு உடையவள்
அரிவை—நிறம் பொருந்தியவள்
அங்கனை—நல்ல உறுப்பை உடையவள்
மடந்தை—கொழுத்தக்கொண்டு கொண்டது விடாதவள்
ஆடவள்—ஆடவனுக்கு உரியவள்
ஆட்டி—ஆளுந்தன்மை உடையவள்

## செய்யுள்—157

மாயோள்—மயக்கந் தருபவள்
சுரிகுழல்—கடை சுருண்ட கூந்தலை உடையவள்
மகடூஉ—இளமையுடைய மகள்
காந்தை—கவர்ச்சி உள்ளவள்
சுந்தரி—நன்மையைத் தரித்தவள்
வனிதை—கணவனை உடையவள்
மாது—விரும்பப்படுபவள்
தெரிவை—தேர்ந்து கொள்ளப்படுபவள்
மானினி—மானம் உடையவள்
தையல்—தன்னை அழகு செய்துகொள்பவள்
நாரி—நரனின் பெண்பால்
பிரியை—அன்பை உடையவள்
காரிகை—அழகு உடையவள்
அணங்கு—அழகால் அண்டி வருத்துபவள்
பிணா—விரும்பப்படுபவள்
பெண்டு—பெட்பை அணிகலனாகக் கொண்டவள்
பேதை—காம உணர்வைக் கொள்ளாது பேதுறுகின்றவள்

## ஒப்பீடு

| சூடாமணி—157 | பிங்கலம்—945 | கயாதரம்—117 | நாமதீபம்—117 |
|---|---|---|---|
| பெண் 1—24 | பெண் 1—24 | பெண் 22 | பெண் 22 |
| அரிவை | அரிவை | அரிவை | அரிவை |
| அங்கனை | அங்கனை | அங்கனை | அங்கனை |
| மடந்தை | மடந்தை | மடந்தை | மடந்தை |
| ஆடவள் | ஆடவள் | ... | ... |
| ஆட்டி | ... | ... | ஆட்டி |
| மாயோள் | மாயோள் | மாயோள் | மாயாள் |
| சுரிகுழல் | சுரிகுழல் | ... | ... |
| மகடூஉ | மகடூஉ | மகடூஉ | மகடூஉ |
| காந்தை | காந்தை | ... | காந்தை |
| சுந்தரி | ... | ... | ... |
| வனிதை | வனிதை | வனிதை | வனிதை |
| மாது | மாது | மாது | மாது |

## செய்யுள் — 157

| | | | |
|---|---|---|---|
| தெரிவை | தெரிவை | தெரிவை | தெரிவை |
| மானினி | மானினி | மானி | மானினி |
| நல்லாள் | நல்லாள் | ... | நல்லாள் |
| சிறுமி | சிறுமி | ... | ... |
| தையல் | தையல் | தையல் | ... |
| நாரி | — | நாரி | நாரி |
| பிரியை | ... | ... | ... |
| காரிகை | காரிகை | காரிகை | காரிகை |
| அணங்கு | அணங்கு | ... | அணங்கு |
| பிணா | பிணா | பிணா | பிணா |
| பெண்டு | ... | ... | பெண்டு |
| பேதை | பேதை | பேதை | பேதை |

**மிகை: பிங்:** இளம்பிடி, தளிரியல், பெதும்பை, மங்கை பாவை

**கயா:** மகள், மங்கை, வஞ்சனி, தளிரியல் பெதும்பை, மடவரல், ஏழை

**நாம:** பெதும்பை, மடவாள், மங்கை

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 157ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

பெண் — மதுரை 555 அரிவை — நெடு 166 மடந்தை — முருகு 175
ஆட்டி — பட் 101 மாயோள் — பொருந 14 மகடூஉ — சிறுபாண் 195
மாது — நற் 178-10 தெரிவை — குறு 256-8 நல்லாள் — பரி 6-87
சிறுமி — கலி 65-16 தையல் — ஐங் 489-3 காரிகை — பரி 7-65
அணங்கு — முருகு 289 பிணா — பரி 19-95 பெண்டு — நற் 74-11
பேதை — நற் 51-10

**பிற தமிழ்ச் சொற்கள் :**

அங்கனை, ஆடவள், சுரிகுழல், மானினி

செய்யுள் —157

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை :**

ஆடவள், அங்கனை, சுரிகுழல், மானினி, அணங்கு பிணா

**வட சொற்கள்:**

காந்தை, சுந்தரி, வனிதை, நாரி, பிரியை

**மணிப் பவளச் சொற்கள்:**

— —

## ஆடவன்
## ஆண், பெண் சிறப்புப்பெயர்

ஆடவன்மைந்தன்காளையாடூஉவேமகன்புமானே
நீடியகுமரனேழுநிருமித்தபுருடனாமம்
நாடியநம்பியோடுநங்கையென்றிரண்டாண்பெண்ணைத்
தேடியகவிகளெல்லாஞ்சிறப்பிக்குநாமமாமே

158 ஆடவன், மைந்தன், காளை
ஆடூஉவே மகன்,பு மானே
நீடிய குமரன், ஏழு
நிருமித்த புருடன் நாமம்
நாடிய நம்பி யோடு
நங்கைஎன் றிரண்டாண் பெண்ணைத்
தேடிய கவிகள் எல்லாம்
சிறப்பிக்கும் நாமம் ஆமே

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

**புருடன்-**உயிரினங்களைக் காப்பவன்
**ஆடவன்-**வெற்றிக்கு உரியவன்
**மைந்தன்-**வலிமை உடையவன்
**காளை-**காளை போல்பவன்

## செய்யுள்—158

ஆடூஉ-வெற்றிக்கு உரியவன்
மகன்-இளமை கொண்ட ஆண் பிள்ளை
புமான்-மற்றவரைக் காப்பவன்
குமரன்-கும்மென்று செழித்தவன்

நம்பி-நமக்கு இன்ன தன்மையன் என்று வியக்கப்படுபவன்
நங்கை-நம்பியின் பெண் பால்

## ஒப்பீடு

| சூடாமணி—158 | பிங்கலம் 833, 834, 931 | கயாதரம்—116 | நாமதீபம்-119, 116 |
|---|---|---|---|
| புருடன் 1—7 | ... 7 | ... 5 | புருடன் 11 |
| ஆடவன் | ஆடவன் | ஆடவர் | ஆடவன் |
| மைந்தன் | மைந்தன் | மைந்தன் | மைந்தன் |
| காளை | காளை | ... | காளை |
| ஆடூஉ | ஆடூஉ | ஆடூஉ | ஆடூஉ |
| மகன் | மகன் | மகன் | மகன் |
| புமான் | புமான் | புமான் | புமான் |
| குமரன் | ... | ... | குமரன் |
| ஆண் சிறப்பு 1—1 | ஆண்பாற் சிறப்பு | ... | ஆணிற் சிறந்தான் 1-1 |
| நம்பி | நம்பி | ... | நம்பி |
| பெண் சிறப்பு 1—1 | பெண்பாற் சிறப்பு | ... | பெண்ணிற் சிறந்தாள் |
| நங்கை | நங்கை | ... | நங்கை |

மிகை பிங்; 1 மானவன் 2 — 3 —

கயா: 1 — 2 — 3 —

நாம: 1 ஆண், பூமான், விடலை

## செய்யுள்— 158

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 158ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள்:**

மைந்தன்-பரி *19-73* காளை-பெரும்பாண் *138* ஆடூஉ-பதி 86-4
மகன்-முருகு *257* நம்பி-நற் *175-7* நங்கை-பரி *12-49*

**பிற தமிழ்ச் சொற்கள்:**

ஆடவன், புமான், குமரன், ஆண்சிறப்பு, பெண் சிறப்பு

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை :**

புமான், நம்பி, நங்கை

**வட சொற்கள்:**

புருடன்

**மணிப்பவளச் சொற்கள் :**

— —

## பெண் பருவம் — அகவல்

பேதையேபெதும்பைமங்கைபெருகியமடந்தையோடு
தீதிலாவரிவைமற்றைத்தெரிவைபேரிளம்பெண்ணென்ப
ஏதமில்பருவமாண்டேழெய்துபன்னொன் றுபன்மூன்
றோதுபத்தொன்பானையைந்துடன்முப்பத்தொன்றெண்ணைந்தே

159 பேதையே பெதும்பை மங்கை
பெருகிய மடந்தை யோடு
தீதிலா அரிவை மற்றைத்
தெரிவை,பே ரிளம்பெண் என்ப

## செய்யுள்—159

ஏதம்இல் பருவம் ஆண்டேழ்
எய்துபன் னொன்று, பன்மூன்
றோதுபத் தொன்பான், ஐயைந்
துடன்முப் பத் தொன்றெண் ஐந்தே

**பெ. பொ. விளக்கம்:**

பேதை-காம உணர்வறியாது பேதுறுகின்ற சிறுமி
பெதும்பை-அஞ்சும் இயல்புள்ள இளமையள்
மங்கை-புணர்ச்சிக்குப் பொருந்தியவள்
மடந்தை-மடப்பத்தன்மை உடையவள்
அரிவை-நிறம் பொருந்தியவள்
தெரிவை-தேர்ந்துகொள்ளப்படுபவள்
பேரிளம்பெண்-பெருமையுள்ள இளமைப்பெண்

பன்னொன்று-பதினொன்று
பன்மூன்று-பதின்மூன்று
பத்தொன்பான்-பத்தொன்பது
ஐயைந்து-இருபத்தைந்து
எண் (எட்டு) ஐந்து-நாற்பது

ஏதம் இல்-துன்பம் இல்லாத

## ஒப்பீடு

| சூடாமணி—159 | | பிங்கலம்—941 | கயாதரம்— | நாமதீபம்—118 |
|---|---|---|---|---|
| பருவம் *1—7* | ஆண்டு | இப்பெயர்களும் ஆண்டெண்களுமே உள்ளன | — | இப்பெயர்களும் ஆண்டெண்களுமே உள்ளன |
| பேதை | ஏழ் | | — | |
| பெதும்பை | பன்னொன்று | | — | |
| மங்கை | பன்மூன்று | | — | |
| மடந்தை | பத்தொன்பான் | | — | |
| அரிவை | ஐயைந்து | | — | |
| தெரிவை | மூப்பத்தொன்று | | — | |
| பேரிளம்பெண் | எண்ணைந்து | | — | |

செய்யுள்—159

மிகை: பிங்: — —

கயா: — —

நாம: — —

**சொற்பாகுபாடு**

சூடாமணிச் செய்யுள் 159ல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள் :**

பருவம்—பட் *128* பேதை—நற் *51—10* பெதும்பை—நற் *339-8*
மடந்தை—முருகு *175* அரிவை—நெடு *166* தெரிவை—குறு *256-8*

**பிற தமிழ்ச் சொற்கள் :**

மங்கை, பேரிளம்பெண்

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை:**

அரிவை, தெரிவை

**வடசொற்கள்:**

— —

**மணிப்பவளச் சொற்கள்:**

— —

**கைம்பெண் பெற்ற பிள்ளை**
**வேற்றானுக்குப் பிறந்த பிள்ளை, கன்னி பெற்ற பிள்ளை**

முன்னியகைம்மைபெற்றோன்மொழிந்தகோளகனேயாகும்
பின்னைவேற்றார்க்குப்பெற்றபிள்ளைகுண்டகனேயென்ப
பன்னிவாழ்க்கைப்படாமுன்படர்ந்தொருகளவினாலே
கன்னியேபெற்றபிள்ளைகானீனனென்றேயோதும்

## செய்யுள்—160

160 முன்னிய கைம்மை பெற்றோன்
மொழிந்தகோ ளகனே ஆகும்
பின்னைவேற் றார்க்குப் பெற்ற
பிள்ளைகுண் டகனே என்ப
பன்னிவாழ்க் கைப்ப டாமுன்
படர்ந்தொரு களவி னாலே
கன்னியே பெற்ற பிள்ளை
கானீனன் என்றே ஓதும்

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

**கோளகன்**-மறைவாகக் காக்கப்படுபவன்

**குண்டகன்**-பெண்குலப் பெருமையை அழிப்பவன்

**கானீனன்**-கன்னியால் பெறப்பட்டவன்

கைம்மை-கணவனை இழந்து தனித்து வாழும் ஒழுக்கத்தன்மை கொண்டவள் (கை-சிறுமை கணவனை இழந்ததால் சிறுமை அடைந்தவள்)
வேற்றார்-கணவன் வேற்று ஆடவர்
பன்னி-மனைவியாக
படர்ந்து-இல்லை விட்டு வெளியே போய்
களவு-பிறர் அறியாக் கள்ளம்
கன்னி-பெண்ணுறுப்பு (கன்னல்) பழுத்துப் பூப்படைந்தவள்

## ஒப்பீடு

**சூடாமணி—160 பிங்கலம்-965, 964, 966 கயாதரம்—113 நாமதீபம்-181**

கைம்மையின்
பிள்ளை 1—1
**கோளகன்**
வேற்றாற்குப்
பெற்ற
பிள்ளை 1—1
**குண்டகன்**

இப்பெயர்களே இம்மூன்று உரிப்பனுவல்களிலும் உள்ளன

செய்யுள்— 158

கன்னி பெற்ற
பிள்ளை 1—1
கானீனன்

மிகை: பிங்: — —

கயா: — —

நாம: — —

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 160ல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள் :**

— —

**பிற தமிழ்ச் சொற்கள்**

கைம்மையின் பிள்ளை, கோளகன், வேற்றார்க்குப் பெற்ற பிள்ளை குண்டகன், கன்னி பெற்ற பிள்ளை

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை :**

கோளகன், குண்டகன்

**வட சொற்கள்:**

கானீனன்

**மணிப் பவளச் சொற்கள்:**

— —

## குலம்மாறிப் பிறந்தோர்

உயர்ந்தநாற்குலத்திலாண்பெண்ணுயர்பிழிபிரண்டும்கூடி
இயங்கியபிள்ளைப்பேரேயநுலோமனென்றுசொல்லும்
நயந்தவப்பெண்ணுமாணும்நண்ணியவுயர்வுதாழ்வால்
வியந்திடும்பிள்ளைப்பேரேவிறற்பிரதிலோமனாமே

## செய்யுள்—161

161 உயர்ந்தநால் குலத்தில் ஆண்பெண்
உயர்பிழி பிரணடும் கூடி
இயங்கிய பிள்ளைப் பேரே
**அநுலோமன்** என்று சொல்லும்
நயந்தஅப் பெண்ணும் ஆணும்
நண்ணிய உயர்வு தாழ்வில்
வியந்திடும் பிள்ளைப் பேரே
விறல்**பிரதி லோமன்** ஆமே

**பெ. பொ. விளக்கம் :**

**அநுலோமன்**-எதிர்க்குலப் பிறப்பினன்

**பிரதிலோமன்**-படிக்குலப் (ஒன்றிற்கெடுத்த படிபோல) பிறப்பினன்

உயர்பு இழிவு-மேற்குல ஆண், தாழ்ந்த குலப்பெண்
இயங்கிய-பிறந்த
அப்பெண்ணும் ஆணும்-அந்த மேற்குலப் பெண்ணும் தாழந்த குல ஆணும்
வியந்திடும் பிள்ளை-வியக்கத்தக்க அறிவுடைய பிள்ளை
விறல்-வலிமை

## ஒப்பீடு

| **சூடாமணி—161** | **பிங்கலம்—967, 968** | **கயாதரம்—** | **நாமதீபம்—180** |
|---|---|---|---|
| உயர்குல ஆண் இழிகுலப் பெண் கூடிப்பெற்ற பிள்ளை **அநுலோமன்** | இப்பெயர்களே உள்ளன | | இப்பெயர்களே உள்ளன |
| உயர்குலப்பெண் இழிகுல ஆண் கூடிப்பெற்ற பிள்ளை **பிரதிலோமன்** | | | |

செய்யுள்—161

மிகை பிங்; — —

கயா: — —

நாம: — —

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 161ல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள்:**

— —

**பிற தமிழ்ச் சொற்கள்:**

— —

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை :**

— —

**வட சொற்கள்:**

*அநுலோமன், பிரதிலோமன்*

**மணிப்பவளச் சொற்கள் :**

— —

## கலப்பிலும் கலப்பு

*பெருத்தவவ்வநுலோமன்னேபிரதிலோமனென்றபேரில்*
*உரைத்தவாண்பெண்ணில்வந்தேயுற்றவனந்தராளன்*
*நிரைத்தவர்மாறிக்கூடிப்பிறந்தவனீண்டபேரே*
*விரித்ததுவினவிக்கேட்கில்விராத்தியனென்னுனூலே*

### செய்யுள்—162

162 பெருத்தஅவ் அநுலோ மன்னே
பிரதிலோமன் என்ற பேரில்
உரைத்தஆண் பெண்ணின் வந்தே
உற்றவன் அந்த ராளன்
நிரைத்தவர் மாறிக் கூடிப்
பிறந்தவன் ஈண்ட பேரே
விரித்தது வினவக் கேட்கில்
விராத்தியன் என்னும் நூலே

**பெ. பொ. விளக்கம்:**

அந்தராளன்-இரண்டுங்கெட்டவன்
விராத்தியன்-விலக்கப்படுவோன்
உற்றவன்-பிறந்தவன்
நிரைத்த-முன்வரிசைப்படுத்தப் பெற்றவர்

### ஒப்பீடு

| சூடாமணி—162 | பிங்கலம்—969, 970 | கயாதரம்— | நாமதீபம்—180 |
|---|---|---|---|
| அநுலோமஆண் பிரதிலோமப் பெண் கூடிப் பெற்ற பிள்ளை 1—1 **அந்தராளன்** | இப்பெயர்களே உள்ளன | ... | சோர்வாய்க் கூடிப் பெற்ற பிள்ளை அந்தராளன் |
| அநுப்பெண் பிரதி ஆண் கூடிப் பெற்ற பிள்ளை **விராத்தியன்** | | ... | அநு, பிரதி அந்தரா அன்றிப் பிறந்த பிள்ளை விராத்தியன் |

### சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 162ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள்:**

— —

செய்யுள்—162

**பிற தமிழ்ச்சொற்கள்**

— —

**க. சொ. ஆக்கத்திற்குரியவை :**

— —

**வட சொற்கள்:**

*அந்தராளன், விராத்தியன்*

**மணிப்பவளச் சொற்கள்:**

— —

## தலைவி
## நோற்பாள்

முந்தியகுரத்தியத்தைமுதல்விகோமாட்டியாசாள்
தந்திடுமிறைவியையசாமியேதலைவிநாமம்
நந்தியபிண்டிவாமனன்னெறிவழாதுநோற்பாள்
கந்தியேயவ்வையம்மைகன்னியேகௌந்தியென்ப

163 முந்திய குரத்தி, அத்தை
முதல்வி,கோ மாட்டி, ஆசாள்
தந்திடும் இறைவி, ஐயை
சாமியே **தலைவி** நாமம்
நந்திய பிண்டி வாமன்
நன்னெறி வழாது **நோற்பாள்**
கந்தியே அவ்வை, அம்மை
கன்னியே கௌந்தி என்ப

**பெ. பொ. விளக்கம்**

**தலைவி-** தலைமைத் தன்மை உடையவள்
குரத்தி-குரவனின் பெண்பால்
**அத்தை**-அப்பனுடன் பிறந்தவள்

## செய்யுள்—163

முதல்வி-முதன்மை உடையவள்
கோமாட்டி-கோமானின் பெண்பால்
ஆசாள்-பற்றுக்கோடு ஆகுபவள்
இறைவி-ஆளுகைத்திறம் உடையவள்
ஐயை-தலைமைக்குரிய பெண்
சாமி-செல்வம் உடையவள்

**நோற்பாள்**-நோன்பை மேற்கொண்டவள்
கந்தி, கௌந்தி (கந்தன்-அருகன்) அருக சமயத் துறவுப்பெண்
நந்திய பிண்டி வாமன்-புகழ் நிலைத்த அசோகின் கீழமர்ந்த அருகக் கடவுளுடைய
வழாது-தவறில்லாது

## ஒப்பீடு

| சூடாமணி—163 | பிங்கலம்—930 | கயாதரம்—118 | நாமதீபம்—184, 182 |
|---|---|---|---|
| தலைவி 1—8 | தலைவி 10—1 | தலைவி 11 | தலைவி 8 |
| குரத்தி | குரத்தி | குரத்தி | ... |
| அத்தை | அத்தை | அத்தை | ... |
| முதல்வி | — | ... | முதல்வி |
| கோமாட்டி | கோமகள் | கோமாட்டி | கோமாட்டி |
| ஆசாள் | ஆசாள் | ஆசாள் | ... |
| இறைவி | இறைவி | இறைவி | இறைவி |
| ஐயை | ஐயை | ஐயை | ... |
| சாமி | சாமி | சாமி | சாமி |
| நோற்பாள் 1—5 | ... 2 | அருக துறவுப்பெண் 3 | நோற்பாள் 5 |
| கந்தி | ... | ... | கந்தி |
| அவ்வை | ... | ... | அவ்வை |
| அம்மை | ... | ... | அம்மை |
| கன்னி | ... | ... | கன்னி |
| கௌந்தி | கவுந்தி | கவுந்தி | ... |

செய்யுள்—163

மிகை: பிங்: 1 பெருமாட்டி, அடிகள், தலைமைப்பெண்
2 பம்மை

கயா: 1 கோமாள், அடிகள், பெருமாட்டி
2 பைம்மை

நாம: 1 கோதாரம், பெருமாட்டி, அரசி
2 —

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 163ல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள்:**

அத்தை-குறு 129-2 ஐயை-அகம் 6-3 கன்னி-ஐங் 68-1

**பிற தமிழ்ச்சொற்கள்**

தலைவி, குறத்தி, முதல்வி, கோமாட்டி, ஆசாள் இறைவி, சாமி, ஏநாற்பாள், கந்தி, அவ்வை, அம்மை

**க. சொ. ஆக்கத்திற்குரியவை :**

கோமாட்டி, ஆசாள், ஐயை

**வட சொற்கள்:**

கொந்தி

**மணிப்பவளச் சொற்கள்:**

— —

## கைம்பெண், மலடி ஒப்பனை செய்பவள்

கைம்மையேகைனிபூண்டகலன்கழிமடந்தையேங்கி
வம்பியவிதவை நான்கேயமங்கலைவிளங்குநாமம்
மைம்மையேவந்தியென்பமலடிக்குவகுத்தபேராம்
செம்மையாங்கோலஞ்செய்வாடிகழ்வண்ணமகளேயென்ப

## செய்யுள்—164

164 கைம்மையே கைனி பூண்ட
    கலன்கழி மடந்தை ஏங்கி
விம்மிய விதவை நான்கே
    **அமங்கலை** விளங்கு நாமம்
மைம்மையே வந்தி என்ப
    **மலடி**க்கு வகுத்த பேராம்
செம்மையாம் **கோலம் செய்வாள்**
    திகழ்வண்ண மகளே என்ப

**செ. பொ. விளக்கம்:**

**அமங்கலை**—மங்கலம் இல்லாதவள்
கைம்மை—புணர்ச்சி ஒழுக்கம் இழந்த குற்றமுடையவள்
கைனி—தனிமையே ஒழுக்கமாகக் கொண்டவள் (சிறுமை அடைந்தவள்)
கலன்கழி மடந்தை—மங்கல அணி கழித்த பெண்
விதவை—கணவனை இழந்தவள்

**மலடி**—கருத்தரியாத மலட்டுத்தன்மை உடையவள்
மைம்மை—பிள்ளையில்லாத குற்றமுடையவள்
வந்தி—கருப்பத்தடை உடையவள்

**கோலம் செய்பவள்**—அழகு செய்பவள்
வண்ண மகள்—வண்ணங்களால் ஒப்பனை செய்யும் பெண்

## ஒப்பீடு

| சூடாமணி—164 | பிங்கலம்—943, 942, 938 | கயாதரம்—118 | நாமதீபம்—182, 183 |
|---|---|---|---|
| அமங்கலை 1—4 | அமங்கலி 6 | — 3 | அமங்கலி 7 |
| கைம்மை | கைம்மை | ஙகம்மை | கைமை |
| கைனி | கைனி | கயினி | கயினி |
| கலன்கழி மடந்தை | கலன்கழிமகளிர் | கலன்கழிசேயிழை | கலனிழி |
| விதவை | விதவை | ... | விதவை |

## செய்யுள்—164

| மலடி 1—2 | மலடி 3 | மலடி 3 | மலடி 4 |
|---|---|---|---|
| மைம்மை | மைம்மை | மைம்மை | மைம்மை |
| வந்தி | வந்தி | வந்தை | வந்தி |
| கோலம் செய்வாள் 1—1 | கோலம் புனைபெண் 1-1 | ... | கோலம் செய்வாள் 2 |
| வண்ணமகள் | வண்ண மகள் | ... | வண்ண மகள் |

**மிகை: பிங்:** 1 கைம்பெண் 2 —
3 —

**கயா:** 1 — 2 —
3 —

**நாம:** 1 முண்டை, அறுதாலி
2 — 3 —

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 164ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

கைம்மை-குறு 69-2 விதவை-புறம் 326-10

**பிற தமிழ்ச் சொற்கள் :**

கைனி, கலன்கழி மடந்தை, மலடி, மைம்மை, கோலம் செய்பவள், வண்ணமகள்

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை:**

கைனி, மைம்மை, வண்ணமகள்

**வடசொற்கள்:**

விதவை, வந்தி

**மணிப்பவளச் சொற்கள்:**

அமங்கலை

செய்யுள் — 165

## விலைமகள், மூத்தாள் குமரி, நாடகக்கணிகை

பரத்தையேகணிகைசூளைபயனிலாள்வரைவின்மாது
பொருட்பெண்டுபெறுவகொள்வாள்விலைமகள்போற்றும்வேசை
விருத்தையேமூத்தாளென்பமின்னிடைக்குமரிகன்னி
நிருத்தம்செய்மாதுகூத்திநாடகக்கணிகைநீள்பேர்

165 பரத்தையே கணிகை, சூளை
பயனிலாள், வரைவில் மாது
பொருட்பெண்டு, பெறுவ கொள்வாள்
விலைமகள் போற்றும் வேசை
விருத்தையே மூத்தாள் என்ப
மின்னிடைக் குமரி கன்னி
நிருத்தம்செய் மாது, கூத்தி
நாடகக் கணிகை நீள்பேர்

### பெயர்ப் பொருள் விளக்கம்:

வேசை — ஒழுக்கமற்றுப் பிறரை விரும்புபவள்
பரத்தை — பிறரைப் புணர்பவள்
கணிகை — வரும் பொருளை உடலால் கணிப்பவள்
சூளை — வஞ்சினம் உடையவள்
வரைவுஇல்மாது — வதுவை மணம் கொள்ளாத பெண்
பொருள்பெண்டு — பொருளுக்குத் தன் பெண்மையை ஆள்பவள்
பெறுவ கொள்வாள் — காமஉணர்வினர் பெற்றுள்ளவற்றைப் பெற்றுக் கொள்பவள்
விலைமகள் — தன் உடலால் வரும் இன்பத்தைப் பணத்திற்கு விற்கும் பெண்

மூத்தாள் — இளமை கழிந்த முதுமை கொண்டவள்
விருத்தை — அகவை வளர்ந்தவள்

குமரி — திரண்டவள்
கன்னி — பருவ உறுப்பு பழுத்துப் பூப்படைந்தவள்

## செய்யுள்—165

**நாடகக்கணிகை**—கூத்தாடும் விலைமாது
நிருத்தமாது கூத்தி—கூத்தாடும் பெண்

## ஒப்பீடு

| **சூடாமணி—165** | **பிங்கலம்—944, 940 937, 825** | **கயாதரம்—119** | **நாமதீபம்—185, 182** |
|---|---|---|---|
| **வேசை** *1—8* | வேசி *6* | வேசியர் *7* | வேசை *9* |
| பரத்தை | பரத்தை | பரத்தை | பரத்தை |
| கணிகை | கணிகை | கணிகை | கணிகை |
| தூளை | தூளை | தூளையர் | தூளை |
| பயனிலாள் | ... | ... | ... |
| வரைவின்மாது | ... | ... | வரைவில்லி |
| பொருட்பெண்டு | ... | ... | பொருட்பெண் |
| பெறுவ கொள்வாள் | ... | ... | ... |
| **விலைமகள்** | விலைமகள் | ... | விலைமான் |
| **மூத்தாள்** *1—1* | மூத்தாள் *1—2* | ... | ... |
| விருத்தை | விருத்தை | ... | ... |
| **குமரி** *1—1* | குமரி *2* | ... | குமரி *2* |
| கன்னி | கன்னி | ... | கன்னி |
| **நாடகக் கணிகை** *1—2* | நாடகக் கணிகை *1—2* | ... | ... |
| நிருத்தமாது | ... | ... | ... |
| கூத்தி | கூத்தி | ... | ... |

**மிகை பிங்;** 1 பொதுமகளிர்
2 மூத்தாள் 3 —
4 நடி

**கயா:** 1 கூத்தியர், நடிப்போர் பொதுப்பெண்டிர்
2 — 3 — 4 —

**நாம:** 1 வேசி, தாசி
2 — 3 — 4 —

செய்யுள் — 165

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 165ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள்:**

பரத்தை-நற் 230-6 கணிகை-பரி 20-49 தூளை-புறம் 228-3 குமரி-பெரும்பாண் 247 கன்னி-ஐங் 68-1

**பிற தமிழ்ச் சொற்கள்:**

பயனிலாள், வரைவின்மாது, பொருட்பெண்டு, பெறுவ கொள்வாள், விலைமகள், மூத்தாள், நாடகக்கணிகை, கூத்தி

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை:**

தூளை

**வட சொற்கள்:**

வேசை, விருத்தை

**மணிப்பவளச் சொற்கள்:**

நிருத்தமாது

### குடும்பக்கேடி, பருவப்பெண் பாடுவிச்சி, மணமக்கள், இல்லறத்தார்

குட்டினிதொழுத்தைகூளிகுறளியேபடுவிகுண்டம்
துட்டையேயசதியாகுஞ்சூழ்ந்திடும்யுவதியேபீ
ரெட்டாண்டிற்பெண்மதங்கியெய்தியவிறலியென்ப
திட்டமாம்பாடுவிச்சிதம்பதிஇரட்டையர்ண்பெண்

166 குட்டினி, தொழுத்தை, கூளி
குறளியே படுவி, குண்டம்
துட்டையே அசதி ஆகும்
சூழ்ந்திடும் யுவதி யேர்

## செய்யுள் — 165

ரெட்டாண்டின் பெண்,ம தங்கி
எய்திய விறலி என்ப
திட்டமாம் பாடு விச்சி
தம்பதி இரட்டை ஆண்பெண்

**பெ. பொ. விளக்கம் :**

**அசதி**—பிறருடன் நகைத்தாடுபவள்
குட்டினி—குடும்பத்தைக் குட்டமாக்குபவள்
தொழுத்தை—கீழாகப் பணியும் செயலினள்
கூளி—பேய்க்குணம் உடையவள்
குறளி—கோள் சொல்லுபவள்
படுவி—அழிப்பவள்
குண்டம்—சிறுமை கொண்டவள்
துட்டை—துன்னென்று துன்பம் தருபவள்

யுவதி—யுவனின் பெண்பால்

மதங்கி—பொங்கும் மகிழ்ச்சி தருபவள்
விறலி—விறல்படப் பாடுபவள்

**தம்பதி**—உரிமை இல்லறத்தார்
இரட்டை—இணை பிரியாதவர்

## ஒப்பீடு

| சூடாமணி—166 | பிங்கலம்—817 | கயாதரம்— | நாமதீபம்—186, 176 |
|---|---|---|---|
| அசதி 1—7 | ... | ... | அசதி 9 |
| குட்டினி | ... | ... | குட்டனி |
| தொழுத்தை | ... | ... | தொழுத்தை |
| கூளி | ... | ... | கூளி |
| குறளி | ... | ... | குறள் |
| படுவி | ... | ... | ... |
| குண்டம் | ... | ... | குண்டம் |
| துட்டை | ... | ... | துட்டை |

செய்யுள்—166

| | | | |
|---|---|---|---|
| ஈரெட்டாண்டின் பெண் 1—1 | — | ... | ... |
| யுவதி | — | ... | ... |
| பாடுவிச்சி 1—2 | பாடன் மகடூஉ | ... | பாடுவிச்சி 5 |
| மதங்கி | மதங்கி | ... | மதங்கி |
| விறலி | விறலி | ... | விறலி |
| தம்பதி 1—2 | ... | ... | தங்பதி 3 |
| இரட்டை | ... | ... | இரட்டை |
| ஆண்பெண் | ... | ... | பெண் ஆண் |

மிகை: பிங்: 1 — 2 —
3 பாடினி, பாட்டி, பாண்மகள்
4 —

கயா: 1 —

நாம: 1 துருத்தி புழுக்கை 2 —
3 பாடினி பாடகி 4 —

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 166ல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

கூளி-பதி 259 விறலி-நற் 328-11

**பிற தமிழ்ச் சொற்கள் :**

அசதி, குட்டினி, தொழுத்தை, குறளி, படுவி குண்டம், ஈரெட்டாண்டின்பெண், பாடுவிச்சி, மதங்கி இரட்டை ஆண்பெண்

**கலைச்சொற்கள் ஆக்கத்திற்குரியவை:**

தொழுத்தை, மதங்கி

## செய்யுள்—166

**வடசொற்கள்:**

துட்டை, யுவதி, தம்பதி

## மலைநாட்டவர்

குறவர்கானவரேமள்ளர்குன்றவர்புனவரோடும்
இறவுளர்குறிஞ்சிதன்னிலின்புறுமாக்கள்பேரே
குறியறிகுறத்திமற்றைக்கொடிச்சிபெண்ணிறைவன்றானே
திறன்மிகுமலையன்வெற்பன்சிலம்பன்கானகநாடன்பேர்

*167* குறவர்கா னவரே மள்ளர்
குன்றவர் புனவ ரோடும்
இறவுளர் **குறிஞ்சி** தன்னில்
இன்புறும் **மாக்கள்** பேரே
குறியறி குறத்தி மற்றைக்
கொடிச்சி**பெண் இறைவன்** தானே
திறன்மிகு மலையன் வெற்பன்
சிலம்பன்கா னகநா டன்பேர்

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

குறிஞ்சிமாக்கள்—மலையும் மலைசார்ந்த இடத்திலும் வாழ்பவர்
குறவர்—குறும்பு செய்பவர்
கானவர்—மலைக்காட்டில் வாழ்பவர்
மள்ளர்—உடல் வலிமை உடையவர்
குன்றவர்—மலையில் வாழ்பவர்
புனவர்—தினை முதலிய மலைப்பயிர்கள் விளையும் புனங்களில் வாழ்பவர்
இறவுளர்—குறிஞ்சி நிலத்தவர்

## ஒப்பீடு

| **சூடாமணி—167** | **பிங்கலம்—523-525** | **கயாதரம்—120, 121** | **நாமதீபம்—156, 157** |
|---|---|---|---|
| **குறிஞ்சி மாக்கள்** *1—6* | குறிஞ்சி நில மாக்கள் | கு. மக்கள் *6* | கு. நிலத்தோர் *13* |
| குறவர் | குறவர் | குறவர் | குறவர் |

## செய்யுள்—190

இதலையே உந்தி, நாபி
  இலஞ்சியே போகில், கொப்பூழ்
புதியஆண் குறியே கோசம்
  பூப்பகம் பெண்ணின் சின்னம்

**பெயர்ப் பொருள் விளக்கம் :**

**வயிறு**—உணவைக் கொள்வது
உதரம்—கரு உருக்கொள்வதை உடையது
மோடு—பெருமை உடையது
அகடு—உட்பக்கம் குழிவானது
குக்கி—மலத்தை வெளியிடுவது
பண்டி—பண்டங்களைக் கொள்வது

**தேமல்**—இனிய அழகைத்தருவது
திதலை—புள்ளியாகப் படர்ந்தது
பொறி, துத்தி—சிறு பூப்போன்ற புள்ளியானது
சுணங்கு—மனமெலிவின் சின்னமாகப் படர்வது

**கொப்பூழ்**—குமிழியாக ஊழ்த்தது (மலர்ந்தது)
உந்தி—நீர்ச்சுழி போன்றது
நாபி—கட்டப்பெறுவது
இலஞ்சி—மகிழம்பூ போன்றது
போகில்—மொட்டு போன்று அமைந்தது

**ஆண்குறி**—ஆண்பாலின் அறிகுறியான சின்னம்
கோசம்—உறையமைந்த முட்டை வடிவைக்கொண்டது
பெண் சின்னம்—பெண்பால் சின்னம்
பூப்பகம்—பருவ உறுப்பு பூக்கும் உள்ளிடம் கொண்டது

## ஒப்பீடு

| **சூடாமணி—190** | **பிங்கலம்—1013, 1083, 1010** | **கயாதரம்—135, 136** | **நாமதீபம்—580 585, 581, 579** |
|---|---|---|---|
| **வயிறு** *1—5* | வயிறு *1—8* | வயறு *7* | வயிறு *9* |
| உதரம் | உதரம் | உதரம் | உதரம் |
| மோடு | மோடு | ... | மோடு |

## செய்யுள்—190

| | | | |
|---|---|---|---|
| அகடு | அகடு | ... | அகடு |
| குக்கி | குக்கி | குக்கி | குக்கி |
| பண்டி | ... | ... | ... |
| தேமல் *1—4* | தேமல் *1—6* | தேமல் 9 | தேமல் 8 |
| திதலை | திதலை | திதலை | திதலை |
| பொறி | ... | பொறி | பொறி |
| துத்தி | துத்தி | துத்தி | துத்தி |
| சுணங்கு | சுணங்கு | சுணங்கு | சுணங்கு |
| கொப்பூழ் 1—5 | கொப்பூழ் 1—5 | கொப்பூழ் 6 | கொப்பூழ் 6 |
| இதலை | இதலை | ... | இதலை |
| உந்தி | உந்தி | உந்தி | உந்தி |
| நாபி | நாபி | நாபி | நாபி |
| இலஞ்சி | இலைஞ்சி | இலஞ்சி | இலஞ்சி |
| போகில் | போகில் | பொகில் | போகில் |
| ஆண்குறி *1—1* | ஆண்குறி *1—2* | ... | ... 2 |
| கோசம் | கோசம் | ... | கோசம் |
| பெண்ணின் சின்னம் *1—1* | பெண்குறி *1—5* | ... | — 4 |
| பூப்பகம் | பூப்பகம் | ... | பகம், பூ |

**மிகை பிங்:** 1 துத்தம், மடி, வயின், சடரம்
2 வசந்திகை, உத்தி, திதனி
3 — 4 இலிங்கம்
5 யோனி, பகம், பொன், சின்னம்

**கயா:** 1 சடரம், வயின். மடி, துத்தம்
2 உத்தி, வந்திகை, வரி, தித்தி
3 மிதலை 4 ...
5 ... ...

**நாம:** 1 கோடணம், மடி, வயின், கும்மி
2 நெரிசல், வரி. பசலை
3 ... 4 இலிங்கம்
5 குய்யம். யோனி

செய்யுள் — 190

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 190இல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள்:**

மோடு-முருகு 50, அகடு-மலை 33, திதலை-நற் 6-4
பொறி-முருகு 105, துத்தி-பொருந 69 சுணங்கு-பொருந 35
கொப்பூழ்-பொருந 37 உந்தி-பொருந 23 இலஞ்சி-மதுரை 248
போகில்-ஐங் 303-2

**பிற தமிழ்ச் சொற்கள் :**

குக்கி, பண்டி, தேமல், இதலை, ஆண்குறி
பெணணின் சின்னம், பூப்பகம்

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை :**

அகடு, துத்தி. போகில், பூப்பகம்

**வட சொற்கள்:**

உதரம். நாபி, கோசம்

**மணிப்பவளச் சொற்கள்:**

— —

### மார்பு
### முலை, முலைக்காம்பு

அகலமேமருமநெஞ்சேயாகமேயுரமேமார்பாம்
நகிலமேகொம்மைகொங்கைநறுங்குயந்தனங்குருக்கண்
பகர்பயோதரஞ்சுவர்க்கம்பறம்பிவைமுலையின்பல்பேர்
திகழ்முலைக்கண்ணினாமஞ்சிலீமுகஞ்சூசுகங்கள்

191 அகலமே மருமம், நெஞ்சே
ஆகமே உரமே மார்புஆம்
நகிலமே கொம்மை, கொங்கை
நறுங்குயம், தனம்,குருக்கண்

### செய்யுள்—191

பகர்பயோ தரம்,சு வர்க்கம்
பறம்பிவை முலையின் பல்பேர்
திகழ்முலைக் கண்ணின் நாமம்
சிலீமுகம், சூசு கங்கள்.

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

**மார்பு**—விரிந்து அகலமானது
அகலம்—அகன்றிருப்பது
மருமம்—மருவுதற்குரியது
நெஞ்சு—மனத்திடத்திற்கு அடித்தளமானது
ஆகம்—அகத்தை உள்ளே கொண்டது
உரம்—வலிமையானது (முன்னே செல்வது)
முலை—முகிழ்த்தது
நகிலம்—மொக்குள் போன்றது
கொம்மை—திரட்சி உடையது
கொங்கை—மணமும் சுவையும் தருவது
குயம்—மறைத்தற்கு உரியது
தனம்—குழந்தைகளால் பால் உண்ணப்படுவது
குருக்கண்—கொப்புளம் போன்றதில் துளை உடையது
பயோதரம்—பாலைத் தரித்திருப்பது
சுவர்க்கம்—மிக் இன்பமாக விரும்பப்படுவது
பறம்பு—மலை போன்றது

**முலைக்கண்**—முலையின் துளை கொண்ட நுனி
சிலீமுகம்—கூரிய நுனி உடையது
சூசுகம்—குழந்தைகள் மகிழ்ந்து பால் பருகுதலை உடையது

## ஒப்பீடு

| **சூடாமணி**—*191* | **பிங்கலம்**—*1013-1018* | **கயாதரம்**—*135* | **நாமதீபம்**—*581, 582* |
|---|---|---|---|
| **மார்பு 1—5** | மார்பு **6** | **மார்பு 6** | **மார்பு 7** |
| அகலம் | அகலம் | **அகலம்** | அகலம் |
| மருமம் | மருமம் | ... | மருமம் |
| நெஞ்சு | நெஞ்சு | ... | நெஞ்சு |

செய்யுள்— 191

| | | | |
|---|---|---|---|
| அகம் | ஆகம் | ஆகம் | ஆகம் |
| உரம் | உரம் | உரம் | உரம் |
| முலை 1—9 | முலை 1—11 | முலை 9 | முலை 12 |
| நகிலம் | நகிலம் | நகில் | நகில் |
| கொம்மை | கொம்மை | ... | கொம்மை |
| கொங்கை | கொங்கை | கொங்கை | கொங்கை |
| குயம் | குயம் | குயம் | குயம் |
| தனம் | தனம் | தனம் | தனம் |
| குருக்கண் | குருக்கண் | குருஉக்கண் | குருஉக்கண் |
| பயோதரம் | பயோதரம் | பயோதரம் | பயோதரம் |
| சுவர்க்கம் | சுவர்க்கம் | சொறகம் | சுவர்க்கம் |
| பறம்பு | பறம்பு | ... | பறம்பு |
| முலைக்கண் 1-2 | முலைக்கண் 1-2 | ... | முலைக்கண் 4 |
| சிலீமுகம் | சிலீமுகம் | ... | சிலீமுகம் |
| சூசுகம் | சூசுகம் | ... | சூசு |

மிகை: பிங்: 1 — 2 அம்மம், சேக்கை 3 —

கயா: 1 நவிர், மருங்கு, 2 அம்மம் 3 —

நாம: 1 இருத்து, 2 சேக்கை, அம்மம்
3 முலைக்காம்பு

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 191இல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் ;**

மார்பு—முருகு 104, அகலம்—முருகு 272, நெஞ்சு—முருகு 65 ஆகம்—முருகு 32 உரம்—முருகு 121 முலை—முருகு 35 கொம்மை—நெடு 69 கொங்கை-பரி-8-115 குயம்—பொருந 242 தனம்—அகம் 152-7 பறம்பு—சிறுபாண் 91

செய்யுள்—191

**பிற தமிழ்ச்சொற்கள்**

மருமம், குருக்கண், முலைக்கண், சிலீமுகம்

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை**

அகலம், கொம்மை

**வட சொற்கள்:**

நகிலம், தனம், பயோதரம், சுவர்க்கம், சூசுகம்

**மணிப்பவளச் சொற்கள்:**

— —

## கை, முழங்கை, மணிக்கட்டு
## உள்ளங்கை, விரல், நகம்

கரமத்தம்பாணிதோளேகைத்தலநாற்பேராங்கூர்ப்
பரமுழங்கைகிலுத்தம்பணித்திடுமணிக்கட்டென்ப
உரவியவகங்கையங்கைகுடங்கையேயுள்ளங்கைப்பேர்
விரல்களங்குலியென்றாகுமிகுமுகிர்நகமதாமே

192 கரம், அத்தம், பாணி, தோளே
கைத்தலம் நாற்பேர் ஆம்; கூர்ப்
பரம், முழங் கை: கி லுத்தம்
பணித்திடும் மணிக்கட் டென்ப
உரவிய அகங்கை, அங்கை
குடங்கையே உள்ளங் கைப்பேர்
விரல்கள், அங் குலிஎன் றாகும்
மிகும்உகிர் நகம் அதாமே.

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

கை—செயற்பாடு உடையது
கரம்—தொழில் செய்தல் உடையது

## செய்யுள்—192

அத்தம்—முழமிடுதல் உடையது
பாணி—உள்முகமாக மடங்குவது

முழங்கை—மூட்டு உடைய கை
கூர்ப்பரம்—பொருளை இழுக்கும்போது சற்றே ஒலிப்பது

மணிக்கட்டு—மணிபோன்று கணுக்கொண்டது
கிலுத்தம்—செயற்பட இணைக்கப்பெற்றது

உள்ளங்கை, அகங்கை—உள்புறமான அகக்கை
குடங்கை—உட்புறம் குவியும் (வளையும்) கை

விரல்—ஒன்றோடு ஒன்று விரவுதல் உடையது
அங்குலி—உள்புறம் பொருந்துதல் உடையது

நகம்—உணர்ச்சி அறியாதது
உகிர்—விழுதல் உடையது

## ஒப்பீடு

| சூடாமணி—192 | பிங்கலம்—1019-1024 | கயாதரம்—137 | நாமதீபம்—582 |
|---|---|---|---|
| கை 1—4 | கை 1—5 | ... 4 | கை 5 |
| கரம் | கரம் | கரம் | கரம் |
| அத்தம் | அத்தம் | அத்தம் | அத்தம் |
| பாணி | பாணி | பாணி | பாணி |
| தோள் | தோள் | ... | தோள் |
| முழங்கை 1—1 | முழங்கை 1—1 | ... | முழங்கை |
| கூர்ப்பரம் | கூர்ப்பரம் | ... | கூர்ப்பரம் |
| மணிக்கட்டு 1—1 | மணிக்கட்டு 1—1 | ... | மணிக்கட்டு 3 |
| கிலுத்தம் | கிலுத்தம் | ... | கிலுத்தம் |
| உள்ளங்கை 1—3 | உள்ளங்கை 1—3 | ... 3 | உள்ளங்கை 4 |
| அகங்கை | அகங்கை | அகங்கை | அகங்கை |
| அங்கை | அங்கை | அங்கை | அங்கை |
| குடங்கை | குடங்கை | குடங்கை | குடங்கை |

செய்யுள்—192

| | | | |
|---|---|---|---|
| விரல் 1—1<br>அங்குலி | விரல் 1—1<br>அங்குலி | விரல் 2<br>அங்குலி | விரல் 2<br>அங்குலி |
| நகம் 1—1<br>உகிர் | நகம் 1—1<br>உகிர் | நகம் 2<br>உகிர் | நகம் 2<br>உகிர் |

| | | | | |
|---|---|---|---|---|
| மிகை: | பிங்: | 1 கைத்தலம் | 2 — | 3 — |
| | | 4 — | 5 — | 6 — |
| | கயா: | 1 கைத்தலம் | 2 — | 3 — |
| | | 4 — | 5 — | 6 — |
| | நாம: | 1 — | 2 — | 3 மொழி |
| | | 4 — | 5 — | |

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 192இல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள் :**

கை—முருகு 108, கரம்—புறம் 152-30 அத்தம்—பெரும்பாண் 39
பாணி...பொருந 48 தோள்-முருகு 14, அங்கை—முருகு 254
விரல்—முருகு 52 உகிர்—முருகு 52

**பிற தமிழ்ச்சொற்கள்**

முழங்கை, கூர்ப்பரம், மணிக்கட்டு, கிலுத்தம்
உள்ளங்கை, அகங்கை, குடங்கை, அங்குலி நகம்

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை**

உகிர்

**வட சொற்கள்:**

கரம், பாணி

**மணிப்பவளச் சொற்கள்:**

— —

## செய்யுள்—193

### தோள், கழுத்து
### முதுகு, பிடரி, தோள்மேல்

விறன்மிகுபுயமுமொய்ம்புமேவியவாகுவுந்தோள்
கறையில்கந்தரம்கிரீவங்களங்கண்டங்கழுத்தினாமம்
புறம்வெரிந்பரம்வென்னேபோற்றியமுதுகுநாற்பேர்
சிறுபுறங்கயிலெருத்தஞ்சுவல்பிடர்நிகலந்தோண்மேல்

193 விறல்மிகு புயமும் மொய்ம்பும்
மேவிய வாகு வும்தோள்
கறைஇல் கந்தரம் கிரீவம்
களம்,கண்டம் கழுத்தின் நாமம்
புறம்,வெரிந், அபரம், வென்னே
போற்றிய முதுகு நாற்பேர்
சிறுபுறம், கயில்,எ ருத்தம்.
சுவல்,பிடர்; நிகலம் தோள்மேல்.

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

**தோள்**—துள்ளித் தினவெடுக்கும் வலிமை உடையது
புறம்—புறத்தே (பின்) உள்ள வலிமை கொண்டது
வாகு—முயற்சி உடையது

**கழுத்து**—தலை பொருந்துவதற்குத் திரட்சியானது
கந்தரம்—தலையைத் தரித்திருப்பது
கிரீவம்—உணவு செல்வதற்கு வழியாக உள்ளது
கருவி, கண்டம்—ஒலித்தல் உடையது

**முதுகு**—பின்புறம் உள்ளது
புறம்—புறத்தே (பின்னே) உள்ளது
வெரிந், வென்—வெற்றிபெறும் மார்பின் புறம்
அபரம்—பின்னுள்ளது

**பிடர்**—தாங்கும் வலிமையுடன் பின்னே உள்ளது
சிறுபுறம்—சிறியதாகப் பின்னே முதுகின் மேல்பகுதி
கயில்—மேலே உறுதிகொண்ட தலையைப் பூண்டது

செய்யுள்—193

எருத்தம்—தலைக்கு அயலிடமாகியது (தலையைப் பூண்டது)
சுவல்—தோள்கட்டு
தோள்மேல்—தோளின் மேற்பகுதி

## ஒப்பீடு

| சூடாமணி—193 | பிங்கலம்—1025, 1027—1030 | கயாதரம்—137, 138 | நாமதீபம்—583, 586 |
|---|---|---|---|
| தோள் *1—3* | தோள் *1—3* | தோள் *4* | தோள் *4* |
| புயம் | புயம் | புயம் | புயம் |
| மொய்ம்பு | மொய்ம்பு | மொய்ம்பு | மொய்ம்பு |
| வாகு | வாகு | வாகு | வாகு |
| கழுத்து *1—4* | கழுத்து *1—6* | கழுத்து 6 | கழுத்து 5 |
| கந்தரம் | கந்தரம் | கந்தரம் | கந்தரம் |
| கிரீவம் | கிரீவம் | கிரீபம் | கிரீவம் |
| களம் | களம் | களம் | களம் |
| கண்டம் | கண்டம் | கண்டம் | கண்டம் |
| முதுகு *1—4* | முதுகு *1—4* | முதுகு 5 | முதுகு 7 |
| புறம் | புறம் | புறம் | புறம் |
| வெரிந் | வெரிந் | வெரின் | வெரிந் |
| அபரம் | அபரம் | ... | அபரம் |
| வென் | வென் | வென் | வென் |
| பிடர் *1—4* | பிடர் *1—6* | பிடர் *6* | பிடர் *6* |
| சிறுபுறம் | சிறுபுறம் | சிறுபுறம் | சிறுபுறம் |
| கயில் | கயில் | கயில் | கயில் |
| எருத்தம் | எருத்தம் | எருத்தம் | எருத்தம் |
| சுவல் | சுவல் | ... | சுவல் |
| தோள்மேல் *1—1* | தோள்மேல் *1—3* | தோள்மிசை *4* | தோள்மேல் 2 |
| நிகலம் | நிகலம் | நிகலம் | நிவம் |

**செய்யுள் — 193**

**மிகை பிங்:** 1 — 2 கில்லம், மிடறு
3 — 4 நீமம், பிடர்த்தலை
5 சுவல், செகில்

**கயா:** 1 — 2 மிடறு 3 சுத்தம்
4 பிடர்த்தலை, பின் 5 சுவல், செகில்

**நாம:** 1 ... 2 ... 3 கோரை, வீரம்
4 காடி 5 —

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 193இல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள்:**

தோள்-முருகு 14, மொய்ம்பு-முருகு 81, கழுத்து-பரி 8-55 கந்தரம்-பரி 4-22, களம்-முருகு 55, கண்டம்-முல் 44 புறம்-முருகு 309, வெரிந்-பெரும்பாண 86. வென்-பொருந 129 பிடர்-புறம் 3-11, சிறுபுறம்-சிறுபாண் 191. கயில்-ஐங் 72-1 எருத்தம்-முருகு 159. சுவல்-சிறுபாண் 80

**பிற தமிழ்ச் சொற்கள் :**

வாகு, முதுகு, தோள்மேல்

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை :**

மொய்ம்பு, வெரிந், எருத்தம், சுவல்

**வட சொற்கள்:**

புயம், கிரீவம், கண்டம், அபரம், நிகலம்

**மணிப்பவளச் சொற்கள்:**

— —

செய்யுள்—194

## முகம், உதடு
## மேல்உதடு, கீழ்உதடு, பல்

வதனமானனமேதுண்டம்வத்திரமுகமென்றாகு
மிதழுதடதரமேபாலிகைமுத்தமெனறும்பேர்மே
லுதடதேயோட்டமாங்கீழுதட்டின்பேரதரமென்றாம்
விதமுறுமெயிறுதந்தமேவியதசனம்பல்லே

194 வதனம்,ஆனனமே துண்டம்
வத்திரம் முகம்என் றாகும்
இதழ்,உதடு அதரமே பாலி
கை,முத்தம் என்றும் பேர்;மேல்
உதடதே ஓட்ட மாம்;கீழ்
உதட்டின்பேர் அதரம் என்றாம்
விதமுறும் எயிறு, தந்தம்
மேவிய தசனம் பல்லே.

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

முகம்—முகிழ்த்து மலர்ந்தது
வதனம் வத்திரம்—பேசுதற்குரிய கருவி
ஆனனம்—உயிர் வாழ்வதற்குக் காரணமானது
துண்டம்—உணவால் தாக்கம் உறுவது

உதடு—ஒட்டும் இதழ்
இதழ்—(உதழ்) மலரின் இதழ் போன்றது
அதரம்—கீழ் உள்ளது
பாலிகை—முளை போன்று மென்மையானது
முத்தம்—விடப்படுவது (இணைதற்கு உரியது)
ஓட்டம்—உள் அனலால் சூடு அடைவது

பல்—பலவாகக் கூர்மை உடையது
எயிறு—கூர்மையானது (உறுதியானது)
தந்தம்—உணவுப் பொருட்களை உண்ண உதவுவது
தசனம்—கடித்தல் உடையது

செய்யுள்— 194

## ஒப்பீடு

| சூடாமணி—194 | பிங்கலம்—1034-1037 | கயாதரம்—139 | நாமதீபம்—590, 587 |
|---|---|---|---|
| முகம் 1—4 | முகம் 5 | முகம் 3 | முகம் 5 |
| வதனம் | வதனம் | வதனம் | வதனம் |
| ஆனனம் | ஆனனம் | ஆனனம் | ஆனனம் |
| துண்டம் | துண்டம் | ... | துண்டம் |
| வத்திரம் | வத்திரம் | ... | வத்திரம் |
| உதடு 1—4 | உதடு 1—3 | ... 5 | உதடு 7 |
| இதழ் | இதழ் | இதழ் | இதழ் |
| அதரம் | ... | அதரம் | அதரம் |
| பாலிகை | பாலிகை | பாலிகை | பாலிகை |
| முத்தம் | முத்தம் | முத்தம் | முத்தம் |
| மேல் உதடு 1-1 | மேல்இதழ் 1—1 | ... | ... |
| ஓட்டம் | ஓட்டம் | ... | ... |
| கீழ்உதடு 1—1 | கீழ் இதழ் 1—1 | ... | ... |
| அதரம் | அதரம் | ... | ... |
| பல் 1—3 | பல் 1—6 | பல் 6 | பல் 7 |
| எயிறு | எயிறு | எயிறு | எயிறு |
| தந்தம் | தந்தம் | தந்தம் | தந்தம் |
| தசனம் | தசனம் | ... | தசனம் |

மிகை பிங்: 1 ... 2 ... 3 ...
4 ... 5 முறுவல், நகை, மூரல்

கயா: 1 — 2 ஓட்டம் 3 ...
4 ... 5 தட்டம், முறுவல், நகை

நாம: 1 ... 2 இதழ், வாய் 3 ...
4 ... 5 நகை, மூரல், முறுவல்

செய்யுள்—194

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 194இல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

*முகம்-முருகு 92 இதழ்-முருகு 21 முத்தம்-பொருந 162 பல்-முருகு 16, எயிறு—முருகு 148*

**பிற தமிழ்ச் சொற்கள்**

துண்டம், உதடு, பாலிகை, மேல்உதடு, ஓட்டம் கீழ்உதடு

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை:**

பாலிகை, ஓட்டம், எயிறு

**வடசொற்கள்:**

வதனம், ஆனனம், வத்திரம், அதரம், தந்தம் தசனம்

**மணிப்பவளச் சொற்கள்:**

— —

### பல், நகை, பொது, மேல்வாய் நாக்கு, காது

பன்னியமுறுவன்மூரல்பல்லுமாநகையுமாகும்
முன்னியதாடிகட்டஞ்சுவுகமோவாயின்பேராம்
மன்னுநாச்சிகுவைதாரைமற்றைத்தாலுவுநாக்காகும்
கன்னமேயள்ளுக்கேள்விகாதின்பேர்செவியுமாமே

195 பன்னிய முறுவல், மூரல்
**பல்லுமாம் நகையும்** ஆகும்
முன்னிய தாடி, கட்டம்
சுவுகம்**மோ வாயின்** பேராம்

## செய்யுள்—195

மன்னுநா, சிகுவை, தாரை
மற்றைதா லுவும்நாக் காகும்
கன்னமே அள்ளுக் கேள்வி
காதின்பேர் செவியும் ஆகும்

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

முறுவல், மூரல்—அரும்புபோல் வாய் இதழ் நெகிழ்தல்

**மோவாய்**—(முகவாய்) முகத்தின் முன்னிடமானது
தாடி—வளைவை உடையது
கட்டம்—கட்டப்பெற்றது
சுவுகம்—தசையால் ஆனது

**நாக்கு**—(நா-நடு) மேல்வாய்க்கும் கீழ்வாய்க்கும் நடுவிலிருப்பது
சிகுவை—சுவைப் பொருளை விரும்புவது
தாரை—தாலம் என்பதன் மரூஉ
தாலு—அசைதலை உடையது (பனை ஓலை போன்றது)
காது—ஒலி மோதலை ஏற்பது
கன்னம்—ஒலியைக் கவர்தல் செய்வது
அள்—கூர்மை உடையது
கேள்வி—கேட்டற்கு உரியது
செவி—செவ்விய மடல் உடையது

## ஒப்பீடு

| **சூடாமணி**—195 | **பிங்கலம்**—1032, 1043, 1052 | **கயாதரம்**—140, 142 | **நாமதீபம்**—590, 586 |
|---|---|---|---|
| பல் நகை பொது 1—2 | ... | நகை 3 | ... |
| முறுவல் | ... | முறுவல் | ... |
| மூரல் | ... | மூரல் | ... |
| மோவாய் 1—3 | மோவாய் 1—4 | ... | ... 3 |
| தாடி | தாடி | ... | தாடி |
| கட்டம் | கட்டம் | ... | ... |
| சுவுகம் | சுவுகம் | ... | சிபுகம் |

செய்யுள்—195

| நாக்கு 1—4 | நாக்கு 1—4 | — 3 | நாக்கு 5 |
| --- | --- | --- | --- |
| நா | நா | நா | நா |
| சிகுவை | சிகுவை | ... | சிகுவை |
| தாரை | தாரம் | ... | ... |
| தாலு | தாலு | தாலு | தாலு |
| காது 1—4 | காது 7 | காது 3 | காது 5 |
| கன்னம் | கன்னம் | கன்னம் | கன்னம் |
| அள் | அள் | ... | வள்ளு |
| கேள்வி | கேள்வி | ... | கேள்வி |
| செவி | செவி | செவி | செவி |

மிகை: பிங்: 1 — 2 தாழ்வாய்
3 — 4 சுருதி, சோத்திரம்

கயா: 1 — 2 —
3 தாலம் 4 —

நாம: 1 — 2 தட்டம்
3 தாலம் 4 சோத்திரம்

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 195இல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள்:**

முறுவல்-நெடு 37, மூரல்-பெரும்பாண் 168, மோவாய்-நற் 211-5 தாடி-கலி 15-6 நா-முருகு 187 காது-முருகு 31 கன்னம்-ஐங் 245-2 அள்-குறு 219-5கேள்வி-முருகு 186, செவி—முருகு 140

**பிற தமிழ்ச் சொற்கள்:**

பல், நகை, பொது, கட்டம், நாக்கு, சிகுவை, தாலு

செய்யுள் — 195

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை :**

முரல், முறுவல், தாளு, அள், தாரை

**வட சொற்கள்:**

சுவுகம்

**மணிப்பவளச் சொற்கள்:**

— —

## மிடறு, உண்ணாக்கு
## மேல்வாய், கதுப்பு. மூக்கு

அணன்மிடறாகுமற்றையண்ணமேயுண்ணாக்கின்பேர்
அணரியேயணலேயண்ணமானமேல்வாய்ப்புறப்பேர்
குணமுறுகவுள்கபோலங்கொடிறனுகதுப்பின்கூற்றாம்
துணைசெயாக்கிராணங்கோணந்துண்டமேநாசிமூக்காம்

196 அணல்,மிட றாகும்; மற்றை
அண்ணமே உண்ணாக் கின்பேர்
அணரியே அணலே அண்ணம்
ஆனமேல் வாய்ப்பு றப்பேர்
குணமுறு கவுள், கபோலம்
கொடிறனு கதுப்பின் கூற்றாம்
துணைசெய்ஆக் கிராணம், கோணம்
துண்டமே நாசி மூக்காம்

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

**மிடறு**—மிடற்றும் ஒலியைத்தரும் இடம்
உண்ணாக்கு—வாயின் உள்ளே தொங்கும் நாக்கு
அண்ணம்—மேலே கவிந்துள்ளது
அணரி—மேல் நோக்கியது

## செய்யுள்—196

கதுப்பு—கன்னம்
கவுள்— இருபக்கமான வாயுள்
கபோலம்—உண்ணும்போது அசைதலை உடையது
கொடிறு—வளர்ந்த கீழிடமானது
அனு—தாடை

மூக்கு—மோக்கும்-முகரும் செயலுக்குரியது
ஆக்கிராணம்—மணம் என்பதற்குக் கரணியமானது
கோணம்—மணத்தால் மயங்குவது
துண்டம்—மனத்தைக் கவர்வது
நாசி—ஒலி செய்வது

## ஒப்பீடு

| **சூடாமணி**—*196* | **பிங்கலம்**—*1045-1046 1047, 1949, 1051, 1031* | **கயாதரம்**—*140* | **நாமதீபம்**—*586, 587* |
|---|---|---|---|
| மிடறு 1—1 | உண்மிடறு *1—1* | ... | மிடறு 2 |
| அணல் | அணல் | ... | அணல் |
| உண்ணாக்கு *1-1* | உண்ணாக்கு *3* | உண்ணா 2 | உண்ணாக்கு 2 |
| அண்ணம் | அண்ணம் | அண்ணம் | அண்ணம் |
| மேல்வாய்ப் புறம் *1—3* | மேல்வாய்ப் புறம் *1—3* | ... *4* | ... 4 |
| அணரி | அணரி | அணரி | அணரி |
| அணல் | அணல் | அணல் | அணல் |
| அண்ணம் | அண்ணம் | அண்ணம் | அண்ணம் |
| கதுப்பு *1—4* | கதுப்பு *1—4* | ... *3* | கதுப்பு 6 |
| கவுள் | சவுல் | கவுள் | கவுள் |
| கபோலம் | கபோலம் | கபோலம் | கபோலம் |
| கொடிறு | கொடிறு | கொடிறு | கொடிறு |
| அனு | அனு | ... | அனு |

## செய்யுள்—196

| | | | |
|---|---|---|---|
| மூக்கு 1—4 | மூக்கு 1—2 | ... 2 | மூக்கு 5 |
| ஆக்கிராணம் | ... | ... | ஆக்கிராணம் |
| கோணம் | கோணம் | ... | கோணம் |
| துண்டம் | துண்டம் | துண்டம் | துண்டம் |
| நாசி | நாசி | நாசி | நாசி |

**மிகை பிங்:** 1 ... 2 சிறுநாக்கு
3 ... 4 ... 5 ...

**கயா:** 1 — 2 ...
3 கீழ்வாய்ப்புறம் 4 ... 5 ...

**நாம:** 1 ... 2 ... 3 கீழ்வாய்ப்புறம்
4 கன்னம் 5 ...

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 196இல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

மிடறு-புறம் 1-5 அணல்-பெரும்பாண் 138, கதுப்பு-முருகு 47 கவுள்-சிறுபாண் 140 கொடிறு-பெரும்பாண் 207 மூக்கு-பெரும்பாண் 57 கோணம்-மதுரை 592

**பிற தமிழ்ச் சொற்கள்**

உண்ணாக்கு, அண்ணம், மேல்வாய்ப்புறம், அணரி துண்டம்

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை :**

அண்ணம், கவுள், கொடிறு

**வட சொற்கள்:**

கபோலம், அனு, ஆக்கிராணம், நாசி

**மணிப் பவளச் சொற்கள்:**

— —

செய்யுள்—197

## கண், கண்மணி
## கண்ணிமை

நயனநேத்திரமேயக்கநாட்டங்கோநோக்கஞ்சக்கு
வியனுறும்பார்வைதாரைவிலோசம்விழியேயக்கி
செயமுறுதிருக்குத்திட்டிதிருட்டியம்பகமேகண்ணாம்
மயமுறுதாரைகண்ணின்மணிவிளிம்பிமையினாமம்

197 நயனம்,நேத் திரமே அக்கம்
நாட்டம்,கோ, நோக்கம், சக்கு
வயனுறும் பார்வை, தாரை
விலோசனம், விழியே அக்கி
செய்முறு திருக்குத் திட்டி
திருட்டி,அம் பகமே கண் ஆம்
மயமுறு தாரை கண்ணின்
மணி;விளிம் பிமையின் நாமம்

பெயர்ப் பொருள் விளக்கம்;

கண்—காணும் தொழிலை உடையது
நயனம், நேத்திரம்—வழியை அடைவித்தல் உடையது
அக்கம்—எங்கும் போய்ப் பரவுதல் உடையது
நாட்டம்கோ—நாடுதல் உடையது
நோக்கம்—பார்த்தற்குரிய கருவியானது
சக்கு—பொருள்களைக் காட்ட உருள்வது
பார்வை—பார்த்தற்குரிய கருவி
தாரை—இருளைக் கடப்பது
விலோசனம்—பார்க்கும் ஒளியாவது
விழி—திறந்து நோக்கற்கு உரியது
அக்கி—எங்கும் போய் பரவுதல் உடையது
திருக்கு, திட்டி, திருட்டி—பார்த்தற்குரிய கருவி
அம்பகம்—கூரிய நோக்கிற்கு உடையது

கண்ணின் மணி—கண்ணின் நடுவில் அமைந்த கருமணி போன்றது

## செய்யுள்—197

இமை—'இம்' எனும் நேரத்தில் கொட்டி அசைவது
விளிம்பு—இணைந்து விரியும் இரு ஓரங்கள்

## ஒப்பீடு

| சூடாமணி—197 | பிங்கலம்—1053-1055 | கயாதரம்—141 | நாமதீபம்—588 |
|---|---|---|---|
| கண் 1—16 | கண் 1—14 | கண் 12 | கண் 18 |
| நயனம் | நயனம் | நயனம் | நயனம் |
| நேத்திரம் | நேததிரம் | நேத்திரம் | நேத்திரம் |
| அக்கம் | அக்கம் | ... | அக்கம் |
| நாட்டம் | நாட்டம் | நாட்டம் | நாட்டம் |
| கோ | கோ | கோ | கோ |
| நோக்கம் | நோக்கு | நோக்கம் | நோக்கம் |
| சக்கு | சக்கு | சக்கு | சக்கு |
| பார்வை | பார்வை | பார்வை | பார்வை |
| தாரை | தாரை | தாரை | தாரம் |
| விலோசனம் | விலோர்சனம் | விலோசனம் | விலோசனம் |
| விழி | விழி | விழி | விழி |
| அக்கி | ... | ... | ... |
| திருக்கு | ... | ... | திருக்கு |
| திட்டி | திட்டி | ... | திட்டி |
| திருட்டி | திருட்டி | ... | திருட்டி |
| அம்பகம் | அம்பகம் | அம்பகம் | அம்பகம் |
| கண்ணின் மணி 1—1 | கண்மணி 1—1 | ... | கண்மணி 2 |
| தாரை | தாரை | ... | தாரை |
| இமை 1—1 | இமை 2 | ... | இமை 2 |
| விளிம்பு | விளிம்பு | ... | கண் விளிம்பு |

மிகை: பிங்: 1 — 2 — 3 —

கயா: 1 — 2 — 3 —

நாம: 1 ஈக்கணம், திக்கு 2 — 3 —

செய்யுள்—197

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 197இல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள் :**

கண்-முருகு 48 நாட்டம்-முருகு 155 கோ-மதுரை 105
நோக்கம்-பொருந 77 பார்வை-பெரும்பாண் 95 விழி-முருகு 48
இமை-நற் 40-9 விளிம்பு-குறு 297-1

**பிற தமிழ்ச்சொற்கள்**

சக்கு, தாரை, திருக்கு, அம்பகம், கண்ணின்மணி

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை**

நாட்டம், அம்பகம், விளிம்பு

**வட சொற்கள்:**

நயனம், நேக்கிரம், அக்கம், வியோசனம், அக்கி
திட்டி, திருட்டி

**மணிப்பவளச் சொற்கள்:**

— —

## புருவம், நெற்றி

பிருகுடிறுதலேநீண்டபீருவேபுருரம்பூருப்
புருவமாம்புகுடியும்பேர்புடைபடுநிடலத்தோடு
திருநுதல்குளமிலாடஞ்சேர்ந்தமத்தகமேநெற்றி
மருவியபாலமுண்டமனிகமும்வகுக்கலாமே

198 பிருகுடி, துதலே நீண்ட
பீருவே புருரம், பூருப்
புருவமாம் புகுடி யும்பேர்
புடைபடு நிடலத் தோடு

## செய்யுள் — 198

திருநுதல் குலம்,இ லாடம்
சேர்ந்தமத் தகமே நெற்றி
மருவிய பாலம், முண்டம்
அளிகமும் வகுக்கல் ஆமே

**பெயர்ப் பொருள் விளக்கம் :**

**புருவம்**—மேலே வளைவாசல் போதல் உடையது
நுதல்—மண்டையின் முன்பாகம்
பிருகுடி, புரூரம், பூரு, பீரு—அசைதல் உடையது
புகுடி—(புரு+குடி) புருவ வளைவு

**நெற்றி**—நெறியான அமைப்பு உடையது
நிடலம்—முன்பக்கத்தில் உள்ளது
முதல்—கருதுதலுக்கு அண்ணியமான இடம்
குளம்—வளைவு உள்ளது
இலாடம்—தலைமயிர் வரப்பெறுவது
மத்தகம்—கடினம் உடையது
பாலம்—ஒளி உடையது
முண்டம்—மயிர் இல்லாதது
அளிகம்—அணி செய்யப்படுவது

## ஒப்பீடு

| சூடாமணி—198 | பிங்கலம்—1065, 1057, 1060 | கயாதரம்—141 | நாமதீபம்—589 |
|---|---|---|---|
| புருவம் 1—6 | புருவம் 1—6 | புருவம் 4 | புருவம் 8 |
| பிருகுடி | பிருகுடி | பிருகுடி | பிரு |
| நுதல் | நுதல் | நுதல் | ... |
| பீரு | பீரு | ... | பீரு |
| புரூரம் | புரூரம் | புரூரம் | புரூரம் |
| பூரு | ... | ... | பூரு |
| புகுடி | புகுடி | ... | ... |
| நெற்றி 1—8 | நெற்றி 1—7 | நெற்றி 7 | நெற்றி 10 |
| நிடலம் | ... | ... | ... |
| நுதல் | நுதல் | நுதல் | நுதல் |

## செய்யுள்—198

| | | | |
|---|---|---|---|
| குளம் | குளம் | குளம் | குளம் |
| இலாடம் | இலாடம் | இலாடம் | இலாடம் |
| மத்தகம் | மத்தகம் | மத்தகம் | மத்தகம் |
| பாலம் | பாலம் | ... | பாலம் |
| முண்டம் | முண்டகம் | முண்டம் | ... |
| அளிகம் | அளிகம் | அளிகம் | அளிகம் |

**மிகை பிங்:** *1* புதல் 2 —

**கயா:** *1* — 2 ...

**நாம:** *1* புதல், குடி, புதடி
2 பனிச்சை, சூறை, பண்டம்

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 198இல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

தலை-முருகு 53 புருவம்-பொருந 26 நுதல்-முருகு 6
நெற்றி-மதுரை 595 குளம்-மதுரை 246

**பிற தமிழ்ச் சொற்கள்**

இலாடம், மத்தகம், பாலம், முண்டம், அளிகம்

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை :**

அளிகம்

**வட சொற்கள்:**

பிருகுடி, பீரு, புரூரம், ப்ரூ, புகுடி, நிடலம்

**மணிப் பவளச் சொற்கள்:**

— —

## செய்யுள்—199

### தலை, குடுமி, உச்சி

உரவியதலையேமூர்த்தமுவ்வியோடுத்தமாங்கம்
சிரமுடிசென்னிமுண்டஞ்சிகரமத்தகமுமாகும்
திருமுடிசிமிலிசிக்கஞ்சிகையிவைகுடுமிநாற்பேர்
விரவியசுடிகைசூழிமேவியநவிரமுச்சி

199 உரவிய தலையே மூர்த்தம்
உவ்வியோ டுத்த மாங்கம்
சிரம்,முடி, சென்னி, முண்டம்
சிகரம், மத்தகமும் ஆகும்;
திருமுடி, சிமிலி, சிக்கம்
சிகைஇவை குடுமி நாற்பேர்;
விரவிய சுடிகை, சூழி,
மேவிய நவிரம் உச்சி.

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

தலை—முதலில் தோன்றுவது
மூர்த்தம்—உருவத்தின் மேம்பட்டது
உவ்வி—உயர்வானது
உத்தமாங்கம்—சிறந்த உறுப்பு
சிரம்—நரையால் பிடிக்கப்பெறுவது
முடி—உடலின் மேலே முடிவாக உள்ளது
சென்னி—முகில்போல் மேலானது
முண்டம்—மயிர் களையப்படுவது
சிகரம்—உடலின் மேல் உச்சி
மத்தகம்—திரட்சி உடையது

குடுமி—உயர்ந்த இடமாகிய தலையில் கூட்டப்பெறுவது
முடி—தலையின்மேல் முடிவாக உள்ளது
சிமிலி—உச்சி
சிக்கம்—சிக்கல் ஆவது
சிகை—சீய்க்கப்படுவது

## செய்யுள்—199

உச்சி—உயரத்திலிருப்பது
சுடிகை—சூடற்கு இடமாவது
சூழி—சூழ்ந்து மூடுவது
நவிரம்—உச்சியானது

## ஒப்பீடு

| சூடாமணி-199 | பிங்கலம்-1061-1063 | கயாதரம்-142, 146 | நாமதீபம்-591, 593 |
|---|---|---|---|
| தலை 1—9 | தலை 1—13 | தலை 9 | தலை 12 |
| மூர்த்தம் | மூர்த்தம் | ... | மூர்த்தி |
| உவ்வி | உவ்வி | ... | உவ்வி |
| உத்தமாங்கம் | உத்தமாங்கம் | உத்தமாங்கம் | உத்தமாங்கம் |
| சிரம் | சிரம் | சிரம் | சிரம் |
| முடி | முடி | முடி | முடி |
| சென்னி | சென்னி | சென்னி | சென்னி |
| முண்டம் | முண்டம் | ... | முண்டம் |
| சிகரம் | சிகரம் | ... | சிகரம் |
| மத்தகம் | மத்தகம் | ... | மத்தகம் |
| குடுமி 1—4 | குடுமி 1—4 | குடுமி 6 | குடுமி 4 |
| முடி | ... | ... | ... |
| சிமிலி | சிமிலம் | ... | சிமிலி |
| சிக்கம் | சிக்கம் | சிக்கம் | சிக்கம் |
| சிகை | சிகை | சிகை | சிகை |
| உச்சி 1—3 | உச்சி 1—3 | மூச்சி 8 | உச்சி 5 |
| சுடிகை | சுடிகை | சுடிகை | சுடிகை |
| சூழி | சூழி | சூளி | சூழி |
| நவிரம் | நவிரம் | நவிர் | நவிரம் |

**மிகை:** **பிங்:** 1 கம், சேகரம், நவிரம், உச்சி
2 சிமி 3 —

**கயா:** 1 சேகரம், உச்சி, கம், நவிரம்
2 நவிர், பங்கி, பித்தை
3 சின்மயம், சிகை, சிமிலி, முடி

**நாம:** 1 சேகரம், கம் 2 — 3 முச்சி

செய்யுள்—199

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 199இல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள்:**

*தலை-முருகு 9 சிரம்-பரி 1-27 முடி-முருகு 84 சென்னி-முருகு 85 சிக்ரம்-அகம் 181-21 குடுமி-பெரும்பாண் 451 சிமிலி-மதுரை 483 சிகை-பரி 7-70 உச்சி-முருகு 185 சூழி-மலை 228 நவிரம்-மலை 82*

**பிற தமிழ்ச் சொற்கள் :**

*உவ்வி, முண்டம், மத்தகம், சிக்கம், சுடிகை*

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை :**

*சென்னி, மத்தகம், சுடிகை, சூழி*

**வட சொற்கள்:**

*மூர்த்தம், உத்தமாங்கம், சிகரம்*

**மணிப்பவளச் சொற்கள்:**

— —

## ஆண்மயிர்,
## இருபால்மயிர்

உளை நவிர்குடுமிபித்தையோரியேகுழல்கார்குஞ்சி
தளைசிகைதொங்கல்பங்கிதான்ஈராறாண் மயிர்ப்பேர்
வளர்குழல்கதுப்புகேசமருவியசுரியனான்கும்
இளையமைந்தர்க்குமற்றையிளங்கொடியார்க்கு மேற்கும்

200 உளை நவிர், குடுமி, பித்தை
ஓரியே குழல், கார், குஞ்சி
தளை, சிகை, தொங்கல், பங்கி
தான்ஈரா றாண் மயிர்ப்பேர்;

## செய்யுள்—200

வளர்குழல், கதுப்பு, கேசம்
  மருவிய சுரியல் நான்கும்
இளையமைந் தர்க்கும் மற்றை
  இளங்கொடி யார்க்கும் ஏற்கும்

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

ஆண்மயிர்—ஆடவர்க்குரிய மயிர்
உளை—புரண்டுவிழும் கத்தையானது
நவிர்—உச்சி மயிர்
குடுமி—உயர்ந்த தலைமேலது
பித்தை—தொகுதியானது
ஓரி—பிரிக்கமுடிந்தது
குழல்—சுருங்கக்கூடியது
கார்—கருமை நிறத்தது
குஞ்சி—நெரிப்பு உடையது
தளை—பிணைத்துக் கட்டப்பெறுவது
சிகை—தலையில் கிடப்பது
தொங்கல்—தொங்குவது
பங்கி—பரவும் பங்குடையது
குழல்—வளைந்து நெளிவது
கதுப்பு—கருநிறமானது
கேசம்—கருமை உடையது
சுரியல்—சுழிபோல் கடை சுர்வதை உடையது

## ஒப்பீடு

| சூடாமணி—200 | பிங்கலம்—1064, 1066 | கயாதரம்—142 | நாமதீபம்—592 |
|---|---|---|---|
| ஆண்மயிர் *1—12* | ஆண்பால் மயிர் *1—13* | மைந்தர் மயிர் 6 | ... |
| உளை | ... | ... | ... |
| நவிர் | நவிர் | ... | ... |
| குடுமி | ... | ... | ... |
| பித்தை | பித்தை | ... | ... |
| ஓரி | ஓரி | ஓரி | ... |

## செய்யுள் — 200

| | | | |
|---|---|---|---|
| குழல் | குழல் | ... | ... |
| கார் | கார் | ... | ... |
| குஞ்சி | குஞ்சி | குஞ்சி | ... |
| தளை | தளை | ... | ... |
| சிகை | சிகை | ... | ... |
| தொங்கல் | ... | தொங்கல் | ... |
| பங்கி | பங்கி | ... | ... |

| | | | |
|---|---|---|---|
| **ஆண், பெண் மயிர் 1—4** | ஆண், பெண் பொது 1—4 | ... | மயிர்ப் பொது 1—7 |
| குழல் | குழல் | ... | குழல் |
| கதுப்பு | கதுப்பு | ... | கதுப்பு |
| கேசம் | கேசம் | ... | கேசம் |
| சுரியல் | சுரியல் | ... | சுரியல் |

**மிகை: பிங்:** 1 கேசம், சுரியல், கதுப்பு, பிச்சம்
2 —

**கயா:** 1 மடி, சுரியல்
2 —

**நாம:** 1 —
2 தொங்கல், குஞ்சி, ஓரி, கசாளம்
பித்தை, சிரோந்தம், மராட்டம், உளை
தார், பங்கி, உரோமம், தளை, மயிர்

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 200இல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

உளை-முருகு 28 குடுமி-பெரும்பாண் 451 பித்தை-பொருந 160 ஓரி-பொருந 164 குழல்-சிறுபாண் 162 கார்-பெரும்பாண் 210 குஞ்சி-குறி 112 தளை-சிறுபாண் 161 சிகை-பரி 7-70 கதுப்பு-முருகு 47 சுரியல்-பதி 27-4

செய்யுள்—200

**பிற தமிழ்ச்சொற்கள்**

ஆண்மயிர், நவிர், தொங்கல், பங்கி, ஆண் பெண் மயிர்

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை**

உளை, பித்தை, ஓரி, பங்கு, கதுப்பு, சுரியல்

**வட சொற்கள்:**

கேசம்

**மணிப்பவளச் சொற்கள்:**

— —

## பெண்மயிர், மயிர்முடி

குருள்குழல்விலோதமோதிகூழைகுந்தளமராட்டம்
குரலைம்பாலளகம்பத்தும்பெண்மயிர்க்கூந்தலும்பேர்
பெருகியகொப்புமுச்சிபின்னகம்கொண்டைபந்தம்
திருமிகுதம்மில்லம்பொற்சிகழிகைமயிர்முடிப்பேர்

201 குருள்,குழல், விலோதம், ஓதி
கூழை,குந் தளம்,ம ராட்டம்,
குரல்,ஐம்பால், அளகம் பத்தும்
பெண்மயிர்க் கூந்த லும்பேர்;
பெருகிய கொப்பு, முச்சி
பின்னகம், கொண்டை, பந்தம்
திருமிகு தம்மில் லம்பொன்
சிகழிகை மயிர்மு டிப்பேர்

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

பெண்மயிர்—பெண்பாலாரின் மயிர்
குருள்—தலைக்குப் பளு உடையது

## செய்யுள்— 201

விலோதம்—காற்றில் அலைவது
ஓதி—செறிவை உடையது
கூழை—மயில் தோகை போன்றது
குந்தளம்—(கொந்து + அளம்) கொத்தான தொகுதி
மராட்டம்—மணமுள்ளது
குரல்—தொகுத்தற்கு உரியது
ஐம்பால்—கொண்டை, குழல், பனிச்சை, முடி, சுருள் என்னும் ஐந்து பகுதியாக முடிக்கப்பெறுவது
அளகம்—மயில் தோகை போன்றது
கூந்தல்—கொந்தி முடிக்கப்படுவது

**மயிர்முடி**—மயிர்கோதி முடிக்கப்படுவது
கொப்பு—தலையில் முளைத்தது
முச்சி—மேலிடத்தில் அமைந்தது
பின்னகம்—பின்னுவதைக் கொள்வது
கொண்டை—முடித்துக்கொள்ளப்படுவது
பந்தம்—சேர்த்துக் கட்டப்படுவது
சிகழிகை—தலையில் முடிக்கப்படுவது

## ஒப்பீடு

| **சூடாமணி**—*201* | **பிங்கலம்**—*1065 1067, 1073* | **கயாதரம்**—*143, 144* | **நாமதீபம்**—*593, 594* |
|---|---|---|---|
| **பெண் மயிர்** *1—11* | பெண்பால் மயிர் *1—18* | மாதர் மயிர் *1—14* | மடவார் மயிர் *1—9* |
| குருள் | குருள் | ... | குருள் |
| குழல் | குழல் | ... | ... |
| விலோதம் | விலோதம் | விலோதம் | விலோதம் |
| ஓதி | ஓதி | ஓதி | ஓதி |
| கூழை | கூழை | கூழை | கூழை |
| குந்தளம் | குந்தளம் | கொந்தளம் | கொந்தளம் |
| மராட்டம் | மராட்டம் | மராட்டம் | ... |
| குரல் | குரல் | குரல் | குரல் |
| ஐம்பால் | ஐம்பால் | ஐம்பால் | ஐம்பால் |

### செய்யுள் — 201

| | | | |
|---|---|---|---|
| அளகம் | அளகம் | அளகம் | அளகம் |
| கூந்தல் | கூந்தல் | கூந்தல் | கூந்தல் |
| மயிர்முடி 1—7 | மயிர்முடி (பெண் ஆண்) 1—12 | மயிர் முடி 1—8 | மயிர் முடி 7 |
| கொப்பு | கொப்பு (பெ) | ... | கொப்பம் |
| முச்சி | முச்சி (பெ, ஆ.) | முச்சி | ... |
| பின்னகம் | பின்னகம் (ஆ) | பின்னகம் | பின்னகம் |
| கொண்டை | கொண்டை (பெ. ஆ.) | கொண்டை | கொண்டை |
| பந்தம் | பந்தம் (ஆ) | பந்தம் | பந்தம் |
| தம்மில்லம் | தம்மிலம் (பெ,) | ... | தம்மிலம் |
| சிகழிகை | சிகழிகை (பெ.ஆ,) | சிகழிகை | சிகழிகை |

**மிகை பிங்:** 1 கதுப்பு, சுருள், பரிசாரம், கேசம் சுரியல். கோதை, கூரல்
2 மிஞ்சிகம் (பெ), முடி, குழல், சுடிகை மௌலி (ஆ)

**கயா:** 1 கதுப்பு, கோதை, கேசம், சுரியல், சுருள்
2 முடி, சுடிகை, குழல்

**நாம:** 1 ... 2 ...

### சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 201இல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

குழல்-சிறுபாண் 162, விலோதம்-மதுரை 449, ஓதி-முருகு 20
கூழை-நற் 23-2, குரல்-முருகு 212, ஐம்பால்-சிறுபாண் 60
அளகம்-நற் 377-8, கூந்தல்-முருகு 200, முச்சி-முருகு 26
பின்னகம்-அகம் 9-22, கொண்டை-பரி 9-43, சிகழிகை-கலி 54-6

செய்யுள்—201

**பிற தமிழ்ச்சொற்கள்**

பெண் மயிர், குருள், சுந்தளம், மயிர்முடி, கொப்பு பந்தம், தம்மில்லம்

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை**

ஐம்பால், ஓதி, கொப்பு. பின்னகம், சிகழிகை

**வட சொற்கள்:**

விலோதம், மராட்டம்

**மணிப்பவளச் சொற்கள்:**

— —

**பிறமயிர், செறிமயிர்
மயிர்க்குழற்சி**

ஓரியேகேசம்பங்கியுளையுரோமம்மராட்டம்
நேருமிப்பேர்களாலும்பிறமயிர்நிகழ்த்துமென்ப
சேருமவ்வுரோமமற்றைச்சிரோந்தமுஞ்செறிமயிர்ப்பேர்
வாருங்குந்தளம்விலோதம்மயிர்க்குழற்சிப்பேர்வைக்கும்

**202** ஓரியே கேசம், பங்கி
உளைஉரோ மம்,ம ராட்டம்
நேரும்இப் பேர்கள் ஆறும்
**பிறமயிர்** நிகழ்த்தும் என்ப
சேரும்அவ் உரோமம், மற்றைச்
சிரோந்தமும் **செறிம யிர்ப்**பேர்
வாரும்குந் தளம்,வி லோதம்
**மயிற்குழற்** சிப்பேர் வைக்கும்

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

**உரோமம்**—முளைத்தல் உடையது
**மயிர்க்குழற்சி**—மயிர்க்கத்தையான சுருள்
**சிரோந்தம்**—(சிர—உந்தம்), தலையில் உயர்ந்திருப்பது

செய்யுள்—202

## ஒப்பீடு

| சூடாமணி-*202* | பிங்கலம்-*1071, 1072, 1068* | கயாதரம்-*143, 144* | நாமதீபம்-*592* |
|---|---|---|---|
| பிறமயிர் *1—6* | பிறமயிர் *1—6* | ... | ... |
| ஓரி | ஓரி | ... | ... |
| கேசம் | கேசம் | ... | ... |
| பங்கி | பங்கி | ... | ... |
| உளை | உளை | ... | ... |
| உரோமம் | உரோமம் | ... | ... |
| மராட்டம் | மராட்டம் | ... | ... |
| செறிமயிர் *1—2* | செறிமயிர் *1—2* | செறிமயிர் *1—2* | ... |
| உரோமம் | உரோமம் | உரோமம் | ... |
| சிரோந்தம் | சிரோந்தம் | சிரோத்தம் | ... |
| மயிற்குழற்சி *1—2* | மயிர்க்குழற்சி *1—3* | மயிர்க்குழற்சி *1—3* | மயிர்க்குழற்சி *1—2* |
| குந்தளம் | குந்தளம் | கொந்தளம் | கொந்தளம் |
| விலோதம் | விலோதம் | விலோதம் | விலோதம் |

**மிகை:** பிங்: *1* ... 2 ...
*3* அளகம்

கயா: 1 ... 2 ...
*3* அளகம்

நாம: *1* ... 2 ... *3* ...

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 202இல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள் :**

ஓரி-பொருந 164, உளை-முருகு 28, விலோதம்-மதுரை 449

**பிற தமிழ்ச் சொற்கள்**

பிறமயிர், பங்கி, செறிமயிர், மயிற்குழற்சி, குந்தளம்

செய்யுள்—202

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை :**

குழற்சி

**வட சொற்கள்:**

கேசம், உ ரோமம், மராட்டம், சிரோருந்தம், விலோதம்

**மணிப் பவளச் சொற்கள்:**

— —

## மயிர்ப்பின்னல், உறுப்பு
## மூட்டு

குடிலமேவேணி நீண்டகோடீரம்பின்னலோடு
சடிலமென்றைந்துபேருஞ்சடையெனவடைவேசாற்றும்
நெடியகாத்திரமுறுப்புநீளங்கமவயவப்பேர்
கடியமூட்டுங்கொளுத்துங்கந்துஞ்சந்தாகுமன்றே

203 குடிலமே வேணி, நீண்ட
கோடீரம், பின்ன லோடு
சடிலம்என் றைந்து பேரும்
சடைஎன அடைவே சாற்றும்
நெடியகாத் திரம்,உ றுப்பு
நீள்அங்கம் அவய வப்பேர்
கடியமூட் டுங்கொ ளுத்தும்
கந்தும்சந் தாகும் அன்றே.

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

சடை—ஒன்றோடொன்று நெருங்கியிருப்பது
குடிலம்—வளைதல் உடையது
வேணி—கூடியிருப்பது
கோடீரம்—வளைதல் உடையது
பின்னல்—பின்னிக்கொண்டிருப்பது
சடிலம்—நெருங்கியிருப்பது

### செய்யுள்—203

அவயவம்—சேர்ந்திருக்கும் தனித்தனி உருவம்
காத்திரம்—போதல் உடையது
உறுப்பு—உடம்பில் உறுதல் உடையது
அங்கம்—போதல் உடையது

மூட்டு, சந்து, கொளுத்து—பொருத்தப் பெறுவது
கந்து—இணைக்கப்பட்டுத் தாங்கியிருப்பது

## ஒப்பீடு

| சூடாமணி—*203* | பிங்கலம்—*1074 1078-1080* | கயாதரம்—*144, 146* | நாமதீபம்—*594, 602* |
|---|---|---|---|
| சடை *1—5* | சடை *1—5* | சடை *5* | சடை *8* |
| குடிலம் | குடிலம் | ... | குடிலம் |
| வேணி | வேணி | வேணி | வேணி |
| கோடீரம் | கோடீரம் | கோடீரம் | கோடீரம் |
| பின்னல் | பின்னல் | பின்னல் | பின்னல் |
| சடிலம் | சடிலம் | சடிலம் | சடிலம் |
| அவயவம் *1—3* | அவயவம் *1—5* | அவயவம் *5* | அவயவம் *4* |
| காத்திரம் | காத்திரம் | காத்திரம் | ... |
| உறுப்பு | உறுப்பு | உறுப்பு | உறுப்பு |
| அங்கம் | அங்கம் | அங்கம் | அங்கம் |
| சந்து *1—3* | சந்து *1—3* | சந்து *4* | சந்து *6* |
| மூட்டு | மூட்டு | மூட்டு | மூட்டு |
| கொளுத்து | கொளுத்து | கொளுத்து | கொளுத்து |
| கந்து | சந்து | கந்து | கந்து |

மிகை: பிங்: *1* ... *2* சினை, மூர்த்தம்
*3* கழுத்து

கயா: *1* ... *2* சினை
*3* கழுத்து

நாம: *1* கபர்த்தம், மயிர்த்திரள்
*2* சினை *3* கத்து, உடற்பொருத்து

செய்யுள் — 203

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 203இல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள்:**

சடை-பட் 54, பின்னல்-கலி 83-9, உறுப்பு-பதி 65-15
மூட்டு-அகம் 156-2, கந்து-முருகு 226

**பிற தமிழ்ச் சொற்கள் :**

குடிலம், சந்து, கொளுத்து

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை :**

மூட்டு, கொளுத்து

**வட சொற்கள்:**

வேணி, கோடீரம், சடிலம் அவயவம், காத்திரம்
அங்கம்

**மணிப்பவளச் சொற்கள்:**

— —

## நரம்பு, கழலை, கோழை
## உடல்தழும்பு, பொறி, நரை

சிரையேசங்கனனநாடிதிருந்திய நரம்புமுப்பேர்
அரலையேகழலைகோழையையொடுகாசமாகும்
மருவுமங்கிதமேசேக்கைவசிவடுவுடற்றழும்பாம்
தருபொறிவரையிறைப்பேர்சரைநரைபலிதமும்பேர்

204 சிரையேசங் கனனம், நாடி,
திருந்திய நரம்பு முப்பேர்;
லையே கழலை; கோழை,
ஐயொடு காசம் ஆகும்

## செய்யுள்—204

மருவும்அங் கிதமே சேக்கை,
வசி,வடு, உடல்த ழும்பாம்
தருபொறி வரைஇ றைப்பேர்;
சரை,நரை பலித மும்பேர்

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

நரம்பு—உள்துளையுள்ள இழை
சிரை—உள்துளைகொண்டு வளைவது
சங்கனனம்—உறுப்புடன் சேர்ந்திருப்பது
நாடி—உள்துளை உள்ளது

கழல்லை—கழலும் வழுவழுப்பு உடையது
அரலை—கோழை
ஐ—நுண்மை உடையது
கோழை—கொழுமை உடையது
காசம்—சளி கொண்டது

அங்கிதம்—அடையாளம் ஆக்கப்பட்டது
சேக்கை—பதிவானது
வசி—பிளவுபட்ட காயத்தழும்பு
வடு—வட்டாகப் பதிந்தது

இறை—வரியாக (இரேகை) உள்ளது
பொறி—பொறிக்கப்பட்டது போன்றது
வரை—வரைவானது

நரை—வெண்மை உடையது
சரை—உடம்பின் முதிர்ச்சியைக் காட்டுவது
பலிதம்—அழகைக் கெடுப்பது

## ஒப்பீடு

| சூடாமணி—204 | பிங்கலம்—991 1085, 1084 1081, 1082, 1076, 1077 | கயாதரம்—145 | நாமதீபம்—602 597, 598 |
|---|---|---|---|
| நரப்பு 1—3 | நரம்பு 1—3 | நரம்பு 3 | ... நரம்பு 4 |
| சிரை | சிரை | சிறை | ... சிரை |

## செய்யுள்—204

| | | | |
|---|---|---|---|
| சங்கனனம் | ... | ... | சங்கனனம் |
| நாடி | நாடி | நாடி | நாடி |
| கழலை 1—1 | கழலை 1—1 | கழலை 2 | கழலை 2 |
| அரலை | அரலை | அரலை | அரலை |
| கோழை 1—2 | கோழை 1—2 | ... | கோழை 4 |
| ஐ | ஐ | ... | ஐ |
| காசம் | காசம் | ... | காசம் |
| உடல் தழும்பு 1—4 | தழும்பு 1—7 | தழும்பு 3 | உடல் தழும்பு 4 |
| அங்கிதம் | அங்கிதம் | அங்கிதம் | அங்கிதம் |
| சேக்கை | சேக்கை | சேக்கை | சேக்கை |
| வசி | வசி | ... | வசி |
| வடு | வடு | ... | ... |
| இறை 1—2 | இறை 1—4 | இறை 2 | இறை 4 |
| பொறி | பொறி | ... | பொறி |
| வரை | வரை | ... | வரை |
| நரை 1—2 | நரை 1—2 | ... | நரை 3 |
| சரை | சரை | ... | சரை |
| பலிதம் | பலிதம் | ... | பலிதம் |

**மிகை பிங்:** 1 மேதை 2 ... 3 ...
4 கச்சை, சுவடு, செதுக்கை
5 பிறங்கு, வரி 6 ...

**கயா:** 1 —1 2 ... 3 ...
4 ... 5 பிறங்கு 6 ...

**நாம:** 1 ... 2 ... 3 சேற்பம்
4 ... 5 இரேகை 6 ...

செய்யுள்—204

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 204இல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள்:**

*நரம்பு-முருகு 142, நாடி-முருகு 97, அரலை-மலை 24 ஐ-முருகு 83, சேக்கை-மதுரை 487, வசி-மலை 303, வடு-முருகு 78 இறை-பெரும்பாண் 265, பொறி-முருகு 105, வரை-முருகு 12 நரை-முருகு 127*

**பிற தமிழ்ச் சொற்கள் :**

*சிரை, கழலை, கோழை, காசம், உடல், தழும்பு சரை*

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை :**

*சிரை, நாடி, கழலை, அரலை, கோழை, ஐ பொறி, வரை, சரை*

**வட சொற்கள்:**

*சங்கனனம், அங்கிதம், பலிதம்*

**மணிப்பவளச் சொற்கள்:**

— —

**தலை ஓடு, எலும்பு.**
**முழு எலும்பு, பொறி**

அழிதலையோட்டினாமங்கபாலமேய்த்தியென்பு
கழிவுறுமெலும்பினாமங்களேவரமென்றுங்காட்டும்
களியுடன்முழுவெலும்புகங்காளமென்பர்நூலோர்
விழைபொறிகரணங்கந்தமேவுமிந்திரியமுப்பேர்

## செய்யுள்—205

205 அழிதலை ஓட்டின் நாமம்
கபாலமே; அத்தி, என்பு,
கழிவுறும் எலும்பின் நாமம்
களேவரம் என்றும் காட்டும்;
கழிஉடல் முழுஎ லும்பு
கங்காளம் என்பர் நூலோர்;
விழைபொறி, கரணம், கந்தம்
மேவும்இந் திரியம் முப்பேர்

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

கபாலம்—தலையைக் காப்பது

**எலும்பு**—ஒளியுடன் உள்துளை உடையது
அத்தி—உறுதியானது
என்பு—எலும்பு
களேவரம்—உடலின் சட்டக உறுப்பாதலின் கவனங்கொள்ளப்பட வேண்டியது
கங்காளம்—நீரைப்போக்குதல் உடையது

**இந்திரியம்**—ஆன்மத்தொடர்புடையது
பொறி—ஐம்புல உணர்வுகளை அகப்படுத்துவது
கரணம்—செயலுக்குக் கருவியாவது
கந்தம்—உடலுக்குப் பற்றுக்கோடான தூண் போன்றது

## ஒப்பீடு

| **சூடாமணி**—205 | **பிங்கலம்**—1089, 992 993, 387 | **கயாதரம்**— | **நாமதீபம்**—594, 601 |
|---|---|---|---|
| தலை ஓடு 1—1 | தலைஓடு 1—2 | ... 2 | தலைஓடு 2 |
| கபாலம் | கபாலம் | கபாலம் | கபாலம் |

## செய்யுள்—205

| | | | |
|---|---|---|---|
| எலும்பு 1—3 | எலும்பு 1—4 | எலும்பு 3 | எலும்பு 5 |
| அத்தி | அத்தி | அத்தி | அத்தி |
| என்பு | என்பு | என்பு | என்பு |
| களேவரம் | களேவரம் | ... | களேவரம் |
| கழிஉடல் முழுஎலும்பு 1—1 | கழிஉடல் முழுஎலும்பு 1—1 | வெற்றுடல் என்பு 1—4 | முழுஎன்பு 2 |
| கங்காளம் | கங்காளம் | கங்காளம் | கங்காளம் |
| இந்திரியம் 1—3 | இந்திரியம் 1—4 | ... | இந்திரியம் |
| பொறி | பொறி | ... | பொறி |
| கரணம் | கரணம் | ... | ... |
| கந்தம் | கந்தம் | ... | கந்தம் |

மிகை: பிங்: 1 வெண்டலை 2 அங்கம்
3 ... 4 வாயில்

கயா: 1 வெண்டலை 2 ...
3 — 4 ...

நாம: 1 ... 2 அழனம்
3 வாயில்

## சொற்பாகுபாடு

**சூடாமணிச் செய்யுள் 205இல் உள்ள சொற்களுள்**

**சங்க இலக்கியச் சொற்கள் :**

அத்தி-அகம் 44-7, என்பு-முருகு 130, பொறி-முருகு 105
கந்தம்-புறம் 52-12

செய்யுள் — 205

**பிற தமிழ்ச் சொற்கள்**

தலைஓடு, எலும்பு, களேவரம், கழியுடல் முழுஎலும்
கரணம், கந்தம்

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை**

பொறி

**வட சொற்கள்:**

கபாலம், கங்காளம்

**மணிப்பவளச் சொற்கள்:**

— —

**ஐம்புலன் – ஐம்பொறி**
**உயிர்**

தருசுவையொளியூறோசைசாற்றியநாற்றமோருங்
கருவிநாக்கண்ணெமெய்யேகாதொடுமூக்குமாகும்
தெரிதருமுயிரேயாதன்சேதனன் பசுவேசீவன்
அரியபுற்கலனேகூத்தனணுவியமானனான்மா

**206** தருசுவை, ஒளி,ஊ றோசை,
சாற்றிய நாற்றம், ஒரும்
கருவி நாக் கண்ணே மெய்யே
காதொடு மூக்கும் ஆகும்;
தெரிதரும் உயிரே ஆதன்,
சேதனன், பசுவே சீவன்,
அரியபுற் கலனே கூத்தன்,
அணு,இய மானன், ஆன்மா

## செய்யுள்—206

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

ஒளி—பொருள்களைப் புலப்படுத்துவது
ஊறு—உடலில் ஊறும் உணர்வு
நாற்றம்—மூக்கால் உணரப்படும் புலன் அறிவு
மெய்—உண்மையாய்க் காணப்படுவது
உயிர்—உடம்பை உய்ப்பது (செலுத்துவது)
ஆதன்—மூலமானது
சேதனன்—அறிவிற்கு மூலமானவன்
பசு—ஆன்மா
சீவன்—சீவிக்க வைப்பது
புற்கலன்—உயிர் பொருந்தும் பாண்டம்
கூத்தன்—துள்ளி இயங்கச் செய்வது
அணு—கட்புலனுக்குப் புலனாகாதது
இயமானன்—இயங்க வைப்பவன்
ஆன்மா—உயிர்க்கரு

## ஒப்பீடு

| சூடாமணி—206 | பிங்கலம்—386, 312 | கயாகரம்—520 | நாமதீபம்—569, 566 |
|---|---|---|---|
| (ஐம்புலன் — பொறி) 5 | (ஐம்புலன் — பொறி) 5 | ... | ஐம்புலன்— பொறி) 5 |
| சுவை—நாக்கு | சுவை—நா | ... | சுவை—நாக்கு |
| ஒளி—கண் | ஒளி—கண் | ... | ஒளி—கண் |
| ஊறு—மெய் | ஊறு—மெய் | ... | ஊறு—உடல் |
| ஓசை—காது | ஓசை—செவி | ... | ஓசை—செவி |
| நாற்றம்—மூக்கு | நாற்றம்—மூக்கு | ... | மணம்—மூக்கு |
| உயிர் 1—9 | உயிர் 14 | உயிர் 3 | உயிர் 14 |
| ஆதன் | ஆதன் | ... | ஆதன் |
| சேதனன் | சேதனன் | ... | சேதனன் |

செய்யுள் — 206

| | | | |
|---|---|---|---|
| பசு | பசு | ... | ... |
| சீவன் | சீவன் | ... | சீவன் |
| புற்கலன் | புற்கலன் | ... | புட்கலன் |
| கூத்தன் | கூத்தன் | ... | ... |
| அணு | அணு | ... | அணு |
| இயமானன் | இயமானன் | ... | இயமான் |
| ஆன்மா | ஆன்மா | ... | ஆன்மா |

மிகை: பிங்: 1 ... 2 செந்து, ஆவி, பூதன் உறவி

கயா: 1 ... 2 பிராணன், வாயு

நாம: 1 ... 2 ஆவி, பிராணன், சின்மயன் கிஞ்சிக்கன், சதசத்து, உள்ளம்

## சொற்பாகுபாடு

சூடாமணிச் செய்யுள் 206இல் உள்ள சொற்களுள்

**சங்க இலக்கியச் சொற்கள் :**

சுவை-பெரும்பாண் 196, ஒளி-பொருந 162, ஊறு-மதுரை 385, ஓரை-நற் 4-10, நாற்றம்-மதுரை 447, உயிர்-முருகு 278 ஆதன்-ஐங் 1-1

**பிற தமிழ்ச்சொற்கள்**

புற்கலன், கூத்தன், அணு, ஆன்மா

**கலைச்சொல் ஆக்கத்திற்குரியவை :**

— —

## செய்யுள்—207

**வட சொற்கள்:**

சேதனன், பசு, சீவன், இயமானன்

**மணிப் பவளச் சொற்கள்:**

— —

### மக்கட்பெயர் கடைகாப்பு

இருபதோடிருபான்முப்பானிருபானீரைந்துமேலும்
மருவியவாறுசெய்யுண்மக்கடம்பெயர்க்குச்செய்தான்
குருநறுங்குன்றைவேந்தன்குணபத்திரன்றந்தநோன்மை
தருநெறிநோற்கும்வீரைதழைந்தமண்டலவன்றானே

207 இருபதோ டிருபான், முப்பான்
இருபான்,ஈ ரைந்து. மேலும்
மருவிய ஆறு செய்யுள்
மக்கள்தம் பெயர்க்குச் செய்தான்,
குரு,நறும் குன்றை வேந்தன்
குணபத்திரன் தந்த நோன்மை
தருநெறி நோற்கும் வீரை
தழைத்தமண் டலவன் தானே

**பெயர்ப் பொருள் விளக்கம்:**

குரு, நறும் குன்றை வேந்தன்—ஆசானும் நல்ல குன்றையூர்த் தலைவனுமாகிய
குணபத்திரன்—குணபத்திரன் என்னும் பெயருடையவன் தந்த நோன்மை
தருநெறி நோற்கும்—அருளிய அறிவு வலிமை தந்த நன்னெறியைக் கடைப்பிடிக்கும்
வீரை தழைத்த—வீரபுரம் என்னும் ஊரில் மேம்பட்டு விளங்கிய
மண்டலவன்—மண்டலவன் என்னும் பெயருடையவன் (என்னும் யான்)

செய்யுள்—207

மக்கள்தம் பெயர்க்கு—மக்கள்தம் பெயர்களுக்காக

இருபதோடு இருபான்—இருபதுடன் இருபது கூடிய நாற்பதும்

முப்பான்—முப்பதும்

இருபான், ஈரைந்து—இருபதும், பத்தும்

மேலும் மருவிய—இவற்றின் மேலும் கூடிய

ஆறு செய்யுள்—ஆறும் ஆகிய [40—30—20—10—6—106]
நூற்றாறு அறுசீர்ச் செய்யுட்களை

செய்தான்—எழுதினான் (எழுதினேன் எனத் தன்னைப் படர்க்கையாக வைத்துக் கூறினார். யான் என்னும் செருக்கறுத்தவராதலின்)

தான்—கட்டுரைச் சுவைப்பட வந்தது

| | | |
|---|---|---|
| சூடாமணி | | |
| மக்கட்பெயர்த் தொகுதிச் செய்யுட்கள் | : | 106 |
| முன்தொகுதி | : | 101 |
| ஆக | : | 207 |

| | | |
|---|---|---|
| மக்கட் பொருட் பெயர்கள் | : | 285 |
| மக்கட் பெயர்கள் | : | 1251 |
| ஆக பெயர்ச் சொற்கள் | : | 1537 |

மக்கட் பெயர்த் தொகுதி நிறைவு



(தேவப் பெயர்த் தொகுதி, மக்கட் பெயர்த் தொகுதி)

## இரு தொகுதிகளின் பெயர்கள்

### அகர நிரல்

இ

ஏ



ஐ



ஒ



ஓ





சூ-65

கா

சா

செ



சே



சை



சொ

மா

வா

## சூடாமணியின் பெயர்ப்பாடல்கள் அல்லாமல் பிற (சிறப்புப் பாயிரம் தொகுதிகளின் வாழ்த்து, கடைக்காப்பு, இடைப்பாடல்) பாடல்களில் உள்ள சொற்களின் அகரநிரல்

## பாயிரம், தெய்வம், மக்கள் பெயர்த் தொகுதிகளின் செய்யுள் முதற்குறிப்பு அகராதி

